# கிறிஸ்தவத் தமிழ் இலக்கியம்

## ஓர் அறிமுகம்

பொதுப்பதிப்பாசிரியர்

டாக்டர் ஜி. ஜான் சாமுவேல்

பதிப்பாசிரியர்கள்

டாக்டர் அருள்திரு. தி. தயானந்தன் பிரான்சிஸ்

டாக்டர் யோ. ஞான சந்திர ஜாண்சன்




ஆசியவியல் நிறுவனம்

சென்னை - 600 119



## அர்ப்பணம்



இலக்கியப் பணிக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு இலக்கிய நற்செய்தியாளராய் (Literary Evangelist) அரை நூற்றாண்டுக் காலம் சென்னையில் இருந்தவாறு பாட நூற் பதிப்புக் கழகத்தையும், கைப்பிரதி வெளியீட்டுச் சங்கம், கிறிஸ்தவ இலக்கியச் சங்கம் ஆகிய அமைப்புகளையும் தோற்றுவித்துப் பலநூறு நூல்களை வெளியிட்டதோடு தம் காலத்தில் அச்சேறியிருந்த பல்வகையினவான தமிழ் நூல்களை வகைப்படுத்தித் தொகுத்து A Classified Catalogue of Tamil Printed Books with Introductory Notices என்ற தலைப்போடு *1865* இல் வெளிக் கொணர்ந்த பெருமகனார் டாக்டர் ஜான் மர்டாக் **(John Murdock, M.A., LL.D., 1819 - 1904)** அவர்களுக்கு இந்நூல் அவர் *1858* இல் தோற்றுவித்த கிறிஸ்தவ இலக்கியச் சங்கம் (The Christian Literature Society) 150 ஆம் பணியாண்டினைக் காணும் கட்டத்தில் பணிவடக்கத்தோடும் நன்றியுணர்வோடும் அர்ப்பணிக்கப்படுகின்றது.





# Institute of Asian Studies

Chemmancherry, Sholinganallur P.O.
Chennai - 600 119, INDIA.
Tel. : 2450-0831, 24502212, 24501851
Res : 2496-4831, 65739949
Cell : 9840526834, 9884167971
Fax : (91) 44-24964831
E-mail : ias@xlweb.com

**DR. G. JOHN SAMUEL**
M.A. (English), M.A. (Tamil), Dip. in Ling., Ph.D.
Founder Director and Secretary
Editor-in-Chief of the Encyclopedia of Tamil Literature

## அணிந்துரை

நவீன இந்தியாவின் உருவாக்கத்திற்குக் கிறிஸ்தவம் நல்கிய பங்களிப்பு மகத்தானது. இந்திய மொழிகள், இலக்கியங்கள் ஆகியவற்றின் வளர்ச்சிக்கும், இந்தியப் பண்பாடு பற்றிய பன்முக ஆய்வுகளுக்கும் அது வழங்கிய ஆக்கமும் ஊக்கமும் ஈடுஇணையற்றவை.

தூயதோமாவால் தமிழ் மண்ணில் விதைக்கப்பட்ட கிறிஸ்தவச் சிந்தனைகள் பழந்தமிழ்ப் பண்பாட்டில் ஆழ்ந்த தாக்குரவுகளை ஏற்படுத்திய போதிலும், கிறிஸ்தவத் தமிழிலக்கியம் என்னும் தனி இலக்கியப் பிரிவு வலுவான பின்னணியில் தமிழ் மண்ணில் தழைத்துப் படர்ந்தது ஐரோப்பிய அருட்தொண்டர்களின் வருகைக்குப் பின்னரே என்பதில் எந்த ஐயமும் இல்லை. திருமறையின் தமிழ் மொழிபெயர்ப்பும், தமிழ்த் திருச்சபைகளின் தோற்றமும் தமிழ்க் கிறிஸ்தவ இலக்கியத்தின் வளர்ச்சிக்கு நல்ல அடித்தளம் அமைத்துத் தந்தன.

கிறிஸ்தவத் தமிழிலக்கியத்தின் பரப்பு மிகப்பெரியது. எனது கணிப்பின்படி ஏறத்தாழ இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட தமிழ்க் கிறிஸ்தவப் படைப்புக்கள் தமிழ் மண்ணில் கருக்கொண்டு உருப்பெற்றுள்ளன. இவை அனைத்தையும் உள்ளடக்கிய விரிவான கிறிஸ்தவத் தமிழிலக்கியக் களஞ்சியம் ஒன்றை நான்கு அல்லது ஐந்து தொகுதிகளாக உருவாக்கி வெளியிட நான் பல ஆண்டுகளுக்கு முன் திட்டமிட்டதுண்டு. இம்முயற்சியும் நிறைவேறாத எனது ஆராய்ச்சிக் கனவுகளுள் ஒன்றாகவே நின்றுவிட்டது.

World Wide Website : http : //xlweb.com / heritage / asian

மேற்கூறியது போன்ற நிலையான நல்ல பணிகளில் கிறிஸ்தவ அமைப்புகளுக்கோ, திருச்சபைக்கோ அதிக ஆர்வம் இல்லை என்பதை அனுபவபூர்வமாக உணர்ந்தவன் நான். இத்தகைய ஆர்வமின்மை காரணமாக பல கிறிஸ்தவத் தமிழிலக்கியங்கள் ஏற்கனவே அழிந்துவிட்டன; எஞ்சியவை அழிந்து கொண்டிருக்கின்றன. ஆதரவற்ற அநாதைக் குழந்தைகளாகவே அவை என் கண்களுக்குக் காட்சி தருகின்றன. இவற்றைப் பாதுகாக்கத் தனிமனிதர்கள் பலர் பல்வேறு காலகட்டங்களில் முயன்று முன்வந்ததுண்டு. ஆனால் இத்தகைய முயற்சிகளுக்குப் போதுமான ஆதரவுகள் இருந்ததில்லை. ஆதரவில்லாமல் இவ்வாறு அழிந்துபோன ஆர்வங்கள் ஏராளம் எனலாம்.

இத்தகைய பின்னணியில் எனது இனிய நண்பர் அமரர் முனைவர் தயானந்தன் பிரான்சிஸ் அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன்னர் தேர்ந்தெடுக்கப்பட்ட சில கிறிஸ்தவத் தமிழிலக்கியங்களுக்கு ஓர் அறிமுகக் களஞ்சியமொன்றைத் தயாரிக்கும் பணியினைத் தொடங்கினார். இதனை ஆசியவியல் நிறுவனத்தின் வாயிலாக வெளியிடவேண்டும் என்று ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் அவர் என்னை வேண்டிக் கொண்டார். ஆசியவியல் நிறுவனத்தின் பொருளாளராகத் திகழ்ந்த இந்த அரிய தமிழறிஞரின் வேண்டுகோளை நிறைவேற்ற நானும் இசைவு தந்தேன். எனினும் அப்போது இப்படைப்பின் பதிப்புப் பணி முற்றுப் பெறாமல் இருந்தது. நண்பர் முனைவர் ஞான சந்திர ஜாண்சன், முனைவர் தயா அவர்களோடு இணைந்து இவ்வரிய படைப்பின் பதிப்புப் பணியை அண்மையில் நிறைவு செய்தார். நூல் முழுமை பெற்று அச்சேறும் நிலையில் இருந்த போது நண்பர் தயா அவர்கள் இம்மண்ணுலகை விட்டு மறைந்து விட்டார்கள். கிறிஸ்தவத் தமிழ் இலக்கிய உலகம் மிகப்பெரிய ஓர் அறிஞரை இழந்து விட்டது. முனைவர் தயா அவர்களின் அரிய கனவொன்று இந்நூலின் வெளியீடு மூலமாக நனவாகியுள்ளது.

இத்தொகுப்பில் 36 அரிய கிறிஸ்தவத் தமிழ் நூல்கள் தகுதிவாய்ந்த நல்ல அறிஞர்களால் அறிமுகம் செய்து வைக்கப்பட்டுள்ளன. அழிந்துபடும் நிலையில் இருந்த பல நூல்கள் இம்முயற்சியின் மூலம் புத்துயிர் பெற்றுள்ளன. இது ஒரு சிறிய முயற்சியல்ல; பேருழைப்பின் மிகப்பெரிய வெளிப்பாடு; ஒரு நல்ல போராட்டத்தின் நலன்மிக்க விளைவு; ஒரு நல்ல ஓட்டத்தின் வெற்றி முத்திரை. இந்த 36 நூல்களையும் நடுவுநிலையில் நின்று அறிமுகம் செய்து வைத்து அவற்றிற்கு நிலைத்த வாழ்வு தரத் துணைநின்ற அறிஞர்கள் அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த நல்ல முயற்சிக்குச் செயல்வடிவம் கொடுத்த முனைவர் ஞான சந்திர ஜாண்சன் அவர்களுக்கும், அவருக்குத் துணை நின்ற அனைவருக்கும் கிறிஸ்தவத் தமிழிலக்கிய உலகம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

**ஜி. ஜான் சாமுவேல்**
20-09-2007

# முன்னுரை

கிறிஸ்தவத் தமிழ் இலக்கியம் முன்னூறு ஆண்டுக் கால வரலாற்றினை உடையதாகத் திகழ்கின்றது. வீரமாமுனிவர் முதலிய அருள் தொண்டர்களும், வேதநாயக சாஸ்திரியார், கிருஷ்ண பிள்ளை முதலிய கவிஞர் பெருமக்களும் அதன் வளத்திற்கும் வளர்ச்சிக்கும் பெருமை சேர்த்துள்ளார்கள். அத்தகு முன்னோடிகளைத் தொடர்ந்து கவிதை, காப்பியம், இசைப்பாட்டு, நாடகம், புதினம் முதலிய படைப்பிலக்கிய வகைகளில் தங்கள் பங்களிப்புகளை வழங்கியுள்ளோர் பலராவர். அத்தகையோர் தமிழ்ப் பண்பாட்டு நெறி நின்று இலக்கியம் பயின்றோராய்க் கிறிஸ்தவ ஒப்படைப்போடு தங்கள் புலமையை வெளிப்படுத்தியுள்ளார்கள். கிறிஸ்தவர் அல்லாதோர் சிலரும் கிறிஸ்துவுக்குத் தங்கள் புகழாரங்களைச் சூட்டும் வகையில் சில படைப்புகளை வழங்கியுள்ளார்கள். திரு.வி.க., சுத்தானந்த பாரதியார் முதலியோர் அன்னோருள் குறிப்பிடத் தகுந்தோராவர்.

கடந்த முன்னூறு ஆண்டுகளில் எழுந்த கிறிஸ்தவத் தமிழ் நூல்களுள் இன்றளவும் நமக்குக் கிடைக்கப் பெறாமல் உள்ள நூல்கள் பலவாகும். சில நூல்களைப் பெயரளவில் அறிய முடிகின்றதேயன்றி அவற்றின் படிகள் நமக்குக் கிடைத்தில. சில அரிய நூல்களின் படிகள் மேனாட்டு நூலகங்களிலும் காப்பகங்களிலும் பாதுகாக்கப்படுகின்றன. இத்தகு நூல்கள் பதிப்பித்தலையும் மறு அறிமுகத்தையும் மொழியாக்கங்களையும் எதிர்நோக்கியுள்ளன.

கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தைத் தோற்றுவித்து அதன் முதல் பொதுச் செயலாளராகத் திகழ்ந்த டாக்டர் ஜான் மர்டாக் அவர்கள், அவர் வாழ்ந்த காலமளவும் அச்சேற்றி வெளியிடப்பட்டிருந்த தமிழ் நூல்களைத் தேடிக் கண்டுபிடித்து அவற்றைப் பகுத்தும் தொகுத்தும் "A Classified Catalogue of Tamil printed books with Introductory Notices" என்ற தலைப்பில் 1865 இல் வெளியிடலானார். அவரைத் தொடர்ந்து மிகச் சிலரே அத்தகு முயற்சியில் முனைந்து ஈடுபட்டுள்ளனர்.

அவர்க்கு இப்பெரும்பணியில் ஐயப்பாடுகளைத் தெளிவித்து ஆலோசனைகள் வழங்கியவர் அவரோடு அருட்பணி மற்றும் நூல் வெளியீட்டுப் பணியில் சேர்ந்துழைத்த தமிழ் வல்லுனரும் சமயவியல் அறிஞருமான அருள்திரு. டாக்டர் ஹென்றி பவர் D.D. அவர்களாவர் என்று மர்டாக் கூறுகின்றார். அவ்வாறே நூலை உருப்பெறச் செய்வதில் பெரிதும் துணை நின்றவர் அருள்திரு. சற்குணம் வின்பிரட் என்பவர் ஆவர் எனவும் தம் முன்னுரையில் குறிப்பிடுகின்றார். அவ்விரு அறிஞர்களின் பங்களிப்புக்களும் பாராட்டுக்குரியவை ஆகும்.

கிறிஸ்தவத் தமிழ் நூல்களைத் தொகுத்து வழங்கும் முறையில் சென்னைப் பல்கலைக் கழகத்தின் கிறிஸ்தவத் தமிழ் இருக்கையின் முன்னாள் பேராசிரியர் முனைவர் சூ. இன்னாசி அவர்கள் வெளியிட்டுள்ள கிறிஸ்தவத் தமிழ்க் கொடை (2001) என்னும் நூல் குறிப்பிடத்தகுந்ததாகும்.

படைப்பிலக்கியம் சார்ந்த கிறிஸ்தவத் தமிழ் நூல்களோடு, சமயவியல், இறையியல் ஆகிய துறைகளில் வெளிவந்துள்ள ஆய்வு நூல்களையும் வரிசைப்படுத்தி சிறப்புக்குரியவற்றை மொழி பெயர்ப்புகளோடு மறு அறிமுகம் செய்ய வேண்டியதன் அவசியத்தை இப்போது அறிந்து வருகிறோம்.

இச்சூழலில் ''கிறிஸ்தவத் தமிழ் இலக்கியம் - ஓர் அறிமுகம்'' என்னும் இந்நூல் ஒரு சிறு முயற்சியின் விளைவாகவே வெளிவருகின்றது. கடந்த மூன்று நூற்றாண்டுகளில் வெளிவந்த சில பல கிறிஸ்தவ நூல்களை உரிய வகையில் சுருங்க அறிமுகப்படுத்தி அவற்றினின்றும் இலக்கியச் சுவைப்புக்கும் எடுத்தாளலுக்கும் ஆய்வுக்கும் பயன்தர வல்ல தேர்வுப் பகுதிகளையும் வழங்கியுள்ளோம். பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் மற்றும் இறையியல் பயிற்றகங்கள் போன்றவை தங்கள் பாடத் திட்டத்தின் கீழ்ச் சேர்க்கக் கூடிய வகையில் தேர்வுப் பகுதிகள் தரப்பட்டுள்ளன.

இத்தொகுப்பில் அறிமுகம் பெறும் 36 நூல்களுள் சில அரும்பாடுபட்டுக் கண்டறியப் பெற்றவை ஆகும். அம் முயற்சியில் துணை நின்றோரும் நூற்படிகளைத் தந்துதவியோரும் எங்களின் பாராட்டுக்குரியோராவர்.

இம்முயற்சியில் பல்லாற்றானும் எங்களை ஊக்குவித்ததோடு இந்நூலினை ஆசியவியல் நிறுவனத்தின் மூலமாக வெளிக்கொணர்ந்து அரியதோர் அணிந்துரையும் வழங்கியுள்ள ஆசியவியல் நிறுவன இயக்குனர் பன்னூல் பதிப்புச் செம்மல் டாக்டர் ஜி. ஜான் சாமுவேல் அவர்கட்கு எங்கள் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

இரட்சணிய யாத்திரிகத்தின் முழுமையான பதிப்பை 1998 ஆம் ஆண்டில் வெளியிட்டதைத் தொடர்ந்து இந்நூலை வெளியிடும் டாக்டர் ஜான் சாமுவேல் அவர்களுக்குக் கிறிஸ்தவ நல்லுலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

இந்நூலை உருவாக்கும் முயற்சியின் தொடக்கக் கட்டத்தில் துணை நின்றுதவிய தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் த. இயேசுதாஸ், கிறிஸ்தவ இலக்கியச் சங்கத் தமிழ்ப் பதிப்பாசிரியர் திருமதி ஸ்வீட்லின் பிரபாகரன் ஆகியோருக்கும் இப்பதிப்பில் அடங்கும் நூல்களுக்கு அறிமுகக் கட்டுரைகள் வழங்கிய அறிஞர்களுக்கும் ஒளி அச்சு செய்து தந்த என்.எஸ். வடிவமைப்பகத்திற்கும் அச்சிட்டு உதவிய மாணவர் மறுதோன்றி அச்சகத்தினருக்கும் எங்களின் நன்றி உரியதாகும்.

இலக்கியத் தோழமையுடன்,

14.5.2007

தி. தயானந்தன் பிரான்சிஸ்
யோ. ஞான சந்திர ஜாண்சன்

# பொருளடக்கம்

# 1

# திருக்காவலூர்க் கலம்பகம்

**ஆசிரியர் : வீரமாமுனிவர் (1680 - 1747)**
**அறிமுகம் : வி.மி. ஞானப்பிரகாசம்**

### முனிவரின் வரலாறு

இத்தாலிய நாட்டில் 8.11.1680 இல் பிறந்த வீரமாமுனிவர் 1711 இல் தமிழகம் வந்து, நெல்லை, மதுரை, இராமநாதபுரம், திருச்சி, தஞ்சை முதலிய பகுதிகளில் மறைப்பணி செய்து, 1747இல் கேரளாவில் உள்ள அம்பலக் காட்டில் இறையடி இணைந்தார்.

தஞ்சை மராத்திய மன்னரின் கொடுமைக்கு அஞ்சி, கிறிஸ்தவர்கள் கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள ஏலாக்குறிச்சி என்ற இடத்தில் தஞ்சம் புகுந்தனர். அங்கு முனிவர் பாவிகளுக்கு அடைக்கலமாகிய மரியன்னைக்குச் சிறிய கோவில் எழுப்ப, அன்னையை அடைக்கல அன்னை என்று அழைத்தார். அந்த இடத்திற்குத் திருக்காவலூர் என்று பெயர் சூட்டினார். அந்த அன்னைக்குப் புகழ் மாலையாக அவர் கொடுத்ததே திருக்காவலூர்க் கலம்பகம்.

### கலம்பகம்

அரசர்கள் முதன்மை பெற்ற காலத்தில், கடவுளின் திருஉருவத்தின் (பாதாதி கேசம்) ஓர் உறுப்பு ஒளி பெற்ற காலத்தில், எண்கள் (9-நவரத்தினம்) மதிப்புப் பெற்ற காலத்தில் சிற்றிலக்கியங்கள் பெருகின. இவை 96 வகையின என்பதை முதன்முதல் கூறினது வீரமாமுனிவரே. தமது சதுரகராதியிலும் தொன்னூல் விளக்கத்திலும் பட்டியல் போட்டு அவற்றிற்கு விளக்கம் தருகின்றார்.

இவற்றில் கலம்பகம் என்பது பல்வேறு மலர்கள் சேர்ந்த கதம்பம் போல, பல்வேறு பாட்டுகள் இணைந்த பாமாலையாகும். இதில் உயர் கவிதையும் சாதாரணக் கவிதையும் இருக்கும். இம்மை இன்பமும் மறுமை நலனும் கட்டப்படும். ஒவ்வொரு பாட்டும் அந்தாதித் தொடையால் தொடுக்கப்படும். முதற்சீரும் இறுதிச்சீரும் ஒரே எழுத்துடன் அல்லது அசையுடன் அமையும்.

மிக முக்கிய கலம்பகம் நந்திக் கலம்பகம். மூன்றாம் நந்திவர்மனைப் பற்றி (கி.பி. 826-849) பாடப் பெற்றது. பிறகு தெய்வத்திற்கும் ஞான குருவுக்கும் சூட்டும் மாலையாகக் கலம்பகம்

விளங்கியது.குமரகுருபரர், சிவப்பிரகாசர் (17 ஆம் நூற்றாண்டு) முதலியோர் கோவில் மீது கலம்பகம் பாடினர்.

இந்த மரபை ஒட்டி முனிவர் திருக்காவலூரில் கோயில் கொண்ட மரியன்னை மீது கலம்பகம் பாடினார். இது பெண் மீது பாடப்பெற்ற முதல் கலம்பகம் ஆகும்.

### இயேசுவே மையம்

மரியன்னையின் புகழ் பாடும் இக்கலம்பகம் உண்மையில் இயேசுவின் புகழையே பாடுகின்றது.

*'உருவில்லான் உருவாகி உலகில் ஒரு மகன் உதிப்பக்*
*கருவில்லாக் கருத்தாங்கிக் கன்னித்தாய் ஆயினையே'*

இதுவே இக்கலம்பகத்தின் நடுவில்மணக்கும் நறுமணப்பூ. பனுவல் புயவகுப்பு என்ற உறுப்பு, மரியன்னையின் ஆற்றலையன்று, அவர்கள் ஈன்ற மகனின் (இறைவனின்) ஆற்றலை (படைப்பு, பெருவெள்ளம், செங்கடல் கடத்தல்) விரித்துரைக்கிறது.

*'தேவாதி தேவனைநின் திருவயிற்றில் அடக்கினைநீ*
*மூவுலகு மூவிரலான் முகந்தேந்து முதலோனைத்*
*தேவுலகும் வியந்திறைஞ்சச் செங்கரமேல் ஏந்தினைநீ'* (ஈரடித் தாழிசை ஆறு)

எனும் அடிகள் இயேசுவால் மரியாள் மகிமை பெற்றதைக் கூறுகின்றன.

'மாலை வாங்க வந்தனன்' என்று தொடங்கும் மடக்கு (22) இயேசுவின் பிறப்பு, நோன்பு, இறப்பு, உயிர்ப்பு, விண்ணேற்றம் என்பவற்றைச் சுட்டிக்காட்டி, 'காலை வேந்தன் ஒத்த நின் காலை யார் அறிந்துளார்' என்று வினவுகிறது.

'உலக மக்களின் துயர் தீர, அருள்நலம் விளைவிக்கும் உன் மகனின் திருவடிகளைக் காட்டுவாயாக' என்று முனிவர் பின்வருமாறு வேண்டுகின்றார்:

*'மிடைந்த அருள்நலம் விளைந்த திருமகன்*
*மிளிர்ந்த வடிவடி காட்டவே' (28)*

### சமூக உல்லாசம்

பொதுவாக உலா என்ற உறுப்பில் தலைவன் உலா வருகையில், பெண்கள் கண்டு மயங்குவதாகக் கூறுவது வழக்கம். அது இங்கு மாற்றம் பெற்றுள்ளது.மரியன்னைக்கு விழா எடுக்கும் மக்கள் கால் கை இல்லாதவர்கள், குழந்தை இல்லாதவர்கள் அடையும் கருணையால் உண்டாகும் மகிழ்ச்சியைப் படம் பிடிக்கும் சமூக உல்லாசமாக (38) மாற்றப்பட்டுள்ளது.

### இலக்கிய மணம்

திருக்காவலூரில் ஒரு பூங்கொடி உண்டு; அதில் காந்தள், தாமரை, நீலோற்பலம், செவ்வல்லிப்பூ மணக்கும். (இவை மரியன்னையின் கைக்கு, அடிக்கு, கண்ணுக்கு, வாய்க்கு உருவகங்கள்). இம்மலர்களில் தேனுண்ட வண்டுகளே, மற்ற மலர்களின் தேன் இதற்கு ஒத்துளதோ (23) என்ற கேள்வி, குறுந்தொகையில் வரும் 'கொங்குதேர் வாழ்க்கை... நறியவும் உளவோ நீ அறியும் பூவே' என்ற கேள்வியை நினைவூட்டுகின்றது.

*திருக்காவலூரின் தோட்டத்தில், தான் பசும்புல்லாகக் கிடக்க பக்தன் விழைகிறான் ('கேள் அணிந்த காவல்நலூர்க் கிளர்புனத்துப் பசும்புல்லாக் கிடவேன் நானோ' 36). குலசேகர ஆழ்வாரின் 'படியாய்க் கிடந்து உன் பவளவாய்க் காண்பேனே' என்ற ஏக்கம் இங்கு நினைவுகூரத்தக்கது.*

**நகைச்சுவை**

*நாட்டுப்புறப் பாடல்களின் சாயலில் இடைச்சி, வலைச்சி, குறத்தி பாடல்கள் அமைந்துள்ளன. இடைச்சி அங்குப் பால் விற்க வருகின்றாள். அது பால் அன்று, பால் கலந்த தண்ணீர். அவள் வாய்ப் பேச்சால் இங்கு (திருக்காவலூரில்) ஏமாற்ற முடியாது. ஏனென்றால் இங்கு அன்னம் உள்ளது (இது நீரிலிருந்து பாலைப் பிரித்துவிடும் (14). இந்த அன்னம் மரியன்னையின் தாயின் பெயர்; தாயின் பண்பு மகளுக்கும் பொருந்துமன்றோ). இங்குக் கத்தோலிக்கப் பரம்பரைச் செய்தியும் தமிழ் மரபும் கலந்திருப்பதைக் காண்கிறோம்.*

*இவ்வாறு திருக்காவலூர்க் கலம்பகம் தூய தமிழ் மணக்கும் தாழை, கனிந்த இயேசுவின் கருத்து நிறை பேழை எனலாம். இது வெண்பா, கட்டளைக் கலித்துறை முதலிய உயர்வகைப் பாக்களும், இடைச்சி, வலைச்சி, குறம் முதலிய நாட்டுப்புறப் பாடல் வகைகளும் கொண்டது. இம்மை நலனும் மறுமை நலனும் பயக்கவல்லது.*

### காப்பு

## கட்டளைக் கலித்துறை

பாற்கடல் கன்னிச்சங் கிங்க ணரிதில்ப யந்தளித்த
மேற்கடல் தேவ திருமுத்தம் பூண்டு விரிதமிழ்ப்பா
நாற்கடல் தொல்லந் துறைசேர்ந்து காவலூர் நங்கையெனும்
நூற்கடல் தேவமு தள்ளி நுகர்வானு வன்றிடவே.

### நூல்

## மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

### நான்கடித் தரவு இரண்டு

பார்மேவும் பழிநீப்பப் பகர்ந்தடங்காப் பரிவுள்ளிச்
சீர்மேவும் திருவுளத்தைத் தெளிந்தமரர் உளம்பனிப்ப
உருவில்லான் உருவாகி உலகில்ஒரு மகனுதிப்பக்
கருவில்லாக் கருத்தாங்கிக் கன்னித்தாய் ஆயினையே!

மண்ணுலகம் துயர்நீங்க மன்னுயிர்கள் சிறந்துவப்ப
விண்ணுலகம் புகழ்ந்தேத்தி வியந்தலர்சே வடிவருட
வான்தளங்கள் புறங்காப்ப வானரசர் பணிகேட்ப
மீன்தளங்கள் அணிமதிபோல் விண்ணரசாள் ஆயினையே!

## நான்கடித் தாழிசை ஆறு

தண்சுடர்க்கால் மதிக்குழவி தாங்கியபூ அடிவிளங்கத்
தெண்சுடர்க்கால் உடுஅணைந்த திருமுடிகொள் சிரம்இமைப்பப்
பனியுயிர்த்து மனங்குளிர்க்கப் பரிதியுடுத் துடல்இலங்கத்
தனியுயிர்த்தும் அரசணியாத் தரிப்பதுநின் விருதாமோ?

கனைபூத்த சோனாட்டுக் காவிரியின் வடகரைமேல்
சினைபூத்த நிழற்பொழில்வாய்ச் சிங்கநெடுங் கொடிநிழற்றும்
தருக்காவல் ஊரகத்துத் திகழொளிவாய் மணிக்கோயில்
அருட்காவல் இயற்றிநம்மை அளிப்பதுநின் தயையாமோ?

உள்ளுருவாக் கவசமென உத்தரியத் துடன்மருள்தீர்
தெள்ளுருவாம் மணிமாலை சிறந்தேத்தும் கைந்நீட்டி
வாய்பொய்யா மறைத்திசையாம் வடதிசையே தனிநோக்கித்
தாய்பொய்யா அடைக்கலமே தருவதுநின் புகழாமோ?

கான்பொதுளும் பூம்புகையும் கமழ்பூவும் மணந்தேங்க
மீன்பொதுளும் ஒளிமணியார் விமானத்துள் எழுந்தருளிப்
பார்பூத்த வினையறநீ பயந்தநலத் திவ்வுலகும்
சீர்பூத்த வானொப்பச் செய்வதுநின் சிறப்பாமோ?

தாண்மலரே தலைஅரும்பத் தரும்பணிகேட் டுளம்பனிப்பச்
சேண்மலரே உன்வரத்தால் திருக்கடலூ டினிதாழ்ந்து
வானவரும் கரைகாணா மனந்தேற்றாப் புன்பாவால்
ஈனவருள் யான்நீந்தற் கியைந்ததுநின் திறமாமோ?

யாழ்குரலே இனிதென்னா ஈன்றாட்கே தன்மகன்சொல்
தாழ்குரலே இனிதென்ற தகைமைத்தாம் மனதிரங்கித்
துவர் வாய்ப்பொங் கலைமணிபோல் தொடர்புளதாய் நீஎன்றன்
உவர்வாய்ப்புன் புகழுரைகொண் டுவப்பதுநின் பரிவாமோ?

## நாற்சீர் ஓரடி அராகம் எட்டு

உயருல கடிதொழ உயிரினு முவகையை
துயருல குளியுள துகளொழி உறுதியை
உலகினை அருளிய ஒருவனை அருளினை
அலகினை அறுவரம் அமைதனி அரசினை

வினையிடும் இருள்அற வெயிலிடு மறையினை
முனையிடு பகைஅற முயலிடும் உடலினை
மறைஅருள் இறைவனை மறைவில அருளினை
இறைஅருள் கதியினை இனிதருள் துணையினை.

## ஈரடித் தாழிசை ஆறு

ஆதியிலா அந்தமிலா அனைத்துயிர்க்கும் காரணற்கே
ஓதில்எலா நிகர்கடந்த உற்பத்தி ஆயினைநீ!

பூவாதி மூவுலகின் புலத்தடங்கா வரையொழிக்கும்
தேவாதி தேவனை நின்திருவயிற்றில் அடக்கினை நீ!

வானவர்க்கும் தெளியாத வடிவொளியான் வினைஇருள் நீத்
தீனவர்க்கும் தெளிவதற்கே என்னுருவொன் றாக்கினை நீ!

மூவுலகும் மூவிரலால் முகந்தேந்து முதலோனைத்
தேவுலகும் வியந்திறைஞ்சச் செங்கரமேல் ஏந்தினைநீ!

பொருள்சுரந்தீன் உயிர்க்கெல்லாம் பொழிந்தூட்டி வளர்த்தோனை
அருள்சுரந்த திருக்கொங்கை அமுதூட்டி வளர்த்தனைநீ!

அனைத்துலகும் ஏவலைக்கொண் டசைத்ததனி ஆணையினான்
நினைத்துலகும் வியப்புறஇந் நிலத்தேவல் கொண்டனை நீ!

### அம்போதரங்கம்

## ஈரடிப் பேரெண்

உந்தையை ஈன்றுநீ ஒருவற் கீங்கரும்
வந்தையோ டன்னையும் மகளும் ஆயினை!
கனியரும் பயனோடு கலந்த பூவிணைத்
தனியருட் கன்னியும் தாயும் ஆயினை!

## நான்கடி இடையெண்

தொற்பழி உரகம் மிதித்தனை
துகட்பழி உலகில் துடைத்தனை.
கற்பழி அலகை அடக்கினை.
கதிக்கத வகல இயக்கினை.

## எட்டடிச் சிற்றெண்

விண்தி றந்தனை
எண்தி றந்தனை.
பான்அ ணிந்தனை
மீன்அ ணிந்தனை.
மதிப தத்தினை
கதிப தத்தினை.
அருள்வ லத்தினை.
பொருளி டத்தினை.

## தனிச்சொல்

என ஆங்கு

## அகவற் சுரிதகம்

தண்திருக் காவலூர்த் தடம்வளர்ந் தொளிபெற
மண்திரு மலர்அடி வைத்தனை எங்கணும்
வினைஇராப் பரந்து விளைந்த அவாஇருள்
தனைஇற மறையொளி தருந்திருப் பகலோன்

வந்துயிர் விளக்க வருநாள் இதுவென
நந்துயிர் உய்ய நகைக்கதிர் பரப்பக்
கொதித்தனைத் திருளினைக் கொய்தீங்
குதித்தனைநீயோர் உதய மீனே.

## கட்டளைக் கலித்துறை

தாயுனைக் கொண்டான் அனைத்தும் படைத்தவோர் தந்தையன்னான்
காயெனப் பூவெனத் தன்தரு மாட்சியைக் காட்டுவபோல்
சேயுனைக் காட்டலின் இவ்வள வுன்புகழ் செப்புவரார்?
ஓயில காவல் இறைவி பொறாயென் உரைவெளிறே.

புய வகுப்பு

## ஆசிரிய வண்ண விருத்தம்

வெளிமதி கதிருடுக்குல மணிநிதி ஒளிமுகத்தவை
மலர்கனி யமுதுமற்றைய பலஉல குளவனைத்தையும்
ஈறிலா தெங்கணும் அருளிப் பயந்தன

வெளியமை சுரர்முதற்பல வினையமை நரரினத்தொடு
விரிபல உலகனைத்தினும் உளபல உயிர் அனைத்தையும்
நாளுமா றின்றி யரிதுயிர்த் தமைந்தன

வினைவிளை புவிபகைத்தன முழுதுள துகள்துடைத்திட
விரிமுகில் இடியிடித்தரி துயர்மலை முடிஒளித்திட
மாரிமா றொன்றிவ் வுலகிற் பொழிந்தன

விரவிய விரகம்முற்றிய வினையொடு வெகுளிபற்றிய
அழல்எழு முகில்இயற்றிய சுடும்எரி யுலகழற்றிய
மாரியால் ஐம்புரம் எரியச் சினந்தன

தெளிமறை யவர்செலப்பிரி கடலிரு மதில்எனக்கடி
திருபுடை எழநிறுத்தின நிலைஎழு திரைகவிழ்த்தெதிர்
நேரலார் நைந்துயிர் ஒழியக் கடிந்தன

திகிரிய துயர்குவட்டிழி திரைநிலை யுறநிறுத்துபு
மலைமிசை மலைஅடுக்கென அலைமிசை அலைஅடுக்குபு
யோருதான் எனுநதி நடைதடுத் துயர்ந்தன

செருமிகு செறுநர்மொய்த்துறை முகில்தவழ்அரண்மதிற்சுவர்
பொடிஎழ அடிபெயர்த்தொரு படையில நகர்தகர்த்திரு
ஞாலமே அஞ்ச மிகுகத் தெதிர்ந்தன.

சிதவழி சிதைசினக்கரன் அரசுடன் உயிரறப்பல
கரிபரி அலதுமுப்படி யுறழவும் அபயர்முற்றறு
நூறுநூ றன்றொழிய வதைத் தெறிந்தன

ஒளிஎழும் உருள்நடத்தின நிலையுற வுருள்நிறுத்தின
பிறகுற உருளிழுத்தன பகலிடை உருள் ஒளித்தன
மாயிரா வென்றுல கிருளக் கரந்தன

உயரிய வரைமுகட்டிடை யழலெழ இடிமுழக்குடன்
அதிர்வன உலகுவப்புற இருசிலை மிசைதிருத்திய
வேதநூல் அன்புடன் எழுதிப் பரந்தன

உலகுயிர் கனியவொத்துரு உடலுறி அடைசயக்கொடி
எனவொரு சிலுவைநட்டிட உயர்மலை முகடுபற்றுளி
வானுளோர் அஞ்சி வெருஉறச் சிவந்தன

ஒருவில படைஎனப்பொறை ஒருபொழு தெமதுயிர்ப்பகை
எனமுடி விலஉடற்றிய வெறியின முழுதடக்கிய
வாகையே கொண்டிடர் உலகிற் பரிந்தன

களியற உடலுணக்கிய பிணிஅற மிடிபெருக்கிய
துயரற வினைஇயற்றிய குறையற வரிதியக்கிய
ஈரவா யுண்ட புதுமையிற் சிறந்தன

கடிதெழு வளிஅடக்கின பகமலை புவிநடுக்கின
பகலிடை வெளிஇருட்டின கனல்குளி ரிடநிலைத்தன
நீருமா ஐந்தையு மரிதிற் புரந்தன

கதிபெறு மறைஉரத்தொடு கொடையருள் தவநலத்தொடு
பொறைதுணி வறவயத்தொடு பொருள்நய நலமனைத்தையும்
ஞாலமீ தெங்ஙணும் மலியப்பயந்தன

கசடிடர் முழுதொழிப்பன ஒழிவில கனியுயிர்ப்பன
நரககல் கதவடைப்பன கடைஇல கதியில்உய்ப்பன
காவலூர் அங்கனை மகன்நல் புயங்களே.

### தவம்

## கட்டளைக் கலித்துறை

புயங்க உருவால் வினைநஞ்சு உமிழ்ந்து புழுங்கியபேய்
உயங்க மிதித்துத் தவத்தால் வென்றாயென ஒண்மதியம்
மயங்கார் பகையினுக் கஞ்சிவந் துன்றவ வாகையிற்றான்
முயங்க அடைக்கலம் கொண்டதோ காவலூர் மூதுயிரே.

## நேரிசை வெண்பா

உயிராந் தயையாளை ஓம்பநந்தத் தாளை
அயிரா மறைமொழி யாளைப்-பயிராரும்
சிந்துசேர் காவலூர் சேர்த்தாளைப் பாடினேன்
இந்துசேர் தாள்சேர யான்.

## கலிநிலைத் துறை

யான் அரும்பும் பதத்தழகி மதி அரும்பும் பதத்தழகி இனியவில்வாய்
பான் அரும்பும் படத்தழகி தேன் அரும்பும் படத்தழகி பகலிற்றொல்கா
மீன் அரும்பும் சிரத்தழகி விண்ணரும்பும் சிரத்தழகி விரிவான் வீட்டைத்
தான் அரும்பும் முகத்தழகி தயை அரும்பக் காவனலூர் தங்கினாளே.

## தாழிசை

தங்கள்தேக மதங்கள்தீர மறைகள்தே யுகத் தாழ்வெலாம்
மங்கவேத அறங்கள்தேர மனங்கள்தேர வழங்கிவான்
அங்கிலாபம் அடைந்துவாழ அடங்கலே திருக்காவலூர்
நங்கைசேவடி நம்பநாளும் நயந்துசூடுக நாடியே.

## வஞ்சி விருத்தம்

நாடிய மேற்கதி நலங்காணா
வாடிய தென்உளம் மலிநெஞ்சே!
தேடிஅ ணங்கறு திருக்காவல்
பாடிஅ ணங்கடி பணியாயோ?

## நேரிசை வெண்பா

'பாடிப்புகழ்ந்து படர் காவலூர் நங்கை
நாடி வணங்கு நரர் எல்லாம் – கேடிலரே
மண்ணவருள் மாசிலராய் வாழ்ந்து இவண்மற்ற ஒப்பிலராய்
விண்ணவருள் வீற்றிருந்தொப் பார். (100)



# 2

# பச்சாத்தாபம்

**ஆசிரியர் : அந்தோணிகுட்டி அண்ணாவியார்**

**அறிமுகம் : கிரேஸ் செல்வராஜ்**

**மணப்பாடு தந்த மாணிக்கம்**

கவிஞரின் விரிவான வாழ்க்கை வரலாற்றுச் செய்தியொன்றும் நமக்குக் கிட்டவில்லை. ஆயினும் இவரது பாடல்களின் வழிநின்று நோக்குங்கால் வாழ்வில் வறுமையினாலோ அன்றி பிணி போன்ற வேறு பல துன்பங்களினாலோ கவிஞர் நொந்து வருந்தியிருக்கக் கூடும் என்பது புலனாகின்றது. ஒரு சாதாரண சராசரி மனிதனாகத் தன் இடர்ப்பாடுகளை மறக்கக் குடிபோதையாகிய கொடிய பழக்கத்திற்கு ஆளாகியிருந்தார். அந்நிலையிலும் இவரது ஆழ்ந்த புலமையும், நுட்பமான கற்பனையும் சிறிதும் சிதறவில்லை என்பதைப் பின்வரும் நிகழ்ச்சியால் அறிந்து கொள்ள முடிகிறது.

கவி காளமேகத்திற்கொப்ப சொற்களுடன் விளையாடும் சித்தர் அருட்கவி அந்தோணிக்குட்டி அண்ணாவியார் எனக் கேள்விப்பட்டுக் கல்வியிற் சிறந்த அந்தணர் மூவர் கவிஞரைச் சந்திக்க சிவகங்கையிலிருந்து, மணப்பாட்டிற்கு வந்தனர். ஒரு நண்பரின் துணையுடன், இவரது இல்லம் தேடிச் சென்ற அம்மூவரும், கள் குடித்துவிட்டு மயக்க நிலையில் திண்ணையில் படுத்திருக்கும் கவிஞரைக் கண்டனர்; அதிர்ச்சியடைந்தனர்.

''இதுதான் நாங்கள் பல மாதங்களாய்ப் பார்க்க விரும்பிய அந்தோணிக்குட்டி அண்ணாவியார் கள்ளோ'' என்று மிகுந்த ஏளனத்துடன் வினவினர். இதைக் கேட்டு உடனே எழுந்த கவிஞர்,

*''மாதங் கள்ளாய்க் கருதியுள*
*மணவைக் கள்ளைப் புரிந்துகொள*
*பாதங் கள்ளும் புனலாடப்*
*பார்ப்பார் கள்ளோ வந்தீர்கள்?''*

என்று கவிதையால் சாடினார். பார்ப்பனர் இகழ்ந்துரைத்த 'கள்' என்ற ஒரு சொல்லுக்கு விடையாகக் கவிஞர் 'பல கள்' கூறி அவர்களைச் சாடிய சாதுரியம் நயமானது.

தமிழ் மொழியின் வளத்திற்கும், வளர்ச்சிக்கும் எடுத்துக்காட்டுகளாக அமைந்துள்ளவை புத்திலக்கியப் படைப்புகள். இலக்கியப் போக்கில், வடிவத்தில், பொருண்மையில் காலந்தோறும் தோன்றும் மாற்றங்கள், அவ்வப்பிரிவிற்கு மேலும் மெருகூட்டி வருகின்றன. தொல்காப்பியர் புத்திலக்கியங்களை 'விருந்து' என்னும் பொருளில் அடக்கி,

*"விருந்தே தானும்*
*புதுவது கிளந்த யாப்பின் மேற்றே".*

எனக் குறிப்பிடுகின்றார்.

தொண்ணூற்றாறு வகைகள் என்று கூறப்படும் சிற்றிலக்கிய வகைகள் கூட எண்ணிக்கையில் மிகுந்து, பல நிலைகளில் மாற்றமடைந்து வருவது கண்கூடு. இத்தகைய இலக்கிய வளர்ச்சிப் பணியில் கிறிஸ்தவப் புலவர்களின் பங்கும் சிறப்பாக அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்க தாகும். உரைநடை வளர்ச்சிக்கு மட்டுமல்லாது, கவிதைப் பெருக்கிற்கும் கிறிஸ்தவ எழுத்தாளர்கள் ஏற்றமளித்து வந்திருக்கின்றனர்.

பாக்கள் எப்பொழுதுமே உள்ளத்து உணர்வுகளை உருக்கமாக வெளியிடும் வாயில்கள் எனலாம். அவ்வாறு தமது வாழ்க்கை நிகழ்ச்சிகளை உயிர்த் துடிப்புடன் உருக்கமான பாக்களாக வெளியிட்டுள்ளார் அருட்கவிஞர் அந்தோணிக்குட்டி அண்ணாவியார். இவர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள மணப்பாடு என்னுமிடத்தில் வாழ்ந்தவராவர். இவரது பாடல்களின் வழியாக இவர் எவ்வாறு தமது வாழ்க்கையில் எதிர் நீச்சலிட்டுப் போராடி வாழ்ந்திருக்க வேண்டுமென்பதை யூகிக்க முடிகிறது. இயேசு பெருமான் மீது கவிஞர் அந்தோணிக்குட்டி அண்ணாவியார் எல்லையற்ற அன்பும், பக்தியும் கொண்டு வாழ்ந்தார். குழந்தைப் பருவத்தில் இவரது பிஞ்சு மனதில் ஆழப்பதிந்தது சிலுவைத் திருக்கோலக் காட்சியாகும். கவிஞரின் அன்னையார் சிலுவையின் தியாகச் சுடரை, கதை வரலாறாகக் குழந்தையின் உள்ளத்தில் பதியும் வண்ணம் எடுத்துரைப்பதுண்டு. இச்சிலுவைக் காட்சியும், அக்காட்சியில் கலந்துள்ள சீரிய அன்பும் கவிஞரது நெஞ்சில் அழியாக் கல்வெட்டாகப் பதிந்து, அவ்வப்போது இவரது சிந்தனையைத் தூண்டிவிட்டது. இயேசு பெருமானின் சிறந்த, புனிதமான தியாகத்திற்குக் காரணம் என்ன என்று தாமே அடிக்கடி வினவுவதுண்டு.

*"இயேசு பெருமானைச் சிலுவையிலே தொங்க வைத்தது எது?"*

தினமும் இவரது நினைவிற் சுழன்ற இக் கேள்விக்கு விடை கண்டு கொண்டார். "இயேசு பெருமானைச் சிலுவையிலே தொங்க வைத்தது யூதாசின் முத்தமன்று. உரோமைப் படைவீரர்கள் கட்டிய கயிறன்று; அறைந்த ஆணிகள் அல்ல. அன்பு! ஆம்! அன்பே இறைவன். அது உறங்கும் அன்பன்று; இயங்கும் அன்பு. சிலுவையில் தொங்கியது அந்த அன்புதான்". கவிஞரது எண்ணத்திலே முகிழ்த்த இந்த உறுதியான கருத்து இவரது வாழ்நாள் முழுவதும் இவரை நடத்திச் சென்றது. இதுவே இவரது உள்ளத்தை உருக்கி, இறைபக்தியை மேம்படுத்தி எண்ணற்ற கவிதைகளை வடிக்க வழிவகுத்தது.

புனிதமான இறையன்பிற்கு ஆட்பட்டோரது உள்ளத்தில் பொறாமையற்ற தூய அன்பு துளிர்த்துப், பிறரையும் தம்மைப் போலவே கருதி வாழவைக்கும் பண்பு உருவாகும் என்று கவிஞர் நம்பினார். பிழை செய்வது மனித இயல்பு. ஆனால் பாவக் குற்றங்களைக் களைந்தெறிய முயல வேண்டும். முயன்றால் முடியாதது ஒன்றுமில்லை. முயற்சி முற்றிலும் தூய்மையான வாழ்வு நடத்துவதற்கு அடிகோலும். பிழைகளைக் களைந்து திருந்தி வாழ்வதற்கு முயற்சி மட்டுமல்ல, இறைவனடியைப் பற்றிப் பிடித்துக் கொள்ளும் மன உறுதியும் வேண்டும் என்று கவிஞர் உலகுக்கு உணர்த்த விரும்பினார். கவிதைகளைக் கருவியாகக் கொண்டார். "பாவம் புரியும்போது அவன் மனிதன். மனம் வருந்தி மன்னிப்புக் கோரிக் கண்ணீர் சிந்தும்போது அவன் இறைவன்" இதுதான் அருட்கவி அந்தோணிக்குட்டி அண்ணாவியாரின் அடிப்படைத் தத்துவம். இதைப் பிறருக்கு உணர்த்துவதே தம் கடமை என்பதைத் தம் பாடல்களில் வலியுறுத்திக் காட்டுகிறார்.

அருட்கவி அந்தோணிக்குட்டி அண்ணாவியார் எழுதியவையாக நமக்குத் தெரியவரும் நூல்கள் பதினேழாகும். அவற்றுள் நமக்குக் கிடைத்துள்ளவை இரு நூல்களாக மூன்று பாடல்கள். ''பச்சாத்தாபம்''ஒவ்வொரு பாடலும் பதினாறு அடிகளாக, ஐம்பத்து மூன்று பாடல்கள் கொண்ட தனி நூல். 'ஆசைப்பத்து' 'ஆபத்துப் பத்து' ஆகிய இரு பாடல்களும் ஒரு சிறு நூலாக வெளியிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பகுதியும் பத்து கவிகள் கொண்டது. ஒவ்வொரு கவியும் எட்டு அடிகளாக எழுதப்பட்டிருக்கிறது.

வாழ்நாள், இளமை, யாக்கை என்பவை நிலையற்றவை என்பதனையும், ஆசைதான் மனிதனின் அழிவுக்கே காரணம் என்பதையும் உணர்த்த விரும்பினார் கவிஞர். பல்வேறு வகை ஆபத்துகள் நிறைந்த இவ்வுலகச் சூழலினின்றும் நம்மைத் தற்காத்துக் கொள்வதற்கு இறைவன் திருவருளையே பற்றுக் கோடாகக் கொள்ள வேண்டும் எனக் கவிஞர் தம் பாடல்களில் கூறுகிறார். தமது தவறை எண்ணி உருக்கமாக இறைஞ்சும் அவரது உள்ளப் புலம்பலைப் பல கவிகள் சொல்லுகின்றன. எடுத்துக்காட்டாக ஒரு பாடல்:

*"...............*
*நாற்றத் தொளிக்குளேஊர்ப்*
*பன்றியென வேபுரளும் அருவருப் புற்றவன்;*
*.........*
*உன்னடிக் காளாவ தெளிதோ!*
*.........*
*இணையறும் இரக்கத்தை யான்மிகவும் நம்பினேன்*
*யேசுநா யகசுவாமியே!"* *(பச்சாத்தாபம், 4)*

ஆசை தான் மனிதனின் அழிவுக்குக் காரணம் என்பதனைத் தமது 'ஆசைப்பத்து' என்னும் பாடலில் கவிஞர் சுட்டிக்காட்டும் நயம் போற்றற்குரியதாகும். வாழ்நாள், செல்வம், இளமை, யாக்கை ஆகியவை நிலையற்றவை. மாறும் உலகப் பொருட்களினால் ஏற்படும் ஆபத்துகளினின்று தம்மைக் காப்பாற்றி, மாறா இறையருளை நாடி நற்கதி பெறுவதே சாலச் சிறந்தது என முடிவெடுத்து இறைமை இன்பத்தில் அமைதி கண்டார். தான் பெற்ற இன்பம் இவ்வுலகும் பெற வேண்டும் என்னும் நோக்கில் கவிஞர் படைத்தருளியவைதான் 'ஆசைப்பத்து', 'ஆபத்துப்பத்து' என்னும் பாடல்கள்.

ஆசைப்பத்தின் கவிகள் ஒவ்வொன்றும் எட்டு அடிகளாக அமைந்துள்ளன. ஒவ்வொரு கவியும் கருத்துச் செறிவுடன் தனிப்பட்ட ஒரு உண்மையை உலகுக்கு உணர்த்துவதாகப் பாடப்பட்டுள்ளன. பொருளாசையால் வரும் இழிகுணம், காணிச் செல்வத்தால் ஏற்படும் ஆசை, செல்வத்தைப் பேணிக் காக்கும் ஆசை, பொருளின் இன்றியமையாமை, பொருட் செல்வச்சிறப்பு, போகச்செருக்கு, ஈயாக் கருமியின் குணம், செல்வர் இழிகுணம், செல்வர் கடமை, போதுமென்ற மனம் ஆகிய பத்தும் முறையே அப்பத்துப் பாடல்களின் கருப்பொருள்கள். சுருங்கக்கூறின், மண், பொன், போகம் ஆகிய மூன்றின் வழி வருவது ஆசை என்பதும், அவ்வாசையே எல்லாத் துன்பங்களுக்கும் வித்து என்பதும் 'ஆசைப்பத்தில்' விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. இஃது ஒரு அறிவுரையாக, வாழ்வில் நல்லறங்கள் செய்து மகிழ்வதற்குப் பொருள் தேவை என்பதனையும், ஆனால் பொருளாசையால் விளையும் தீங்குகள் அகற்றப்பட வேண்டியவை என்பதனையும் சுட்டிக்காட்டுகிறது.

'ஆபத்துப்பத்து' என்பதில் வாழ்வில் நேரிடும் ஒவ்வொரு வகை ஆபத்தையும் எடுத்துக் காட்டி, அவற்றை அகற்றுவதற்குத் துணைபுரிவது இறைவனது கருணையும் அன்புமே என்று ஒவ்வொரு பாடலையும் முடிக்கிறார். செல்வத்தால், உடலால், பிணியால், விடப்பூச்சியால், விலங்கால், இயற்கைச் சீற்றத்தால், பகையால், சிற்றின்பத்தால், தீவினையால், மரணத்தால் ஏற்படும் பத்துவகை ஆபத்துகளை முறையே பத்துப் பாடல்களாக 'ஆபத்துப்பத்து' விளக்கிக் காட்டுகிறது. இறைவனருளிய பொய்தீரொழுக்க நெறிநின்று, புலனைந்தும் வென்று வாழ வேண்டுமாயின் இத்தகைய ஆபத்துகளை விலக்க வேண்டும். இறைவன் திருவடிகளை மறவாது எப்பொழுதும் பற்றிப் பிடித்து வாழ்பவர்க்கு மனதில் உறுதியும் உலகியற் பெற்றியைப் புறக்கணிக்கும் துணிவும் உண்டு என்பது ஈண்டு வலியுறுத்தப்படுகிறது.

பாவத்திற்குப் பரிகாரம் தேடும் மனதுடன் நைந்துருகு சிந்தையராய் உள்ளமுருகிப் பாடியதே 'பச்சாத்தாபம்' என்னும் தலைப்பல் அமைந்த பாடல்கள். தம் அறியாமையாற் பெரும் பிழைகளைச் செய்தவர்கள் அக்குற்றத்தின் பொருட்டு வருந்தி, நெஞ்சுருகி, இறைவனிடத்து முறையிடுவராயின், அருளாளனாகிய இயேசு பெருமான் அன்னோரது முறையீட்டுக்கு உளமிரங்கி அவர்தம் குற்றங்களை நீக்கி அருள்புரிவார் என்னும் உறுதி தொனிக்கப் பாடியுள்ளார். முன் செய்த பாவங்களைப் போக்க வேண்டுமானால் இறைவனை நெஞ்சம் நெக்குருகி வாழ்த்துதலே செய்யத்தக்கது என்பதனைக் கவிஞர் இப்பாடல்களில் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

*....''கோகுல பதியார் நரபதி தாவீது*
*குமரியார் பெற்றருள் குமரா*
*நேத்திரக் கருணை சமுத்திரம் அனையாய்*
*நித்தனே! கர்த்தனே! எங்கும்*
*நிறைந்துநின் றவனே! சிறந்தஅம் பரனே!*
*நிமலனே! யேசுநா யகனே!''* *(பச்சாத்தாபம், 35)*

'பச்சாத்தாபம்' எழுதப்பட்டிருக்கும் முறையே நேர்முகமாக, எம்பெருமானுடன் தான் உள்ளம் உடைந்து பேசி, அவர் துணையிருப்பார் தனக்கும் என்கிற நம்பிக்கையைத் தான் வளர்த்துக் கொண்டு, அமைதி காண்பது போல் அமைத்துப் பாடியிருக்கிறார்.

*'' ... ..... . ... ..*
*... .... .. ... ...*
*நாடுவது உனையான்; வணங்குவது உனையான்;*
*நம்புவது உன்னையே, நீயே*
*நல்லதோர் உடைமை; அழிவிலாப் பொருளே!*
*நாயகா! இயேசுநா யகனே!''* *(பச்சாத்தாபம், 45)*

இயேசு பெருமானின் திருவடிகளைத் தாமரை மலர்ப்பாதங்களாகத் தெய்வத் தாமரையாகவே பலவிடங்களில் இவர் சொல்லிச்செல்லும் முறை படித்தின்புறத்தக்கதாகும்.

*''செங்கமல மலரும் ஒவ்வா தோர்தந்த பொற்பதம்''*

*''தண்ணறுந் தாட்டாமரைச் சேவடி''*

*''வாரிசத் தாள் அருள்தி''*

*''எனக்குன் விரைமலர்த்தாள் வேண்டும்''*

*''உனது நாட்டா மரைமென் மலர்ப்பதத்தை நம்ப*

*''சேற்றில் பிறவாச் செழுங்கமலத் திருத்தாள்''*

*''உன் கமல நளினத் துணையை நம்ப''*

*''தண்டா மரையைப் புறங்காட்டுந் தாட்டா மரையாய்''*

இப்படிப் பல சொற்றொடர்களால் ''பச்சாத்தாபம்'' பாடல்களில் இயேசு பெருமானின் திருப்பாதங்களைக் கவிஞர் வருணித்திருக்கும் நயம் அப்பாடல்களுக்குச் சுவை சேர்க்கின்றது.

அருட்கவிஞரின் பாக்களில் ஓசை இனிமையும், பொருள் அமைப்பும் எதுகை, மோனையுடன் விரவி நிற்கும் பாங்கும் அக்கவிதைகளுக்கு மேலும் மெருகூட்டுகின்றன. ''ஆசைப்பத்து'' என்னும் பிரிவில் பொருள், குணம் ஆகியவற்றின் இன்றியமையாமையைக் குறிப்பிட்டுச் சொல்லும் பாடல் கீழ்க்கண்டவாறு அமைந்த சொற்கலவையாகும்.

*''குணம் தேடவே அரிது குணமோ நல்ல குலம்*
*தேடவே அரிது குலமோ கீர்த்தி*
*மணம் தேடவோ அரிது மனமோ புத்திமதி*
*தேடவோ அரிது மதியோ நல்லார்*
*கணம் தேடவோ அரிது கணமோ நல்ல கதி*
*தேடவோ அரிது கதியோ நாலு*
*பணம் தேடவோ அரிது பணமுள்ளோர்க்கே*
*பகர்ந்தவெல்லாம் அரிதென்றாம் பகரிற்றானே.''* (ஆசைப்பத்து, 4)

அருட்கவிஞர் அந்தோணிக்குட்டி அண்ணாவியாரின் ஆசைப்பத்து என்னும் கவிதைத் தொகுதியைப் படிக்கும் பொழுது 'திரிகடுகம்' என்னும் நூலினைப் படித்த உணர்வினைப் பெறுகிறோம். கவிஞரின் 'ஆபத்துப்பத்து' என்னும் பாடல்கள் 'ஏலாதிப்' பாடல்களை நமக்கு நினைவூட்டுகின்றன. அருட்கவிஞரது பச்சாத்தாபம் பாடல்கள் சிவப்பிரகாசர், தாயுமானவர் ஆகியோரின் பாடல்களை ஒத்திருப்பது மட்டுமல்லாது, கவியரசர் கிருஷ்ணபிள்ளை அவர்களது 'இரட்சணிய மனோகரம்' நூலில் அமைந்துள்ள சொற்பொருள் நயங்களையும் நம் எண்ணத்தில் கொண்டு வருகின்றது. அருட்கவிஞர் அந்தோணிக்குட்டி அண்ணாவியாரின் பாடல்களைப் படிக்கின்றவர்கள் வாழ்க்கையில் நேரும் எல்லாத் தீங்குகளையும் அகற்ற வழிகண்டு, நலன்கள் பெற்று இன்புறுவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

### அண்ணாவியார் எழுதிய நூல்கள்

1. பேரின்பக் காதல்
2. பாலத் தியானம்
3. பச்சாத்தாபம்
4. கழிநெடில் - தன் மேற்குற்றம் சுமத்தல்
5. ஆபத்துப்பத்து
6. ஆசைப்பத்து
7. ஆராதனைப் பிரகாசம்
8. அருள்வாசம் (அருள் வாசகம்)
9. கொச்சகக்கலிப்பா: 1) இயேசுவின் மேல்
   2) மரியன்னை மேல்
10. ஞானத்திருப்புகழ்

*11. ஆனந்தமஞ்சரி*
*12. அன்னையின் பிரலாப வண்ணம்*
*13. இயேசுநாதர் பாடுகள்*
*14. இறுதியில் உறுதிமலை*
*15. கீர்த்தனைகள்*

*இவற்றுள் நமக்குக் கிடைத்திருப்பவை*

*1) ஆசைப்பத்து*
*2) ஆபத்துப்பத்து*
*3) பச்சாத் தாபம்*

*இவர் மேலும் பல நூல்கள் எழுதியிருக்கக்கூடும்.*

1 ஆணிலே கடைகெட்ட ஆளாயி னேனே!
அழற்குழிப் பேயினத்துக்கு
அடிமையா னேனே! அழிந்துபோம் வாழ்வைவாழ்
வாமென்று நம்பினேனே!
வீணிலே வாணாளி னைக்கழித் தேனே! மெய்
தேவஉரை மீறினேனே!
வேசா புயங்கனாய்ப் பரிமாறினேனே!
விடக்காய் விழுந்தழியும் எண்
சாணிலே உள்ளஉடலைப் பேணினேனே!
தவஞ்செயச் சோம்பினேனே!
தருமமும் பாதகமும் அறியாத குருடர்போல்
தான்நடந் தேனே! முழத்
தூணிலே கட்டுண்ட சுவாமிக்குத் துரோகிநான்
சுக மற்று உளந்தளர்ந்தேன்
துக்கமுடை யேன்யான் எப்படியும் இந்தத்
துரோகியைக் கைதூக்குமே!

2. வம்புப் பரத்தையர் விவகாரத்தில் ஒன்றும்
மறந்தனும் இல்லை; அந்த
மாதர்மேல் வைக்குங் கருத்தைநின் பாதத்தில்
வைத்தேனும் இல்லை; ஒருசாண்
கும்பிப் பசிக்கலைந் துழலும் பறப்பைக்
குறைத்தேனும் இல்லை; அந்தக்
குடவயிற் றுக்காய்ப் படும்பாட்டில் உன்னைக்
குறித்தொன்று பட்டேனிலை,
இம்பர்க் குரித்தான அற்பவாழ் வைத்தேடி
எய்த்தேன்அல் லாமல், அப்பால்
இனிமேல் வரப்போகும் அழியாத வாழ்வையோ
எண்ணினே னோ இல்லையே:
நம்பிக்கை ஏதெனக் கடியேன் இனிக்கொடிய
நரகப் பிரார்த்தியாக
ஞாயமுண் டாமெனினும் அப்படி வராதேக,
நாதனே, அருள்செய்வாயே!

3 கொடுமுடிக் கூட்டம்என் தந்தைதாய் முதலாங்
குடித்தமர்க் கூட்டம்; அடியேன்
கொண்டமனை யாட்டியும் சீராட்டு வெண்பற்
குரங்காட் டெனக்கொள்வதா?
தொடுகடற் பாரிடத் துண்டான இன்பமுந்
துன்பமாம்; அனுபவிக்குஞ்
சுகமெலாம் துக்கமாம், இங்ஙன் ஆசாரந்
துராசார மாம்; அடுத்த
கெடுமதிக் கென்செய்வேன்? என்னுடைய செய்கையைக்
கேட்கிலார் கேள்வியாரோ?
கேட்பவர்க ளுக்கெலாம் அருவருப் பாம்அறக்
கிழவனாய்ப் போயும், மாயப்
படுகுழிக் குள்விழும் தேறமாட் டாமுழுப்
பாவியைக் கைதூக்குவாய்
பரிசுத்த கன்னிமா மரிபுத்ர னானதொரு
பாலனா கியயேசுவே!

4. நன்றியறி யாததவ மானகா ரியமென்று
நல்வழியில் நடவாதவன்;
நரகப் பிசாசுக் கினக்காரன்; அதிமோகன்.
நாற்றத் தொளிக்குளேஊர்ப்
பன்றியென வேபுரளும் அருவருப் புற்றவன்;
பலநாளும் இடையறாமல்
பாவக் கயிற்றினாற் கட்டுண்ட நாய்க்குட்டி;
பழுதற்ற வேதசாரம்
ஒன்றும்அறி யாஇழுதை; தீமையாம் மண்முதுகு
உளுக்கச் சுமந்தகழுதை
உன்னடிக் காளாவ தெளிதோ! நிலைத்தென்றால்
ஒன்றும்ஆ காதாகையால்
இன்றுமுத லாகவே தேவரீர் சிந்தும்
இரத்தத்தை, மட்டிலாத
இணையறும் இரக்கத்தை யான்மிகவும் நம்பினேன்
யேசுநா யகசுவாமியே!

5. பொல்லாக் குணத்தையும் பயனிலா வார்த்தையும்
பொறையிலாக் கன்னெஞ்சையும்
போதமொன் றில்லாத செயலையுங் கொண்டறப்
புத்திப் பயித்தியங்கொண்
டெல்லாப் பிறப்பனுங் கடைகெட்ட சென்மமாய்,
இரவா திரந்துண்ணியாய்,
எழுபதென் பதுவயது சென்றகிழடாகியும்
இளந்தாரி போலஇறுமாந்

தல்லாத துராசாரம் மேற்கொண் டுனக்கடிமை
ஆகி; ஐம் புலனடக்கி
ஆளாக மாட்டாத நானோ மனுச்செனனம்?
அல்ல; ஒரு மிருகம் ஐயா!
பல்லார் உயிர்க்கும் அளக்கும்படிக்கறம்
பாலிக்கும் மங்கையான,
பரலோக பூலோகர் அடிபேணும் மரியம்மாள்
பாலனா கியயேசுவே!

6 செய்தபா வங்களை நினைந்தழுது கண்ணீர்கள்
சிந்தாத எனதுகண்கள்;
தேவரீ ருடையதிரு நாமத்தை நாள்தோறுஞ்
செப்பாத எனதுவாய்கள்;
ஐய, நின் தாளை அஞ் சலியாத என்கைகள்;
அறிவுள்ள பேர்கள்சொல்லும்
ஆகமங் கேளாத என்செவிகள்; நன்றியறி
யாததென் அறிவு;காம
மையல்மா தர்க்காசை கொண்டுழல்வ தென்னுடைய
மனதருந் தபசுசெய்ய
வளையாத தென்னுடல்; இனிப்பாவி நான்உய்யும்
வழியேது? மாசிலா நின்
கையிலே எனை அடைக் கலமாக்கி னேன், உனது
கற்பனைப் படிநடத்திக்
காப்பதுன் கடனாகும் யேசுநச ரேனெனும்
கர்த்தனே, கருணையானே!

7. தேவபய பத்தியொன் றில்லாமை யால், தவஞ்
செய்யாது, செய்வதெல்லாந்
தீமையே செய்து, முன்செய்தபா வங்களைத்
தீராது, பாவத்தின் மேல்
பாவமொரு கோடிநூ றாயிரங் கோடியிற்
பலகட்டி, முட்டமுட்டப்
பசாசினுக் கடிமையாய்த் தேவரீர் அருளும்என்
பரகதிப் பங்கிழந்து,
சாவதுண ராதுசா காதவுயிர் போலவே
சஞ்சரிக் கின்றபொல்லாச்
சண்டாள னுக்குதவி உண்டாவ தெத்தன்மை?
தண்நறுந் தாட்டாமரைச்
சேவடியை நம்பினேன்; தம்பமொன் றில்லை; நின்
சித்தத்தில் அருள்கூறுவாய்,
தேவமா னுடனான யேசுவே, மறுவற்ற
செம்மறிப் புருவையானே!

8. சாணளவு வயிறாய் வயிற்றுக் கிராப்பகல்
சாதமுங் கறியும்ஊட்டத்
தக்கதாய் எண்சாண் உடம்பும் வெயர்த்துத்
ததும்பநிலம் உழுதுகொத்திப்
பாணிலமும் நன்செய்து பண்செய்யும், ஏற்றுப்
பயிற்செய்யும் அதுபோலவே
பலவினைப் பாற்படாப் பாவியேன் பாடுபல;
பட்டபா டுகள் அனைத்தும்
வீணிதுகொல் என்பதாய் அவையும் ஒரு பலனிலா
வேறுபா டுடையதாயும்
மேதினியில் வாழ்க்கையை விரும்புவேன்; பரலோக
வீட்டைஎப் படித்தேடுவேன்?
வாணுதல் மடந்தையர்க் கரசிகைக் குமர, என்
மனதிடும் பைத்தவிர்த்து
வாரிசத் தாள்அருள்தி, யேசுநா யகனான
மறையோது கனிவாயனே!

9. உடம்பொன் றெடுத்தாற் குறுங்கவலை
ஒன்றோ? ஒருத்தன் தன்வயிற்றுக்
குழைத்துண் பதுதான் ஒருகவலை;
ஒற்றை வயிறும் இரண்டானால்
கடன்கொண் டிடுவ தொருகவலை;
காதல் மனையாள் மக்களையும்
காப்பாற் றுவதும் ஒருகவலை;
கைபார்த் திருக்குங் குடும்பங்கள்
இடங்கண் டுனக்கீ எனக்கீயென்
றிரக்குங் கவலை ஒருகவலை;
இதைப்போல் அனந்தங் கவலைகட்குள்
இடைவேன் இடையா துனக்காளாய்
நடந்திங் கெனிஎவ் வழிஉய்வேன்?
நானே உனக்கோர் ஆளாக
நன்மை புரிந்திங்கெனை நடத்தாய்
நாதா, யேசு நாயகனே!

10 மண்ணால் எடுத்த உடலையொரு
மலைபோல் நினைத்து, நிலையற்ற
வாழ்வைப் பெருவாழ் வெனநினைந்து,
மதிப்பார் தமையும் மதியாமல்,
பண்ணா இடும்பு பலபண்ணிப்
பாவம் புரியப் பயமின்றிப்
பரந்த உலக வாழ்க்கைகளிற்
பலகாற் பழகிப் பரத்தையர்மைக்

கண்ணால் மருட்டி மருட்டி என்தன்
கருத்தைக் கெடுத்திங் கிரப்பவர்க்கோர்
காசுங் கொடாமல் கைப்பொருளைக்
கவரக் கொடுத்துக் கைகெட்டு
விண்ணாக் குறங்கி அறமெலிந்து
விட்டேன்; எனக்குன் விரைமலர்த்தாள்
வேண்டும் பிழைக்கஇனி அருள்வாய்,
வேதா, யேசு நாயகனே!

11 பொல்லா தவனுக் கெத்தனை தான்
புத்தி கரைத்துப் புகட்டினுந்தான்
போகும் போக்கிற் போவதல்லால்
புண்ணிய வான்கள் போதிக்கும்
நல்லா றொழுகான் எனப்பரிந்த
நாயே நடக்கும் நடைதானே
நானும் நடந்து நாளெல்லாம்
நடந்தே இளைத்தேன்; ஞானமிலேன்;
எல்லா நாளும் ஒருநாள்போல்
இராதே; சாவொன் றெய்துவது
எந்தநாளோ? தெரியாதென்
றென்றோர் பயமுண் டேற்பிழைப்பேன்
அல்லா திருக்கிற் பிழைப்பேனா?
அடியேன் கருத்தில் எவ்வளவும்
அயரா திருக்க அருள் புரிவாய்,
ஐயா, யேசு நாயகனே!

12. நீர்வாய்த் திருந்த பசும்புல்லை
நிரம்ப மேய்ந்து, நெடுங்குளத்து
நீரைக் குடித்துக் குளிர்ந்தமர
நிழலிற் கிடந்து நித்திரை செய்(து)
தூர்வாய்ப் புகுதாக் காட்டாவுக்
கொப்ப, அடியேன் வயிறார
உண்ண உறங்கப் பலமடவா
ரோடே முயங்க உதித்ததன்றிச்
சீர்வாய்த் திடும்உன் திருப்பதத்தைச்
செபிக்கத் துதிக்கத் தியானசெபஞ்
செய்ய விழுந்து கிடந்தழுது
தெண்ட னிடலுஞ் செய்யேனால்;
ஆர்வாய்ப் பொருப்புக் கேட்டினிமேல்
ஆளா வென்? உன் இருபதத்துக்
காளாம் படியே எனக்குதவி
அருள்வாய், யேசு நாயகனே!

13. காதல் மனையாட் குடுபுடவை,
கனிவாய்ப் பாக்கு, தலைக்கெண்ணெய்
கறிக்குக் காசு, வயிற்றுக்குக்
கஞ்சி வண்ணான் கைக்கூலி
ஏதில் மனைக்கு விளக்கெண்ணெய்,
எரிக்க விறகு கரைக்கஉப்பென்
றிவைபோற் பலவும் விசாரிக்க
எடுத்த பாண்டத் திவ்வுடம்புன்
பரத மலரைத் தொழப் பரவப்
பணிய வாழ்த்த உன்வேதப்
படியே நடக்க இயல்பென்னும்
பான்மை இலாஇப் பாழுடம்பை
வாதை யுறநான் சுமப்பதிலோர்
மரத்தைச் சுமக்கில் ஒன்றுக்காம்!
மறைநூல் பகருஞ் செய்யமலர்
வாயா, யேசு நாயகனே!

14 கன்னெஞ் சனுமாய் வம்பனுமாய்க்
கடுங்கோ பியுமாய்க் கள்வனுமாய்க்
காமா துரனு மாய்கடந்து
காலங் கழித்தேன் நெடுங்காலம்;
இன்னஞ் சிலநாள் உயிரோடே
இருப்பே னாகில் இதுபோதும்;
இந்தப் படியே நடப்பேனேல்
எனைப்போ லேநிர்ப் பாக்கியனார்?
கன்னங் கரிய நிறத்த, அழற்
கண்ண, திருகு கவைக்கோட்ட,
கடைவாய் இலகு முறுக்கெயிற்றுக்
கலகப் பிரியக கனஞ்சீயம்
என்னுங் கணங்கள் தடுமாற,
எனக்குவேண்டி ஒரு சிலுவை
ஏறி எனையீ டேற்றியருள்
ஏகா, யேசு நாயகனே!

15. தாளாண் மையினால் தனந்தேடித்
தனத்தால் ஊரில் தலைப்பட்டுத்
தலைப்பட் டதனால் எளியவரைத்
தன்கீழ் அடக்கித் தனக்கடங்கும்
ஆளா னவரில் ஒன்றாகி
அவர்கள் வழக்கை அடியழித்தங்
கவர்கைப் பொருளைப் பறித்தவர்கள்
''ஆ! கூ!'' என்னும் அனியாயங்

கேளா தவனாய்ப் பிறர்குடியைக்
கெடுப்பார் வார்த்தை கேட்பவனாய்க்
"கெடுவான்" எனப் பேர்படைக்குங்
கெருவத் தாலே கிடைப்பதுண்டோ?
நாளா கறுதி உனக்காளாய்
நடப்பார் நடக்கும் நல்லதவ
நடக்கை எனக்குக் கிடைக்கஅருள்
நல்காய், யேசு நாயகனே!

16. உலக மயக்கம் ஒருகாலும்
ஒழியா தொழியா துடம்பெடுத்தால்
உடம்பு தானே பகையாக
உயிரைக் கெடுக்கும், ஒருபக்கம்
கலகம் விளைக்கும் பேய்க்கணங்கள்
கச்சை கட்டி என்பொறியாங்
கண்ணைக் கெடுக்கும்; கண்கெட்டாற்
கால்கண் ணாக நடந்து, வழி
விலகி நடக்க மாட்டாமல்
விழுவேன் கிடங்கில் எனநினைக்கும்
வினையேன் இதற்கு மேலான
விசாரம் பார்த்தால் வேறில்லை;
இலகும் உனது திருப்பதத்தை
இறுகப் பிடிப்பேன்; பிடிக்கும்முதல்,
என்னைப் பிடித்த பேய்ஓடும்,
ஏகா, யேசு நாயகனே!

17. வீடும் அரங்கும் சாவடியும்
வெயிலை மறைக்குங் காவணமும்,
வீட்டிற் கினிய மனையாளும்,
வேளாட் டிகளும், பயல்களும், நல்
மாடும் எருதும் சிறுகன்றும்,
வாரா வரத்தும், தலைதெரியா
வாழ்வும் உடையோர் ஒருகாலம்
மற்றோர் காலம் வறுமைவந்தால்
ஓடுங் காலங் கரத்தினிலோர்
ஊன்று கோலும் பழந்துணியும்
உடையார் எனவே ஒருவனையே
உயர்த்தித் தாழ்க்கும் உலகத்தில்
நாடுங் கருத்து விட்டுனது
நாட்டா மரைமென் மலர்ப்பதத்தை
நம்ப எனக்கு நற்கருத்து
நல்காய், யேசு நாயகனே!

18 புண்ணும், சீயும், செந்நீரும்
புரையும், கிளவும், உட்குடையும்
புழுவும்அழுக்கும் சதையும், மனம்
பொறுக்கப் படாத நாற்றமுங்கொண்
டுண்ணும் உணவுக் கலந்துபசித்(து)
ஓடும் எடுத்துத் தடியூன்றி
ஊரூர் தோறும் போய்இரந்தே
உண்போர் தமைக்கண் டுடம்பினையான்
எண்ணும் மயக்கம் என்னுடைய
ஏழைத் தனமோ? முதுகுறைவொன்
றில்லா ததுவோ?அடியேன்இங்
கேதும் அறியேன் எனதறிவின்
கண்ணை மருட்டும் பெரும்பாவக்
கங்குற் பிழம்பைக் கால்சீக்குங்
கதிரே! வரம்பி லாஇரக்கக்
கடலே! யேசு நாயகனே!

19. சூலை பறங்கி அரையாப்பு
சொறியுஞ் சிரங்கு தொடைவாளை
தொழுநோய் படுவன் புடைகரப்பன்
துன்மா மிசம்வெஞ் சுரம் கண்ட
மாலை பிளவை கண்ணோவு
மண்டை நோவு தலைகனப்பு
வாத பித்தம் கபாலகுன்மம்
வாயு எனவே வரும்நோய்க்கு
வேலை உடம்பை அலைக்கழிக்க
விலையேன் உடம்பும் அவைக்குரிய
வீடாய் இருக்க அப்படியே
விரும்பி நானும் உன்கமலக்
காலை வணங்கா திரவுபகல்
கருத்தும் நினைவும் வெவ்வேறாங்
கன்மன் பிழைக்க நல்லவழி
காட்டாய் யேசு நாயகனே!

20. தானே தனக்குப் பகைகாரன்
தனக்குத் தானே சங்காத்தி
தவறு புரியிற் பகைகாரன்
தன்மம் புரியிற் சங்காத்தி
ஆனால் எனக்கு நான்செய்யும்
அனியர யம்போற் சிறிதுமிங்கோர்
அயலான் செய்யான் எனநானே
அலகை இனத்துக் காளாகி

நானே எனது மனம்பொருந்தி
நரகக் குழியில் விழத்தக்க
நடக்கை நடந்தால் குறை யாரை
நவில்வே னாகில் நாக்குண்டோ?
தேனே அரும்பி முறுக்குடைந்து
சிறைவண் டினங்கள் குழைந்துகருஞ்
சேற்றில் பிறவாச் செழுங்கமலத்
திருத்தாள் யேசு நாயகனே!

21 வன்மம் பிடித்தாற் பிடித்ததுதான்:
மனங்கொண் டொருவர் செய்தநன்றி
மறந்து போனாற் போனதுதான்;
மடக்கொம் பனைய மங்கையராஞ்
சென்மங் களைக்கா தலித்தவர்பாற்
சென்றால் முழுதுஞ் சென்றதுதான்;
தேவ ரீரை அந்திபகல்
தேடா திருந்தால் இருந்ததுதான்;
என்நெஞ் செனக்குப் பகையாக
இந்தப் படியே செய்யுமெனில்
யான்இங் கிதனை என்னசெய்வேன்?
என்னால் ஒன்று செயப்போமோ?
உன்அன் புடைய திருக்கரத்தில்
ஒப்புக் கொடுத்தேன் என்கருத்தை;
உனக்குப் பொருந்த நடக்கஅருள்
உதவாய், யேசு நாயகனே!

22. வாசக் குழலாள் கவடிருக்கும்
மனத்தை நல்ல மனமென்றும்
வண்டத் தனத்தைச் சரசம்என்றும்
மாயா விதத்தை நலமென்றும்
ஆசைப் பேச்சைப் பேச்சென்றும்
அழுக்குப் பிடித்த பசுமஞ்சள்
அழகை இதுவே அழகென்றும்
அறியாத் தனத்தால் யான்ஒருவன்
வேசைக் களித்துத் தூர்த்தனென
வெகுநாள் பழகி அறமெலிந்து
விட்டேன்; இனிமேல் ஏதடியேன்
விழுந்து போகுங் காலம்உன்னை
நேசித் துளக்குப் பயந்திரண்டு
நேரந் தியான செபத்தொடுநன்
னெறியில் நடக்க அருள்புரிவாய்
நிமலா! யேசு நாயகனே!

23. வருந்தி ஒருநாள் நோன்பிருக்க
வருத்தக் காரன்; பசிபொறுக்க
மாட்டா தவன்;எப் போதுமொரு
வாயு உளதென் றேமறுத்து
அருந்தும் உணவை அடிக்கடியே
அருந்திக் களிப்பேன்; பெரும்பஞ்ச
மான காலங் கொண்டுண்ண
அரிசி கிடையா தெனச்சும்மா
இருந்து பகற்பட் டினிகிடந்தே
இரவோ டிரவும் எவ்வளவும்
ஏதுங் கிடைத்தால் தின்றுபசி
எவ்வா றாகப் பொறுத்திருந்தேன்
பரந்த உலகில் எவ்வுயிர்க்கும்
படியே அளந்து காப்பாற்றும்
பரனே! கருணை மரியம்மாள்
பாலா! யேசு நாயகனே!

24 வெம்பிப் பசிக்கும் பசியென்னும்
வெந்தீக் கடுப்புப் பசியகவ
வேண்டும் பொருளைக் கொடுத்தாலும்
மேலும் மேலும் வேணுமெனும்;
கும்பிக் குழியாம் பெருவயிற்றுக்
குழியைத் தூர்க்க வெண்ணிலத்தைக்
கொத்தி இறைத்துத் தலைஎரியக்
கூடை சுமந்து விறகுகட்டிக்
கம்பத் தினிலே படிந்தேறிக்
கரணம் பாய்ந்து திரண்டுருண்ட
கல்லை விழுங்கிக் கக்கியொரு
கற்பார் தன்னை விழுங்குவதோ!
நம்பத் தகாத பேர்களையான்
நம்பா தினிமேல் உன்கமல
நளினத் துணையை நம்பஅருள்
நல்காய், யேசு நாயகனே!

25. ஒருவர் குணத்தை, ஒவ்வொருவர்
உள்ளக் கருத்தைப் பிறரறியா
ஒருத்தி நடந்த நடக்கைகளை,
ஒருத்த ருடைய வீட்டளப்பைத்
தெரிய உரைத்து வெகுகுறையாய்ச்
செப்ப, இருந்த கூட்டங்கள்
சிரிக்க அதனால் வெகுமானம்
சேதம் யாவும் செய்விக்கும்

திருகு முருகுக் காரன்எனத்
திரிந்த நாளில் ஒருநாள்யான்
தேவ ரீர்கற் பனைப்படியே
செய்த நாளும் உண்டாமோ?
நிருபர் குலத்திற் பிறந்ததயா
நிதியாய் உலகுக் கதிபதியாய்
நின்றால் ஒருத்தி ஈன்றருளும்
நிமலா! யேசு நாயனே!

26. கண்டார்க் கிவன்மா புண்ணியவான்
கருத்தும் நினைவும் தனைப்படைத்த
கர்த்த னிடத்தே அல்லாது
கவலை பிறிதொன் றில்லைஎன
உண்டாம் ஒழுக்கந் தனைஉலகை
ஒப்பிப் பதற்காய் உண்டாக்கி
உள்ளக் கருத்திற் பிறருடைய
உடைமை கவர ஒளிமறைவாய்
வண்டார் குழலார் தமைச்சேர
வன்மித் தொருவன் குடிகெடுக்க
மாற்றம் பலவும் வைத்திருப்பேன்
வாழ்வு ஞான வாழ்வாமோ?
தண்டா மரையைப் புறங்காட்டுந்
தாட்டா மரையாய்! பரலோகத்
தாரும் நிலமுந் தலைவணங்குந்
தலைவா! யேசு நாயகனே!

27. முந்தி அவிழ்த்துப் பெட்டகத்தை
முறித்துக் கட்டுப் பெட்டிகட்டும்
முடிப்பை அறுத்துப் பிறருடைய
முதலை எடுத்துச் சூதாடிச்
சந்த நகிலார் தமக்கீந்து
தான்உண் டழித்துத் தனக்குரிய
சங்காத் திகட்குங் கொடுத்தழித்துத்
தாறு மாறாய்ச் செலவிட்டால்,
இந்த வயதிற் பிள்ளைகுணம்!
இதுவே நன்றாய்த் தலையெடுக்கும்
என்னத் தாய்க்குத் தகப்பனுக்கும்
இழுக்கு விளைப்ப தியல்பாமோ?
அந்த மலையிற் செங்கன்றும்
ஆடும் மறியும் அடையுமிடத்
தடியேன் தனக்காய்ப் பிறந்தவனே!
ஐயா, யேசு நாயகனே!

28. பல்லு விழுந்து கண்மண்டு
பஞ்சாய் நரைத்துத் தோல்திரங்கிப்
பருவங் குலைந்து செவிமந்தம்
பற்றி எழும்பும் பசியடங்கா
வில்லின் முதுகு கூனிஉடல்
மெலிந்து வாயு மேல்நாடி
மேனி வெதும்பப் புறங்கால்கள்
வீங்கி நரம்பு விறைவிறைத்துச்
சொல்லும் விழுந்து நடைதளர்ந்து
சோகம் மிகுந்துள் அறிவழிந்து
தொல்லைப் படும்இவ் வுடம்பினையான்
சுமந்தோர் பலனுங் காணேனே;
வல்ல பரனே! பராபரனே!
மட்டில் லானே, அருள்வேத
மனுவாய்ப் பிறந்திங் கெமைப்புரந்த
வல்லாய்! யேசு நாயகனே!

29. என்னைப் படைத்தீர் ஒன்றுமில்லா
திருக்குங் காலம்; சுவாமி! நீர்
எனக்காய் பிறந்தீர் உலகத்தில்;
எங்கட் காக எடுத்தமனுச்
சென்ம சடத்திற் பாடுபட்டீர்;
சிந்தா இரத்தந் தனைச்சிந்திச்
சிலுவை மரத்தில் இருந்திறந்தீர்!
தேவ ரீர்அன் போடு செய்த
நன்மைப் பலனித் தனையிருக்க
நான்மாத் திரம்நீர் செய்தகன
நன்றி அறியா தவனாக
நரகப் பிரார்த்தி ஆவேனோ?
பின்னப் படுத்த வேண்டாம்; என்
பிழையைப் பொறுத்தும் திரவுதிரப்
பேறு தாரும் என்றனக்குப்
பெருகா யேசு நாயகனே!

30. பாவி அடியேன் எனக்குமுன்பின்
பார்த்தால் ஒருவர் துணையுமில்லை;
பரந்த உலகம் பேய்க்கணங்கள்
பாழ்த்த சரீரம் பகை; எனக்குச்
சாவுமுடுகிட் டிருக்குதிந்தச்
சமயம் மனது நினைவறிவு
தடுமா றிடும்; அந் நேரமென்னைச்
சதிக்க நரக சத்துருஎன்

ஆவி நடுங்க என்மனதை
அலைக்கும்; அந்த வேளையில்என்
அடுக்க நீர்வந் திருந்தீரேல்
அடியேன் தெளிவேன்; எவ்வளவும்
தேவ ரீர்இங் கெனக்காகச்
செய்யா விடினும் நீர் எமக்காய்ச்
சிந்தும் இரத்தந் தனைப்பார்த்துச்
செய்யும் யேசு நாயகனே!

40. அருந்தவம் முயலேன் முயற்சி என் முயற்சி?
ஆருயிர் உடம்பினுக் கிசைந்த
அற்பகா ரியத்தைக் குறித்தற முயல்வேன்;
ஆயிரங் கோடிபா தகங்கள்
புரிந்துன தருளை இழந்துபோ னதற்கோர்
பொழுதினும் அழுதுளம் புழுங்கேன்;
பொன் ஒரு மாப்பொன் காசொரு காசு
போகிடில் வயிற்றொடும் புடைத்தே
இருந்துகொண் டழுவேன்; உனக்குநான் அனந்தம்
இடர்செய்வேன்; எனக்கொரு துன்பம்
எய்திடில் உனையே திட்டி நொந் திடுவேன்;
ஏழையின் குணம்இதே ஐயா!
முருந்திள முறுவல் கற்புடை மகளிர்
முத்திரை மோதிரம் உடைய
முறையுடைக் கன்னி மரிதரு குமரா!
முதல்வனே! யேசுநா யகனே!

41 சஞ்சலக் கூட்டம் அலகைதே ரோட்டம்;
தாமரை இலையின்நீர் ஈட்டம்
சதிமுறை பிறழ்ஆ லயமொடு கோலஞ்
சமைந்துகொண் டாடுவோர் ஆட்டம்;
வஞ்சகப் புவனத் தியற்கையும் செயற்கை
வாழ்வுடன் ஈதென விரும்பும்
மனதினிற் கொடிய மறலிஒன் றிலையால்;
மரபினுக் காவதொன் றறியேன்;
பஞ்சிறைக் கிளிகள் பழுமரத் தடர்ந்த
பாசடைக் கிடைவந்து பதுங்கப்
பட்சிகள் அனந்தம் பவளவாய் பழுத்த
பழமெனப் பறந்துவந் தேங்கும்
அஞ்சுடர்க் கிரணம் இடைபுகாச் சோலை
அடர்ந்திடு கலிலைநாட் டானே!
அருமறைக் கிழவர் குருமுறைத் தலைவர்!
அப்பனே! யேசுநா யகனே!

42. ஞானநூல் பரம வேதநூல் உலக
ஞானிகள் விதித்தநூல் விதியால்
நன்மையுந் தீங்கும் அவனவன் ஒழுகும்
நியாயம்அந் நியாயமும் உணர்ந்தும்
ஈனனாய்த் தர்ம இடும்பனாய் இடும்புக
கிடும்புசெய் வாரொடுஞ் சினவா
இருகழல் அழுந்தப் பணிவிலங் கணிவேன்
இத்தனை அறிவும்ஏன் படித்தேன்?
மானனார்க் கரசி மரிதிரு வயிற்றும்
வாலசந் நியாசிசெங் காத்தும்
மறிதிரை ஆறு கடத்துவோன் புயத்தும்
மாசிலா மதலையாய் வந்த
தானவா! அருபா! தற்பரா! அனந்தா
சத்தியா! நித்தியா! அனைத்துந்
தாங்குசெங் கரத்தாய்! ஓங்கும்அம் பரத்தாய்!
தந்தையே! யேசுநா யகனே!

43. சூலையாய் முடங்கிப் பறங்கியாய் வெடித்துச்
சொறிசிரங் காய்ப்பச பசத்துத்
தொடைஅரை இடுப்பு கால்கைமேல் வயிறு
சொறிசொறி சொறியெனச் சொறியும்
வேலையாய் இருகை விரல்நகந் தேய
வெந்துயர் சூழ்ந்திராப் பகலாய்
விழியுறங் காது பழிபடும் பாழ்த்த
விடக்கைநான் எடுத்ததும் விழலே;
ஆலைவாய்க் கருப்பஞ் சாறுசால் உடைத்த
ஆற்றுநீர் ஊற்றுநீர் குறிஞ்சி
அடுக்குகூன் குலைத்தா றரம்பையை வளர்க்க
அரம்பையும் குரும்பைசூழ் தென்னஞ்
சோலையூ டுயரும் நசரையாய்! ஞானச்
சுருதியாய்ப் பரிதியஞ் சுடராய்ச்
சுத்தமா மரியை பெற்றபா லகனாய்த்
தோன்றிய யேசுநா யகனே!

44. ‘காசுதா, பணந்தா சேலைதா, உண்ணக்
கறியொடு சோறுதா, உன்றன்
கைக்கிலை எனிலோர் கடன்கொள், அல்லதுபொய்
களவுசெய் தாகிலுந் தா’என்
றோசையோ சரியிட் டடிக்கடி வெறுப்பாய்
ஊட்டியுங் கூட்டியே மயக்கி
உள்ளகைப் பொருளைக் கொள்ளையிட் டொழிந்தால்
‘உனைக்கொடு போ!’ எனும் மடவார்

ஆசையால் உளம்நின் றூசவிலி டிடஉள்
ஆவிதள் ளாடிட அடியேன்
அடைந்திடு துயரும் இடுக்கணும் உடையேன்;
ஆனதால் யானும்என் செய்வேன்?
தேகலா வியபொன் வரதனே! கருணைத்
தேவனே! பாவிகள் பாவத்தைத்
தீர்த்தருட் கிருபை பூத்தமைப் புரத்தல்
செய்தருள், யேசுநா யகனே!

45. தேடின உடைமை ஒருவினை; அதனைத்
திருடுவோர் ஒருவினை; அதற்குச்
சிண்ணடப் பவர்கள் ஒருவினை; அடுத்த
சினேகிதர் ஒருவினை; செங்கோல்
கோடிய மன்னர் ஒருவினை கொள்ளை
கொள்ளுவோர் ஒருவினை; செந்தீக்
கோளொரு வினை; நற் குடித்தம ரான
கொடியவர் ஒருவினை; செஞ்சொற்
பாடிய புலவர் ஒருவினை; மாயப்
பரத்தையர் ஒருவினை; இவைபோல்
பலவினை யுடைத்தாற் பணத்தைமுன் னிருந்தோர்
பாஷணம் என்பது பயனே;
நாடுவ துனையான்; வணங்குவ துனையான்;
நம்புவ துன்னையே நீயே
நல்லதோர் உடைமை; அழிவிலாப் பொருளே!
நாயகா! யேசுநா யகனே!

46. மைக்குழல் விரித்து மனைவிகண் கலுழ
மைந்தர் ''அப் பா!'' என மறுக
வயித்தியர் கரைத்த மருந்தருந் தென்ன
வந்துவந் தருகினில் இருந்து
ஒக்கலும் உறவும், ''அப்பனே! மலங்கேல்!
உனக்கொரு தீங்கிலை'' என்ன
ஓவியம் அனைய பெண்டிரைப் பார்த்திங்
குமக்கொரு பயமிலை என்ன,
விக்கலும் எழுந்து சொற்களுந் தளர்ந்து
விளக்கொளி ஒன்றிரண் டாகி
விழியொளி மழுங்கி விழுந்துபோம் உடம்பை
வீணிலே சுமந்தற்மெலிவேன்;
செக்கர்வெண் பிறையில் நிற்கும்அம் புயமென்
சீறடித் தாய்மரி பயந்த
சிறுகுழந் தையதாய் வரும் அருட்கடவுள்
தேவனே! யேசுநா யகனே!

47. தேடின பணத்தில் ஒருபணம், உடுத்த
சீலையில் ஒருமுழச் சீலை,
செல்வமாய் வளர்த்த மகவிலோர் மகவு
தெரிவையர் தம்மிலோர் தெரிவை,
ஆடகப் பணதி களில்ஒரு பணதி,
அரிசியில் ஒருபிடி அரிசி.
ஆக்கிய சோற்றில் ஒருபிடி சுடுசோ
றடிமைகள் தம்மிலோர் அடிமை.
கூடவந் துதவா தியமனார் உயிரைக்
கொண்டுபோம் இடத்தினில், அதனால்
குவலய வாழ்வை வாழ்வென நம்புங்
குற்றமே குற்றமாம் அன்றோ?
நாடக மகளிர் ஆடிய பரதம்
நன்றென நரபதி நல்கும்
நற்றலை யுடையார் நித்தலும் துதிக்கும்
நாயகா! யேசுநா யகனே!

48. தந்தையர் இறந்தார்; பெற்றதாய் இறந்தாள்;
சகோதரர் ஆயினோர் இறந்தார்;
சகலரும் இறந்தார்; நானும்இங் கிறக்கத்
தக்கநாள் நாளையோ, இன்றோ?
எந்தநாள் அறியேன்; ஆயினும் அடியேன்
இறக்கும்நாள் ஒன்றுள தென்றால்
எனக்குநான் அழவோ? அவர்க்குநான் அழவோ?
என் செய்வென்? என்றனக் கிரங்காய்;
கொந்துலாம் மலரிம் வண்டுபாண் முரலக்
குரக்கினம் விரற்கையால் வருக்கைக்
குடக்கனி பிதிர்த்துக் குறுஞ்சுளை எடுத்துக்
குட்டிகள் அருந்திடக் கொடுக்கும்
அந்தமா, நசரை வந்தகா ரணனே!
அனைத்தையும் படைத்தஆ ரணனே!
அளவிலா தவனே! பரம்பூ ரணனே!
ஆதியே! யேசுநா யகனே!

49. மக்களும் வேண்டாம்; மனைவியும் வேண்டாம்;
வாழ்வொரு செல்வமும் வேண்டாம்;
மாடமும் வேண்டாம்; கூடமும் வேண்டாம்;
மன்னவர் வரிசையும் வேண்டாம்;
ஒக்கலும் வேண்டாம்; கைப்பொருள் வேண்டாம்;
உண்பதும் உடுப்பதும் வேண்டாம்;
ஊருமோ வேண்டாம்; பேருமோ வேண்டாம்;
உடம்பும் வேண்டாம்; இதே உண்மை;

தக்கஉன் கமலச் சரண்இனை வேண்டும்;
சந்ததம் உனைத்தொழ வேண்டும்;
தவஞ்செயப் பலமும் சத்தியும் வேண்டும்;
சகலபா வங்களைத் தள்ளப்
பக்குவம் வேண்டும்; நின்மறைப் பொருளைப்
பாடவும் படிக்கவும் வேண்டும்;
பரகதி வேண்டும்; மரியநா யகிகைப்
பாலனே! யேசுநா யகனே!

50. அரும்பவம் மிகுந்த என்னைவெம் பேய்தன்
அடிமையாம் எனவழக் காடி
அங்கது புரிவித் திவன்செய்த பாவம்
அனைத்தையும் பாரும் என் றுரைக்கில்,
விரும்பிய அடிமைத் தனத்தில்நின் றென்னை
மீட்டவர் தேவரீர்; அதற்கு
மென்பத முறிவு செங்கர முறிவு
மேதரு திருவிலா முறிவு
திருந்திய சாட்சி; என்றனை மீட்ட
தேவரீர் அடியனுக் காகச்
சிந்திய இரத்தம் என்புற மாகச்
சேர்ந்திடும் என்றொரு திடம் உள்
பொருந்துநம் பிக்கை உள்ளதிங் கபத்தம்
போகிடா தடியனைப் புரப்பாய்!
புண்ணிய வாளர் கண்ணினை களிக்கும்
பூரணா! யேசுநா யகனே!

51. உன்னடி பரவ, உன்னையே துதிக்க,
உன்திரு நாமமே உரைக்க,
உன்செபஞ் செபக்க, உன்புகழ் விளங்க,
உன்னையே கடவுளென் றுணர,
இந்நிலத் துனையே அன்றியோர் கடவுள்
இல்லையென் றுறுதிசா திக்க,
ஏகனே! உனக்கு வேண்டும் நான், சுவாமீ!
என்னையுங் கைவிட லாமோ?
தென்னிலை மடியக் கமுகிலை கிழியக்
செண்பகத் தாழைமுன் னிலையில்
சினைவரால் குதிக்கும் நசரையூர் தழைக்கச்
சிறந்தபல் லுயிரையும் படைத்த
பொன்நகர்க் கிறைவா! கன்னிமா மரிகைப்
புத்திரா! சத்திய வசனா!
பூமிஅந் தரமும் நரகமும் வணங்கப்
புனைந்தபேர் யேசுநா யகனே!

52 சிலைத்தட வரையில் கொலைப்படச் சுமந்த
சிலுவைமேற் கிடத்திஉன் வலது
திருக்கரந் தன்னை விரித்ததில்ஆணி
சென்றிடப் பெலத்துடன் அறைந்து
இலக்குறு துளைக்குள் இடக்கைஎட் டாதால்
இழுத்தொரா ணியைஅறைந் துயர்ந்த
இருபதந் தன்னை ஒருபதம் போலாய்
இருத்தியோர் ஆணியைப் பொருத்திக்
கொலைப்படு குருசைக் கவிழ்த்துமேல் மிதித்துக்
கூர்முனை ஆணிகள் மடக்கிக்
குவலயந் தனக்கு நடுவுறும் மலைமேல்
கொடுங்கள்வர் கழுவினுக் கிடையில்
அனைத்துடல் குலுங்க எடுத்துற நாட்டி
அயிலினால் உன்விலாத் திறந்த
அஞ்சுகா யத்தை நெஞ்சகத் திருத்தி
ஆளுவாய், யேசு நாயகனே!

53. முள்முடிச் சிரத்தை, அடியீனாற் கொடிய
முறிவுபட் டிடுசரீ ரத்தை
முங்கில்அங் கரத்தைப் பழந்துணிச் சால்வை
மூடவே போர்த்திடும் முதுகைக்
கள்ளரில் தலைவன் எனக்கழுக் குருசின்
கனசுமை சுமந்ததோர் புயத்தைக்
கன்னிகை துடைத்த திருமுகத் தினை, மா
கடினமா முனைஇருப் பாணி
உள்ளுறப் பாய்ந்த கரங்களைப் பதத்தை,
ஒள்ளிய வேலினாற் குத்த
உதிரமும் நீரும் ஒழுகிய விலாவை,
உயிர்விடு மளவும்என் இதயம்
எள்ளலா(வு) அயரா தந்தியும் பகலும்
இடைவிடா திவைஎலாம் மனத்தால்
யான்நினைத் திரங்க இரங்குவாய், எனையாள்
ஏகனே! யேசுநா யகனே!



# 3

# பராபரன் மாலை

ஆசிரியர் : வேதநாயக சாஸ்திரியார் (1774 - 1864)

அறிமுகம் : அஞ்சலா ரிச்சர்டு

## இறையருள் திறம்

*'பராபரன் அல்லாத பாட்டறியான் என்றும்*
*பராபரனை அன்றிப் பாட்டுரையான்'*

*என்று தம்மைத் தாமே அறிமுகப்படுத்திக் கொண்டவர் தஞ்சை நற்செய்திக் கவிஞர் வேதநாயக சாஸ்திரியார். இவர் வாழ்க்கையில் 'திருநெல்லை சிவபக்தனை இயேசுவின் சீடனாக்கிய' (செபமாலை 20 - திருச்செயல் 11) இறையருள் திறத்தைக் காண்கிறோம்.*

## கவிபாடத் தொடங்குதல்

*ஒன்பது வயதில் சிலுவைத் திருக்காட்சி கண்ட நெல்லைச் சிறுவன் வேதநாயகம், 12 வயதில், இறையனுபவத்தில் முதிர்ந்த 59 வயது நிரம்பிய அருள்தந்தை சுவார்ச்சையருடன் தஞ்சை சென்று அவர் இல்லத்திலேயே தங்கி வாழ்ந்து, அவரின் முன்மாதிரியான வாழ்க்கையாலும் அவரளித்த பல்துறை கல்வி கேள்விகளினாலும் திருமறை அறிவும் இறையியல் ஞானமும் கைவரப் பெற்றான். தன் 16ஆம் வயதில் கவிபாடவும் தொடங்கி விட்டான்.*

## கவிமன்னனாம் நற்செய்திக் கலைஞன்

*சுவார்ச்சையர் தமக்கு முதற்கண் தாவீதின் சங்கீதங்களைப் படிக்கக் கொடுத்ததும் தரங்கம்பாடி யோனையர் தமக்கு முதற்கண் வேதசாஸ்திர நூலைப் படிக்கக் கொடுத்ததும் இறைவனின் திருவுளத்தின் படி நிகழ்ந்தவை என்று சாஸ்திரியார் கூறிக் காரணமும் தருகின்றார். இறைவன் அவரைச் 'சங்கீதத்திலும் சாஸ்திரத்திலும் சமர்த்தன்' ஆக்கியதோடல்லாமல் 'கவிச்சக்கரவர்த்தியும் தானாக்கிச் சமஸ்த வேத புராணங்களுக்கெல்லாம் சாஸ்திரியும்' ஆக்கினார் என்று சாஸ்திரக் கும்மியில் (766, 767) எடுத்துரைக்கின்றார்.*

## தஞ்சை அரசவைக் கவிஞர்

*சுவார்ச்சையரின் மாணவனாய் வேதநாயகம் இருந்தபோது, தஞ்சை இளவரசன் சரபோசியுடன் பயிலும் வாய்ப்பைப் பெற்றான். ஏனெனில் தஞ்சை மாமன்னர் துளசி, தாம் மகன்மை செய்து கொண்ட சரபோசியைச் சுவார்ச்சையர் கையில் ஒப்புக்கொடுத்திருந்தார். பின்,*

உரிய காலத்தில் தஞ்சை மாமன்னராக சரபோசி ஆட்சிப் பொறுப்பேற்றபோது, தம் உதவி நாடி வந்த வேதநாயகத்தை 'அண்ணா கவியார்' என்று அழைத்து, அன்புறவுடன் மதித்துப் போற்றி, மூன்றாண்டுக் காலம் தம் அரசவைக் கவிஞராக அமர்த்திக் கொண்டார். நன்றி மறவாப் பண்பினராய் சாஸ்திரியார் இதனை, 'ஆருந்துணையில்லையே' (ஞானப்பதக் கீர்த்தனைகள், 243) என்ற கீர்த்தனையில் சுட்டிக் காட்டியுள்ளார்.

## பாட்டு வாழ்க்கையும் பட்டங்களும்

'இம்மானுவேலை வேலையாக தோத்திரிக்கின்றேன்' என்று கூறிப் பாட்டு வாழ்க்கையை மேற்கொண்ட சாஸ்திரியார், உயர்சாதி இந்துக்கள் எல்லாம் கிறிஸ்தேசுவின் தனித்துவ இறைமகிமையைக் கண்டுணர்ந்து போற்ற வேண்டுமென்று அவர் காலத்திய இந்து பக்தர்கள் இறைவனைப் பாடிப் போற்றிய முறைமைகளிலெல்லாம் தம் கிறிஸ்தேசு நாதரைப் போற்றிப் பரவுவாராயினார். மேலும் திருச்சபையாரின் பண்டிகைகளுக்கும் பள்ளிக்கூடங்கட்கும் இன்பதுன்ப நாட்களுக்கும் பாடல்கள் இயற்றிடத் தம்மை இறைவன், 'ஞானத் தாவீது சாலோமோனுக்கு இணை நாட்டினதாக' சாஸ்திரியார் குறிப்பிட்டுள்ளார். (சாஸ்திரக்கும்மி 435-436)

'மூன்று மொன்றதான திரியேகனை முத்தமிழால் மொழிந்த' சாஸ்திரியார் தச நூலான 'பாட்டாற் பாடுவேனே' என்பதால் அவர், 'நூறு வசனமும் பாடலுஞ் சிறிதும் பெரிதுமாய் நூறு நூல் மட்டும் செய்தார்' என்பது விளங்கப் பெறும் (செபமாலை - பன்னிரண்டிலக்க தோத்திரம். கவிகள் 3, 10). மேலும் 'வேதசிரோமணி ஞானதீப சுவிசேடக் கவிச்சக்கரவர்த்தி வேதநாயக வேதசாஸ்திரியார்' என்று சிறப்பித்துப் போற்றுதற்குரிய பட்டங்களையெல்லாம் பெறுவாராயினர்.

## படைப்புகளின் சிறப்புகள்

சாஸ்திரியார் படைப்புகளின் மணிமுடியாய் திகழும் 'பெத்லகேம் குறவஞ்சி' முற்றுருவகமாய் அமைந்து, தமிழ்க் குறவஞ்சி நூல்களுள் தனித்தன்மை பெற்று விளங்குகிறது. மேலும் திருமறை நெறி பிறழாமல் இந்நூலை அமைத்தமையால் பாயிரத்தில் சாஸ்திரியார் இந்நூலை 'சுவிசேட குறவஞ்சி நாடகம்' எனக் குறித்துள்ளார். கிறிஸ்துவை மணமகனாகவும் திருச்சபையை மணமகளாகவும் கொண்டு 'நாயகன்-நாயகி பாவத்தில்' சாஸ்திரியார் இயற்றிய பிற நூல்கள் 'ஆராணாதிந்தம்', 'திருச்சபையூஞ்சல்', 'ஆத்துமப் பெண் நிந்தாஸ்துதி', 'கலியாண வாழ்த்துதல்' ஆகும்.

சாஸ்திரியார் தம் பன்னூற் புலமைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் 'ஞானத்தச்ச நாடகத்'தின் வழி,

> 'சாதியேது காண் அதிலொரு
> சைவமேது காண்'

என்று சாதிப் பாகுபாடு பொருளற்றது என்பதை வற்புறுத்தியுள்ளார். 'மூடக் கொள்கைகளும் மூத்த பொய்ம்மைகளும்' மண்டிக் கிடக்கும் சமுதாயத்தைச் சீர்திருத்துவதற்கென்று இயற்றப் பெற்றது 'சாஸ்திரக் கும்மி' ஆகும்.

சாஸ்திரியாரின் 'ஞானவுலா'வும் ஞானநொண்டி நாடகமும்' அவர் சிற்றிலக்கிய மரபுகளுக்கன்றி வேத நெறிப்பட்ட பக்தியுணர்ச்சிக்கு முதலிடம் கொடுத்தமையை விளக்கும்.

அவரின் 'செபமாலை'யும் 'ஞானப்பதக் கீர்த்தனை'களும் திருச்சபையாரால் பெரிதும் போற்றப் பெறுபவை. சிலுவை நூல்களாகிய 'தியானப் புலம்பல்', 'பேரின்பக் காதல்', 'பிரலாப ஒப்பாரி' ஆகியன சிலுவைக் காட்சியைக் கண்டுணர்ந்து ஈடேற்றத்திற்கு வழிவகுப்பன.

## தமிழ்ப்பாட நூல்களும் பராபரன் மாலையும்

நற்செய்தி பரப்பும் பணியில் ஈடுபட்ட வேதநாயகம், 1794ஆம் ஆண்டு சுவார்ச்சையர் தஞ்சையில் உள்ளூர் குழந்தைகளுக்கென்று நிறுவிய பள்ளிக்குத் தலைமை ஆசிரியராக நியமிக்கப் பெற்றார். இக்காலத்தில் தான் 'அகரவரிப் பொத்தகம்', 'ஆதியானந்தமும் அறிவானந்தமும்', 'வேதப் பழமொழி', 'பரமநீதி புராணம்', 'ஞான ஏத்தப்பாட்டு', 'கால வித்தியாசமாலை' முதலாய நூல்களுடன் 'பராபரன் மாலை'யையும் இயற்றினார். பராபரன் மாலையிலுள்ள இருபகுதிகளும் தமிழ்ப் பள்ளிக்கூடங்களில் கற்றுக் கொடுக்கப் பெற்ற 'கதிர்காம மாலை', அம்பிகை மாலை' என்னும் நூல்களின் இடத்தைப் பறித்துக் கொண்டன.

## பராபரன் மாலை - முதற்பங்கு - கலிப்பா

'பராபரன் மாலை'யைப் படித்தலால் வரும் பயனை முதற்கண் கூறும் வெண்பா நீங்கலாக 50 பாடல்களால் இப்பகுதி அமையப் பெறுகின்றது. 'கடவுள் வணக்கம்' முதலாய 18 தலைப்புகளில் பாடப் பெற்றுள்ளது. தொடக்கத்திலேயே 'உன்வேத மொழி என் நெஞ்சில் நித்தம் வைத்துக்காப்பாய்' என்று வேண்டும் வேதநாயகர், இறைத் தன்மைகளை வேத நெறிப்படி எடுத்துரைத்து, இறைவனுக்கு ஒப்பாகச் செய்யும் உருவ வழிபாட்டின் பயனின்மையைச் சுட்டிக்காட்டி, சிலுவை தந்த மீட்பையும் இயேசு தந்த புதுவாழ்வையும் எடுத்தோதும்போது, தம் பாவக்கேட்டை 7 பாடல்களால் கல்மனமும் கசிந்துருகப் பாடி, 'அஞ்சு காயத்தில் அணைத்தாற்றும் பராபரனே' என்று வேண்டுகின்றார். பின் 'நீயிருக்க வேதநெறியிருக்க' தமக்கு ஒரு தவிப்பும் இல்லை என்று கூறி, வேதத்தில் கொடியவர்க்குக் கிடைத்த பேரருளைச் சான்று காட்டி, முடிவில் இறையருளை முழுக்கக் கண்டு கொண்டமையால் 'எனது கலி காணேன் பராபரனே' என்று நிறைவு செய்கின்றார்.

## இரண்டாம் பங்கு-கலித்துறை

இப்பகுதியும் முன்னுரை கவிக்குப் பின் கடவுள் வணக்கத்துடன் தொடங்கி, 30 தலைப்புகளில் 110 பாடல்களைக் கொண்டு அமையப் பெற்றுள்ளது. 'தேவ செயல்' என்னும் தலைப்பின் கீழ் 22 பாடல்களில் இறையருளை விதந்தோதி, தம்மை மறுதலித்த சீமோனைக் கண்ணோக்கி அருள் செய்தாற்போன்று தமக்கும் அருள் செய்ய வேதநாயகர் வேண்டுகின்றார். பின்னர் 17 பாடல்களில் பெண்ணிச்சையால் தாம் படும் வேதனைகளிலிருந்து காத்தருள வேண்டும் போது, பக்திக் கவிஞர் வழி நின்று பிறர் பாவச் சோதனைகளையும் தமதாக்கிப் பாடுகின்றார் எனக் கொள்ளல் வேண்டும். மன்றாட்டுடன் முடியும் இப்பகுதியில் பல்லாற்றானும் இறையருளை வேண்டுகின்றவர் 'நெல்வேலி நாயகன் நற்றமிழைப் பாடும் கருத்தையும் தந்தான்' என்று தம் தமிழ்ப் பற்றையும் நிலை நாட்டுகின்றார்.

பக்திக்கவிஞர் வழிநின்று தம் நூல்களையும் கீர்த்தனைகளையும் தம் பெயர் சுட்டி சாஸ்திரியார் முடிக்கும் போது, தம் ஒன்றுமின்மையையும் இறையருளின் மேன்மைச் சிறப்பினையும் கோடிட்டுச் செல்கின்றார். 'நெல்லை சிவபக்தன்' இயேசுவின் மெய்யடியானாய் மாறியதை வற்புறுத்தும் வகையில் தஞ்சைக் கவிஞர் தம் நெல்லைப் பிறப்பைச் சுட்டியே

*தம்மைக் குறிப்பிட்டுக் கொள்கின்றார். மேலும் தாயுமானவர் போன்றோர் 'பராபரம்' என்று இறைவனைக் குறிப்பிட்டுச் செல்ல, 'பராபரன்' என்று சாஸ்திரியார் குறிப்பிடுவதற்குக் காரணமும் தந்துள்ளார். ஆள் தத்துவமுள்ள இறைவனுக்கு உயர்திணை விகுதியன்றோ சாலப் பொருந்தும்.*

*பராபரன் மாலை முகவுரையில் சாஸ்திரியார் கூறியுள்ளது போல் இந்நூல் பாடநூலாக மட்டுமன்று தாவீதின் உள்ளமுடையவராய் தம்பாவத்திற்காக அழுது இறையருளைப் பற்றிக் கொண்டவர்களுக்கு அல்லது இறையன்பர்களுக்கு மிகுந்த மன எழுச்சியையும் மகிழ்ச்சியையும் தருவதாகும்.*

## 1. பங்கு : கலிப்பா

### வெண்பா

திருவுருவா யாதாமின் றீவினையை மாற்ற
வொரு குருவாய் வந்துயிரை யீந்த சுருதிப்
பராபரன் மாலை படித்தக்கா னெஞ்சே
வராவர மிராது மகிழ்வாம்.

## கடவுள் வணக்கம்

1

சீரின்பமே யெனது செல்வமே மோக்கிஷமே
பேரின்ப ஞானப் பிரஸ்தாப வர்ச்சயமே
நேரின்பக் கற்பனையி னீதிமணிப் பெட்டகமே
யோரின்ப மாலைசொல்வே னுன்பாற் பராபரனே.

2

கண்ணே யெனதிரண்டு கண்மணியே கற்பகமே
விண்ணே மெஞ்ஞான விளக்கே விளக்கொளியே
யெண்ணாதடியே னிழைத்த பிழைபொறுத்துன்
பண்ணே படிக்கப் பதந்தா பராபரனே.

3

மேகாசனத் தெழுந்து விண்ணோர் குழாஞ்சூழ
வாகாசமேவு மனாதிப் பொருளுனையே
பாகாய் மனமுருகிப் பாடுந் தமிழ்மாலை
வாகாயிருக்க வரந்தா பராபரனே.

4

அடங்கலையுங் காத்தளிக்கு மம்பரனுன் மாலை
துடங்கல் புரிந்தேன் றுதித்தேன் றுயர்மிகுந்தே
நுடங்கல் வராதெனைக்கண் ணோக்கியருள் கூர்வாய்
மடங்கலன்று தோன்று மகிமைப் பராபரனே.

5

வித்தம் வைத்து நின்னருளை மென்மேலும் வைத்துனது
சித்தம் வைத்துத் தேவ திருக்கண் ணுருக்கம் வைத்து
முத்தம் வைத்துன் வேத மொழியெனது நெஞ்சில் வைத்து
நித்தம் வைத்துக் காப்பாயென் னீதிப் பராபரனே.

## புகழ்ச்சி

6

முத்திக்கும் வித்தே நீ மூவுலகுமான வித்தே
புத்திக்கும் வித்தே நீ புண்ணியமெல்லாத்தின் வித்தே
சித்திக்கும் வித்தே திருவசனத்தால் வருகும்
பத்திக்கும் வித்தே பருதிப் பராபரனே.

7

பொய்யா மறையா பொறுமை மிகுமிறையா
துய்யா சகாயா துலங்குகாயா நேயா
கையா வென்னையா கருணாலை யாகலையா
மெய்யா மேசையா விமலா பராபரனே.

## தேவ லட்சணம்

8

தானே யிருந்தாய் தனக்குவமை யற்றிருந்தாய்
வானே யிருந்தா யிவ்வையகமெல்லா மிருந்தாய்
கோனே யிருந்தாய் குருவாய் நீ யெந்தனுக்குத்
தேனே யிருந்தாய் தெளிவே பராபரனே.

9

பாபமன்றி நின்றாய் பரிசுத்தமாக நின்றாய்
சாபமன்றி நின்றாய் தயவோ டெழுந்து நின்றாய்
தீபமன்றி நின்றாய் செழுஞ்சுடர் பிரகாசமதாய்க்
கோபமன்றி நின்றாயென் கோவே பராபரனே.

10

அங்கு நின்றாய் வானோ ரடிபணிய மேவி நின்றா
யிங்கு நின்றாய் மண்ணோ ரெலார்க்கு மிரங்கி நின்றாய்
பங்கு நின்றாய் யானடியேன் பட்ட துயரத்தனைக்கு
மெங்கு நின்றாய் காணாம லெந்தாய் பராபரனே.

## விக்கிரகம்

11

விக்கிரக முந்தனுக்கு மெய்ப்பாகப் பாவினை யென்
றக்கிரமக் கார ரழிசுருப மாக்கினதா
லுக்கிரம நீதியெரிந் தோர்நொடியி லேயவரை
நிக்கிரகஞ் செய்யா நிறையேன் பராபரனே.

12

வானுலகும் பூவுலகு மற்றுலகுங் கொள்ளாமற்
றானதாய் நின்ற சருவ வியாபியுனை
யீனமரங் கல்லி லிருப்பாயென் றெண்ணுவது
ஞானமற்ற மூடர்களி னாட்டம் பராபரனே.

13

அண்டமெல்லாங் கொள்ளா தனைத்திடமுந் தாங்காது
மண்டலங்கள் கொள்ளாது வானமுங்கொள்ளா துனைக்
கண்டவுருவிற் கலந்திருப்பா யென்று சொன்னாற்
றுண்டரிக்க மானபெருந் தோஷம் பராபரனே.

## இரட்சிப்பு

14

பார்க்குணரார் செய்த பலபவங்க ளத்தனையுந்
தீர்க்க மனுவாய்த் திருவவதார மெடுத்து
மூர்க்கப் பிசாசை முனிந்து விசுவாசமுளோ
ரார்க்கு மிரங்குமுய ரன்பே பராபரனே.

15

அந்தமளவில்லா வனாதிசுத னாற்றுமத்தில்
வந்ததுயர மனப்பீடை சஞ்சலமுஞ்
சிந்துமிரத் தத்துளியுஞ் சீவன்விட்டு மாண்டதுவு
மெந்தனுட பாவவினைக் கீடாம் பராபரனே.

16

பிள்ளைகட்குச் சீவன்முடி பேணிவைக்க வேண்டியன்றோ
முள்ளின் முடியை முழுதுஞ் சிரத்தணிந்தா
யுள்ளமெலா நொந்தே னுருகினே னேழையெனைத்
தள்ளிவிடாதே சமயம் பராபரனே.

## புதுமை

17

முண்டகத்தினின்று முன்னாண் மோசேக் கருள் புரிந்தா
யண்டகையிட் டையா யிரம்பேர்க் கமுதளித்தாய்
கொண்டகத்தி லுன்னை வைத்துக் கும்பிடாமற்கொடிய
கண்டகத்தி னின்றவெனைக் காத்தாள் பராபரனே.

18

திட்டமற்ற பேய்க்கோள் செவிடு குருடூமை
குட்டங் குறைநோய் கொடியதிமி ரத்தனையும்
பட்டழிய விட்டாயென் பாவ வியாதியையுங்
கெட்டழியச் செய்யென் கிருபைப் பராபரனே.

## பாவ சங்கீர்த்தனம்

19

எங்கோனே யென்பவங்க ளெல்லாத்தையும் பொறுத்து
மங்காதருள் புரிந்துன் மைந்தனெனக் காத்தருள்வாய்
பொங்காதி தீவினையைப் போக்கவென்றே தாவீதின்
சிங்காசனத்தெழுந்த தேவே பராபரனே.

20

சிக்கமுற்றே னைம்பொறியின் றீவினையினால் மெலிந்து
துக்கமுற்றே னேங்கித் துயரமுற்றேன் றூறுபட்டேன்
வெட்கமுற்றேன் கெட்டமகன் மீண்டகதை போலுனது
பக்கமுற்றே னென்னைமுகம் பாரும் பராபரனே

21

பாதகனான் மேட்டிமையாய்ப் பாருலகிலே புரிந்த
தீதகற்றிடாதென் செபங்கூடக் கேளாமல்
வேதனைப்பட்டே மெலிய விட்டுவிட்டா லப்புறந்தா
னாதரவார் சொல்லென் னருமைப் பராபரனே.

22

அகடத்திற் சென்ற வரும்பாவி யானடியேன்
விகடத்திற் செய்த வினையாவுந் தீர்த்தருள்வாய்
சகடத்தின் மேலோர் சரந்தொடுப்பா ரோர்நாட்
பகடத்திற் கண்டுயின்ற பண்புப் பராபரனே.

23

சொல்லாத வார்த்தைகளுந் தூஷணங்க ணிந்தைகளு
மெல்லா வரும்பவங்க ளேதேது செய்தாலு
நில்லா தகற்றியுந்த னீதி சரிக்கட்டாமற்
பொல்லாப் பிள்ளைக்குப் பொறுப்பாய் பராபரனே.

24

எத்தனையோ சற்றுமுனை யெண்ணாதி யானுமக்குச்
சத்துருவாய்ச் செய்த சகலகுற்றமுந் தீரச்
சுத்த தயவாய் சுதனார் முகம்பார்த்துச்
சித்தமிரங்கியருள் செய்வாய் பராபரனே

25

நெஞ்சமுலர்ந்தே னெடுந்துயரி னான்மெலிந்தேன்
றஞ்சமெங்கும் காணேன் சரணமல ரல்லாமல்
வஞ்சகன்மே னின்கிருபை வைத்துன் றிருச்சுதனா
ரஞ்சுகாயத்திலணைத் தாற்றும் பராபரனே

## தவக்கோலம்

46

வாலைப்பிராய மனந்திரும்பி யன்றொருபெண்
காலைப் பிரியமுறக் கண்ணீரினாற் றுடைத்த
வேலைப்படியே விருப்பமுற நெஞ்சிலுந்த
னூலைப்பதித் தருட்கண் ணோக்கும் பராபரனே.

47

இன்றேயுலகை வெறுத் திச்சைகளைப் பாழாக்கி
யின்றே தவஞ்செய் திருதயத்தைச் சீர்ப்படுத்தி
யின்றேயுன் பாதத் திரக்கமடைய வெனக்
கின்றே யருள்செய் திரங்காய் பராபரனே

## சாக்காலத் தவம்

48

நோவு வந்து நோய்ந்துமன நுண்ணறிவு தான்மயங்கி
நாவு வறண்டுலர்ந்து நாடிகளெல்லாந் தளர்ந்து
சாவுவந்து சூழுஞ் சணத்திற் றவசு செய்யத்
தாவு வந்து கூடுவதோ சாற்றாய் பராபரனே.

49

சற்று முலகச் சுகத்திலே நாட்போக்கிச்
சற்று மனந்திரும்பித் தான் குணத்துக்காகாமன்
முற்றுமதன்ம முயற்சியினிலே திரிந்தாற்
குற்றமுந்தன் பேரிலுண்டோ கூறாய் பராபரனே.

## காட்சி

50

கண்டேனுன் னன்புங் கருணைக் கடைவிழியுங்
கண்டேனுன் காரணத்தின் காட்சித் திருப்பதமுங்
கண்டேனுன் மேனிக் கதிரொளியுங் கண்கூசக்
கண்டே னெனதுகலி காணேன் பராபரனே

## பராபரன் மாலையளவு

51

அன்புக் கலிப்பா வோரைம்பதையுக் கேட்டிரங்கி
இன்பக் கவிவேத நாயகனை ரட்சை செய்வாய்
துன்பப் பெருக்கைத் தொலைத்தடியார்க் கெஞ்ஞான்று
முன்பற்றி நின்ற முதன்மைப் பராபரனே.

**பராபரன் மாலை முதற்பங்கு முற்றும்**

## 2. பங்கு : கலித்துறை

### கலித்துறை

அடிக்குங் கடைக்குநின் றத்தனையுங்கண் டறிந்துடற்கும்
படிக்குங் கடத்தும் பராபரன்மாலை படிப்பதற்குப்
பிடிக்கு மிடிக்கும் வடுவுக்குங் கட்டுக்கும் பின்னியமுண்
முடிக்கு மடிக்கும் நடுவுக்குமானவன் முன்னிற்கவே.

## கடவுள் வணக்கம்

1

திருவாசகந்தருந் தேவேமெஞ்ஞான திரித்துவமே
குருவாகவந்த பொருளேயென் மேன்மைக் குலதெய்வமே
வருவாயென் னெஞ்சிலு நாவிலும் பாவிலும் வந்திருந்து
பரிவாயென் பாட்டைத் தயவாகக்கேளும் பராபரனே.

2

மணியே பரம செபமாலையே திருமந்திரமே
யணியே யருவுரு வேயழகே யரசேயடியார்
பிணியே தவிழ்க்கும் மருந்தே தருமறைப் பெட்டகத்தின்
பணியேயுன் பாதத்துணையே யருளும் பராபரனே.

3

பொன்னே யபரஞ்சியே யழியாதமெய்ப் பொக்கிஷமே
மின்னே யொளிரு முயர்சீவ ரத்தினமே யின்பமே
மன்னே கரிசனமே திரு மாமறை வாசனமே
பன்னேர்மை கண்ட புலவோர்கள் பாடும் பராபரனே.

4

முத்தே யிரத்தினமே சொர்னமேயதி மோகனமே
சித்தே கிருபாசனமே யினமே நற் சிநேகிதமே
வித்தே புராதன வாதனமேகன விற்பனமே
பத்தே விமோசனமே முனமேநில் பராபரனே.

5

துதியே கிருபா நதியே நிதியே துரையே யிறையே
கதியே சதாபதியே விதியே கலையே நிலையே
மதியே வெகுமதியே பரமானந்த வாரிதியே
பதியே யென்னெஞ்சிற் பதியேயுன் பாதம் பராபரனே

6

தேவே திருவுருவே யருவே தெளிவே யொளிவே
கோவே மகாவடிவே விடிவே குருவே யென்த
வாவே பரமமனாவே மகாபெரும் வாழ்வதுவே
பாவே சொலநிதங் காவே முன்னின்று பராபரனே.

7

நூலேதவிது செங்கோலே யெருசலை நூங்குமிச
ரேலேதொழு மிருகாலே தமிய னிறைஞ்ச மனு
வேலேதுனார் பகையாலே மெலியுமெவ் வேளையுமுன்
பாலே யெனக்கொரு மாலே வருத்தும் பராபரனே.

8

சிரனே நரர்வினை தீர்த்தவனே சச்சிதானந்தனே
யுரனே யுயர்ந்தவனே தவனேகன வுத்தமனே
தரனே நிராதரனே யசராசர தாபரனே
பரனே மனோகரனே திரனேசெய் பராபரனே.

9

தேனே யெனேச சிநேகிதனே நற்றினகரனே
கோனே நிதான சுதாகர தேவகுணாகரனே
வானே சுயாதிபனே சுபசோபனமா யெனைக்காப்
பானேயுனைச் சொலுவேனே யெனாளும் பராபரனே.

## பக்தி

10

நாடேனெவரையு நின்பாதமன்றி நயந்துசென்று
தேடேனொருவர் சினேகத்தை நின்னருள் சிந்தைசெய்யார்
வீடேபுகேனுனக் கன்பதில்லாரை மெய்யாகவினிப்
பாடேனெனக்கினிப் பாடேன் கருணைப் பராபரனே.

11

துதிக்கேனுனையன்றி வேறொரு தெய்வத்தை தோத்திரிக்கேன்
மதிக்கேனுனைப் பணிசெய்யாரைச் சற்றும்வணங்கி நிற்கேன்
கொதிக்கே னுபத்திரமென்ன வந்தாலும் குறாவிமனம்
பதிக்கேனெவர் பெயரேனு மென்பாவிற் பராபரனே.

12

செல்லேன் றிருமனைக் கப்புறமோரடி தீயர்முன்போய்
நில்லேன் பிசாசை நினையேன் கயவரை நெஞ்சகத்துஞ்
சொல்லேன் றுரும்பு மதியேனினி யெனைத் தூஷணிக்கப்
பல்லேனதிலொரு நாவேனவர்க்குப் பராபரனே.

13

துடங்கேன் றமிழை யுனக்கன்றி யார்க்குந் துணிந்துரையே
னடங்கே னொருத்தர்க்கு மஞ்சே னுலகமெலாஞ் சினந்து
முடங்கேன் முச்சத்துரு தீவினையாவு முறித்தெறிந்து
மடங்கே னச்சர்ப்பத்துக் கென்றே யழித்த பராபரனே.

14

ஊர்க்கே னுறவுகட்கேன் வஞ்சர்க்கே னுதவாவுலுத்த
ரார்க்கேன் பயப்படுவேனுந்தன் பாதத்தருளிருந்தாற்
சேர்க்கேன் சண்டாளத் திருட்டுப்பயல்களைச் சீட்ரெனப்
பார்க்கே னவர்முக நோக்கேனென் னுண்மைப் பராபரனே.

## இரட்சிப்பு

24

ஆதமடைந்த பவத்தார் கனியருந்தாதவருஞ்
சேதமடைந்தன ரப்படி நின்னுட சேயனுமே
நீதமடைந்ததினா னீதிக்கேடனு நேர்பெறவே
பாதமடைந்தன னாரெனைத் தள்வர் பராபரனே.

25

வழியு நற்சத்திய வுண்மையுஞ் சீவனும் வானவன்றன்
மொழியு மனாதிக் கனாதியு முற்று முதன்மையது
முழியுமுனையன்றி வேறதுண்டோ வெனக்கோசரமே
பழியும் படவந்த மேலான வேதப் பராபரனே

26

நாவலர்கொஞ்சுந் திருவாசகப்படி நானிலத்திற்
கோவலர் கொஞ்சுங் குடிலிடை பச்சைக் குழவியைப்போ
லாவலர் கொஞ்சுஞ் சுரர்சேனை போற்றவந் தாண்டருளும்
பாவலர் கொஞ்சுந் தமிழ் பாட்டுக் கேற்ற பராபரனே.

27

பேதகமோ சற்றுமில்லா துன்மைந்தன் பிறந்துலகிற்
போதகமோசொலி யற்புதஞ்செய்து பொறுமையுடன்
மாதகமோ பழியோ வவடின்ற மரக்கனியின்
பாதகமோ மடிந்தான் குருசேறிப் பராபரனே.

28

அடிகொண்ட மேனியுங் கட்டுண்ட செங்கையு மங்கமெல்லாங்
குடிகொண்ட காயமுஞ் சோரிப்பிரவாகமுங் கோலமுள்ளின்
முடிகொண்ட சென்னியு காலாணியுங்கொண்டு முற்றுமிந்தப்
படிகொண்ட பாவமெலாங் கொண்டு தீர்த்த பராபரனே.

29

கடிபட்ட காவின்முக் காற்படிபட்ட நின் காற்படியிற்
பிடிபட்டபத்த ரரைக்காப்படிக்குப் பெரும்படியாய்த்
தடிபட்ட முண்முடி பட்டிருப்பாணி தனாற்றருவில்
படிபட்ட கைப்படி பட்டே னருள்செய் பராபரனே.

## உத்தம மனஸ்தாபம்

30

தீங்குபெறத் திரிந்தே காலம் வீணிற் செலவுசெய்தே
நூங்குபெறமறைப் புஸ்தகமொன்றெனு நோக்கியன்னாட்
சோங்குபெறச் சென்ற சீடர்க்களித்த துணைப்பதத்தைப்
பாங்குபெறப் பெற்றிலா தலைந்தேனென் பராபரனே

31

சிறக்குந்திற மொன்றறிந்தே யில்வாழ்க்கையின் செல்வமெல்லாந்
துறக்குந் திருவடியார் தொண்டனாகத் தொழும்புசெய்யா
திறக்குஞ் சடலத்தைக் கொண்டே சுமந்திருந்தென் பலனாம்
பறக்குமிரு கேரூபின் வாகனத்துப் பராபரனே,

32

நண்ணாக்குறையு நலியாக்குறையு நின்னற்கருணை
யுண்ணாக்குறையு முருகாக்குறையு மொருதெய்வமென்
றெண்ணாக்குறையு மெழுதாக்குறையு மிசைத்துதவம்
பண்ணாக்குறையு மனைத்தும் பொறுமென் பராபரனே.

33

வகுத்தநின் வேதப்படி நடவாமன் மருளுலக
மிகுத்த பவத்தைச் சமைத்த வினையற மெய்க்குருசி
லுகுத்த விரத்தப் பெருக்கிற் றிவலையொன் றுள்ளமதிற்
பகுத்தெனக் கன்பு செய்வாய் நீ கிருபைப் பராபரனே.

34

அகைத்துக் கொடுந்துயர் செய்தாகடியங்களாய் நடத்தி
நகைத்துக் குருசிலறைந் தோர்க்கும் வேண்டி நலம் புரிந்தாய்
புகைத்துப் பவத்திற் கிடக்குமெனக்கும்பொறுப்பதலாற்
பகைத்துத் துரத்திவிடாதே கிருபைப் பராபரனே.

35

துங்கம் படர்ந்திலங்கும் பரமெங்குந் துலங்கனந்த
சங்கம் படர்ந்திலங்குஞ் சரணஞ் சரணந்தமியேன்
கங்கம் படர்ந்து பறந்தலையுங் கதை கண்டிரங்கிப்
பங்கம் படர்ந்து மடங்குந் திடஞ்செய் பராபரனே.

36

விஞ்சையர்சங்க மகிழ்ந்து விளம்பும் விதங்களங்கத்
தஞ்சுகளங்கங்களும் பட நின்ற வரும்பொருளே
தஞ்சமுடங்களடங்கலுங் கண்டிலன்றற் சமையம்
பஞ்சைபங்கச் சங்கடங் கெடச்செய்யும் பராபரனே.

37

துடித்து கெடுத்த விடத்துக் கணத்தைத் தொலைத்த தத்தைப்
பிடித்துத் திடத்த விடுத்த விரத்தப் பெருக்கில்வந்து
குடித்துத் தொடுத்து நடித்துக் களித்துக் குதித்துயரப்
படித்துக் கொடுத்து நடத்தாய் கிருபைப் பராபரனே.

38

துட்டுப்பட்டு முட்டிட்டெட்டிப் பிடிக்கத் துடித்தகனக்
கட்டுப்பட்டுச் சிக்கிமக்கிப் புத்திக்குக் கலக்கமுற்றுத்
தட்டுப்பட்டுப் பொட்டுச் சிட்டுக்கொப்பிட்டுச் சதிப்பவத்திற்
பட்டுப்பட்டுக் கிட்டுக்கெட்டேன் கிருபைப் பராபரனே.

39

வென்றியொன்றுஞ் செஞ்சரண்டொழ வென்றறமே விரும்பா
னன்றிகுன் றுங் கன வஞ்ச நெஞ்சன் கவடன் றிறமே
பொன்றிநின் றுன் றன் தன் றியன் றன்றும் புலம்பியதுற்
பன்றியென்றன் பிழையென்றும் பொறுமென் பராபரனே.

40

தீங்காங்கு ணுங்கிரு ணீங்கா துழன்று தினந்தினமும்
வாங்காதருந்துயர் தாங்காதிரங்கி மனந்தளர்ந்தே
னாங்காரமாங் கடற் சோங்கூடு தூங்கி யலையதட்டும்
பாங்காயெனக்கரு ளோங்காய் கிருபைப் பராபரனே.

41

சாத்திரமாறு மறை நான்குங்கெட்டு மெய்ச் சத்தியமே
சூத்திரமாகத் துலங்க வைத்தா யுனை தோத்திரிப்பே
னேத்திரங்கொண்டு நற் சீமோனை நோக்கிய நேரனையும்
பாத்திரமாக்கிக் கொள்ளையா கிருபைப் பராபரனே.



# 4

# வண்ண சமுத்திரம்

**ஆசிரியர் : வேதநாயக சாஸ்திரியார் (1774 - 1864)**

**அறிமுகம் : தே. செல்லையா**

*சிவபக்தன் அருணாசலம், கிறிஸ்து பெருமான் அருளால் சிலுவை பக்தன் தேவசகாயம் ஆனார். தேவசகாயத்திற்கும் ஞானப்பூ அம்மாளுக்கும் வேதநாயகம் என்ற வேதநாயக சாஸ்திரியார் 1774 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 7 ஆம் நாள் பாளையங்கோட்டையில் பிறந்தார்.*

*எட்டு வயதிலேயே அன்புத்தாயை இழந்த வேதநாயகம், திண்ணைப் பள்ளியொன்றில் சேர்ந்தார். திண்ணைப் பள்ளியில் பயிலும்போதுதான் வேதநாயகம் வாழ்க்கையில் திருப்புமுனை ஏற்பட்டது. அப்பொழுது அவருக்கு வயது பன்னிரெண்டு. 'சுவார்த்தர்' என்னும் மேலை நாட்டுச் சமயப் பணியாளர் வேதநாயகம் வாழும் ஊருக்கு வந்தார். வேதநாயகத்தின் குடும்ப நிலைமையையும், அவர் முகத்தில் ஜொலிக்கும் ஞானஒளியையும் கண்டார். அவரைத் தம்முடன் தஞ்சைக்கு அழைத்துச் சென்று அவருக்குச் சங்கீதப் புத்தகத்தையும், வேதசாஸ்திரப் புத்தகத்தையும் கொடுத்துத் தன் சொந்த மகனைப் போல் வளர்த்தார். அங்கு பள்ளியில் கற்கிற காலத்தே தஞ்சை மன்னர் மகன், சரபோஜி பள்ளித் தோழரானார். இவ்வாறு சொந்த இடத்தைக் காட்டிலும் வந்த இடத்திலேயே சாஸ்திரியார் படிப்படியே உயர்வு பெற்றார்.*

*சாஸ்திரியார் மணந்த மனைவியர் மூவர்; (ஒருவர் இறந்தபிறகு மற்றவரை மணந்தார்) பெற்றெடுத்த பிள்ளைகள் நால்வர்; பாடியும் எழுதியும் கொடுத்த நூல்கள் நூற்றிருபத்திரண்டு. எழுத்துலகில் சாதனைகள் பல புரிந்த இவர் 1864 ஆம் ஆண்டு ஜனவரி 24 ஆம் நாள் பரம நாட்டை அடைந்தார்.*

## சிற்றிலக்கியத் தந்தை

*கிறிஸ்தவச் சிற்றிலக்கியங்கள் என்றதும் நம் நினைவுக்கு வருபவர்கள் இருவர். ஒருவர் வீரமாமுனிவர்; இன்னொருவர் தஞ்சை வேதநாயக சாஸ்திரியார். முன்னவர் மேலை நாட்டிலிருந்து வந்து, தமிழ் மண்ணில் கிறிஸ்தவச் சிற்றிலக்கியத்தைத் தோற்றுவித்து அவற்றை வளர்த்தவர். பின்னவர் அச்சிற்றிலக்கிய வடிவில் நற்செய்தியை ஆற்றலோடு பாடுவதற்குத் தடையேற்பட்டால் அத்தடைகளைத் தயக்கமில்லாமல் தவிர்த்தும் உடைத்தும் தாமே புதிய இலக்கிய வடிவங்களையும் உறுப்புகளையும் படைத்துக் கொண்டவர். வடிவத்தைக் காட்டிலும் வண்ணத்திற்கே (கிறிஸ்து பெருமான் புகழுக்கே) முதலிடம் கொடுத்தவர். சிற்றிலக்கிய முத்திரையைக் கிறிஸ்தவத் தமிழ் இலக்கிய வரலாற்றில் பொறித்துத் தமக்கெனத் தனியிடம்*

பெற்றவர். இவர் எழுதிய நூல்கள் பெரும்பான்மை சிற்றிலக்கியங்களே. எனவே, எழுதிய எண்ணிக்கையாலும், எண்ணிய புதுமைக்காயினும் இயேசு பெருமானையே பாடியதற்காயினும் இவரைச் 'சிற்றிலக்கியத் தந்தை' எனலாம்.

## இசைநிறைக் கலைஞர்

சாஸ்திரியாரை அறிந்தோருள் படித்தவர் சிலர்; படிக்காதவர் பலர். படிக்காதவர் பலர் அவரை அறிவதற்குக் காரணமாய் இருப்பன, அவர் எழுதிய கிறிஸ்தவக் கீர்த்தனைகளேயாகும்.

கிறிஸ்தவத் திருச்சபைகளில் திருவழிபாட்டிற்கும், திருவைபவங்களுக்கும் பயன்படுத்தப் பெறும் எண்பத்தாறு கவிஞர்களால் பாடப்பெற்ற 'கிறிஸ்தவக் கீர்த்தனை'யில் சாஸ்திரியாரின் கீர்த்தனைகள் எழுபத்தி நான்கு. கீர்த்தனைக் கவிஞர் பட்டியலில் இவர் பெயர் கடைசியாக இடம் பெற்றிருந்தாலும், எண்ணிக்கையிலும், எண்ணிய வகையை ஆற்றலோடு பாடுவதிலும் இவரே முதலாமவர். சாஸ்திரியார் இறந்தாலும் இன்றும் திருச்சபையில் அவர் இறவாமல் இருப்பதற்கு அவரது அனுபவஞ்சார்ந்த கீர்த்தனைகளே காரணமாகும்.

## வண்ண சமுத்திரம்

'பழைய ஏற்பாடு' நிகழ்ச்சிகளைக் கவிதையாக்கிக் கடவுளைப் போற்றுகின்ற நூலே வண்ண சமுத்திரம். இந்நூலில் கடவுள் வாழ்த்து முதலாக ஆபிரகாம் அடைந்த வாக்குத்தத்தம் ஈறாக 22 பிரிவுகள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு பிரிவின் தலைப்புக்கு முன்னும் வண்ணம் என்ற சொல் இடம் பெற்றுள்ளது. இந்நூல் 1938 ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் சென்னையில் வேதநாயக சாஸ்திரியாரின் பேரன் எ. வேதபோதகம் அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலில் 112 பக்கங்கள் காணப்பெறுகின்றன.

> 'எண்ணற் கரியவிறைவ னருளைத் தேர்ந்து
> வண்ணச் சமுத்திரத்தில் வாழ்த்தவே'

எனக் கவிராயர் நூலின் நோக்கத்தைக் காப்புச் செய்யுளில் எடுத்தியம்புகிறார். ஆதிவினையாகிய பாவம் தீர, அதனால் பூதலத்தோர் பரமநாட்டை அடைய, கடவுள் தன் ஒரே மைந்தனாகிய இயேசு கிறிஸ்துவை உலகிற்கு அனுப்பினார் என நூலைத் தொடங்குகிறார். தொண்ணூறு வயது நிரம்பிய கிழவனாகிய ஆபிரகாமின் தொடர் குறை நீங்க சாராளுக்கு ஓர் ஆண் புதல்வனைக் கடவுள் அருளினார் என நூலை ஆசியோடு நிறைவு செய்கிறார்.

கடவுள் மனுகுல மக்கள் அனைவரின் துயரம் தீரக் கிறிஸ்து பெருமானை இவ்வுலகிற்கு அளிக்கிறார். அதே சமயம் தனி மனிதனின் துயரத்தையும் தீர்க்கிறார். தாரணி மக்கள் துயரையும் தனி மனிதத் துயரையும் நீக்க வல்லவர் கடவுள் என்னும் நற்செய்தியை நூலின் தொடக்கத்திலும் இறுதியிலும் நற்செய்திக் கவிஞர் தெளிவாக்குகிறார்.

ஆபிரகாம், மோரியா எனும் மலையில் தன் ஏகசுதனை (ஈசாக்கை) கடவுளுக்குப் பலியிட தன் கத்தியை ஓங்கியபோது கடவுள் அவனைத் தடுத்து அவன் விசுவாசத்தை ஆசீர்வதித்தார். ஆனால் கடவுள் கொல்கொதா மலையில் தன் ஒரே குமாரனாகிய இயேசுவை மானிடப் பாவத்திற்காகப் பலியாக்கினார். ஒரு மனிதன் தன் குமாரனை இழப்பதைப் பொறுக்காத கடவுள், தன் ஒரே மைந்தனைப் பலியாக அனுமதித்துத் தன் இணையற்ற அன்பை வெளிப்படுத்தினார். இந்தச் சிந்தனைகள் யாவும் வண்ண சமுத்திரத்தைக் கற்கும்போது எழுகின்றன.

*சாஸ்திரியார், கடவுளுக்குத் தன்னை முற்றிலுமாக அர்ப்பணம் செய்கின்ற அனுபவத்தை,*

*ஞானநதியே நவநிதியே*
*நன்மைக்குறவே நாயகமே*
*நாவிலடங்கா மிகும்புகழே*
*நாயேனுனது மகத்துவத்தைப்*

*பாடும்படியே கிருபை செய்வாய்*
*பாவியெனக்குன் னுதவியின்றி*
*பார்மீதோ ராதரவுமில்லை*

*. . . .*

*வாடும்படி யென் மனதிதனை*
*வருந்தி வருந்தி நினைத்துருகி*
*மயங்கிக் கண்ணீர்தனை யுதிர்த்து*
*மருகி மருகிப் புலம்புவனோ*
*மன்னோன் றவிது குலக்கோவே!* *(5. வண்ணம், செபம், ப. 22)*

*என வண்ண சமுத்திரத்தில் பாய்ச்சுகிறார்.*

*வண்ண சமுத்திரம் உப்பற்றது; அலைகளற்றது; எல்லாரும் எப்பொழுதும் பருகத்தக்கது. வண்ண சமுத்திரம் பயில்வோர் வாடாத இறையரசுக்குச் சொந்தமாவர்.*

**காப்பு**

எண்ணற் கரியவிறைவ னருளைத் தேர்ந்து
வண்ணச் சமுத்திரத்தில் வாழ்த்தவே கண்ணுற்
றருவா பரிசுத்த ரூபியென் னெஞ்சில்
வருவாய் மிகக் கிருபை வைத்து

## பொதுப்பாயிரம்

### சந்த விருத்தம்

1 ஆதரையினோர் பரமநாடடையவே கிருபை
யாகமனுவாய் மகனையே
யாதிவினைதீர வருளேக சருவேசுரனை
யாவன் மிகவே யுரிமையாய்
நீதமுடனே யிடைவிடாது தொழுவேனெனது
நீதிசுதனீ தியெனவே
நேயமுடனே யுரைசெய்வேனெனது மாதுயரம்
நீறுபடவே யழியுமே
போதநெறியா யுலகினாதிமுதலீறுவரை
மேவிய புராணகதையே
பூசனையினோர் முறைமையாக நவமானபுக
ழான வணமாய் மொழியவே

மாதிவிய சொரூபமுதலாய் வளர்ரூபியரின்
வான்வரமோரேழு மருள்வாய்
மானசுவிசேட சபைமேவிய மணாளன்மனு
வேலிசர வேலரசனே.

## 1. வண்ணம்

### கடவுள் வாழ்த்து

1 (விரு.) சீருற்ற தயாபக் கடலோர்த்தனினேர் புத்திர
னார் சிற்றுருவாய் மெத்தவுமே
தேவப்பரலோகத்தினர் கீழ்சுற்றிய பூவுற்றவர்
சேரக் கவிபாடிக் கொளவே
பாருற்றுயர் மாபெத்தலை யூரிற் புறமேயுற்றனர்
பாவத் துயர் தீரத்தயவாய்ப்
பாவிக்குயிராயற்புதன் மாபட்சமோடே பற்பல
பாடுற்ற தமாயப்புறமே
நேருற்ற கபாலக்கிரி யூடுற்றுயிர் சோரத்திரி
நேரத் தெழலாகித்தரைமே
நேயத்துடனே பற்றிய சீடர்க்குரையே யிட்டபி
னேமத்துடனே முக்கியமாய்க்
காருற்றெழு பாதத்தினை வானச்சபை யோரர்ச்சனை
காணப்பகர் ஞானக்குருவுன்
காதைப் புகழ் போதத்துடனோகத் தமிழ் நாவைக் கொடு
கானக்கலி லேயப்பதியே.

## 2. வண்ணம்

### சிறப்புப்பாயிரம்

2. (விரு ) ஆதியந்த நடிலாத சுந்தரவி
நோத சம்பிரம கிருபாகரா
ஆயனெங்கள் குலதேவனென் குணதிரி
யேகனெ ன்றொருபராபரா
நீதி தந்துமறையே விளம்பியரு
ணீடுமிங்கித மனோகரா
நேயமுந் தயவும் ஞாயமுங்கன நி
தானமுந் திகழ் நிராதரா
வாதுகொண்ட கடிசூதழிந்து கெட
வானினின்று மரிமாதுபால
மானிடன் சொரூபமாக வந்தவுனை
மாதவங்க ளுடனோதுவேன்
றீது கொண்டவுல கூடழிந்து சிதை
யாதெனின் றுயர் கடீரவே
சேரநின் கிருபை கூர்வை விண்பரம
தேவமைந்தனே சுநாதனே

## 3. வண்ணம்

### தேவசுவாப மகிமை

3 (விரு.) ஆதியிட்ட பவத்தை மறுத்தெனை
யாள விப்புவியுமக்குண் மனுக்குல
மாயுதித்த வனுக்கிரகக் கட
லான தற்சொருபத்தின் மகத்துவ
நீதியிட்ட திரித்துவ வஸ்தென
நேர்மையிற் றொழுசத்திய திருச்சபை
நீடு கற்பக முற்ற தவக்கனி
நேயபுத்திர கருத்ததனுனைத் தின
மோதியிட்டு நிசத்தில் வழுத்துவ
னூழ்வினைக் கெனை முற்றுமகற்றிவை
யோலமிட்டடர் சத்துருவைச் செய
மோடழித்து வினைத்தலையைத் தகர்
சாதியிட்ட வெரிப்பை நிவர்த்திசெய்
தாமதச் செயலற் றருளைப்புரி
தாசனைக் கிருபைவைத்து நடத்தொரு
சாமி மெய்ப்பரிசுத்த கிறிஸ்துவே

4 தன தானனா தன
தன தானனா

5. தந்ததன தானன
தனன தன தான தன தானனா

1 பொருளாதி காரண தவஞான ரூப
வதிய நீதமோடெழு கிருபாகராவுன
தருண்மேன்மையே
யெந்த னுளநாவிலடங்க வசமோ யினி
யெந்த விதமாக வுனின் புகழை யோதுவ

னொருகோடி காலமிவுல கூடு நீடியு
மொருகோடி நாவுட னொழியாமலே பக
லிரவாகவே
யஞ்சல் செய்தெ நேரமிறைஞ்சி யிசைகூறினு
முன் றயவிலோரணுவுஞ் சொலவெலாதது
பொறைமேவு மாரியர் குருமார் தபோதனர்
புவிராசர் மேலவர் கவிபாடும் வாணர்க
டிரள் ஞானிமார்
பொங்கு முலகோரும்விணு ம்பரு மெலாரும் வி
ளம்பமுடியாதென வஞ்சி நினைவாகின
னுகமையிலனாதி யொரு தேவனே.

2 கலித்துறை. சீர்கண்டறிய மறைகண்டு ஞானத்தி
றமதுகண், டேர்கண்டு யூகத் தெழில் கண்டறிவுக்கோ
ரெல்லை கண்டு, கூர்கண்டெரிபந்த நீதத்தைக் கண்
டெண்குணத்தையுங்கண்; டார்கண்டுன் முக்கியத்தைப்
பகர்வார கண்டாகண்டனே

3. புவிமீது தேவனுன் மகனேசுநாயகர்
நரரூபமாய் மரியிடமேவி மானிடர்
பவமாறவே
பொந்தியு நியாயதிபன்றனின் முனேகன
நிந்தையுறு பாடடைந்துமர மேறி

மரணமாகியே கல்லறையினீடியே திரி
தினமீது மீளவு மெழலாகி வானுல
கதிலேறியே
யெண்டிசையுளோரு ம்வணங்க முடி சூடிய
மைந்தனுட நீதியை யெந்தனுடதாய்நெறி

புகல்வேன தாலென திருளோடு நான்மிகு
திடமாயுனாதர வதினாலு னேர்மையை
விரிவாகவே
யெங்கு மொழிவேன லவணங்கள் பலபாடி
மகிழ்ந்து பணிவே னென்முன் வந்து நலமே புரி
யுரிமை மிகும் ஞான திரியேகனே.

4 (கலித்.) மைந்தர் பவத்தையகற்ற மனுடவதாரஞ்
செய்து, பொந்திப் பிலாத்தரசன்முன் நின்று பொறுமை
யுட னிந்தைகளேற்றுக் குருசின் மரித்தவனீதியையே
யென்றனதென் றுரைப்பேனெனின் பாவத்திடர் கெடவே.

5 தெருளான மோசையினிடம் வேதமேதர
விசறேலர் சேனை வெருவியோட வானவர்
தொனி காளமோ
வந்தர மெலா மிடியுங்கு முறவேகக
னங்கள ளவாயனலும்படர ஞாலமு

மதிராகவே மறைதரு சீனைமேரின்
னவமேவுயோர்தனி நதியான் விவாகமோ
ருதனாடவே
யம்பதுகளாறு குடங்கள ளவானது
கந்தரசமாய் வனையுங்கலிலை யேணியர்

சினமாக யூதர்களுடன் வாதுகூறிய
நசரேநராதிப னழகான நீசம
றியதாகுமே
வெண்பரியதோ முகினன் கொடியதோ குரு
சன்பர் செபமாலை யனும்பர் முரசேழினன்
சகல புவியோர்க டொழுமாணையான்

6 (கலித்.) சீனாயிவெற் பினன் யோர்தானியாற்றினன்
சேர்கலிலைக், கானானுதே யனசரை நகரான் கரக்கயத்தன்
வானானமாவன் சிலுவைப்படன் செபமாலையினன்
கோனாஞ் செழும்பணையன் யாவும்போற்று
செங்கோலினனே

7 தெளிவான யோர்த னதியினோடு சோலை
மலர்களூடு தேனமுதமுமோடு கானனுலகின்
மீதிலே
முந்திரிகையோர் குலையிரண்டு திறலோர்கள் கொ
ணர்ந்துவர வாய்மை சிறந்த நசராபுரி

## 4. மோ. 13, 23

மதிள்வானமேவளர் வயிடூரிய மேடைக
னகவாம கோபுர மெழிலான வாலைய
முழுதாகவே
செங்கதிரதா யொளிருங்கனக பீடமி
லங்கு மணிவாயில் பளிங்கில்வனை மாளிகை

தெருவோகணாடிய தொளிவோ பளிரெனு
நவயேருசால நகர மேயிதாமென
வுலகோரெலாம்
வந்தனமோ டோதுவரந்த நகராளுது
ரந்தர தவிதாதி பசுந்தரனுலாவிய
தடவரை சீயோனிலுறு நாரியே.

8. (கலித்.) தெளிவான யோர்தனதி பாய்ந்தேனமுத
ங்கள் சிந்தித், தொளியான தங்குபலன் விளைவாகித
துலங்கிர்த்தின, வொளிவானம் வீசுகலிலேயநாட்
டினுயர்நசரை, வளமான திவ்விய சீயோன்மலையின்
மகாமங்கையே.

9. அருளே மெஞ்ஞானிகடவ மேவிவேகவு
னதமே மகாவதிசயமே குணாவிரு
தய நேயமே

கொஞ்சுகிளியேய பரஞ்சிமயிலே மயன்
மிஞ்சுமனமே பயிலுங்கைகிலமே நவ

மணியேபொனே பொனினணியே கணேவிணி
னொளிவே மினேகன நிதியேவரோ தய
செபமாலையே
யந்தமிகு சீவசுகந்தமலரே பர
னந்த வனமேவு மனந்த சுகமே பர

மறிவே குலாவிய புறவே மனோகர
வழகேமினார்களி லதிரூபமே திரு
வபிஷேகமே
மங்கையர் சிரோமணி மங்கள கலியாணிய
லங்கிருத சீயோனின ணங்கர சியேயுன
தகமகிமையோத வெளிதானதோ.

10 (கலித் ) அருளே தவக்கொடியேயுயர் பேரின்ப
வானந்தமே, தெருளேயனந்த செபமாலையே திருவா
லயமே, பொருளேயெனுத்தமியே கவடற்ற புறாவினமே
மருளே யகற்றிய வேதாந்த சாரமனோன்மணியே.

11. அறமேவிணோர் தெரிசனமேநலோர் பெறு
வரமேயா காசுவின் மனையே சிமாசன
பிரவடீகமே
மங்கள விசேட செபங்கடிரளாசிமு
ழங்குனத கீதவளங்களுடன் மேவிய
கலைஞானமே பரகதிமானமே யினி
துளதேறலே கனிரசபாகமே யிர
வியின் ரூபமாய்
வந்தமணியே தவிதின் சிகரியே சல
மன்கன கவாலையமின் கொடியுனேர் மையி

னடி தாழுமே மதியிடை மீதுபானுறு
முடிமீது தாரகை பெரிதாறோடாற தொரு
வினோதமே
யெங்கடிரியேகபரன் செயல்களானவ
னந்தவித ஞாயம் விளங்க முடியாதென
தருமையுளநேசர் மணவாளியே.

12 (கலித்.) ஆகாசமேவு தவிதின் சிகரியரிணையே
யாகாசுவேர் மனையேசலமோன் மணியாலயமே
வாகான மங்களவுன்னத கீதமகத்துவமே
வாகாயுனைமதி மீன்கதிர் சூழ்ந்தது மாட்சிமையே.

13 இருளோட நீசமறியின் மீதிலேறியு
னிறை சாததாயுனினிட மேகிறாரொரு
மனதாக நீ
வந்துறுதியோடு மகிழ்ந்து பதசேர்வை
புரிந்திடை விடாது பணிந்து செபமே செய்து

தவ நீடுபாவிகள் வழி கேடதாலதை
விடுலோகமாயையையொழி தீமையாவும் வி
லகியோடியே
யன்றெமது நாதன் விளம்பு சுவிசேட
முணர்ந்தறி வினோடு நடந்துகொளெ நேரமு

மினிதான தீவிகையணையாமலோர் கடி
ஞையிலார் தவேயெனைகொணர் வாயலான்மிகு
விரைவாகவே
சென்றெதிர்கொள் பார்வையனந்தலில் விழாது
தொடர்ந்து மணவீடுபுகுந்து கனியாயிரு
மகிமையுடனூழியுள காலமே.

14. (கலித் ) மெத்தன வுள்ளவராய் நீசவாகனமீதெழுந்
துன்னதத்தன் வந்தாருனக்காக வென்றேயருள் கூர்ந்
துகையிற், சித்தியிலெண்ணைகொண்டே தீபமேந்தித் திட
விசுவாசத்துடனித்திய மணவீட்டுக்கேகு மணங்கரசே.

15 இசைபாடியே விபுதர்கள் கோடிசேனைகள்
புடைசூழவாதி வலதுபாகமீது
மகிமையாகவே
சங்கையுடன் மேவியிருந்துலகும் வானும்
வணங்க நரகோருமடங்க வரசாளதி

பதியேசுநாதனு னுயிராசை நாயக
னுடனே குலாவி முடிவூழி கால
முனதமாகவே
சிந்தைகளிகூர வனந்தசுகமேவி வி
ளங்க வதிதூதர்முழங்கி நடமாடவு

மெழிலான வீணைகள் பலகீதநாதமு
மெழும் வானம்யாது மணியினோதையே மிகு
மிடரோவிரா
திந்தவித மேன்மை நிறைந்த புகழாயொரு
நிந்தையுமுறாது சிறந்தபர தீசினில்
வளமை மணவாளனுடன் வாழியே.

16. (கலித்.) தந்தையனாதி வலத்தினிலேறி சச்சரியிருப்
பா, யந்தர சொற்கமும் பூமியும் கீழுலகத்தையுமாண்
டுந்திய தேவசுதனேசுநாயகனோ டுறவாய்ச்
சிந்தையினூழியும் வாழ்ந்து சுகித்திருதெய்வ ணங்கே.

## 5. வண்ணம்

### செபம்

5 (விரு.) தேடும்பணியே திரவியமே
செல்வப் பெருக்கே திருவுளமே
சீனாமலையின் கற்பனையே
செழிக்கும் பரமகானாவே
சிங்காரப் பூங்காவனமே
செங்கோன முடியே சீர்பதியே
தேவபரனின் றிருமகனே
தேவாலயமே தினகரனே

நாடும் பரமராச்சியமே
ஞானநதியே நவநிதியே
நல்லோர்க் கருளே நற்பலனே
நன்மைக்குறவே நாயகமே
நவசேனைகளினி ராசாவே
நரகக்கடியைக் கடிந்தோனே
நாவிலடங்கா மிகும்புகழே
நாயேனுனது மகத்துவத்தைப்

பாடும்படியே கிருபை செய்வாய்
பாவியெனக்குன் னுதவியின்றி
பார்மீதோ ராதரவுமில்லைப்
பைசாசுலகு மாங்கிஷமும்
பகையென் றுனக்குத் தெரியாதோ
பந்துகளுந் தானுனையடைந்த
படியா லுறவற்றது மறிவாய்
பாழிவ் வினைக்கென் செய்வேனான்

வாடும்படி யென்மன திதனை
வருந்தி வருந்தி நினைத்துருகி
மயங்கிக் கண்ணீர்தனை யுதிர்த்து
மருகிமருகிப் புலம்புவனோ
வஞ்சக்கலியைத் துரத்தியுன்றன்
மறைவிலடிமைரதனைக் காத்து
மகிமைப்படுத்தியருள் புரிவாய்
மன்னோன் றவிது குலக்கோவே.

2. தனன த்தன தனா தன தானன தத்த
2. தன தானன தத்த
2 தன த்தன தன
தனத் தான தான
தன தான தந்த தன தானனா.

1. கடல் சுற்றியதரா தலம்வானுல கட்ட திசை
பற்பல பொருள்கள் யாவது மாறுதினத்தில்
வளமாக வமைத்தெழிலதாக நடத்தி
யகங்கனிவுறவனந்த ததிசய மிகுத்தாளனாதி

பொறுமைக் களவிலா மறைசூடிய சத்திய
திரிதத்துவபரா பரமாகிய நித்திய
வெவராலு முரைக்கவரிதான மகத்துவ
வரங்களி லுயர்குணந்தரு நய
செபத்தியான ஞானி.

கடியைச் சினமதாய் நரகான தில்விட்ட
பெருமைச் சறுவகாரணமா தவனுக்கிர
வெரிநீதியின் முக்கிய கிருபாசனன் மொய்த்த
பரஞ்செகமது நிறைந்தருளிய வுகப்பானசோதி
கனவேத சுந்தரவரூபியே

2. கதிர்விட்டொளிர் வியோம மும்வான் விரிவுக்குண்
மிதமற்றடர்ந்து தாரகையானது மற்று
முற்பாதல ம்வெற்புலகும் வாரியுமச்ச
மிகும்படி நடுநடுங்கிட நட
மடித்தேயுலாவு

மகிமைக்குரிய சீவன் கேரூபின் முக்கிய
விரதப் பெருமைவாகன மேறியெதிர்த்த
கனபேய்கள் சிரத்தை மலையாது தகர்த்து
மிகுந்துள தளமடிந்தழிபட
மிதித்தாடு சூரர்

கருணைக்கிணையிலா வருள் வேதசமுத்திர
வறிவுற் பனகுணாகரதேசிகர் சித்திர
நவசேனைகளர்ச்சிய சவை சூழ்கவுமெச்சிய
பயன்களையுணர் சுதந்தரவறி
வுளத்தாதிமூலர்
கலைமாதவந் தருதியாகவான்.

3 அடலிட்டெதிர் பிசாசுகளோடிய பட்ட
மணிபொற் சிலுவைஞானபதாகை படைத்த
துரைமா பரிசுத்த செபமாலை தரித்த
புயன் றவிதிறையினந் தனிவரு
ளொளித்தீபமான

பரமச்சொரூபரா ரணர்வீரிய சத்துவர்
சுயதற்பர புராதனவாதன தத்துவ
ரசரீரியர் பத்தரகமேவிய நித்த
ரதம்பழுதற வுகந்தவரொரு
தருப்பாவநாச

ரகமைக்கொடிய பாதககாமிகள் கெட்ட
மனதைப்பணிய வாவியினேவுத லிட்டு
நிறைமாதவமிக்க குணமேவி நிலைக்க
நலந்தரு செபதுரந்தரவதி
சயத்தேவ சீல
ரனன்மீதறைந்த தச நீதியார்.

4. அருமைத்தெரிசி மாதவராரியர்பற்றி
யெழுதித்தருமுனூல் வழுவாதர சிட்ட
தவிதாளுயர் பெத்தலையின் மாடடை கொட்டி
லெழுந்தருளிய பரம்பொருளொரு
கிறிஸ்தேசுநாத

வுனதக்கிருபையாசனனே கெதியற்ற
வடிமைக் கொருதராதரவே துனைவிட்டு
லகமானது கஸ்திதருபாதல நித்த
மெழுங்கவலை கண்மனந்தனி லதி
கரித்தேயெ நேர

மலையிற்றிருகி யோடிய வாலிலையொத்து
மருகித்திரிவனோ பகைகாற ரனத்த
வுறவோரொருபக்க மயலாரொருபக்க
மிடும்புகளுடனடந் தரசுசெய்
தொடுக்காம லாளு
மதிநேய சம்பன வனாதியே

5. புடவிக்குளனை மாமரியாளிட முற்ற
கிருபைப் பரமனேயடியே னளவற்ற
பவகாரி கணிச்சையுல காசைகடுற்கு
ணமும் பகை கவடதும் பெருகியே
மகத்தான தீயன்

மனதிற் பெருமையோ பெரியோரொடுதற்க
மிடுகற்பனைகளோ புறர்வீடதுநற்றி
வநியாய மிகுத்த கொலைபாதகமற்ற
வகந்தைகள் கெடுகுறும்புக டொகை
கணக்கேதையோ பொய்

புலைசொற்பழுது கோடிகளோ களவுக்
குரிய சித்திரவினாவுகளோ நடலத்து
விலைமாதர் கண்மைக் கண்வலையூடுயிர் சிக்கி
விழுந்திடர்படு பெரும் பழுதுள
துடுக்கான கேடனெனை
நேடவந்த குருநாதனே

6. புதரிற் புலிகள்போன் மனையாளொடு மக்க
ளெதிரிட்ட டமதாயுயிர் சோர்வுபடுத்தி
வினைசேர் கெறுவத் துமதமேறியுரத்து
நிதம்பொருது சமரந்தனையெவ
ரிடத்தே சொல்வேனான்

வெளியிற் பகடியோ பரிகாசவிதத்தி
னொடிசொற் றுவர்களோ வெறியாடி நகைத்து
மதியாதொரு லட்சமவதூறுடன் லட்சை
யழிம்பதுகளை விளம்புதடுள
சனத் தாரினோடு
புகழற்றெளிமையா யுறவாடி யலுத்து

மதிகெட்டவனுமாய் முகநாடி கறுத்து
மெலிவாய் மனதுட்கி யிருசேவடியுக்கு
ளடைந்தன னெனைமகிழ்ந் தடிமைகொ
ளுனக் கோலமோவ
மிது நேரமென் கலிகடீரவே

7 சடலத் துயரினரன் மனவேதனையுற்று
னதுபொஸ்தக மெய்மாமறையாக சுமத்த
சுவிசேட சுமுத்திரநெறிஞான சரித்திர
நலங்களை யதிசயங்களை யிரு
தயத்தே யெணாது

கவனத்துடனலோர் சொன நீதிகடப்பி
யலகைக் கடிமையா யொழியாவிரகத்து
மயன்மீறியு நச்சுமரமாகியு முட்ட
விடந்தரு விரியனின் பறழரு
வருப்பான பாவி

தவசொப்பரவு தாழ்மையும் வாய்மையுமற்று
மனமெத்தனவு சாது சினேகித சற்
குணமு நேசமுமற்று விசுவாசமு மற்று
நடந்தவ மதியடைந் தெரிநர
கதிற் போய் விழாம
லுனைநாடி நெஞ்சுருக ஞாயமே

8 தவிதுக் குமரனாகவுமே தினியுக்கு
ணரர்பக்கிஷமதா யழியாத பதத்தை
யிடவே மனதொத்தரிய பாடுகள்பட்டு
மடிந் துயிருடனெழுந் தருளியு
னதத் தேறியாதி

வலமைப்பரமனா ருடன்வானவர் துத்திய
மெனவர்ச்சனைகளே செயமேன்மையின் முக்கிய
சரியாசன தத்துவ வலபாரிசநெட்டி
லிருந்தினி வருகையின் கடையுக
நடுத் தீர்வையோது

சமையத்தெனை விடாது னின்வான கரத்தின்
வளமைப் பிரபல சீவனினோர் கிரீடத்தை
முடிமீதுதரித் தினிய வாழ்வினிலுய்த்து
நயம்பெற வருளியுங் கிருபை செ
யுனைப்பாடு மேழை
யுயிர்வாழ்கவும் பருடனூழியே



# 5

# கிறிஸ்தாயனம்

ஆசிரியர் : ஜான் பால்மர் (1812 - 1883)

அறிமுகம் : யோ. ஞான சந்திர ஜாண்சன்

தமிழ்நாட்டிலுள்ள கிறிஸ்தவக் கவிஞரால் எழுதப்பட்டு முதன்முதலாக வெளிவந்த காப்பியம் 'கிறிஸ்தாயனம்' ஆகும். இராமபிரானின் வரலாற்றை விவரிக்கும் காப்பியத்திற்கு இராமாயணம் எனப்பெயர் சூட்டியது போன்று இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றை விளக்குவதனால் இந்நூலிற்கு ஆசிரியர் கிறிஸ்தாயனம் எனப் பெயரிட்டுள்ளார். இவ்வாறு பெயர் சூட்டியதால் அக்காலத்தில் இந்நூல் பெரும் சர்ச்சைக்குள்ளாகியது என்பர். மேலும் இந்நூலின் பல படிகளைத் தீக்கிரையாக்கியதாகவும் கூறுவர். இதனால் இந்நூல் கிடைப்பது மிகவும் அரிதாகக் காணப்பட்டது. இருபது ஆண்டு தேடல்களுக்குப்பின் இந்நூல் கைகளுக்குக் கிடைத்தது தெய்வ அனுகூலமேயாகும்.

இத்தாலி நாட்டினரான வீரமாமுனிவரால் எழுதப்பட்ட முதல் கிறிஸ்தவக் காப்பியம் தேம்பாவணி 1851 ஆம் ஆண்டு வெளியானது. இலங்கையைச் சேர்ந்த கனகசபைப் புலவர் 1853 ஆம் ஆண்டு திருவாக்குப்புராணம் எனும் காப்பியத்தை வெளியிட்டார். தமிழ் நாட்டைச் சேர்ந்த ஜான் பால்மர் 1865 ஆம் ஆண்டு கிறிஸ்தவக் காப்பிய வரிசையில் மூன்றாவதாக இடம்பெறும் வகையில் கிறிஸ்தாயனத்தை எழுதி வெளியிட்டுள்ளார். இக்காப்பியம் கிறிஸ்தவ கலாவிருத்திச் சங்கத்தாருக்காக நாகர்கோவில் இலண்டன் மிஷன் அச்சகத்தில் அச்சடிக்கப்பட்டது.

தமிழர் ஒருவரால் எழுதப்பட்ட முதல் கிறிஸ்தவக் காப்பியம் கிறிஸ்தாயனம் என்பதால், அக்காலத்தில் இக்காப்பியத்திற்கு மிகுந்த வரவேற்பு காணப்பட்டது. மேலும், ஜான் பால்மர் ஏராளமான கீர்த்தனைகளையும், கிறிஸ்தவச் சிற்றிலக்கியங்களையும் படைத்திருந்ததன் மூலம் இந்நூல் மிகுந்த சிறப்புடையதாகத் திகழ்ந்தது.

## நூல் பகுப்பு

கிறிஸ்தாயனம் பாயிரம், தெய்வ வணக்கம், நூல் வரலாறு எனும் பகுதிகளுடன் தொடங்குகிறது. தெய்வ வணக்கம் எனும் பகுதியில் பிதா, சுதன், பரிசுத்த ஆவி எனும் திரியேகக் கடவுளைத் தனித்தனிப் பாடல்களின் மூலம் வணங்குகிறார். இக்காப்பியம் பாலகாண்டம், கிரியா காண்டம், அவஸ்தா காண்டம், ஆரோகண காண்டம் எனும் நான்கு காண்டங்களைக் கொண்டு 842 விருத்தப்பாக்களால் ஆனது. ஒவ்வொரு காண்டமும் பல்வேறு உட்தலைப்புகளைக் கொண்டது.

பாலகாண்டம் இயேசு கிறிஸ்துவின் பிறப்பு முதல் அவரது பன்னிரண்டு வயது வரையுள்ள செய்திகளைத் தருகின்றது. இரண்டாவதான கிரியா காண்டத்தில் இயேசு கிறிஸ்து தன் சீடர்களைத் தெரிந்து கொண்டது முதல் பத்து ராத்தல் திரவியம் பெற்ற ஊழியக்காரரைக் குறித்து சொன்ன உவமை வரையிலான செய்திகள் இடம் பெற்றுள்ளன. அவஸ்தா காண்டத்தில் மரியாள் இயேசு நாதருக்கு பரிமளத் தைலம் பூசுவதிலிருந்து அவர் சிலுவையில் அறையுண்டு மரித்து அடக்கம் பண்ணப்பட்ட செய்திகள் விவரிக்கப்பட்டுள்ளன. இறுதியான ஆரோகண காண்டத்தில் இயேசு பெருமான் உயிர்த்தெழுந்தது முதல் அவரது இரண்டாம் வருகை வரையுள்ள செய்திகள் இடம் பெற்றுள்ளன.

கம்பராமாயணத்தைப் பின்பற்றி இயேசு கிறிஸ்துவின் இளமைப் பருவத்தை விவரிக்கும் முதல் காண்டத்திற்குப் பாலகாண்டம் எனவும், இயேசு கிறிஸ்து செய்த அற்புதங்களை விளக்குவதால் அப்பகுதிக்கு கிரியா காண்டம் எனவும், இயேசு கிறிஸ்து பட்ட பாடுகளை விவரிப்பதால் அதற்கு அவஸ்தா காண்டம் (அவஸ்தை - துன்பம்) எனவும், இசைப்பாட்டின் ஏறுமுகக் குறிப்பினை நினைவில் நிறுத்தி அவர் வானுலகம் சென்ற செய்திகளை விவரிக்கும் பகுதிக்கு ஆரோகண காண்டம் எனவும் பெயர் சூட்டியுள்ளார். நூல் வரலாறு எனும் பகுதியில் இடம் பெற்றுள்ள இரண்டு பாடல்களிலுள்ள ஒரு பாடல் நான்கு காண்டங்களிலும் சொல்லப்பட்டுள்ள செய்திகளைச் சுவைபட எடுத்தியம்புகின்றது. அப்பாடல் பின்வருமாறு :

*"ஆண்டவனிங் கேமனுவாய் அவதரித்த வாறதுவும்*
*ஈண்டிரட்சிப் பின்கிரியை இயற்றிவந்த வாறதவும்*
*மாண்டுயிர்த்தெ முந்ததற்பின் வானடைந்த வாறுமவன்*
*மீண்டுவந்து நடுத்தீர்க்கும் மேரையையும் கூறலுற்றேன்"*

### காப்பிய இலக்கணத்தைப் பின்பற்றாமை

காப்பியத்திற்குரிய இலக்கணத்தை அடிப்படையாகக் கொள்ளாமல் இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றை விவிலியப் பின்னணியில் கவிநயம்படப் பாடியுள்ளார். கவிதையின் அழகுக்காகக் கவிஞர்கள் பயன்படுத்தும் உவமைகள், அணிகள், வருணனைகள் முதலியவற்றை ஆன்ம ஈடேற்றங்கருதி எழுதிய தம்நூலில் ஆசிரியர் எடுத்தாளவில்லை. இத்தகைய சுவைகளைப் பின்பற்றினால் நற்செய்திக் கருத்துகளையும், அற்புதங்கள், பாடு, மரணம், உயிர்ப்பு முதலிய கருத்துகளையும் அக்கருத்துகளால் வெளிப்படும் தெய்வீக உணர்வுகளையும் சிதைத்துவிடும் எனும் எண்ணமே அடிப்படைக் காரணமாக அமைந்திருக்கலாம். மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் எனும் நான்கு நற்செய்தி நூல்களிலுள்ள செய்திகளைக் கோவைப்படுத்தி திருமறை வாக்குகளின் அடிப்படையில் எளிமையான கவிதைகளாக்கி ஆசிரியர் நூலைப் படைத்துள்ளார்.

### கவிதையாக்கம்

விவிலியத்திலுள்ள நிகழ்வுகளைக் கவிதையாக்குவதில் வல்லவராக ஜான் பால்மர் விளங்கியுள்ளார். விவிலியத்திலுள்ள செய்தியை நேரடியாக, தெளிவாக, எளிமையாகச் சுருக்கமாகக் கூறியுள்ளார். பாயிரத்தில் இது குறித்த செய்தியை,

*"கற்றவரன்றியுங் கல்லாதவரு*
*முற்றெளிதாய்க்கண் டுணருதற்கிடனா*
*யதியரும்பதங்க ளகல மிக்காறும்*
*பொதுநிகழுரைகள் புலப்படவமைத்து"*

என நுட்பமாக வெளிப்படுத்தியுள்ளார். இவரது கவிதையாக்கத்தின் மூலம் இவருக்குக் கம்பராமாயணத்தில் இருந்த புலமையையும், பிற பக்தி இலக்கியங்களில் இருந்த பயிற்சியையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

பல்வேறு இலக்கியங்களை நன்முறையில் படித்து, அவற்றை உள்வாங்கி அவற்றின் அடிப்படையில் இயேசு கிறிஸ்துவின் வரலாற்றைப் பாடியுள்ளார். இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றை எளிமையாக, எவ்வித வர்ணமும் இன்றி கவிதை நடையில் கொடுப்பதே இவரது இலக்கியக் கொள்கையாகும். ஆசிரியர் தன் கருத்தை எந்த இடத்திலும் கூறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. கிறிஸ்தாயனத்தில் ஆசிரியரின் தடையற்ற கவிதை ஓட்டத்தைக் காணமுடிகிறது.

### யாப்பு

ஜான் பால்மர் செவ்வியல் நெறிப்பட்ட யாப்பு வடிவங்களைப் பயன்படுத்தியுள்ளார். யாப்பு வடிவங்களின் மூலம் உயர்ந்த வடிவத்தில் கதையைக் கூறுகிறார். காப்பியத்தில் எளிமையான கவிதை வடிவத்தைப் (சிந்து போன்ற வடிவம்) பயன்படுத்தவில்லை. அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம், எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம், எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலிநிலைத் துறை, விருத்தக் கலித்துறை, சந்தவிருத்தம், கலிசந்த விருத்தம், வெளிவிருத்தம் முதலிய இலக்கண வடிவங்களைப் பயன்படுத்தியுள்ளார். இதன் மூலம் இவரது இலக்கண அறிவினை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

ஜான் பால்மர் தமது காப்பியத்தின் அனைத்துப் பாடல்களிலும் எதுகை மோனையைப் பயன்படுத்தியிருப்பது அவருடைய கவித்திறனுக்குச் சான்றாக அமைகின்றது.இலக்கண அறிவும் பயிற்சியும் நிரம்பியவராகக் காணப்பட்டதால் இத்தகைய காப்பியத்தை அவரால் படைக்க முடிந்தது எனலாம். ஒரு பாடலின் இறுதி சொல்லோ, சீரோ (அந்தம்) அடுத்த பாடலின் தொடக்கத்தில் (ஆதி) வருவதை அந்தாதி என்பர். இக்காப்பியத்தின் பல இடங்களில் அந்தாதி முறையில் பாடல்கள் இயற்றியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

சில இடங்களில் வடமொழிச் சொற்களும், வட்டார வழக்குச் சொற்களும் கலந்துள்ளன. இயேசு எனும் பெயரை 'ஜேசு' எனக் குறிப்பிடுவது பிற கிறிஸ்தவ இலக்கிய படைப்பாளர்களிடமிருந்து வேறுபடும் முறையில் உள்ளது.

இத்தகைய சிறப்பு பெற்ற கிறிஸ்தவக் காப்பியத்தைப் படைத்துள்ள ஜான் பால்மர் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள மயிலாடி எனும் ஊரில் 1812 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 15 ஆம் நாள் பிறந்தார். இவர் அன்றைய தென்திருவிதாங்கூரின் முதல் கிறிஸ்தவரான வேத மாணிக்கம் தேசிகரின் உறவினராவார். தமிழிலக்கியத்தில் தேர்ச்சி பெறத் தமிழ்ப் பண்டிதர் திருவம்பலத் திண்ணமுத்தம் பிள்ளையிடம் ஆரம்பக்கல்வியும் தொடர்ந்து நாகர்கோவில் இறையியல் பள்ளியில் திருமறைக் கல்வியும் பயின்றார். பின்னர் உயர் கல்வியினைச் சென்னையிலும், யாழ்ப்பாணத்திலிருந்த வேதசாஸ்திரக் கல்லூரியிலும் சென்று படித்தார். உயர்கல்வியை முடித்தபின்பு மிஷனெரி அருள்திரு. மால்ட் அவர்களுக்கு எழுத்தராக நியமிக்கப்பட்டார். தொடர்ந்து நாகர்கோவிலில் புதிதாக நிறுவப்பட்ட அச்சுக் கூடத்தின்

*பணிகளைக் கவனிக்கும் பொறுப்பாளராகவும் நியமனம் செய்யப்பட்டார். அருள்திரு. மால்ட் இங்கிலாந்து சென்ற பின்பு மாவட்டப் பள்ளி ஆய்வாளராகவும் பின்னர் திருவனந்தபுரம் அரசு அச்சகத்தின் கண்காணிப்பாளராகவும் பணியாற்றினார்.*

*தம் பணியிலும், கீர்த்தனைகளை இயற்றுவதிலும், இராகங்களைக் கற்றுக் கொள்வதிலும் மிகுந்த ஆர்வம் கொண்ட ஜான் பால்மர் பக்திப் பரவசம் ஊட்டும் பாடல்களால் இறைவனை மகிமைப்படுத்தி வந்தார். திருவனந்தபுரத்திலுள்ள பத்மநாப சுவாமி கோவிலில் அதிகாலை நடக்கும் வழிபாட்டின்போது நாதசுர இசை ஒலிக்கும். அக்காலத்தில் சாதிக்கட்டுப்பாடும், மத வைராக்கியமும் உச்ச கட்டத்தில் இருந்தன. ஜான் பால்மர் அக்கால இந்துமத ஆலய ஒழுங்கு முறையின்படி இந்துக் கோவிலுக்குள் செல்ல அனுமதிக்கப்படாத குலத்தைச் சார்ந்தவர். கீர்த்தனைகளை இயற்ற இராகம் மிகவும் இன்றியமையாதது. இராகங்களைக் கற்றுக்கொள்ள அதிகாலை வேளையில் தன் தலையைத் துணியால் மறைத்துக் கொண்டு கோயிலினுட் சென்று பல புதிய இராகங்களைக் கற்று வந்து அதன் அடிப்படையில் இயேசு கிறிஸ்துவைப் பற்றிய கீர்த்தனைகளை இயற்றுவது இவரது வழக்கம். தம் உயிரையும் பொருட்படுத்தாது இறைமகன் இயேசு கிறிஸ்துவின் புகழ்பாட புதிய இராகங்களைக் கற்றுவந்த ஜான் பால்மரின் துணிச்சல் பாராட்டிற்குரியது.*

*ஜான் பால்மர் இருநூற்றுக்கும் மேற்பட்ட கீர்த்தனைகளை எழுதியுள்ளார். ஆனால் இன்று 54 கீர்த்தனைகள் மட்டுமே கிடைக்கின்றன. வேதநாயக சாஸ்திரியாருக்குப்பின் அதிக அளவில் ஜான் பால்மரின் கீர்த்தனைகள், சபைகளில் பயன்படுத்தப்படும் கீர்த்தனை நூலில் இடம் பெற்றுள்ளன.*

*ஜான் பால்மர் கிறிஸ்தாயனம் மட்டுமின்றி ஞானப்பதக் கீர்த்தனம், மேசியா விலாசம், சத்தியவேத சரித்திரக் கீர்த்தனை, பேரானந்தக் கும்மி, நல்லறிவின் சார்க்கவி எனும் நூல்களையும் படைத்துள்ளார். இயேசு கிறிஸ்துவுக்காக வாழ்ந்தும், அவர் பணி செய்தும், கிறிஸ்தவ இலக்கியங்களால் துதி செய்தும், கீர்த்தனைகளால் புகழ்பாடிக்கொண்டும் இருந்த ஜான் பால்மர் 1883 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இரண்டாம் நாள் தன்னுடைய 71 ஆவது வயதில் இறைவனடி சேர்ந்தார்.*

## 2. கிரியா காண்டம்

### கிறிஸ்து பசாசினாற் பரீட்சிக்கப்பட்டது

(கலிச்சந்தவிருத்தம்)

தேவ ஆவியால் நிறைந்து ஜேசுதான் யொர் தானைவிட்
டாவியால்வ னாந்தரத்த மைந்துநாட்க ணாற்பதாய்
மேவியே செபித்திருக்கும் வேளை யூண்அ கற்றியே
மாவிடாய தால்அயர்ந்து வன்பசிக்கு ளாயினார். 13

அத்தலத்தெ ழுந்துகூளி அங்கு ஜேசுவோடு நீ
கத்தனின்கு மாரனாகில கலலை யப்ப மாக்கெனத்
துத்து முண்டியாலனறேகன் சொல்லெதாலு மேநரன்
சித்தியாயப்பி ழைப்பனென்று செப்பும் வேதம் என்றனர் 14

பின்னர் அத்து ரோகிதான் பெயர்ந்தெரூசலைப்பதி
தன்னிலேஇ யேசுநாதர் தம்மை ஆலயத்தின்மேல்
உன்னதத்தளாவி நிற்கும் உப்பரிக்கை மீதமைத்
தின்னும்அங் கவர் முனின் றியம்புவான்இ ணக்கமாய் 15

ஏகன்மைந்த னேலுன்பாதம் இடறிடாது கல்லின்மேல்
ஊகமாகத்தேவதூதர் உன்றனைக்கை யேந்தியே
வாகுடன் செல் வார்களென்று மறையுரைப்ப தால் இதோ,
நீ குதித்தி டிங்குதாழ நிண்ணயத்தோ டென்றனன். 16

அங்கெதிர்த் தவன்றன்வாக் கடங்கவே திருச்சுதன்
பங்கமோடுன் நாதனைப்ப ரிட்சை செய்திடேலென
இங்கிதத் துடன்மறை இயம்பலாலு னக்கிது
சங்கையல்ல வென்றுதான் தடுத்தெதிர் உரைத்தனர். 17

தப்பெணத்தி னாற்பினுஞ்ச திக்க உன்னிஜேசுவை
அப்புறப்படுத்தி உச்ச மான குன்றின் மேல் அமைத்
திப்புவிக் ககத்து மேவி ராச்சியங்கள் யாவையும்
துப்பதாகச் சுட்டிஅங்கு சொல்லுவான் அவ் எத்தனே. 18

இத்தலத்திலுற்றயாவும் என்வசத்தி ருப்பதே
அத்தை என்றன் இஷ்டமாக ஆர்க்கும் ஈய வல்லன் யான்
ஒத்தெனைப்பணிந்து கொள், உனக்கிவை அனைத்தையும்
தத்தமாய் அளிப்பனென்று தாட்டிகத்தொ டேவினான். 19

நின்னொரேக னைக்கைகூப்பி நீ இறைஞ்சுவாயெனப்
பன்னும் வேதம் ஆதலால், பசாசே, நீ யகன்றுபோ
என்ன, அங்குஜேசுரைக் கிடைந்து பேயகன்றிட
துன்னிவந்து தேவதூதர் தொண்டவர்க் கியற்றினார் 20

## இயோவான் கிறிஸ்துவைக்குறித்து இட்ட சாட்சியும், கிறிஸ்து சில சீஷரைத் தெரிந்து கொண்டதும்

### (எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்)

அப்பொழு தாசா ரியர்இலே வியரென் றவர்களை யெருசலையூதர்
துப்பதாய் யோவான் ஆரென வறிந்து சொல்லுமென் றவனிடம் அனுப்ப
செப்புவனவன்றான் நான் கிறிஸ்தல்லன் திகழெலியாவும் நானல்லன்
தப்பலதீர்க்கதரிசியுமல்லன் றாமறிவீரெனப் பகர்ந்தான் 21

கேட்டவர் அவனை நோக்கி இங்ஙனமேல் கிளத்திடவெ மைவிடுத் தவர்க்கு
நாட்டும் உள்ளதைநீர் ஆரென வினவ நணுகியே தற்பரற்கென்று
காட்டினில் வழி நனறாய்ச் செயுமெனவே கருதியே கூப்பிடுபவன்றன்
நீட்டிய ஒலிநான் ஏசயாத் தீர்க்கன் நிகழ்த்தியபடியென உரைத்தான் 22

மற்றைநாள் யோவான் தன்னிடம் ஜேசு வருவதுகண்டி வர்தாமே
உற்றலோகத்தின் சருவ தீவினையும் உத்தரித்தகற்றிட வந்த
நற்றெய்வ ஆட்டுக்குட்டி தானிவரை நானுமோர்ந்திலன் இஸரேலர்
பற்றிடத் துலங்க நான் ஜலஸ்நானம் பண்ண இங்குற்றனன் என்றான். 23

அன்றியும் அவன் என்றனைவிடுத்தவர்நல் லாவியார் மீதுவந்திறங்கி
நின்றிடுவாரோ அங்கவர்தாமே நேர்பரிசுத்த ஆவியினால்
ஒன்றுமா ஸ்நானமீவரென்றதையான் ஊற்றமாய்க்கண்டறிந்திவரே
குன்றுதலில்லாத் திருச்சுதனென்றே கொடுக்கிறேன் சாட்சியென்றனனே. 24

பின்னொருநாள் தன் சீஷரிலிரண்டு பேரொடு நின்றிடயோவான்
முன்வழி ஜேசு நடப்பதுகண்டு முதல்வனாட்டினமறி இவரே
என்ன, அச்சீஷர் கேட்டவர்பின் சென் றிட அவர் தமையவர்நோக்கி
உன்னுவதேதிங்கென்ன தேடுகிறீர் உரைத்திடுமெனப் பகர்ந்தனரே. 25

உத்தரமாய அச்சீஷர் தாம் ரபி நீர் உறும் இடம் ஏதெனவினவ
எத்தலம் என்று வந்துநீர் பாரும் என்றிட அவர்கள் சென்றந்நாள்
அத்தலஞ்சேர்ந்தங் கவரிடந்தங்கி ஆற்றலாயிருந்தனர் பண்பாய்
ஒத்தவச்சீஷர் இருவரில் ஒருவன் உற்றபேர் அந்திரேயாவே 26

அந்திரேயாவென்றவனுடன் பிறந்தோ னானசீமோன்றனைநோக்கி
விந்தையாய் மேசியாவை யாங்கண்டோம் விரைந்து நீவாவென அழைத்து
வந்துஜேசுவின்முன் விடஅவர்கண்டு வாநீ யோனாமகன் சீமோன்
இந்தநாள் முதலுன் பெயர்கெபா என்றிங் கியம்பிடப் படுமென உரைத்தார் 27

மற்றைநாள் கலிலேயாவதற்கியேசு வழிசெலுகையில் பிலிப்போடு
நற்றகையாயென் பின்செலென்றழைக்க நணுகியே வந்தனன் அவர்பால்
உற்றவன்னோன்தான் பெத்துசாய்தாவாம் ஊரிலுள்ளோன் அவன் அங்கு
துற்றிநாத்தானுவேலுவைக் கண்டு சொல்லுவான் கிறிஸ்துவைக்குறித்தே. 28

மோசெயினோடு தீர்க்கரானோர்கள் முறை முறையாகவே குறித்து
மாசற இகத்தில் வருவதாய் மறையில் வரைந்திடப்பட்டவரான
மேசியாவினையாங் கண்டனம் அவர் தாம் விளம்பிட அறிகுறியாய் ஊர்
நாசரேத்தினினின் றெழுந்த யோசேப்பின் நற்சுதன் ஜேசு வென்றனனே 29

அவ்வுரைதனை நாத்தானுவேல் கேட்டங் கதிசயித்தவன்றனை நோக்கி
இவ்விதம் நசரேத்தூரினிலிருந்தும் எழும்புமோ நன்மையென்றுரைக்க
செவ்வதாய் வந்து பாரெனப்பிலிப்பு செப்பநாத்தானுவேல் தம்பால்
கவ்வையாய் வரக்கண்டியேசிவன்றானே கபடிலா இஸரவேல் என்றார் 30

அங்கவன் ஐயா, எனனை யெப்படி நீா அறிந்ததென்றிட அவருரைப்பார்
இஙகிதமாகப் பிலிப்புனை அழைக்க எழுமுனா அததியின் கீழ் நீ
தங்கியே யிருககும் வேளையில் உனனை தனிததுநான நோக்கினேன் எனன
எங்கள் ரபீ நீரே திருச்சுதன் நீ ரேயிஸரேல் அரசென்றான 31

துத்தியமாய் நாத்தானுவேல் உரைத்த சொல்லதைக் கேட்டுடன் ஜேசு
வித்தமாயவன்றன் மனதினில் உணர விளம்பிடுவார் அவன்றனக்கு
அத்தியினடியிலுனைக் கணுற்றேனென் றறைந்ததால் நீ விசுவசித்தாய்
சித்தியாய் இதிலும் பெரியவை காண்பாய் திடமென உரைத்தனர் மாதோ 32

பின்னுமியேசு அவனையே நோக்கிப் பேசுவாரிது முதல் நீங்கள்
உன்னதவானந் திறந்திருப்பதையும் உம்பர்கள் மனித குமாரன்
தன்னிடத்தெழுந் தங்கிறங்கிடுவதையுந் தான் பரத்தேறிடுவதையும்
நன்னயமாய்க் காண் பீர்களென்றுமக்கு நவில்கிறேன் இது நிசமென்றார் 33

## கிறிஸ்து ஜலத்தைத் திராட்சரசமாக்கினது

### (கலி விருத்தம்)

பினையுங்கலிலெய வென்றிடு பெருநாடுறு கானா
வெனுமூரதி லொருமங்கலம் எழவேயதி னுடையோர்
கனமாயுரை விடஜேசுவும் கசிவாய் அவருடனே
அனைமேரியுமவர் சீஷரும் அதிலேகினர் மாதோ. 34

அன்றங்குதிராட்சரச மறவே குறைவுறவிம்
மன்றற்கதிரசமின்றென மரியாய் முறையிடவே
என்றன் சமயம்வந்திட விலையே எனதனையே
முன்றீவிரமதுவேனென மொழிவார்சுதனெதிராய் 35

சுதனார்மொழி கேட்டன்னையர் தொண்டர்க்குரமாக
எதையேவிடுவாரோ அதை யே செய்திடுமெனவே
அதிநேரமிலாதங்கவர் அறுசாடிகள் நிறைய
உதகந்தனை விடுமென்றன ருறுதொண்டர்களிடையே 36

தொழிலோர் நிறை ஜலமானது சுசியான திராட்சப்
பழவின் ரசமுடனாகலே பணியாளர்களொடு நீர்
பொழியீர் விருந்ததி காரிகைப் புகவேயிதையெனவே
மொழிவார் சுதனதுபோலவர் மொண்டே கொடுசென்றார். 37

ஏற்றவ்விருந்ததிபன் ரசமினிதாய் ருசிகொண்டே
மாற்றந்தகை யோராதவன் மணவாளனொடெவனும்
ஈற்றில் ருசிதாழ்வானதை இடுவா னிதுவரை நீர்
ஊற்றது நல்ரசமானதை ஒளித்தீரென உரைத்தான் 38

அப்போதது ஜேசினபல அதியற்புத மெனவே
துப்பார்பெயர் தான்மேவிய துதிபாததிர முளராய்
தபபாதவரனை சீடாகடமமோடதினின்றே
கப்பாநகு மூர்சென்றதிற் கழித்தார் சிலநாளே 39

## இயோவான் கிறிஸ்துவைக் குறித்து பின்னும் இட்ட சாட்சியும் அவன் சிறையிருப்பும்

### (எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

ஜெருசலை நகர்சுற் றிடங்களிற் சென்று ஜேசு போதித்ததுமன்றி
உரிய தஞ் சீஷர் மூலம் வந்தோர்க் கங் குத்தம ஸ்நானமே கொடுத்த
தருணமியோவான் தான் சலி மருகே ஜலமிகுமாயினோ னூரில்
வருநரர்களுக்கு ஞானஸ்நானத்தை வாகுடன் கொடுத்து வந்தனனே. 61

அப்பொழு தியோவான் சீஷரிற் சிலரும் அவரொடு யூதரானவரும்
தப்பதாய்ச் சுத்திகரிப்பதைக் குறித்துத் தமில் தருக்கித் தவனிடம் போய்
துப்பதாய் ரபிநீர் ஒருவரைச் சுட்டித் தொன்று நற் சாட்சியிட்டீரே
இப்பொழுதவரும் ஞானஸ்நானத்தை எவர்க்குமீ கின்றனர் என்றார். 62

அக்கணத்தார்முன் அறைகுவன் யோவான் அவர்க்கு விண்ணின்றதிகாரம்
இக்கருமத்தை இயற்றவுற்றதினால் இங்ஙனம் புரிகிறார் அவரே
முக்கிய கிறிஸ்து, நானவர் தூதன் மொழிந்தஎன் உரைக்குநீர் சாட்சி
எக்களிப்பாயிங் கவர்பெருகிடவும் எளியனஃகிடவும் வேண்டியதே 63

உன்னதத்திருந்து தோன்றிய அவரே உரைத்திடஎவரிலும் பெரியர்
நன்னயமாகக் கண்டு கேட்டவற்றை நாட்டுகின்றாருறு சான்றாய்
அன்னகுமாரன் மேற் பிதா அதிக அன்புகூர்ந்தனைத்தையும் அவர்க்கு
வின்னமில்லாது கையளித் திருந்தும் மேதினியோருணர்ந்திலரே 64

அத்திருச்சுதனில் விசுவசித்திருப்போன் அடைகுவன் நித்திய சீவன்
கத்தனாம் அவரில் விசுவசி யாதோன் காண்பதே இல்லையச் சீவன்
நித்தியன் கோபாக்கினையவன்மேலே நிலைபெறவுறுமென உரைத்தே
இத்தகையாக கிறிஸ்துவின்பேரில் எவர்முனுஞ் சாட்சியிட்டனனே. 65

அத்தருணத்தி லேயரசேரோ தவன்சகோ தரன்மனையாளை
வைத்ததுமன்றிப் பலஅவமார்க்க வழியொழுகினதினால் யோவான்
மெத்தவுங் கடிந்து கொண்டதினிமித்தம் விசனமுற்றவ் வெரோ தேயாள்
பத்தனியோவான் றனைவதை செய்யப் பார்த்தடங் கொண்டிருந்தனளே. 66

அங்கவள் யோவான் மேற்பல குறளை அறைந்தெரோது வைச்சினமூட்ட
இங்கிதமாக அவன்யொவான் மகத்தென் றேர்க்கனவே யறிந் தவன்சொல்
சங்கையொடேற்றுப் பலவிஷயத்தில் தணிந்துதான் நடந்தும் யோவானைப்
பங்கமாய்ப் பிடித்துச் சிறையிலிட்டனனே பாதகியவள் மயலாலே. 67

## கிறிஸ்து சமாரிய ஸ்திரியுடன் செய்த சம்பாஷணை

(கலிநிலைத்துறை)

போதகயோவான் காவல் புக்கியபோதியேசு
நாதர் யூதேயாவென்னும் நாட்டினின் றெழுந்து மீண்டும்
காதலாய்ச் சீஷரோடு கலிலெய நாட்டிற்கேக
ஓதிய சமரியாவி னூடுற நடந்துசென்றார் 68

அச்சமரீயா நாட்டை அடுத்தசீகாரூர் கிட்டி
உச்சியில் தளர்ந்தியேசு ஓர் கிணற்றருகில் தங்க
சிட்சன் மாருணவு கொள்ளச் சென்றனர் ஊரகத்தே
தற்சமையத்தோர் மங்கை தான்ஜலம் மொள்ளவந்தாள். 69

அன்னவளிடந் தாகத்துக் களித்திடாயென்றுஜேசு
சொன்னதற்கவளையா, நீர் சுத்த யூதன்றானன்றோ
பின்னுதகந்தாவென்று பேதமாய்ச் சமரியாளாம்
என்னிடத் தோர்ந்திடாமல் எப்படி கேட்டீர் என்றாள். 70

கேளுனக்கிறைவன் ஈயும் கிருபையை யுந்தாகித்திந்
நாளுன திடத்தி லே வி னாவிநிற்கின்ற இந்த
ஆளையும் அறிந்தாயானால் அவரிடம் நீயே வந்து
நீளுமா ஜீவநீரை நேர்ந்து வேண்டுவையென்றாரே. 71

அவரது கருத்தையோரா தவளுரைப்பாளையாவே,
தவனமாற்றிட நீர் மொள்ளத் தம்மிடத்திலையே பாண்டம்,
நுவலவிக்கிணறும் ஆழம், நூதனம் பின்னுமக்கு
இவறலார் ஜீவநீரெவ்விடத்திருந் துற்றதிங்கே. 72

இக்கிணறது யாக்கோபாம் எந்தையம் அவர்சிறாரும்
மிக்கவும் அவர்க்குண்டான மிருகஜீவன்கள் யாவும்
புக்கி நீருண்டதத்தைப் புரந்தனர் அவரெங்கட்கு
தக்கவரவரைப் பார்க்கத் தாம் பெரியவரோ என்றாள் 73

இச்சலம் குடிப்போன் மீண்டும் எய்துவன் தவனம், நான் ஈ
அச்சலம் குடிப்போன் தாக மடைந்திடான் என்றும் அந்நீர்
நிச்சயமாக வன்னோன் நெஞ்சினில் ஊறும் ஊற்றாய்
எச்சமற்றிருக்கும் ஜீவன் எய்திடும் வரையும் என்றார். 74

அன்னசொற்கருத்துமோரா தவள் குருவேநான் தாகம்
துன்னிடாமலும் நீர் மொள்ளத் தோற்றிடாமலுமந் நீரை
நன்னயமா யெனக்கு நல்கிடுமென்ன, ஜேசு
உன்னுரியோனை நீ போய் உடனழைத்தேவா வென்றார். 75

அங்கவள் அதற்கெனக்கோர் ஆடவன் இல்லை என்ன,
இங்கு நீ சொன்னதுண்மை, இதுவரை உனக்கிருந்தோர்
ஐங்கணவன்மார், இப்போ தகத்தினில் உன்றனோடு
தங்கிய மாந்தனோ வுன் தலைவனே யல்லன் என்றார். 76

உரையதால் அவள்வியந்தங் குரைப்பளையா, நீர் தீர்க்க
தரிசியென் றோர்கின் றேன்யான், சத்தியம் சொல்லும், யாமிக்
கெரிசிமேருவிலிறைஞ்சு கின்றனம், நீரிறைஞ்ச
எருசலைப் பதிதான் ஏற்ற இடமெனல் எதினால் என்றாள். 77

மறுமொழியாகஜேசிம் மலையிலென்றாலும் கீர்த்தி
உறுமெருசலையிலேனும் ஓதிடாக்காலமேவும்
வெறிதினீர் இறைஞ்சுகின்றீர் விளங்கிடாப் பொருளை, நாங்கள்
அறிவதைத்தொழுகின்றோம் நீ அண்டி யென்றனையே நம்பு 78

யூதரினின் றேரட்சை உலகதற்குண்டா மென்று
வேதமுன் உரைத்ததுண்டே, வேதனார் ஆவியாமே,
ஆதலால் ஆவியாலும் அவரை யுத்தமத்தினாலும்
போதமாய்ப் பணியவேண்டும் போற்றுவோர் யாருமென்றார். 79

பின்னவள் அவரை நோக்கிப் பேசுவாள் மேசியாதான்
இந்நிலத்தெவ்வாறேனும் எழுவரென்றறிவேன் நானே
அன்னவர் வரில்யாம் யாவும் அறிந்திடச் செய்வார் என்ன,
உன்னுடன் பேசும்யானே உவந்தறியவரென்றாரே. 80

சீடரந்நேரம் வந்து ஜேசுவச்சமரியாளி
னோடுதாராளமாக உரைபகர்ந்திடுதல்கண்டு
நீடியவியப்புற்றாலும் நிருமலன் முன் ஓர்வாக்கும்
ஆடிடாதங்ஙன் மேவி அமர்ந்திருந்தனர் ஓர் பாலே. 81

அந்தமாதுடன் குடத்தை அங்ஙனம் வைத்துவிட்டு
சிந்தையோ டூருட்சென்றென் செய்கையாவையுமோர் மாந்தன்
விந்தையாயுரைத்தான் அன்னோன் மேசியாதானோ வென்று
வந்துநீர்பாருமென்றூர் மனிதரை அழைத்தாள் அன்றே. 82

மெத்தவும் ஆவலோடு விளம்பின மாதின் வாக்குக்
கொத்ததாய் எழுந்தார் அந்த ஊரவர் இவரைக்காண
அத்தருணத்திற் சீஷர் அய்யரே, புசியும் என்ன,
உத்தரமாய் நீர் ஓரா உணவெனக் குண்டென்றாரே 83

அங்கதைச் சீஷர் கேட்க அவர்க்கெவனேனும் ஊணை
இங்குறகொடுவந்தானோ வென்று தம் முள்ளேபேச
உங்களில் ஐயமேதென் னுடையதாதையின் மனம்போல்
சங்கையாய்ச் செய்துதீர்த்தல் தானெனதுணவென்றாரே 84

இவ்விதம் அவர்பினுந்தாம் இவர்க்குபதேசிக்கும்போ
தவ்விடம் சீகாரூரார் அவர் முனருற்றம்மாதின்
ஒவ்வுரையாலவர்தான் உயர்கிறிஸ்தெனவே நம்பி
செவ்வுடன் சிலநாள் தம்மூர் சென்றுற வேண்டி நின்றார். 85

நன்றெனவெழுந்துஜேசு நாதரன் பாயவ்வூரில்
சென்றதிலோரிரண்டு திவசமாய்த் தரித்திருந்து
வென்றியாயனைவரோடும் விண்ணிராச்சியத்தைப் பற்றி
ஒன்றிநற்சுவிசேடத்தை யுற்றுபதேசித்தாரே 86

பாசமாயவர்பாலுற்ற பலரும் அம் மாதை நோக்கி
மாசிலாதுனது வாக்கால் மட்டுமன்றவரெம் மோடு
பேசின உபதேசத்தால் பிசகற அவரை யாங்கள்
மேசியாவென வறிந்து விசுவசித்தன மென்றாரே. 87

## ஜேசு நாசரேத்தூரில் சென்று பிரசங்கித்தல்

### (சந்தவிருத்தம்)

கடந்துஜேசவ் வூரினின்று கலிலெயாவை நோக்கியே
நடந்துதாம்வ ளர்ந்த வூரில் நணுகிஆல யத்திலே
தொடர்ந்திறைஞ்ச ஆலயத்தொ ழும்பரோர்தினத்தவர்
இடந்தெய் வாக மங் கொடுத்தெ டுத்துரைக்க ஏவினார். 88

அங்குஜேசெழுந்துவேத ஆகமந்தி றந்ததில்
துங்கஆவி என்னிலுண்டு சுகிர்த மாவி சேடமே
இங்கிதத்தொ டேவிளக்கி ஏழைமாந்தர்க் கேபிர
சங்கமங்கியற்றவென்னைத் தாபனஞ்செய் தார்பரன். 89

அன்றியுந்த கர்ந்த பேரை ஆற்றியங்க ருஞ்சிறை
ஒன்றினோர்க்கு மீட்பையுங்கண் ணொளியிலார்க்கு நோக்கையும்
நின்றுகூறவென்றனைநி னைந்திறைவி டுத்தனர்
என்ற ஏசயாவின் வாக்கெடுத்துரை விளக்கினார். 90

அந்த ஆலயத்திருந்த அனைவருந்தற் சமையமே
விந்தையாக ஜேசின்மேல்வி ழித்து நோக்க வே யவர்
முந்தி யேசயா விதோ மொழிந்த தென்றனைக் குறித்
திந்தவாக்கி தத்தொடின்று தான் லபித்த தென்றனர் 91

அச்சொல் கேட்டிருந்த யாரும் அதிசயித்திதோ இவன்
தச்சனாகுகின்ற சூசை தனுசனல்லவோ பினை
இச்சமர்த் தெவ்வாறு வந்த திந்தமாந்த னுக்கென
எச்சமாயுரைத்ததற்கி யேசுதானி யம்புவார். 92

பண்டிதா, உன் றனைமுனேநீ பரிகரித்தி டாயெனும்
தொண்டிசைப்புங் கப்பர்நாமில் தோற்றுவித்த வாறு நீ
அண்டியேஉன் ஊரகத்தில் அற்புதங்கள் செய்வதைக்
கண்டுதான்நம் பிடுவமென்றென் கண்ணுரைக்க வுஞ்செய்வீர் 93

நம்பிடாதோர் உம்முனே நயங்கள் செய்வ தெங்ஙனம்
தம்பிறந்த கத்து தீர்க்க தரிசிகட்குறுங்கனம்
கெம்பிடாத துள்ளதே கொணிததிடர்திகழ்ந்திடும்
உம்பயிற்சிகொண்டுதா னுணர்ந்து கொள்ளலாகுமே. 94

பண்டிலாண்டு மூன்றரை பவித்த பஞ்சமீது கைம்
பெண்டிரீஸரேலில் மிக்க பேரிருந்தும் ஏலியா
தண்டனிட்டெ ழுந்துதான் ச ரெப்பதாவில் ஓர்கைமை
அண்டைசெல்ல ஏகன் அங்கனுப்ப ஏகினானரோ. 95

சிட்டன் ஏலி சாவின்நாளில் செப்ப இஸர வேலருள்
குட்டரோகி கள்பலர் கு ழாங்களாயிருந்து மங்
கெட்டியே கருத்ததா யெழுந்த சீரியானெனப்
பட்டநாக மானே நல்ல பரிகரிப்படைந்தனன் 96

இந்தமேரையாக நீரும் என்னை ஏற்றிடாவிடில்
நந்துவீ ருமக்கியாதும் நன்மை தோன்றிடாததைச்
சிந்தியீரெனக் கிறிஸ்து செப்பு வார்த்தை கேட்கவே
அந்தவாலயத்துளோர் அதிர்ந்து வேகமாயினர் 97

சினந்து ஜேசுவையவர் செ பாலயத்தினின்றுதான்
மனந்துணிந்து தள்ளியே வ லித்திழுத்த தன்றியத்
தினந்த ழா நிமிர்ந்த நாகச் சிகரமேற்றி வீழ்த்திட
நினைந்தவர் நடத்தியேக நிமலனங்க கன்றனர். 98

அங்கு ஜேசகன்று கப்பர் நாகுமூரிலே பயி
ரங்கமாயெ ழுந்து வான ராச்சியத்தின் ஆளுகை
இங்கடுத்த தாதலா லிதங்கொள் வீரெனப் பிர
சங்கமே செய்தாற்றலோடு சஞ்சரித்து வந்தனர். 99

## 3. அவஸ்தா காண்டம்

### குருவாரம்

### ஜேசு சீஷரோடு பஸ்காப் போசனம் புசித்தல்

ஜேசு தம் சீஷரோடு சேர்ந்து பஸ்காக் கொண்டாட
ஆசையாய்ப் புளிப்பில் அப்ப மாதிஎத் தனிப்ப தற்காய்
சீஷரில் இருவரோடு செப்பிட, அவர்கள் பஸ்காப்
போசன மதைஆ யத்தம் புரிதல்எவ் விடத்தில் என்றார். 72

திடமறு மொழியாய் ஜேசு செப்புவார் அவரோடேநீர்
தடையிலாதூருள் செல்லும் தருணமங் கொருவன் தண்ணீர்க்
குடமதை உங்கள் நேராய்க் கொடுவருவான் அம் மாந்த
னுடன்எழுந் தவன் செல்வீட்டி னுட்பிர வேசிப்பீரே. 73

அவ்விலத்தெசமானைக் கண் டாண்டவர் சீஷரோடு
செவ்வுடன் பஸ்கா ஊணைச் சேர்ந்தருந்திடும் பொருட்டாய்
எவ்விடம் வசதியுள்ள தென்றுமைக் கேட்க எம்மை
இவ்விடத்தனுப்புவித்தார் என்றவனோடு சொல்லும். 74

அங்கவன் கம்பளங்க ளாதிகள் விரித்துச் சால
துங்கமாயுற மேல்வீட்டில் துலங்குமா கூடந்தன்னை
உங்களுக்குடன் காண்பிப்பான், உற்றதில் நமக்காய் நீங்கள்
இங்கிதத்துடன் ஆயத்தம் இயற்றிடுமென விடுத்தார் 75

சென்றவர் நகரில் சேர ஜேசுவின் உரைபோல் அங்கே
ஒன்றியே கண்டு பஸ்கா உணவதை எத்தனித்தார்,
அன்று சாயந்தரத்தில் ஆண்டவர் எழுந்து சென்று
நன்றதாய்ச் சீஷரோடு நயந்து பந்தியிலிருந்தார். 76

பன்னிருவரை அந்நேரம் பார்த்தவர் இந்த ஊணை
நன்னயமாய் உம்மோடு நான் புசித்திட ஆசித்தேன்,
பொன்னுலகத்தளாவிப் போயுறு நாள் மட்டாக
இன்னிலத்தினியான் உம்மோ டிவ்வுண வருந்தேன் என்றார் 77

இரவுணவுண்ட பின்தாம் எழுந்து மேலங்கி நீக்கி
ஒருதுணி இடையில் கட்டி ஓர் கலமதில் நீர்வார்த்தங்
கருகினில் இருந்த சீஷர் அடிகளைக் கழுவுதற்கும்
மருவியே துடைப்பதற்கும் வரிசையாய்த் தொடங்கினாரே. 78

பேதுருவிடம் முன்சேரப் பிணங்கி ஆண்டவரே, நீர்தாம்
காதலுற்றென் பாதத்தைக் கழுவிடலாகுமோ என்
றோதிட, அவர் நான் இங்கே உங்கள் முன்செய்வதைத்தான்
ஏது நீ இப்போ தோராய், இனி அறிவாய் என்றாரே 79

பின்னுமங்கவரை நோக்கி பேதுரு நீர் ஓர்காலும்
இன்னிகர் எனக்குச் செய்ய வே படாதென்று சாற்ற
நன்னயமாக உன்னை நான் கழுவாதிருக்கில்
என்னிடத் துனக்குப் பங்கே இருப்பதின்றென உரைத்தார் 80

அவ்வுரை கேட்டவன் தான் ஆண்டவா, அந்நேராகில்
இவ்விடத்தென் கால்மட்டும் இலை, கரம் சிரமும் கூடச்
செவ்வதாய்க் கழுவவேண்டும், தேவரீர் என்ன, ஜேசு
திவ்வியமான வாக்குச் செப்பிட உற்றார் பின்னும் 81

முழுகினோன் தாளைமட்டும் மூண்டினும் கழுவவேண்டும்
மொழிய, மற் றுள்ள அங்க முழுவதும் சுத்தியே; இப்
பொழுதொரு புருடனன்றிப் புனிதர் நீர்யாரும் என்றார்
குழைவதாய்த் தம்மைக் காட்டிக் கொடுப்பவன்றனை அறிந்தே 82

அங்கவர் தமது சீஷர் அடிகளைக் கழுவிப் பின்னர்
இங்கிதமாய் மேலங்கி இட்டிருந்தவரை நோக்கி
எங்குரு வென்றும் ஆண்டை என்றும் என்றனைத்தான் இங்கே
சங்கையாய் அழைக்கின்றீர் நீர் சாற்றுதல் சரிதான் கேண்மின் 83

குருவுமாண்டையுமாம் நானே குனிந்தும தடிகளைத் தான்
மருவியே கழுவினேன் அவ் வாறு நீர் மனந்தணிந்தங்
கொருவரின் கால்களை மற் றோர் கழுவிடுக, நானே
புரிவதுபோலே நீரும் புரிந்திட வகைகாண்பித்தேன். 84

ஆண்டகை தன்னைப்பார்க்க அடிமையும், விடுப்போனைக்கால்
தாண்டியேகின்ற அப்போஸ் தலனுமேற்பட்டோன் அல்லன்
ஈண்டறிந்திருப்பவற்றை இயற்று வீராகில் என்றும்
மீண்டுநீர் செல்வராக, விளங்குதல் திடம் என்றாரே. 85

தங்கியே அவர்கள் பின்னும் சாப்பிடும்பொழுது ஜேசு
உங்களில் ஒருவன்தானே உற்றெனைக் காட்டி ஈவான்
சங்கையன்றென உரைக்கச் சஞ்சலமுற்றெல் லாரும்
அங்கனோன் நானோ என்றே அவரிடம் வினவலுற்றார். 86

உத்தரமாக ஜேசென் னோடு தாலத்தில் கையை
வைத்திடுபவனே அந்நேர் வஞ்சகம் செய்வான் மாந்தன்
புத்திரன்றனைக் குறித்துப் பொறித்ததுபோல் செல்கின்றான்
அத்துரோ கிக்குவாதை அணுகி எய்திடும்மெய் என்றார் 87

என்ற சொல் கேட்டு யூதாஸ் என்னு மிஸ்காரியோத்தங்
கொன்றியே அவரை நோக்கி ஓ! ரபீ, அவ்விதம் செய்
கின்றவன் நானோ என்று கேட்க அங்கவனைப் பார்த்தே
இன்று நீ எனக்கு முன்நின் றிசைத்தவாறிருக்கும் என்றார் 88

## ஆண்டவர் பரிசுத்த இராப்போசனத்தை ஏற்படுத்தினது

அப்பொழுதே அப்பத்தை அவர் கரத்தெடுத்து வாழ்த்தி,
செப்பமாய்ப் பிட்டதைத் தம் சீஷருக்கீந் திவ்வப்பம்
ஒப்புவித் துங்களுக்காய் உலையுமென் தேகமாகும்,
தப்பிலா தெனை நினைக்கத் தானிதை அருந்தும் என்றார் 89

பாத்திரம் அதனைத்தான்பிற் பாடவர் எடுத்துக் கொண்டு
தோத்திரித்திது மிக் கோர்க்குத் தோஷமன் னிப்புண்டாகக்
கோத்திரையதில்நான் சிந்தும் குருதியாம் புதுவேற்பாட்டின்
சாத்திரப்படி நீர் ஓர்ந்து தான் இதைப் பருகும் என்றார். 90

ஐயனியேசு இந்த வாறிராப்போசனத்தைத்
துய்யதாய் ஏற்படுத்தத் துணுக்கையும் கரத்தில் கொண்டே
மெய்யனுக்கொப்பாய்ப் பந்தி மேவும் யூதாசைநோக்கி
செய்ய நீ நினைந்ததைத்தான் சீக்கிரம் செய் என்றாரே 91

அவ்விரவதிலே யூதாஸ் அகன்றனன், பின்பு ஜேசு
எவ்விதத்திலும் நான் மேன்மை எய்துவேன் மக்காள் கேளும்,
இவ்விடம் சிலநாள் மட்டும் இருப்பன் நான் உங்களோடு
கவ்வையாய் நீவிர் என்னைக் கருதியே தேடுவீரே. 92

தேடியும் என்னைக் காணீர், சீக்கிரம் கடந்துபோவேன்,
வாடிடாதிரும், என்பின் நீர் வரவியலாதிப்போது
நாடி நான் உங்கள் மீது நண்பதாயிருந்தாற்போல் நீர்
கூடியும் முள்ளே அன்பு கூர்ந்திரும் எனமொழிந்தார். 93

எங்கு நீர் செல்லுகின்றீர் என்று பேதுருதான் கேட்க
அங்கவர் நான் செல்பாக மதற்கு நீ வாராய் என்ன,
சங்கையேன் ஐயரே, உம் தாளடி தொடர்ந்து செல்வேன்
இங்குமக்காய் என் ஆவி ஈயவும் செய்வேன் என்றான். 94

அன்னசொல் கேட்டு, ஜேசங் கவனுடன் நீ எனக்காய்
உன்னுயிர் தன்னை யுந்தான் உவந்தளித்திடுவாயோ கேள்
வினைமுற்றே சேவல்கூ விடுமுனர் மூன்று வேளை
என்னை நீ மறுதலிப்பாய் இது நிசந்தான் என்றாரே. 95

## ஜேசுவின் பிரார்த்தனை

பந்தியிலிருந்த சீஷர் பால் இயேசுரிமையாக
முந்திய உரைகள் யாவும் மொழிந்தபின் தமது கண்கள்
அந்தரத்தின் நேராக அருமைத் தாதாவை நோக்கி
விந்தையாய் உயர்த்திச்சால வேண்டுதல் புரியலுற்றார். 96

(கலிவிருத்தம்)

என பிதாவே நான் இகத்து நரர்க்காக இதோ,
துன்பதாய்ப் பாடுபட்டுத் துஞ்சு நாள் கிட்டினதால்
வன்பாரும் உம்முடைய மாட்சிமையை இப்புவியில
இன்போடு நான் விளக்க என்னைக் கனப்படுத்தும். 97

ஒன்றாம் மெய்த்தேவுமையும் உந்தானாபதி எனையும்
நின்றாய்ந் தறிந்து கொளல் நித்திய சீவன் தானே,
குன்றாதுன் மாட்சிமையைக் கோத்திரையிலே விளக்கி,
நன்றாய் நான் செய்ய நீர் நல்குபணியை முடித்தேன். 98

அப்பனே! நேமி அமையுமுன் உம் பாலெனக்குச்
செப்பமாயுற்றவுந்தம் தெய்வீக மாட்சிமையால்
இப்போதும் மாண்படுத்தும் என்னை, நீர் என்றனக்கிங்
கொப்புவித்தீரே பூ வுலகரினின் றேசிலரை. 99

அன்னவர் உம்சொந்தம், அவர்க்குமது நாமமதை
நன்னயமாய்க்காட்டி நீர் நல்குந்திருவசனம்
தன்னை அவர்க்கே அளித்தேன், சார்ந்தவர் கைக்கொண்டுபினும்
என்னை இங்கு நீர் விடுத்தீர் என்று விசுவாசமுற்றார் 100

மேதினியோர்க்காயல், நீர் மேவி எனக்களித்தோர்
ஓதில் அனைவோரும் உமக்குரிய ரானவரே,
ஆதலினால் நானிங்கவர்க்காக வேண்டுகின்றேன்,
ஏதெனினும் நம்மிலுற்றதெல்லாம் பொது நமக்கே. 101

என்னமைதி இங்கிவருள் இலங்கி இருப்பதுண்டே
இந்நிலத்திரேன் நான், இருப்பார் இவர் உலகில்,
பொன்னுலகுள்ளாவேன், புனித பிதாவே! இவரை
நன்னயமாய் உம்முடைய நாமமதில் காத்தருளும். 102

பேதமற்றிந்நாள்வரை உம் பேரால் இவர்களை நான்
தீதறக்காத்தேன், இவரில் சிதைவின்மகன் அல்லாது
வேதம் நிறைவேறுதற்கு வேறெவனும் நந்தவில்லை;
ஓதுவித்தேன் நானிவருக் கும்திருவாக் கானதையே 103

நீரிவரைப் பூதலத்தி னின்றெடுக்க வன்றிவரை
சாரிடறினின்றுதான் தற்காக்கவேண்டு கின்றேன்,
பாரகத்தான் நானுமல்ல, பன்னில் இவர் தாமுமல்ல,
சீரிதனைக் கண்டுலகர் தீரவெறுக்கின்றனரே. 104

சத்தியம் உம்வாக்கே, அச் சத்தியத்தினால் இவரைச்
சுத்திகரித்தே யருளும், தொல்லுலகில் என்றனை நீர்
வித்தகமாய்த்தான் அனுப்பி விட்ட முறைமையதாய்
இத்தரையில் நானும் இவரை அனுப்புகின்றேன். 105

பேதமற்றிம் மாக்கள் பிரதிஷ்டை கொள்வதற்காய்
ஏதமற்றியான் எனையே ஏற்ற பிரதிஷ்டை செய்தேன்;
ஓதுமிவர் சொல்லுரையால் உற்றெனில் பற்றானோரும்
தீதறவே ஒன்றாகச் சேர்ந்திருக்க வேண்டுகின்றேன். 106

அத்தன் நீர் என்னை அனுப்பினதைத்தான் உலகோர்
ஒத்தோருதற்கு நாம் ஒன்றாயிருப்பது போல
இத்தாலமீதில் இவர்கள் ஒருமைப் பாட்டில்
மெத்தச் சிறந்திருக்க வேண்டுகின்றேன் ஐயாவே! 107

தொன்றுபூ லோகமது தோன்றுதற்கு முன்தானே
ஒன்றி என் பால்நேசம் உற்றிருந்த தாதாவே
என்றன் மாண்பை நீர் எனக்கீந்தோர் காணுதற்கு
வென்றியாய் என்னோடு வீற்றிருக்க வைத்திடுமே. 108

நிதமுள தாதாவே! நீணிலத்தோர் உம்மகிமை
யாதுமறியார் களுமையான் அறிவேன், இங்கிவர்க்கு
போதமுற உந்தம் புகழ்நாமம் ஓதுவித்தேன்
மேதினியில் இன்னும் விளக்கிடுவேன் என்றனரே 109

## ஆண்டவர் கெதுசேமனேத் தோட்டத்தில் அடைந்த ஆத்துமப்பாடு

### (அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)

முந்திய விண்ணப்பத்தை முடித்தபின் அவர் எழுந்து
சிந்தையாய்ச் சீஷரோடு ஜெருசலை நகரை விட்டாங்
குந்தியாம் கீதரோனை ஊடறுத் தொலிவ மேருக்
கந்தமாய் ஏகச் சீஷர் அகத்துரை பகரலுற்றார் 110

அங்கிடையனை யடிப்பேன் அப்பொழுதவன் ஆடெல்லாம்
பங்கமாய்ச் சிதறடிக்கப் படுமென இருப்பதால், இன்
றிங்கிரவதில் பகைஞர் எனைத்துயர்ப்படுத்தும் போது
சங்கையுற்றே நீர் யாரும் தடம்புரண்டோடிப் போவீர் 111

பினும்மடிந் துயிர்த்தெழுந்த பின் கலிலேயில் நான்சென்
றினிதுடன் காண்பேன் உம்மை என்றிடப் பேதுர் அங்கே
அனைவரும் உம்மைப்பற்றி அச்ச முற்றேகினாலும்
தினையளவேனும் அங்ஙன் செய்திடேன் நான் என்றானே. 112

உறவிலான் போல்இவ் அல்லில் ஓரிருபொழுது சேவல்
குறியதாய்க் கூவுமுன் நீ குணங்கி முக்காலும் என்னை
அறிகிலேன் என்பாய் என்ன, அவன் என வரினும் சற்றும்
மறுதலியேன் என்றான், அவ் வண்ணம் மற்றோரும் விண்டார். 113

சேர்ந்தனர் ஜேசுபின் தம் சீஷரோ டொலிவமேரு
சார்ந்த கெத்சேமனேயாம் தண்டலையதில்; அப்போது
தேர்ந்தவ ரோடு நான் போய்ச செபித்திடும் வரையும் நீங்கள்
சோர்ந்திடா திரும் இங்கென்று சொல்லியங் கெழுந்து சென்றார். 114

பேதுருவோடு தான்செ பேதெயின் மைந்தரான
காதலர் இருபேரையும் கையுடன் அழைத்தங்கேகி
மேதினியோர்கள் செய்தீ வினை எலாம் தம்மேல் தாவ
மாதுயருறவும் மெத்த வருந்தவும் தொடங்கினாரே. 115

பின்னவர்களைப் பார்த்தென் பிராணன் மாய்வுறுமட்டாக
இன்னலாய் மிகுந்த துக்கம் எய்திருக்கின்றதிங்கே
வின்னமாய் விலகிடாமல் மேவியே தரித்து நீங்கள்
என்னுடன் விழித்திருங்கள் என்று சற் றப்பால் சென்றார் 116

சென்று சாஷ்டாங்கம் செய்து திருச்சுதன் என்பிதாவே!
என்றன்இப் பாத்ரம் நீங்க இயலுமேல், அருளும்; இன்றேல்,
நன்றுமதிஷ்டந்தானே நடத்திடப் படுக என்று
கன்றிய மனதினோடு கருதிமன்றாடினாரே. 117

மீண்டவர் வந்தச் சீஷர் விழித்திராதுறங்கக்கண்டே
ஈண்டு நீர் சற்றுநேரம் என்னுடன் விழித்திரீரோ
தீண்டிய பவமூலத்துள் சிக்குணாதிருப்பதற்காய்
மூண்டுநீர் விழித்திருந்து முறையுடன் வேண்டுவீரே. 118

ஆவிதான் சித்தமுள்ள தாகமோ பலட்சயத்தை
மேவியதென்று கூறி, மீண்டுமிக் கலனில் அப்பா,
தாவிநான் பருகியல்லால், தணிந்திது நீங்கா தென்றால்,
தேவரீா சித்தமென்று செபித்தவர் திரும்பி வந்தார். 119

அப்பொழுதும்தாம் சீஷர் அயர்ந்துறங்கிடவே கணடு
வெப்பமாய்ச் சென்று மூன்றாம் வேளையும் பண்டுபோலச்
செப்பிய மொழிகளைத்தாம் திரும்பவும் எடுத்துரைக்க
கைப்புடன் மனதுசாலக் கன்றியே சோர்ந்து வீழ்ந்தார் 120

அத்தருணத்தோர் தூதன் அம்பரத்திருந்து தோன்றி
சத்துவப்படுத்தப், பின்னும் சால வேதனைக்குள்ளாகி
மெத்தவுக் கிரமாகத்தான் வேண்டியங் கோலமிட்டார்
சுத்தனின் வேர்வை ரத்தத் துளிகளாய்ச் சொரிந்ததன்றே 121

பின்னவர் தேறிச்சீஷர் பெருமிதம் துயிலக்கண்டங்
கின்னும்நீர் துயில்வதேன், நான் என்னை ஒப்படைக்கும் நேரம்
துன்னிவந்திட்டதென்னைச சுட்டுவோன் அடுத்தான், போவோம்
என்னவே, உடன் எல்லாரும் எழுந்து சென்றார்கள் மாதோ. 122

# 4. ஆரோகண காண்டம்

## கிறிஸ்துவின் இரண்டாம் வருகை

### (எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

மேலுலகில் எழுந்து சென்ற விதமே ஜேசு மீண்டும் இங்கு வருவரென விண்ணோர் சொன்னாற்
போலவர்மே கத்தெழுந்து சேனைதூதர் புடைசூழ்ந்து வர வதிக மகிமையோடே
தாலமதில் ஆதிமுதல் இறந்தோர் உய்வோர் சகலமனுக் குலத்தோர்க்கும் நியாயந்தீர்க்க
சால வொளிர் சோதிமயமாய் இறங்கிச் சகமெலாம் கிடுகிடுங்கத் தோன்றுவாரே. 94

தோன்ற வும்பர் நாற்றிசையும் நின்றெக்காளம் தொனித்திடவே தொன்று தொட்டு மாண்டு மண்ணில்
தான்றுகளும் சாம்பலுமாய் நீரில் நீராய்ச் சார்ந்தபிண அணுக்கள் ஒருமித்து மீண்டும்
ஊன்றியுருவாக அதில் ஆன்மாமேவி உயிர்த்து நியா யாசனத்தில் வீற்றிருக்கும்
மூன்றுலகா திக்கவல்ல புனிதநாதன் முன்னெழுந்து நிரைநிரையாய்த் தான் நிற்பாரே. 95

பாரில் உயி ரோடிருப்போர்களும் இயேசு பரன் சமூக மதில் தோன்றி வரவே அந்த
நேரமதில் குலமினங்கள் நோக்கிடாது நின்ற நிலையிற் குணா குணங்கள் ஒப்ப
சேரவிரு பகுதியாய்ப் பிரிப்பதாலே சேய்கள் அன்னை தந்தைமார்களையும், பெற்றார்
பேருரிமை மக்களையும் பார்த்து நொந்து பிரலாபத் தோடகன்று தான் நிற்பாரே. 96

அண்ணன் அனுசன்மார் மற்றுற வோர்யாரும் அப்படியே பிரிந்துநிற்கப் பூவில் தாங்கள்
எண்ணமின்றி நடந்த செயல் நினைந்து துக்கித் தென் செய்வோம் என்செய்வோ மென்று கூவி
நண்ணிவரப் பார்ப்பர் வீழ்ந்துழல்வர் பின்னும் நாமுயி ரோடிருக்கையிலே நமக்குச் சொன்ன
புண்ணியநாதனைக் குறித்த போதகத்தைப் புறக்கணித் தோமேயெனவே புலம்புவாரே. 97

தேவபயம் நரர் நேயமின்றி நெஞ்சம் சென்ற போக்கெல்லாம் தீதினில் நடந்து
சீவவழியைக் கடந்த கசடர் யாரும் திகைத்திடுவர் அந்நேரம் புகலில்லாமல்
மேவுமனச் சாட்சியுந்தான் அவருட் குற்றி விளக்கமாய்ப் பழிசுமத்தும் தேவகோபம்
தாவிடவே அவர்கள் வாய் அடைபட்டையோ! சகிக் கொணாச் சஞ்சலத்தாற் றளம்புவாரே. 98

நல்லாரைத் தமது வல பாரிசத்தும் நடுநிலையாய்ப் பொல்லாரை இடபாகத்தும்
வல்லாண்மையாய் நிறுத்தி நன்மை தீமை மண்டலத்தில் அவரவர்கள் புரிந்த யாவும்
எல்லார்க்கும் தோன்ற அவர் வெளியாய் அங்கே இசைக்க, அதிர்ந்தவர் சமூகம் மறைக்க வேண்டி
பொல்லார்கள் குன்றி கிரி களைக்கூப்பிட்டுப் புலம்பிடினும் பலிதமின்றி உழல்வார் அன்றே. 99

வலபாகத்தினில் நிற்போர் களைக் கண் ணோக்கி வாழ்த்தியவர் ஆசீர்வாதம் பெற்றோரே
நிலையாக உலகு தோன்றிய நாள்தொட்டு நேர்ந்துமக்கென் றெத்தனித்து வைத்திருக்கும்
குலையாத கதி சேரவாருமென்று குளிர்ந்த முகமாய் அழைக்க, அவர்கள் யாரும்
மலையாது மா மகிழ்ச்சியோடு நித்ய வாழ்வடையவே எழுந்து செல்வார் மாதோ 100

இடதுபாரிச மதில்நிற் போர்களைப்பார்த் தெரிபந்த வதனராய்ச் சபிக்கப்பட்ட
அடமுளோரே நீரென் றனைவிட்டிப்போ தகன்று சாத்தான் றனக்கும் அவன் தாசர்க்கும்
முடிவிலா தெத்தனிக்கப்பட்ட நித்ய மூளுதீக்கேகு மென மொழிய, அன்னோர்
கொடிய வேதனைக் குளா கிடவே ஏக்கம் கொண்டு தடம்புரண்டெழுந்து செல்வார் அன்றே. 101

சத்தியமே கேளும் மனுக் குலத்தோரே, நீர் தற்பரன்வாக் கொருக்காலும் பொய்த்திடாது
வித்தகமாய் உருவான உம்மைப் போலே மேதினியில் சிருட்டி வேறுண்டோ பாரும்
இத்தலத்தில் நீர் புரிந்த நன்மை தீமைக் கேற்றபடி நிண்ணயமாய்த் தீர்ப்ப்ளிக்க
கத்தன் வருவார் நிசம்இப் போதே தேவ கருணைபெற ஏற்றவகை கருதுவீரே. 102

சோரன் வரும் தன்மையதாய் நினையாவேளை தோன்றிடுவர் சாமமோ காலையோ அந்
நேரமதை யாரும் அறியார் அவர்க்கு நேர் புனிதராய்த் தெளிந்து நிற்பதற்கு
பாருலகில் பிழைத்திருக்கும் போதே உங்கள் பாவமதை உணர்ந்தறிக்கையிட்டு நல்ல
சீரடைந்தப் பரன்பாதம் சேர்ந்து கொள்ளும் சிதைவிலா வாழ்வடைதல் திண்ணந்தானே 103

உலகதின் பாவத்தை எலாம் சுமந்துதீர்க்க உதித்துதிரம் சிந்தி மாண்டுயிர்த்து விண்ணில்
இலக வெழுந்திருக்கும்ஜே சிறைவனல்லால் எங்கும் ஒரு ரட்சகனும் இல்லை மெய்யாய்
பலமதமும் கெடுவழியே காட்டும் மோட்ச பாதை மெய்மை சீவன் அவர் தாமே நல்ல
நிலையவரைத் தான் விசுவாசித்து நேராம் நெறியதையே தொடர்ந்துகதி நேடுவீரே 104



# 6

# திருவாக்குப் புராணம்

**ஆசிரியர் : கனகசபைப் பிள்ளை (1815 - 1879)**

**அறிமுகம் : யோ. ஞான சந்திர ஜாண்சன்**

*வீரமாமுனிவர் எழுதிய தேம்பாவணியைத் தொடர்ந்து வெளிவந்த கிறிஸ்தவத் தமிழ்க் காப்பியம் கனகசபைப் பிள்ளை அவர்களால் எழுதப்பட்ட திருவாக்குப் புராணமாகும். திருவாக்குப் புராணம் எனும் நூலின் ஆசிரியரான கனகசபைப் பிள்ளை இலங்கையிலுள்ள அளவெட்டி எனும் ஊரில் வேலுப்பிள்ளைத் தம்பதிகளின் மகனாக 1815 ஆம் ஆண்டு மாசி மாதம் 12 ஆம் நாள் பிறந்தார். இவரது முழுமையான பெயர் ஜெர்மையா எவாட்ஸ் கனகசபைப் பிள்ளை என்பதாகும். இவரது பெற்றோரும் முன்னோரும் சைவ சமயத்தவர்கள். இவர்கள் கிறிஸ்தவ சமயத்தின் சீர்திருத்தச் சபைப் பிரிவினரால் ஈர்க்கப்பட்டு கிறிஸ்தவர்களாக மாறினர்.*

*கனகசபைப் பிள்ளை வட்டுக்கோட்டை இறையியல் பள்ளியில் படித்தார். தமிழிலும் ஆங்கிலத்திலும் பெரும்புலமை மிக்கவராக விளங்கினார். வட்டுக்கோட்டையில் வாழ்ந்த டாக்டர் வார்டு (Ward) என்பவரிடம் ஆங்கில மருத்துவத்தை மிக்க விருப்பத்துடன் கற்றார். எனினும் தமிழ் மருத்துவமே கனகசபைப் பிள்ளைக்கு புகழ் சேர்ப்பதாக அமைந்தது.*

*கனகசபைப் பிள்ளைக்குத் தமிழ்ப் புலமை இயல்பாகவே அமைந்திருந்தது. இவரது படைப்புகள் அனைத்தும் பழந்தமிழ்ப் புலவர்களின் மரபு சார்ந்தவையாய் காணப்படுகின்றன. இவர் திருவாக்குப் புராணம் மட்டுமின்றி பல தனிப்பாடல்களையும், ஒரு நிகண்டு நூலையும், அழகர்சாமி மடலையும் படைத்துள்ளார். திருவாக்குப் புராணம் 1751 விருத்தப்பாக்களை உடையது.*

*சென்னையில் அமெரிக்க நற்செய்தியாளர்களின் (Missionaries) தலைமையில் தமிழ் அகராதிப் பணியில் சில ஆண்டுகள் ஈடுபட்டார். பின்னர் மானிப்பாயில் உள்ள அமெரிக்கன் மிஷன் அச்சு இயந்திர சாலையில் மேற்பார்வையாளராகவும், கோப்பாயிலுள்ள தமிழ்ப் பள்ளியில் ஆசிரியராகவும் பணிபுரிந்தார். இதனுடன் தமிழ் முறையிலான மருத்துவத் தொழிலையும் செய்து வந்தார்.*

*இலங்கையிலுள்ள கண்டி அரசரின் பேரரான அழகர்சாமி வேலூரில் வாழ்ந்து வந்தார். இவரிடம் கனகசபைப் புலவர் நெருங்கிய நட்புடையவராகக் காணப்பட்டார். மன்னர் மரபில் வந்த அழகர்சாமி மீது ''அழகர்சாமி மடல்'' எனும் பிரபந்தம் ஒன்றைப் பாடினார். பிரபந்தத்துடன்*

சீட்டுக்கவியும் எழுதி, அரசர் அழகர் சாமிக்கு அனுப்பி வைத்தார். இச்செயலால் மகிழ்ச்சியடைந்த அழகர்சாமி, கனகசபைப் பிள்ளை தம்மீது எழுதிய நூலை, தம் முன்னிலையிலேயே அரங்கேற்றி இன்புற்றார். அது மட்டுமன்றி, கனகசபைப் புலவருக்கு வேண்டிய பொன்னும் பொருளும் கொடுத்து மகிழ்ந்தார். கனகசபைப் பிள்ளை பழந்தமிழ் இலக்கியத்தில் கொண்ட புலமையையும், கவிபாடும் திறனையும் வெளிக்காட்ட இச்சீட்டுக்கவி போதுமான சான்றாகக் காணப்படுகின்றது.

கனகசபைப் பிள்ளைக்கு இருபுதல்வர்கள். அவருள் ஒருவர் மருத்துவராகவும், மற்றொருவர் இலங்கையில் உள்ள சுண்டிக்குளிப் பாடசாலையில் தலைமை ஆசிரியராகவும் பணியாற்றினர்.

கனகசபைப் பிள்ளை தமது மருத்துவத் தொழில் காரணமாக பூநகரிப் பகுதிக்குச் சென்றிருந்தபோது இரத்த அழுத்த நோயினால் மயங்கி விழுந்தார். சில நாட்களில் நோய் அதிகமாகி 1879 ஆம் ஆண்டு தை மாதம் 9 ஆம் நாள் காலமானார். கிறிஸ்தவக் காப்பியம் எழுதியதன் வாயிலாகக் கிறிஸ்தவ இலக்கிய வரலாற்றில் இடம் பெற்றுள்ளார்.

கனகசபைப் பிள்ளை தமது காப்பியத்திற்கு ''திருவாக்குப் புராணம்'' எனப் பெயர் சூட்டியுள்ளது சிறப்புமிக்கது. ''ஆதியிலே வார்த்தை இருந்தது. அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது'' (யோவான் 1-1) என்பது வேதவாக்கு. வார்த்தை என்பதன் சிறப்பினை உணர்ந்த ஆசிரியர் வார்த்தையாம் கடவுளைக் குறித்துப் பாடியதால் திரு எனும் அடைமொழியுடன் திருவாக்குப் புராணம் எனப் பெயர் சூட்டியுள்ளார்.

> *''அனைத்துலகுந் திருவாக்கால் அளித்தகில சராசரமும் அருட்சித் தத்தே*
> *நினைந்துளவப் படியமைத்துக் காத்தழிக்குந் தனிமுதலாம் நிகரிலாதான்*
> *றனைத்துதிசெய் தெண்ணுகின்ற தகுங்கருமஞ் சித்திபெறத் தருகவென்றே*
> *இனைத்தெனவொப் போதரிய இணைமலர்த்தாள் சிரந்தேத்தி இறைஞ்சுவாமே''*

எனும் நூலின் முதற்பாடல் வாக்கை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

திருவாக்குப் புராணம் என்பதனால் இது காப்பியமா? அல்லது புராணமா? எனும் கேள்வி எழலாம். காப்பியத்திற்குரிய தகுதிகள் திருவாக்குப் புராணத்திற்கு இருந்தாலும் புராணம் எனும் சொல்லை ஆசிரியர் கையாண்டுள்ளார். இலங்கையிலிருந்து வெளிவந்துள்ள ஈழத்துப் பூராடனார் எழுதிய காப்பியத்திற்கு இயேசு புராணம் எனப் பெயர் சூட்டியுள்ளமை இங்கு குறிப்பிட வேண்டிய ஒன்று. இஸ்லாமியக் காப்பியம் சீறாப் புராணம் என்றுதான் அழைக்கப்படுகிறது. அதில் புராணம் எனும் சொல் இருப்பதால் காப்பியமன்று என்று கூற முடியாது.

கனகசபைப் பிள்ளையால் இயற்றப்பட்ட திருவாக்குப் புராணம் 1866 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. ''இஃது கிறிஸ்து சமய வித்தியாசாலை மாணாக்கரும் பிறரும் சத்தியவேத நூலைக் கற்றுக் கொள்வதற்கு உபயோகமாக மெக்காதர் ஐயரால் புராண நடையாகச் செய்விக்கப்பட்டது'' என்று இந்நூலின் முதல் பக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. கிறிஸ்தவர்கள் இக்காப்பியத்தைப் படித்து மனனம் செய்ய வேண்டும் எனும் நோக்குடன் இந்நூல் இயற்றப்பட்டது.

இருநூறு பக்கங்களைக் கொண்ட இந்நூல் இரண்டு பாகங்களை உடையது. முதற்பாகம் ஜநந காண்டம், யாத்திரைக் காண்டம் எனும் இரண்டு காண்டங்களை உடையது. இக்காண்டங்கள் வேதாகமத்தின் பழைய ஏற்பாட்டிலுள்ள முதல் இரண்டு நூல்களான ஆதியாகமத்தையும், யாத்திராகமத்தையும் அடிப்படையாகக் கொண்டது. ஜநந காண்டமானது உற்பத்திப்படலம், வினை சூழ்படலம், மகப்பேற்றுப் படலம், குலமுறையுரைத்தப் படலம், சலப்பிரளய படலம், நோவாவின் வமிசப் படலம், தேவன் ஆபிரகாமை அழைத்த படலம், ஈசாக்குப் படலம், யாக்கோபுப் படலம், யோசேப்புப் படலம் எனும் பத்து படலங்களைக் கொண்டது.

இரண்டாவது காண்டமான ''யாத்திரை காண்டம்'' சிறைபுரி படலம், மோசே அவதரித்த படலம், மோசே காட்சி பெற்ற படலம், மோசே தூது சென்ற படலம், பஸ்காவிரதப் படலம், மீட்சிப் படலம், வனம்புகு படலம், பத்து கற்பனைப் படலம் எனும் எட்டுப் படலங்களை உடையது.

நூலின் தொடக்கம் தமிழ்க்காப்பிய அமைப்பு முறைக்கேற்ப கடவுள் வாழ்த்து, அவையடக்கம்,பதிகம் ஆகியவற்றைக் கொண்டது. இந்நூலின் பதிகம் 111 விருத்தப்பாக்களை உடையது. ஆசிரியர் தாம் பாடக் கருதிய வேதச் செய்திகளையெல்லாம் தொகுத்து இதில் இனிமையாகப் பாடியுள்ளார். இந்நூலின் பாடல்கள் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணப் பாடல்களைப் போன்று எளிமையாகவும், இனிமையாகவும் அமைந்துள்ளன.

இந்நூலாசிரியர் தமிழ்க்காப்பிய நடைக்கேற்ப 15 இடங்களில் புனைந்துரையாகப் பல பாடல்களைப் பாடியுள்ளார். அப்புனைந்துரைப் பாடல்கள் அடிக்குறிப்பின் துணையுடன் அப்பக்கங்களின் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அப்புனைந்துரைப் பாடல்கள் காப்பிய ஓட்டத்திற்கு எவ்விதத் தடையும் அளிக்கக் கூடாது எனக் கருதி இம்முறையை ஆசிரியர் பின்பற்றியுள்ளார் எனத் தெரிகின்றது. எடுத்துக்காட்டாக, கடவுள் கனி கொடுக்கும் மரங்களைப் படைத்து அதன் நடுவில் நன்மை தீமை உணர்த்தும் மரத்தையும் படைத்தார் என்பதை ஆசிரியர்,

> *''காண்பதற்கினிய கனிகளு மதுரங் கனிந்தபூங் கனிகளு நிறைந்த*
> *மாண்புறுதருக்கள் அனைத்தையுமன்றி வயங்கெழின் மலர் குடைந்தளிர்கள்*
> *பாண்செயுந் துடவை நடுவணிற்சீவ விருக்கமும் படைத்ததனுடனே*
> *எண்பெறு நன்மை தீமைகளுணர்த்தும் மரத்தையு மியற்றினனன்றே''*

எனப் பாடுகின்றார். இப்பாடலை அடிப்படையாகக் கொண்டு ஐந்து பாடல்கள் புனைந்துரைப் பாடல்களாக அமைந்துள்ளன. இப்பாடல்களைப் படிக்கும் போது ''காண்பதற்கினிய'' எனும் அடிப்படைப் பாடலின் சிறப்பினையும் இலக்கிய இன்பத்தையும் நுகர முடிகின்றது. ஓய்வு நாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பாயாக (யாத்திராகமம் 20-8) எனும் வேத வசனத்தை அடிப்படையாகக் கொண்டு,

> *''ஒய்வுநாடன்னைத் தூயதாக் கொள்ள உன்னுகழுவிரு தினத்தும்*
> *ஏய்வுறும் வேலை எதனையும் புரிக இந்தவே ழாந்திருவைகல்*
> *தேய்வறும் புகழ்சே ரெம்பிரான்றானாய்ச் சிறந்திடுமொப் பிலாத்தேவின்*
> *தூய்துறு மோய்வு நாளதேயாகுஞ் சொற்றவித்தோ மறுதினத்தில்''*

எனப் பாடுகின்றார்.

*திருவாக்குப் புராணத்தில் இரண்டாம் பாகம் விரைவில் வெளிவரும் (will shortly be published) எனும் செய்தியுடன் சான்றுக்காக சுவிசேட காண்டத்தில் 67 பாடல்கள் கொடுக்கப்பட்டுள்ளன. நூலின் பின்பகுதியில் இப்பாடல்களும், மேற்சொன்ன இக்குறிப்பும் இருப்பதால் இதை அறிய முடிகின்றது. புதிய ஏற்பாட்டை அடிப்படையாகக் கொண்ட இரண்டாம் பாகம் வெளிவந்ததாகக் குறிப்புகள் இல்லை.*

*மறுபதிப்பின் மூலம் அச்சில் கொண்டு வராமல் மறக்கப்பட்டு, மறைக்கப்பட்டு, மறைந்துள்ள கிறிஸ்தவ இலக்கிய நூற்களை வெளிக்கொணர்வதன் மூலம் கிறிஸ்தவ இலக்கியத்தின் பரப்பினை அறிந்து கொள்ள இயலும்.*

## ஈசாக்குப் படலம்

சீரிய வீசாக்கென்னுஞ் செவ்வியோன் வயதெண்ணைந்திற்
பாரினிற் சிறந்த செல்வப் பதானராம் நாடுதன்னில்
ஏரியல் சூரியாவி னிரேபேக்கா ளெனும்பேர் பெற்ற
நேரிழை தன்னை வேட்டு நீணில மதிக்க வாழ்ந்தான். 1

தகவினா லுயர்ந்தவண்ணல் தன்மனைக் கிழத்தியான
துகளிலா வுளத்துநங்கை மைமையாய்த் தொக்கவாற்றால்
மகவிலா வறுமைநோக்கி மனந்தளர்ந் திறைமு னண்ணிப்
பகவிலா வுளத்தினோடு மிரந்தனன் பரவிநின்றான். 2

தண்ணளி யுடையமேலாந் தற்பர னீசாக்கந்நாட்
பண்ணிய வணக்கநோக்கிப் பரிந்தருள் புரிந்துளானாற்
பெண்ணியல் வழாதசெல்வப் பெருந்தகை மடமானோக்கி
மண்ணகஞ் சிறக்குமாறு வயினிடைக் கருக்கொண்டாளே. 3

இதமிக்க கருணைசாலு மிறைதிரு வருளாற்றோன்றி
உதரத்துட் சிசுக்களொன்றை யொன்றுற நெருக்கும்போழ்தில்
மதர்மைக்கண் மடமானஞ்சி வானவற் பணிந்துகேட்க
நிதமுற்ற மகிமைபூண்ட நின்மலனுரைக்குமன்றே. 4

இருவகைச் சாதியீண்டுன் கருப்பத்து ளிருப்பவாகும்
மருவியுன் னுதரநின்று வருஞ்சனம் வகையிரண்டாய்
ஒருவகைச் சனமேமற்றை யதனிலும் பலங்கொண்டோங்கும்
திருவரு மிளையசேய்க்கு மூத்தவ னேவல்செய்வான். 5

விண்ணக மதியமான மிளிர்முக வனிதை தன்பால்
நண்ணிய கருப்பமிக்க நலம்பெற முதிர்ந்த ஞான்றில்
அண்ணினர் தமக்கெந்நாளும் அருள்செய்தே வருளினாலே
மண்ணக மதிக்க மைந்த ரிருவரை வழங்கினாளே. 6

மூத்தவ னிறஞ்செய்யோனாய் முழுதுட லுரோமமிக்க
தாத்திக ழாடைபோல்வா னாகிவந் துதித்தவாற்றால்
எத்துறு மேசாவென்று மிவன்குதி பற்றுமாற்றால்
மாத்தகு மிளவல் யாக்கோப் பெனவுமாய் வகுத்தாள்பேரே. 7

மைந்தரிங் கிவர்களிந்த மானிலத் துதித்தபோதிற்
றந்தைமு விருபானாண்டு சார்ந்துளோ னாபினானால்
வந்தவக் குமரரோங்கி வளர்ந்தன ரவருளேசா
வெந்திறல் வேட்டஞ்செய்து வனவாசம் விழைந்துற்றானே. 8

இளையவன் சாதுவாகு மிருங்குணங் கொடுகூடார
வளமுறு வாசத்தோனாய் வைகினன் மூத்தோன் வேட்ட
விளைவினால் அவன்மேற் றாதை விழைவுளோ னாயினான்கா
ரிளைபொரு மளகவன்னை யிளவல்மேற் றயைவைத்தாளே. 9

அன்னநன் னிலைமையோரா யமர்ந்துளி வெளியினின்றே
முன்னவ னிளைப்பா யோர்நாள் முடுகின னனையபோதிற்
பின்னவன் சமைத்தகூழ்கண் டிளைப்பியான் பெரிதுற்றேனால்
இன்னநின் சிவந்தவூணிற் சிறிதெனக்கீகவென்றான் 10

இங்கித னாலேயேதோ மெனும்பெய ரேசாவுற்றான்
அங்கவ னுணவு கேட்க அநுசனுன் முதற்பிறப்பிற்
றங்கிய வதிகாரத்தைத் தாவென மரிக்கின்றேனுக்
குங்குள வதிகாரத்தா லுறுபயன் யாதோவென்றான். 11

தந்தன னென்னவாணை தாவெனத் தரலுற்றன்றே
முந்துதன் னதிகாரத்தை விற்றனன் முடுகியப்போ
தந்தமுன் னவற்குப் பின்னோன் அப்பமும் பயற்றங்கூழும்
உந்திய விளைப்புமாற உதவவுண் டவனும்போனான். 12

## (வேறு)

கானானெங்கும் ஆபிரகாமின் காலத்தே
மேனாளுற்ற வாறொரு பஞ்சம் மேவிற்றால்
வானார்செல்வத் தீசாக்கண்ணல் மருவுண்டி
தானாடற்கங் கேதுவி லாமே தளர்வுற்றே 13

வெம்பசி தீரும் மாறு பெலிஸ்தர் வியன்கேரார்
அம்பதி யாளும் மன்னபி மேலேக் ககமுற்றான்
வம்பதி லானங் கெய்தியபோதின் மட்டில்லா
நம்பர னன்று காட்சிகொடுத்தான் நண்புற்றே. 14

வந்துயர் காட்சி வழங்கியெகிப்தாம் வளநாட்டில்
முந்துறவேக லுனக்கிவணேயான் மொழியுஞ்சீர்
இந்தநிலத்தே வைகுதியென்ன வியம்பியவற்
கெந்தைபிரானவ னன்முகமீண்டு மெதிர்நோக்கி 15

மன்னுறு செல்வ மலிந்திடு மிம்முழு வளநாடும்
நின்னுடனின்பின் மரபினருக்கும் நிலையாகத்
துன்னுறு வித்துன் றந்தையுடன்யான் சொல்லாணை
என்னும வெல்லாந் தப்பறவேநிறை வேற்றுவலே 16

இங்ஙனமாதலி னீயகலாதுறை யானுனது
பங்கினில் மிக்கரு ணின்றுசுரந்து பரிந்துறுவேன்
மங்குதலின்றி வியப்புற யாவினு மல்கிடவே
பொங்கியவாசி புரிந்துனையீண்டு புரப்பேனே 17

உந்தையெனக்கமை வுற்றிடு கற்பனை யோடுமியான்
தந்தனவெப்பிர மாணமு மாதிக டவறாதே
வந்தொழு குற்றதி னாலுடுவிற்குல மல்கிடவும்
இந்தநிலம்முழு தன்னவ ரெய்தவு மீவேனால் 18

உற்றிடு நின்னுயர் சந்ததியாலிவ் வுலகெங்கும்
துற்றிடு சாதியர் யாவருமாகி துலக்கமுறப்
பெற்றிடு வாரென வோதினனெங்கள் பிரானீசாக்
கற்பொடு வைகின னங்குயர்கேரா ரணிநாட்டில். 19

## (வேறு)

அவ்விடை யாடவர் அனையன் றேவியாம்
நவ்விபோ னோக்கிதன் னியலைநாடினர்
செவ்விய ளழகினாற் சீவநாசமும்
இவ்விடை நேருமென் றெண்ணியஞ்சினான். 20

அஞ்சினன் றந்தையே யனைய னவ்வெழில்
வஞ்சியைத் தன்னுயர் மனைவி யென்றிடான்
செஞ்சொலி தங்கையா மென்னச் சீர்கெழும்
விஞ்சிய செல்வநாட் டவர்க்கு விண்டனன் 21

அன்னநன் னாட்டிடை யநேக நாட்களின்
பின்னரோர் வைகலிற் பெலிஸ்தர் கோமகன்
உன்னத சாளரத் தூடு நோக்கியே
அன்னவன் மனைவியோ டாடல் கண்டனன். 22

ஆதலின் மன்னவ னவனைக்கூவியிவ்
வோதரி நெடுங்கணாள் உண்மையாகநின்
காதலி யென்குறை கண்டிப் பொய்ம்மொழி
நீதரலுற்றனை நிகழ்த்து வாயென்றான். 23

வஞ்சியின் காரண மாவென் மன்னுயிர்
எஞ்சிட வருமென எனது நெஞ்சகத்
தஞ்சலி னப்படி யறைந்திட் டேனெனா
வெஞ்சுடர் வாளினாற் கனையன் விண்டனன் 24

எப்பழு தெமிற்றெறிந் திளையசெய்தனை
இப்பெரு நகரில்யா ரெனினு நொய்தினில்
ஒப்பறு வஞ்சியை யுவக்கவும் நமிற்
றப்புறு மாறும்நீ யேதுத் தந்தனை 25

எனவிசைத் திங்ஙன மிவனை யேனுமிம்
மனைவியை யேனுமிவ் வைப்பிற் றீண்டினோர்
அனைவருங் கொலையுண லுண்மை யாமெனச்
சினவுவேல் மன்னவன் செப்பி னானரோ. 26

## (வேறு)

ஈங்கிதன்பின ரிப்பெரு நாட்டினி லீசாக்
காங்குவித்திடு தொழிலினால் விளைவுநூ றதிகம்
ஓங்குமவ்வரு டத்தினி லுற்றனன் கடவுள்
பாங்குகொண்டவற் காசியும் புரிந்தனன் பரிவால் 27

தக்கமேன்மையங் காதலாலனையவன் சார்ந்து
மிக்கசெல்வனா யுயர்ந்தவண் மேன்மகனானான்
தொக்கவாடுகள் பசுநிரை தொழும்பரின் தொகையும்
ஒக்கவெய்துதல் பெலிஸ்த்தருள் வெறுப்புடனோர்ந்தார். 28

ஔவியங்கொடு பெலிஸ்தர்க ளாபிரகாமாஞ்
செவ்வியன்பணிச் சேவுகர் தொட்டனவாகும்
அவ்விரும்புனற் கூபங்கள் அனைத்தையு மண்ணால்
எவ்வமெய்திடத் தூர்த்திட ரியற்றினரன்றே. 29

அதுவுமன்றியே பெலிஸ்தர்க ளதிபனீசாக்கை
நிதிபடைத்துமிக் கெம்மிலும் நீபலவானாய்
அதிகனாயினை யாதலி னிங்குறா தெழுந்திப்
பதியகன்றுபோய்ப் பிறநகர் வைகெனப் பணித்தான். 30

அன்னகாலையில் அவ்விடமொருவியவ் வண்ணல்
துன்னு பல்பெரு வளங்களுந் துலங்கிய சேரார்
என்னவோதிய தாழ்வுறும் பூமியி னிடையே
மன்னுபாளயம் நிறுத்திமற் றவ்விடை வதிந்தான் 31

ஆண்டு தந்தையி னாட்களி னாகியங் கிருந்து
மீண்டு வெந்திறற் பெலிஸ்தர்கள் தூர்த்தனர் விட்ட
வேண்டுநீர்ச்செழுங் கூபங்கள் மீளவுந் தோண்டி
மாண்ட தாதைசொல் பேரையே அவைக்கவன் வகுத்தான். 32

வேறுமன்னவ னடியர்கள் தோண்டியே விரிநீர்
ஊறுமூற்றினைக் கண்டனர் அத்திரு வூரின்
மாறுபட்டிடு மேய்ப்பர்கள் தமதென வகுத்தார்
கூறுபேரதற் காதலி னெசேக்கெனக் குறித்தான். 33

பின்னுமோர் கிணறாக்கின னதுவுமப் பெற்றித்
தென்னவாதலிற் சித்தினாவெனப் பெய ரிசைத்தான்
மன்னுமவ்வுழி யகன்றுபோய் மற்றொரு கூபம்
அன்னபோதுதொட் டனர்வழக் கவருரைத் திலரால் 34

ஆயபோதினி லாபிர காமரு ளண்ணல்
மேயநல்வள நாட்டினை மேவிவாழ் வெய்தத்
தூயவன்றர லுற்றனன் தொக்கிவண் பெருகி
யேயிருத்துமென் றிதன்பெய ரிரேகொபோத் தென்றான். 35

அவ்விடத்தினி லிருந்தவன் பேர்செபா வடைந்தான்
செவ்வியன்முனத் தினத்தியா மினியினிற் சேர்ந்தே
திவ்வியன்றரி சனத்தினிற் றெரியலுற் றியானே
ஔவியந்தவி ராபிர காம்பர னாமால் 36

அஞ்சல் நின்னது பங்கில்யா னமர்ந்தென தடியான்
*மிஞ்சுசீர்திக ழாபிரகாமெனு மிகுநன்*
நெஞ்சி னுத்தம னிமித்தமா சீர்வதித் துன்னை
விஞ்ச வுன்குலம் பெருகவும் விளைப்பலென் றுரைத்தான். 37

ஆனபோதினி லவனொரு வேதிகை யாக்கி
ஞானநாயக னாமத்தை நவின்று தோத்திரித்துத்
தானும்வைகுற வவ்விடை பாளயஞ் சமைத்தான்
பானநீர்க்கிண றமைத்தனர் பணிவிடைக்காரர் 38

அனையகாலையிற் பெலிஸ்தர்க ளதிபனு மனையான்
றனது நண்பரு ளொருவனாய்ச் சாரகோ சாத்தும்
கனையுநீள்கடற் சேனையின் காவலன் றானும்
புனையு நல்லிசை யுத்தமன் றன்னுளை போனார். 39

யாதுகாரணங் கருதிநீ ரென்னுளை வந்தீர்
போதுவாயெனப் பகைத்தெனைப் போக்கினீ ரென்றான்
ஓதுவாசகங் கேட்டவ ருனக்கிறை துணையே
ஆதலால்நனி விருத்திநீ யடைந்தமை யறிந்தோம் 40

தீண்டலாதுனைச் சாந்தமாச் செலுத்துநஞ் செயல்போற்
பூண்ட சிரினாய் எமக்குவெந் தீவினை புரியா
தீண்டு நீதரு மாணைக்கு மிசைந்துடன் படிக்கை
மாண்டகப்புரி தற்குமா வந்தனமென்றார். 41

அன்ற வாசகங் கேட்டலு மாபிர காஞ்சேய்
துன்று மன்புடன் விருந்திடத் துய்த்தனர் துயின்றார்
ஒன்றுவைகலில் மற்றைநா ளாணையிட் டுவந்தார்
சென்றுபோயினர் வந்தவர் செல்வனு மிருந்தான். 42

அந்தநாளினிற் றாந்தொடு கிணற்றினி லூற்று
வந்ததென்றுகண் டோதினர் வள்ளலுஞ் சேபா
உந்துநாமமற் றிதற்கென வோதின னவ்வூர்
முந்து பேர்செபா வாமென வாதலின் மொழிவார். 43

## (வேறு)

எண்ணைந்தாம்வய தினிலேசர எத்தியர்தங்கள் குலத்தினிலே
கண்ணுஞ் சீர்கெழு பேயோர்முன் நல்கியவுத்தீ துடனேலோன்
மண்ணிற் றந்திடு பஸ்மாத்தாம் மாதையும்வேட்டு மகிழ்ந்தானால்
எண்ணும்பேர்பெறு ரேபேக்கா ளிவரானெஞ்சு கசப்புற்றாள். 44

## மோசே அவதரித்த படலம்

வலந்திக ழிலேவியென்போன் மரபுளோ னொருவனந்த
நலந்திகழ் மரபினாங்கோர் நங்கையை வேட்டுற்றானால்
பொலந்திக ழனையமென்சொற் பூங்கொடி வயிறுவாய்த்தோர்
பலந்திகழ் குமரன்றன்னைப் பாரினி லுயிர்த்தாள்மன்னோ. 1

ஈன்றவாண் மதலைமேனி எழிலுளோ னெனவேகண்டு
மூன்றுமா மாதங்காத்து மறைத்திட முடியாளாகி
ஏன்றவோர் நாணற்பேழைக் கிடும்பையின் புரவுமிட்டச்
சான்றசீர் மகவையுள்ளே சார்வுறத் தனிவைத்தாளே. 2

வைத்தனள் யாருங்காணா வகைமறைத்தெடுத்துக் கொண்டு
நத்தலைநதிதீரத்தில் நாணலூடுய்த்துப் போனாள்
அத்தலை நிகழுமாற்ற மறிந்திடு நசையுளாளாய்ச்
சித்திரமதலை தௌவை நோக்கினள் சேணினின்றாள். 3

வளங்கிள ரெகிப்துவேந்தன் மாமக ணதிநீராட
உளங்கொடு படர்ந்தங் காயங் கரையினி லுலாவிநிற்க
அளங்கெழு நாணலூடா மத்தகுபேழைதன்னை
விளங்கயில் மருளுங்கண்ணாள் களிப்புற விரும்பிக்கண்டாள். 4

காணலு மரசனீன்ற கன்னியக்கரையினின்ற
பூணல்முடையதாதி யொருத்தியைப் புரிந்துகூவி
நாணலம்பேழைதன்னை நண்ணிநீ கொடுவாவென்றாள்
கோணலம் பிறைபோனெற்றிக் கோதைபோய்க் கொடுவந்திட்டாள் 5

வள்ளையங் குழையாள்பேழை திறந்துமா மலர்க்கண்ணாலே
பிள்ளையைநோக்கினாளப் பிள்ளைவாய் திறந்தங்கன்னா
ளுள்ளநெக் குருகும்வண்ண மழுததவ்வரற்றுமோசை
கொள்ளரு மிரக்கமன்னாளுளத்தினிற் கொடுத்ததன்றே 6

நெஞ்சக மிரங்கியந்த நெறித்தபைங் குழலி யிந்த
விஞ்செழின் மதலையீண்டு மேவெபி ரேயரானோர்
தஞ்சிறு குழவியென்று சாற்றின னதுகேட்டாங்கம்
மஞ்சனின் தெளவையந்த மங்கைதன் மருங்கிலானாள். 7

## (வேறு)

மாடாயங் கவளைப்பார்த்திம் மதலையை வளர்க்கவல்ல
கோடாயைத் தருவல் வேண்டிற் கூறெனக் கொணர்க வென்றாள்
சேடாய படிவம் வாய்ந்த சிற்றிடைச் சிறுமியன்ன
நாடாயைக் கொடுபோயந்த நரபதி மகள்முன் னுய்த்தாள் 8

முன்வந்த தாயையந்த முடியுடை நிருப னீன்ற
மின்வந்த மருங்குனங்கை விழித்திந்த மகவை நீநின்
பொன்வந்த மனையிற்கொண்டு போய்வளர்த் திடுக வெற்கா
வென்வந்த தெனினுஞ் செம்பொன் யானுனக் கீவலென்றாள். 9

கொலையொக்கும் படைவேந்தீன்ற குமாரிசொற்படியே கொண்டு
சிலையொக்கு நுதல்சேரன்னை செழுமனை யகத்திற் சேர்ந்தே
கலையொக்கு மதியாமென்னக் கவின்பெற வளர்த்தபின்னர்
மலையொக்கும் புயங்கள் வாய்ந்த மைந்தனை மீட்டுமீந்தாள் 10

கரைபொங்கும் நெடியசெய்ய கடல்புடை சூழுநாட
னுரைபொங்கு மகளுக்கன்னா னொருபெருங் குமரனானான்
திரைபொங்கும் புனலிற்கொண்ட செயலினால் மோசே பேரிவ்
வரைபொங்கு மருமத்தானுக் கெனவவள் வகுத்திட்டாளே. 11

பீடுற்ற வனையமோசே பெரியவ னானபோதந்
நாடுற்று நலியாநின்ற தன்குலத் தவர்பா னண்ணி
வாடுற்று வருந்தியாங்கே மற்றவர் சுமக்கும் பாரம்
நீடுற்ற சுமைகள் மேற்கண் பரப்பின னெறிகடோறும் 12

ஓங்குந்தன் குலத்தினோனா மோரெபிரேயன் றன்னை
ஆங்குற்ற வெகிப்துநாட னொருவனின் றடித்த னோக்கிப்
பாங்குற்றார் யாருமின்மை பார்த்தவன் றனைச்சேதித்து
வாங்கும்வெண் மணலால்மூடி மரபபிமானங் காத்தான். 13

ஈடொன்று புயத்துவள்ள லெழுந்தனன் மற்றைநாளும்
நாடெங்கும் நோக்கி நோக்கி நடந்திடு ஞாங்கரிற்றன்
மாடங்ங னிரண்டுபேர்தன் மரபினோர் கோபவெந்தீச்
சூடுண்டு விவாதஞ்செய்தல் கண்டனன் றுடர்ந்து நண்ணி 14

நீடுந்தன் மரபினோரில் நீதிகேடியற்றி நின்ற
ஆடுந்திண் புயத்தினோனை யண்ணலங் குமரனோக்கிப்
பீடொன்றுந் துணைவனாகப் பிறங்கிய விவற்கிவ்வாறே
கேடின்று விளையும் வண்ண மடித்ததென் கிளத்துகென்றான். 15

என்றந்த வள்ளல்கேட்ட வெல்லையி லவனும் யாவர்
இன்றுன்னை யிறைவனாவு மெங்களை நியாயந்தீர்க்க
நின்றுள்ள முதல்வனாவு நியமித்தா ரெகிப்தினோனைக்
கொன்றிட்டபடியே யென்னைக் கொல்வதுன் கருத்தோவென்றான் 16

களிப்பட்டங் கனையனோதுஞ் சொற்செவிப்படலுங் குற்றம்
வெளிப்பட்ட தெனவேயந்த விழுமியோ னச்சங் கொண்டான்
களிப்பட்ட மதமால் யானைக் காவல னதனை யோர்ந்து
துளிப்பட்ட வுதிரஞ் சிந்தக்கொலைசெய்யச் சூழ்ச்சிபார்த்தான் 17

மோதுபோர் வேந்துக்கஞ்சி முகத்தினை விலகி மோசே
மீதியா னாட்டுக்கோடி விரவியோர் கிணற்றின் பாங்கர்
தீதிலா திருந்தகாலை செப்புமந் நாட்டி னுற்ற
கோதிலா மறையோனீன்ற குமாரிக ளெழுவர் வந்தார். 18

குமுதத்தை நிகர்க்கும்வாயார் குளிர்புனற் பத்தரூடே
அமுதத்தை முகந்துதங்க ளாடுகட் கூட்டப்பெய்தார்
சமுகத்தி னின்றமேய்ப்பர் தடைபுரிந்தனைய நீரந்
தமதுற்ற மந்தைக்கூட்டத் தாமவண்முயன்றாரன்றே. 19

அப்போதங் கெழுந்து மோசே யவர்களைத் தடுத்துமற்றிம்
மைப்போது நிகருங்கண்ணார் மந்தைகள் பருகுமாறே
ஒப்போதி லுதவிசெய்தா னொண்டொடி மகளிர்தம்மை
இப்போதும் புவியிலீன்ற இரேகுவேல் மருங்குசென்றார் 20

ஆணிப்பொன் னனையசெவ்வி யரும்பெரும் புதல்விமாரைக்
காணுற்ற பொழுதவ்வீன்றோன் கண்மலர்ந்தினிது நோக்கிப்
பாணித்த லின்றியின்று மீண்டதென் பகர்மினென்றான்
பூணுற்ற கடகக்கையார் போற்றுதம் பிதாவை நோக்கி 21

உரைபொங்கு மெகிப்துநாட னொருவனங் குற்றே னெம்மை
வரைபொங்கும் புயத்து மேய்ப்பர் வன்மைக்கு விலக்கிக்காத்துத்
திரைபொங்கு முதகந்தன்னைச் செங்கையால் மொண்டுமொண்டெந்
தரைபொங்கு மந்தைக்கூட்டித் தயைமிகப் புரிந்தானென்றார். 22

அங்கன்னார் தருசொற்கேட்டே யப்பெருந் தாதை நோக்கி
எங்கன்னா னுளனன்னோனை எப்படிவிட்டிங் குற்றீர்
இங்கென்னோ டுண்டுபான மருந்தவு மழைமினென்றான்
கொங்கன்ன மொழியார் போயக் குமரனைக் கொடுவந்தாரே. 23

அழைத்திட்ட பொழுதம் மோசே யாங்கணுற்றவன்பால் வைகத்
தழைத்திட்ட வுளத்தினூடு சம்மதித்திருந்து ளானால்
விழைத்திட்ட விரேகு வேல்நன் மெல்லியற் சீப்போறாளை
உழைத்திட்ட கருத்தினோடக் குருசிலுக் குதவினானே. 24

விண்புக்க மதியுனாணும் விசித்திர வதன நங்கை
மண்புக்க புகழ்மோசேக்கு மணமகளாகி வாழ்ந்தே
எண்புக்க முறைமைசாலு மில்லற நடாத்துநாளில்
நண்புக்கங் குரியமைந்த னொருவனை நல்கினாளே. 25

## (வேறு)

இன்னியற் சிறுவன்பாரி னிடையவ தரித்தபோதே
அன்னிய தேயந்தன்னி லாம்பரதேசியாகி
மன்னினே னெனவேகூறி வாய்த்தவம் மகற்குக் கேர்சோம்
பன்னிய நாமமென்று பகர்ந்துவந்திருந்தான் மாதோ. 26

ஆங்கதன் பின்புசின்னா ளகன்றபின் னெகிப்து நாட்டுப்
பூங்கழல் மன்னனிந்தப் பூவுல கொருவினானால்
தாங்கருங் கொடியதான பணியினாற் றபித்துவாடி
ஓங்குறு மிசிரவேல ருள்ளநைந் தோலமிட்டார். 27



# 7

# திருவருள் மாலை

### ஆசிரியர்: மாயூரம் நீதிபதி வேதநாயகம் பிள்ளை (1826-1889)

### அறிமுகம்: தி. தயானந்தன் பிரான்சிஸ்

ஒரே பெயருடைய மூன்று கிறிஸ்தவக் கவிஞர்களை நாம் அறிவோம். வேதநாயகம் என்ற பெயரைக்கொண்ட சாஸ்திரியார், போதகர், நீதிபதி ஆகிய மூவரைத்தான் குறிப்பிடுகிறேன். கடந்த நூற்றாண்டில் பிறந்தவரும், சிறப்பு வாய்ந்த கவிஞர் என்று போற்றப்படுகிறவருமான மாயூரம் நீதிபதி வேதநாயகர், கத்தோலிக்கச் சபையைச் சேர்ந்தவர். அவர் மேதை வேதநாயகர் என்றும் விற்பன்னர் வேதநாயகர் என்றும் புகழப்படுகின்றார். முதன் முதலாகத் தமிழில் புதினம் (பிரதாப முதலியார் சரித்திரம்) எழுத முற்பட்டவர் என்பதாலும் அந்நாவல் பலவகையிலும் இலக்கியத்தரமுடைய அன்றையச் சமுதாயப் படப்பிடிப்பாக அமைந்துவிட்ட காரணத்தாலும் தமிழ் இலக்கிய உலகில் அவர் பெயர் நிலைபேறுடைய இடம் ஒன்றைப் பெற்றுள்ளது.

இவருடைய பாடல்களைப் பொருத்தவரையில் 'சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள்' என்ற 192 பாடல்கள் அடங்கிய தொகுப்பில் உள்ள சில படைப்புகள் குறிப்பிடத்தகுந்தவை ஆகும். இப்பாடல்களில் அவர் தம்முடைய 'சர்வ சமய சமரச' உள்ளத்தைப் பலபட எடுத்துக்காட்டுகின்றார். பக்திக் கவிஞர்களின் நெறியைத் தழுவி, 'காட்சி எனக்குக் கொடாமல் இருக்கிற காரணம் ஏதையா?' என்றும், 'வேதநாயகனே, எவ்விதமும் உன் பாதமலர் அருளே' என்றும், 'ஐயனே, உன் அழகைக் காண ஆசை நான் கொண்டேனே' என்றும் பாடும் இக் கவிஞர் தம் பாடல்களின் சில அடிகளில் உலக நிலையாமை பற்றிப் பேசும்போது விதந்தோதும் போக்கினைக் காண முடிகிறது.

சர்வ சமய சமரசம் பற்றிப் பேசும் இக் கவிஞர் கிறிஸ்துவின் அன்பில் தாம் திளைத்து நிற்பதையும் தமிழ் மக்களுக்கு எடுத்துரைத்துள்ளார். ஆண்டவரின் தனிப் பெரும் மாண்புகளை எண்ணி நினைந்திடும் வகையிலும், அவரிடத்தில் பாவ மன்னிப்பாம் திருவருள் கேட்டு நிற்கும் முறையிலும், 111 பாடல்கள் கொண்ட 'திருவருள் மாலை' என்னும் நூலை அவர் எழுதியிருக்கிறார். நெடுங்காலம் தமிழ் மக்களுக்குப் படிக்கக் கிடைக்காமல் இருந்த இந்நூல் டாக்டர் மா. சேசையா அவர்களால் 1960 இல் பதிப்பித்து உரையுடன் வெளியிடப்பட்டது. இந் நூலின் பழைய ஏடுகள் கிடைக்கப் பெறாமையால், பாடல்களை மனனம் செய்து வைத்திருந்த மரிய சூசை அடிகள் மூலமாக மரியருள் தம்புராசு அடிகள், இவருக்கு முன்பே இந்நூலைத் தொகுத்து வெளியிட்டதாகவும் அறிகிறோம்.

இந்நூலுக்கு முன்னுரை எழுதியுள்ள டாக்டர் மு.வ. இந்நூலில் தம்மைக் கவர்ந்த ஒரு பாடலைச் சுட்டிக் காட்டுகிறார். அது பாறையைப் பற்றிய பாடல். பழைய ஏற்பாட்டுக் காலத்தில் கருங்கற் பாறையைப் பிளந்து பத்துக் கட்டளைகளை இறைவன் எழுதித் தந்ததையும், இஸ்ரவேல் மக்கள் வனாந்தரத்தைக் கடந்தபோது ஒரு பாறையைப் பிளக்கச் செய்து அதிலிருந்து தண்ணீரை அவர் அளித்ததையும், ஆண்டவர் சிலுவையில் உயிர்விட்டபோது பெரும் பாறைகள் பிளந்தகலச் செய்ததையும் இப்பாடலில் கவிஞர் அழகுறக் கூறிச் செல்கிறார்:

*'கருங்கல் பிளந்து வரிவேதந் தந்தனை! கானகத்தில்*
*இருங்கல் பிளந்து தண்ணீர் அளித்தாய்...*
*அருங்கல் ..செய்தாய் ஐயா!...'*

ஆனால் இத்துடன் அவர் நின்று விடவில்லை. இன்னொரு பாறையை அவர் குறிப்பிட்டுக் காட்டுகிறார். அந்தப் பாறையையும் ஆண்டவர் பிளந்தருள வேண்டும் என்று வேண்டுகிறார். அது என்ன பாறை? பாடலின் இறுதிப் பகுதி அதைக் கூறுகிறது:

*'......அன்பு மனப்*
*பெருங்கல் பிளந்திடச் செய்வ துனக்குப் பெரிது அல்லவே' (11)*

இந்த வகையில் பக்திக் கவிஞர்களுக்கே உரித்தான வகையில் தம்மை முழுக்க முழுக்கத் தாழ்த்திப் பணிவன்போடு உருக்கமாகப் பல பாடல்களைப் பாடியிருக்கிறார் இக் கவிஞர். இந்நூலைப் படிக்கும் போது 'சர்வ சமய சமரச'த்திலும், சமுதாய சீர்திருத்தத்திலும் ஈடுபாடு கொண்டு அரசு ஊழியராகப் பணியாற்றிய இப்பெரியார் எந்த அளவுக்குத் திருவிவிலியத்தை—சிறப்பாக—நற்செய்தி நூல்களைப் படித்திருக்கிறார் என்பதை நன்கு காண முடிகிறது. கீழ்வரும் பாடல் அவர் நற்செய்தி நூல் நிகழ்ச்சிகளைத் தொகுத்துச் சொல்லும் அழகை நமக்குத் தெரிவிக்கிறது:

*'கறுத்த பெரும்பவம் உள்ளேன் எனினுமுற் காலத்திலே*
*சிறுத்த இடைமத லேனாள் பிழைகளும் சீடனுனை*
*மறுத்த பிழையும் வலபாரி சக்கள்ளன் வன்பிழையும்*
*பொறுத்ததுபோல் ஐயனே என்பிழை யையும் பொறுத்தருளே' (4)*

ஆண்டவரின் பிறப்பு நிகழ்ச்சியைப் பற்றி நினைந்து இவர் எழுதும் பாடல்கள் சிலவற்றில் வேறு எந்தக் கவிஞரும் எண்ணிப் பார்த்துக் கூறிடாத ஒரு அழகிய கருத்தைத் தெரிவிக்கின்றார்:

*'பொல்லாப் பசாசு புரியும் இடர்களைப் போக்கியிங்கண்*
*எல்லாப் பிரஜைதானும் ஈடேறவே விலங் கெய்து கொட்டில்*
*இல்லாப் பரன்வந்த போதுஎழில் மேனியை ஏந்தி வைப்*
*புல்லாய்ப் பிறந்திலமே நெஞ்சமே இந்தப் பூதலத்தே.' (18)*

ஆண்டவர் குழந்தையாய்ப் பிறந்தபோது அவருடைய அழகிய உடலைத் தாங்கும் பேறு பெற்ற முன்னணைப் புல்லாக தாம் பிறந்திடவில்லையே என்று ஏங்குகிறார். அழகான கற்பனையோடு பக்தி ஆர்வம் படைத்த நெஞ்சத்திலிருந்து பெருக்கெடுக்கும் அன்புணர்வும் இப் பாடலில் வெளிப்படுகிறது, இல்லையா? ஆண்டவர் நம்மைத் தேடி உலகிற்கு வந்த விந்தையை நம் நாட்டுப் பண்பாட்டை ஒட்டி 'நான் உன்னை நாடி வர வேண்டியதிருக்க, நீர் என்னைத் தேடி

வந்தது விந்தையே!' என்று பாடுகிறார். இறைவனைப் பல்வகைகளில் தேடித் திரியும் நாட்டத்தை மனிதன் இயல்பாகப் பெற்றவன் என்பதையும் பெரியோரைச் சிறியோர் தேடிச் செல்ல வேண்டியதுதான் முறை என்பதையும், தமிழ்ப் பண்பாட்டுநெறி நின்று ஏற்றிடும் இக்கவிஞர் ஆண்டவர் தம்மைத் தேடி வந்த விந்தையை நினைந்திடும்போது மிக அழகாக, 'விருந்தினரைத் தேடி வீட்டார் அலைவதுண்டோ?' என்று கேட்கிறார்:

*'தனைநாடி வந்தவர்க்கேதட நீர்தருஞ் சற்குணர்தம்*
*மனைநாடி வந்தவர்க் கேயீகு வர்பெரு வாழ்வுபெற*
*உனைநாடி நான்வர வேண்டாது உலகத்து உடலமெடுத்து*
*எனைநாடி நீவந்த தென்ன பெருந்தகை என் ஐயனே!' (25)*

ஆண்டவரின் உதிரம் விலைமதிப்பற்றது என்பதைத் திருமறை வாயிலாகத் தெரிந்து கொண்ட இக் கவிஞர், அவ்வுதிரத்தில் ஒரு சிறு துளியேனும் தமக்குப் பலனளிக்கும் வகையில் கிடைக்க வேண்டும் என்று இன்னொரு பாடலில் தம்முடைய ஏக்கத்தை எடுத்துச் சொல்கிறார். இதோ அந்தப் பாடல்:

*'நிலையற்ற வாழ்வை நிலையென வெண்ணுமென் நீள்வினைகள்*
*மலையத்த னையுண் டெனினுமுன் நீயிந்த மண்ணிற்சிந்தும்*
*விலையற்ற நின்னுதி ரத்தோர் துளிப்பலன் வேண்டினன் யான்*
*அலையற்று அமரும் அருட்கட லேதந் தருள்புரியே '*

இக் கவிஞர் 'சர்வ சமய சமரச' உள்ளத்தோடு பாடியிருக்கும்,

*'உன்னையெனக்குக் காட்டையா—காட்டாமல் சும்மா*
*ஒளித்தென்ன விளையாட்டையா'*

என்று துவங்கும் பாடலின் அனுபல்லவியை,

*'தன்னைப் பாராமலே தன்பிள்ளை கண்மூடி*
*தனம்ஊட்டுந் தாயுண்டோ சாமிநீ தயைகூடி'*

என்று அமைத்திருக்கிறார். எந்தத் தாயும் தன் முகத்தைத் தன் குழந்தைக்குக் காட்டாமல் அதற்குப் பாலூட்ட மாட்டாள் என்று கதறி இறைவனின் திருக்காட்சிக்காக ஏங்கும் வேதநாயகர் இதே கருத்தை ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைப் பார்த்தும் சொல்லுகின்றார்!

*'ஊட்டும் அனைதன் உருவத்தைப் பிள்ளைக் கொளிப்பள் கொலோ'*

என்று துவங்கும் பாடல் சமரசத்தை மீறிக்கொண்டு கிறிஸ்துவை நோக்கி எழும் இவருடைய நெஞ்சத்தை நமக்குக் காட்டுகிறது! அந்தப் பாடலின் பிற அடிகளையும் படித்து மகிழலாம்.

*'நாட்டு மகில சராசர மும்பல நன்மைகளும்*
*நீட்டும் அரிய தயைக்கட லேநின்னை நீயெனக்குக்*
*காட்டுத லின்றியென் கண்கட்டி விட்டதெக் காரணமே '*

வேதநாயகரின் அரிய படைப்புகளுள் 'பெண்மதிமாலை' குறிப்பிடத் தகுந்ததாகும்.

1. தேவே அமரர்கள் கோவே அறங்கள் செழித்துவளர்
   பூவே நறுமணப் பூவே பெரிய புராதனனே
   காவே புவனகத் தாவேநின் செம்பொன் கழற்கணியாய்
   பாவே பகரஎன் நாவே இருந்தருள் பாலிப்பையே.

2. அன்னையைப் பாலுணும் சேய்மறந் தாலும் அடர்சுடரோன்
   தன்னை வனம் மறந்தாலும் நானென் தலைமயங்கி
   என்னையு மேமறந் தாலும்மெத் துன்பங்க ளெய்தினும் நான்
   உன்னைஎன் னாளும் மறவா வரமருள் உத்தமனே.

3. காவை விடாது குயிலெந்த நாளும் கடிகமழும்
   பூவை விடாது மதுகரம் தீயர் புடைக்கினுமே
   ஆவை விடாதிளம் கன்றடி யேனுன் அரிய திருச்
   சேவை விடாம லிருக்க வரமருள் சேசையனே.

4. கறுத்த பெரும்பவம் உள்ளேன் எனினுமுற் காலத்தில்
   சிறுத்த இடைமத லேனாள் பிழைகளும் சீடனுனை
   மறுத்த பிழையும் வலபாரி சக்கள்ளன் வன்பிழையும்
   பொறுத்ததுபோல் ஐயனே என்பிழை யையும்பொ றுத்தருளே.

5. பாவம் கருப்பட்டி மோகம்வெல் லக்கட்டி பாதகம்பால்
   கோவம்நற் கற்கண்டு குரோதம் சருக்கரை குற்றமெலாம்
   சீவன மாம்மகங் காரமுலோ பம்தித்திக் கும்நறுந்தேன்
   தாவம் உறுவடி யேனுக்கை யாவித் தராதலத்தே.

6. எண்ணுங்கொள் ளாவென் பவங்களெல் லாந்திரண் டேயெழும்பின்
   மண்ணுங்கொள் ளாதுயர் விண்ணுங்கொள் ளாது வளர்திசையெக்
   கண்ணுங்கொள் ளாது கடிதங்கொள் ளாதிக் கயவனிதம்
   பண்ணும் குறைகள் பொறுத்தருள் வாய்மரி பாலகனே.

7. தூயவர் தாம்தமைத் தீய ரெனப்பொய் சொலல் வழக்காம்
   ஆயவர் போலெனை யெண்ணவொண் ணாதிவ் அகலிடத்தில்
   தீயவ ரில்பெருந் தீயவ னானிதுதிண் ணம்திண்ணம்
   மாய மலப்பிணி தீர்த்தருள் ஞான வயித்தியனே.

8 கூடும் பிரளய காலத்தில் நோயன் குடும்பமதை
   நீடும் அருளொடு காத்தனை நேயரை நேமிநின்று
   நாடும் கரைதனில் சேர்த்தனை நாளு நவைப்பரவை
   ஆடும் எனையும் கதிக்கரை சேர்த்தருள் அற்புதனே.

9. தொடங்கும் கரும முடியுமுன் தீரர்கள் சோர்ந்துவிடார்
   இடங்கொள் உலகத்தில் நீவந் ததுவும் இறந்ததுவும்
   மடங்கொள் எனைக்கதி சேர்க்கவன் றோவந் தமாகருமம்
   அடங்கலு மேமுற் றிடவருள் வாயென தாண்டவனே.

10 வந்தியர் புந்தியில் வேட்பர் தினமும் மதலைதனை
நந்திய வெம்பிணி யாளர் விரும்புவர் நற்சுகத்தை
முந்திய கண்களை வேட்பரெஞ் ஞான்று முழுக்குருடர்
அந்தியும் சந்தியும் நான்வேட்ப துன்னடி யாண்டவனே.

11. கருங்கல் பிளந்து வரிவேதந் தந்தனை கானகத்தில்
இருங்கல் பிளந்து தண்ணீ ரளித்தாய்இன் இறந்திடுங்கால்
அருங்கல் பிளந்திடச் செய்தாயை யாவென தன்புமனப்
பெருங்கல் பிளந்திடச் செய்வ துனக்குப் பெரிதலவே.

12. பாரழித் தாய்புன லாலே வெங்காமப் பழிசுமந்தோர்
ஊரழித் தாய்கன லாலே செருக்கியு உனைப்பகைத்தோர்
போரழித் தாயவர் பேரழித் தாயகம் பூண்டசுரர்
சீரழித் தாயையா தப்புவ ராருன் சினமிகுனே.

13. நாய்க்கு மகுடம் புனைந்தது போலைய னேநரகப்
பேய்க்கடி மைப்பட் டிருந்த நரர்கள் பிழைக்கமரித்
தாய்க்கு மகவெனத் தோன்றிப் பல்துன்பம் தாங்கியுயிர்
மாய்க்கு முனக்குக்கைம் மாறுமுண் டோசுரர் மன்னவனே.

14. நீயே பரிசுத்த னானேய சுத்த நிறைபுழுவாம்
நாயே னடியவ நீயேஎன் ஆண்டவன் நன்றிகெட்ட
தீயேனை ஓர்பொரு ளாக மதித்துச் செகத்தினில்வந்
தாயேயென் னால்தந்தை தாயே உனக்கென்ன சாதகமே.

15. மலைக்கும் அணுவுக்கும் எத்தனை தூரம் மகிமையெல்லாம்
நிலைக்கும் உனக்கும் எனக்கும்என் சம்பந்த நீள்முள்முடி
தலைக்கும் அணிந்து சிலுவை சுமந்து தரியலர்செய்
கொலைக்குந் துணிந்தனை யேயெனக் காகக் குணக்கடலே

16. அட்டதி சைகளும் அண்டம கண்டமும் ஆக்கித்துரைப்
பட்டமுற் றோய்பஞ்ச மோவுனக் கோரிடம் பாய்பசுவின்
கொட்டமும் கந்தையும் புல்லுமுன் னையர் கொடுத்தனரே
துட்டர் பொருட்டிந்த நட்டமுற் றாயொரு தூயவனே.

17. தீயே பிடித்த மனையிடைச் சாகுந்தஞ் சேய்பிழைக்கத்
தாயே யெனினும் பிதாவே யெனினுமுட் சார்குவரோ
நாயே யெனுநரர் தீநர கந்தப்பி நாளுமுய்ய
நீயே யுயிரைத்தந் தாயே நிலைபெறு நித்தியனே.

18 பொல்லாப் பசாசு புரியு மிடர்களைப் போக்கியிங்கண்
எல்லாப் பிரசையு மீடேற வேவிலங் கெய்துகொட்டில்
இல்லாப் பரன்வந்த போதெழின் மேனியை யேந்திவைப்
புல்லாய்ப் பிறந்திலமே நெஞ்சமே யிந்தப் பூதலத்தே.

19. உடைய பெருஞ்செல்வ மெல்லாந் துறந்தன் பொடுவிலங்கின்
கிடையினில் நாதி பிறந்த வதிசயங் கேள்வியுற்றுப்
புடைனெருங் கிக்கண் ணாரத் தரிசித்துப் போற்றிநின்ற
இடையரிற் சேர்ந்திருந் தோமிலை யேமன மேமுனமே

20 மேலைந கர்விட்டு வேலை யுலகில் விளங்குவளர்
சாலையி லேயொரு மூலையி லேபுல்லிற் சாய்ந்துகந்தற்
சேலையி லேசிறு வாலையி லேநர தேவன்வந்த
காலையி லேகண் டுவக்கப்பெற் றோமிலை கன்னெஞ்சமே.

21. பூவுங் கடந்து மனமுங் கடந்து புலன்கடந்து
கோவுங் கடந்தண்ட கோடிகடந்து குணங்கடந்து
யாவுங் கடந்த வகண்டாகண் டாநினை யெந்தவண்ணம்
பாவுங் கடந்த புகழ்த்தா யுதரம் பரித்ததுவே.

22 ஆயே துவின்றி யகிலாண்ட மும்பெற்ற வாண்டவனே
தாயே துனக்கொரு தந்தையு மேது சமர்புரியப்
பேயேது பின்னும் பகையுற வேதுமெய் பேசிடுங்கால்
நோயே தமரர்க ளாலுமுன் சீர்த்தி நுவலரிதே.

23 கோவரை வானவ ராலே யழைத்துங் குவலயமாள்
மூவரைத் தாரகை யாலே யழைத்து முகமலர்ந்து
தேவருங் காணருங் காட்சி கொடுத்தனை தீதறவே
மேவருங் காட்சி யெனக்குங் கொடுத்தருள் வித்தகனே

24. பொன்னை யுயிர்மெய்யைப் பூதங்க ளைப்பல் பொருளைத்தந்து
பின்னையு முன்னையுந் தந்த வுனக்குப் பிரியமுடன்
என்னையு மென்பொருள் யாவையு மீயினு மேதுரும்பை
அன்னை யுதவிக்கு மாறாக வீதலொப் பாமையனே.

25 தனைநாடி வந்தவர்க் கேதட நீர்தருஞ் சற்குணர்தம்
மனைநாடி வந்தவர்க் கேயீகு வர்பெரு வாழ்வுபெற
உனைநாடி நான்வர வேண்டா துலகத் துடலமெடுத்
தெனைநாடி நீவந்த தென்ன பெருந்தகை யென்னையனே.

26. கொடியவெ ரோத னுனைக்கொல்ல வெண்ணிக் குழவிகளை
மடிய வதைத்திட்ட போதுனக் காச்செத்த மாசிலர்போல்
நெடிய வுலகத்தி 'னின்பொருட் டென்னுயிர் நீங்கிடினும்
அடிய னதற்கிடை யாமற் றிடமரு ளாரணனே.

27. சிந்தை மயங்கியுன் றாயுங்கைத் தாதையுந் தேடிடவுன்
தந்தையின் காரியம் பார்க்கப்பொன் னாலயந் தங்கினையே
நிந்தை யுறும்புவி வாழ்வை வெறுத்து நிரந்தரநான்
எந்தையுன் காரியம் பார்க்க வரமரு ளென்குணனே.

28. பொன்னையும் வேறு பொருளையுங் காட்டிப்பு வியின் முன்னம்
நின்னையுஞ் சோதித்த நீசப் பசாசு நெறிகைவிட்ட
என்னையுஞ் சோதிக்க வஞ்சுங் கொலோமற் றிதுசெய்வஞ்சம்
தன்னைக் கதிர்முன் பனிபோற் றடுத்தருள் சாதகனே

29. உதிர வெயர்வை சொரிந்துதண் காவி லுளமுருகி
எதிர வழைத்துப் பிதாவேயுன் சித்த மெனவமைந்தாய்
அதிரத் துயர்வரும் போதுன் சித்தத்துக் கமைந்துபத்தி
முதிர வெனக்கு வரமருள் வாயற மூர்த்தியனே

30 சூரிய னுக்கொரு சூரிய னேயதி சுந்தரஞ் சேர்
சீரிய தேகத்தைக் கட்டி யடித்துச் சினந்துவைது
காரி யுமிழ்ந்து சிலுவையி லேற்றிக் கசடர்செய்த
பாரிய வாதைக்கெல் லாங்கா ரணமெங் கள்பாதகமே

31. நாட்டிக் கிளைக்கும் புகழுடை யோய்பண்டு நாடியுனைக்
காட்டிக் கொடுத்தவன் யூதா சலக்கை கழுவியுனைச்
சாட்டிக் கொடுத்தவன் போஞ்சுவி லாத்தல சாமியுனை
ஆட்டி வதைத்தவர் யூத ரலவடி யேனிசமே.

32. ஓரே துவுமற்ற தேவேமுன் னீயிங் குடலெடுத்து
நேரேது மற்ற பிதாவுக் குனைப்பலி நேர்ந்திலையேல்
ஊரேது மானிடர் பேரேது வாரி யுடையுடுத்த
பாரேது பூதப் பகுப்பேதெல் லாம்வெந்து பாழ்படுமே.

33. பூமியில் வாழ்பவ ரெல்லா நரகம் புகுந்தழினுஞ்
சாமி யுன்க்கத னாற்குறை யேது தராதலத்தோர்
தாமிக வாழினு மேயுனக் கென்பயன் சார்துயர் நீ
நேமியி லுற்றதெம் மேல்வைத்த நேச நிமித்தியமே.

34. மென்மலர் மோதினுங் கொப்புளிக் குந்திருமெய்யைப் பற்றி
வன்மன யூதர்கள் வாதித்த போதெந்த வண்ணமந்தப்
பொன்மய மேனி துடித்தது வோநின் புகழ்பெறுந்தாய்
தன்மன மெவ்வண நொந்தது வோவுயர் தற்பரனே.

35. விண்டலந் தன்னி னரரை யுயர்த்த விரும்பியையா
மண்டலந் தன்னி னரனாகித் தாழ்ந்தனை மாசொழிந்து
தொண்டர்கள் பேரின்ப வாரியிற் றோய்ந்துசுகிக் கும்வண்ணம்
அண்டர்க னாயக னேதுன்ப வாரிதியி லாழ்ந்தனையே.

36. ஊறா விரும்பு மனல்பட் டிளகு முளிக்கிறுங்கல்
மாறா வருட்பர னம்பொருட் டுற்ற வருத்தமெண்ணி
ஆறாக்கண் ணீர்மழை பெய்கிலந் தீமெழு காகிநிதம்
நீறா யுருகில நெஞ்சேநம் போலெவர் நீசர்களே.

37. அச்சய வான்விட்ட கிலத்துற் றாயுன தையனண்டத்
தச்சனை விட்டொரு தச்சனை சார்ந்தனை சம்பெத்தெல்லாம்
துச்சமென் றெண்ணித் தரித்திரம் பூண்டனை தொல்லுலகில்
நிச்சய மாகத் தரித்திர மேசெல்வ நித்தியனே.

38 விண்டங்க மரரரசே நரருமுய்ய மேதினியிற்
பண்டங்க மாய்வந்த போதுனை யூதர்கள் பற்றித்தசை
கண்டங்க ளாயவிழத் தாக்கிய போதுன் கழலிலொட்டும்
அண்டங் களிலடி வீழா திருந்த ததிசயமே.

39. தேசப்பட் டங்கட லைத்தடு மாறச்சிதைத் தீனர்க்கு
நீசப்பட் டங்கட்டி நீவிளை யாடு நிமித்தமன்றோ
நாசப்பட் டம்பெற்ற யூதரு னக்குமுன் னாளிற்பரி
காசப்பட் டங்கட்டி யேவிளை யாடினர் காவலனே.

40 கையா யிரம்பவங் காலா யிரம்பவங் கண்செவியாய்
மெய்யா யிரம்பவஞ் செய்தலு மன்றியும் மெய்மினுக்கி
மையா யிரமடி யேன்செய்வ தாலுன் வடிவமெய்யில்
ஐயா யிரமடி நீபட்ட காரண மாரணனே.

41 சுண்டு விரனுனி யிற்பல வண்டங்க டூக்கிடுநீ
பண்டு சிலுவை சுமக்க வலியின்றிப் பாரிலஞர்
கொண்டு விழுந்ததை யுன்னிடுங் காலண்ட கோடியினும்
மண்டு மெம்பாவச் சுமைபெரி தாகு மனோகரனே

42. கரையறு மின்பக் கடனீ யிறந்தவக் காலத்திலே
தரையு மதிர்ந்தது சூரிய னீத்தது தன்னொளியைத்
திரையுங் கிழிந்தது கல்லறை வாய்கடி திறந்தனமா
வரையும் பிளந்ததென் னெஞ்சிள காதென்ன மாயமிதே.

43 ஒருசந்தி தன்னிலன நீக்கிப்பல் பண்ட முண்ணுதலால்
இருசந்தி யாகிப் பலசந்தி யாகி யெழுசந்தியாய்த்
தெருசந்தி யாவுஞ் சிரிக்குமென் றீவினை தீர்த்தலகை
உருசந்தி யாவண்ண நாயேனை யாண்டரு ளுத்தமனே.



# 8

# போற்றித் திருஅகவல்

**ஆசிரியர் : எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை (1827-1900)**

**அறிமுகம் : ஜோஸபின் டோரதி**

கிறிஸ்தவக் கம்பன் என்று புகழ்ந்துரைக்கப்படும் கிருஷ்ணபிள்ளை கி.பி. 1827 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 23 ஆம் நாள் திங்கட்கிழமை திருநெல்வேலிச் சீமையைச் சார்ந்த கரையிருப்பு என்னும் சிற்றூரில் சங்கரநாராயணன், தெய்வநாயகி அம்மையார் எனும் பெற்றோருக்கு மூத்த மகனாகத் தோன்றினார். தென்கலை வைணவ வேளாளர் மரபில் பிறந்த இவருக்கு 1839 ஆம் ஆண்டு இவர்களின் சமய மரபின்படி வரகுலக் கந்தாடையண்ணன் என்னும் ஆசாரியரைக் கொண்டு முத்திரா தாரணம் செய்து வைத்தனர்.

மேலும், இவரது பதினான்காவது வயதில் ஒன்பது வயது முத்தம்மாளைத் திருச்செந்தூரில் மணமகளில்லத்தில் மணஞ்செய்து வைத்தனர். தமது பதினெட்டாம் வயதில் நல்லூர்க் கிறிஸ்தவர்களைத் துன்பத்திற்கு ஆளாக்கினார். 1845 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் குடும்பத்தோடு குடியேறிய கிருஷ்ணபிள்ளை திருப்பாற்கடல் நாதக் கவிராயரிடம் கல்வி கற்றுத் தமிழ்ப் புலமை பெற்றார். 1853 ஆம் ஆண்டு சாயர்புரம் திருமறைக் கல்லூரியில் பேராயர் டாக்டர் கால்டுவெல் அவர்களால் பணியிலமர்த்தப்பட்டார்.

இங்கு பணியாற்றி வரும் நாளில் திரியேக தேவனின் ஐந்துகாயத் திருக்குமரனால் தடுத்தாட்கொள்ளப்பட்டு 1857 இல் திருமுழுக்குப் பெறும் ஆவலில் சென்னை வந்தெய்தினார். இங்கு 'தினவர்த்தமானி' எனும் இதழின் துணை ஆசிரியராகவும், மாநில உயர்நிலைப் பள்ளித் துணைத் தமிழ்ப் பண்டிதராகவும் பணியாற்றினார். 1858 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 18 ஆம் நாள் சென்னை மயிலாப்பூரிலுள்ள 'தூய தாமசு திருச்சபையில்' என்றி ஆல்பர்ட் கிருஷ்ணபிள்ளை என்ற பெயரில் திருமுழுக்குப் பெற்றார். அது முதல் எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை என்றே அழைக்கப்பட்டு வருகிறார். ''கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்'' (அப். 16:31) என்ற வேத வசனத்தின்படி அவரது வீட்டார் அனைவரும் திருமுழுக்குப் பெற்றுக் கிறிஸ்தவ ராயினர்.

1876 ஆம் ஆண்டு பாளையங்கோட்டைத் திருச்சபைத் திருத்தொண்டர் கழகத்தினர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியரானார். பின்னர் 1886 இல் திருவனந்தபுரம் மகாராசர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் பொறுப்பினை ஏற்றுக் கொண்டார். அக்காலத்தில் பேராசிரியர் ராவ் பகதூர் சுந்தரம் பிள்ளை இவருடன் பணியாற்றிய தத்துவப் பேராசிரியராவார். அவர் மனோன்மணீயமும் இவர் இரட்சணிய யாத்திரிகமும் எழுதியது சமகாலமே. வேதநாயக

சாஸ்திரியார், மாயூரம் வேதநாயகம் பிள்ளை, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆகியோரும் இவரது சமகாலத்தவர்களே. இறுதி மூச்சு வரை (1892-1900 கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப் பதிப்பாசிரியர்) ஆசிரியப் பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்ட எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை 3.2.1900 அன்று இறையடி நிழல் எய்தினார்.

கிருஷ்ணபிள்ளையின் படைப்புகளில் மிகவும் புகழ்பெற்ற இலக்கியம் இரட்சணிய யாத்திரிகம் எனும் காப்பியமாகும். ஜான் பனியனின் 'பில்கிரிம்ஸ் புராகிரஸ்' எனும் நூலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட இந்நூல் ஒரு முற்றுருவகக் காப்பியமாகும். இந்நூல் 3766 பாடல்களைக் கொண்டது. காப்பியக் கவிஞர்களான கம்பரையும் சேக்கிழாரையும் பின்பற்றி இலக்கிய நயம் ததும்பும் வகையில் இரட்சணிய யாத்திரிகத்தைப் படைத்துள்ளார். கிறிஸ்தவக் கம்பன் எனச் சிறப்புடன் அவரை அழைப்பதற்கு இந்நூல் அடிப்படையாகக் காணப்பட்டது.

மேலும் கிருஷ்ணபிள்ளை போற்றித் திருஅகவல், இரட்சணிய மனோகரம் எனும் செய்யுள் நூல்களையும், இலக்கணச் சூடாமணி, நான் கிறிஸ்துவைக் கண்ட வரலாறு, இரட்சணிய சமய நிர்ணயம் எனும் உரைநடை நூல்களையும், காவிய தரும சங்கிரகம் எனும் தொகுப்பு நூலையும் வெளியிட்டுள்ளார். இவர் எழுதிய இரட்சணியக் குறள், இரட்சணிய பாலபோதனை ஆகிய நூல்கள் கிடைக்கவில்லை.

இறைப்பணியும், தமிழ்ப்பணியும் ஆற்றிய எச்.ஏ கிருஷ்ணபிள்ளையின் போற்றித் திரு அகவலின் கையெழுத்துச் சுவடி 1884 க்கு முன்னர் எழுதப்பட்டது. இச்சுவடியில் காணப்படும் தலைப்பு அகவல் என்பதே. ஆனால் மாணிக்கவாசகரின் திருவாசகப் போற்றித் திருஅகவல் போன்ற ஈரடி ஓரெதுகை அமைப்பும், வடலூர் வள்ளலாரின் 'அருட் பெருஞ்சோதி அகவல்' போன்ற ஈரடி ஓரெதுகைக் கண்ணி அமைப்பும் கொண்டதாக விளங்குவதால் இந்நூலுக்குப் 'போற்றித் திருஅகவல்' என்று தாம் பெயர் சூட்டியதாக டாக்டர் வீ. ஞானசிகாமணி 'போற்றித் திருஅகவல்' நூலின் பதிப்புரையில் குறித்துள்ளார்.

இரட்சணிய யாத்திரிகம் 'உலகம்' எனும் சொல்லுடன் தொடங்குவது போன்று போற்றித் திருஅகவலும் 'உலகெலாம் பரவும்' எனத் தொடங்குகிறது. மொத்தம் 106 அடிகளையும் 53 கண்ணிகளையும் கொண்ட இந்நூலின் பாடற்பொருளின் பெரும்பான்மைப் பண்பு கருதி அகில காரண ஆண்டவர் (கண்ணிகள் 1-11) குமாரக் கடவுள் (12-14) பரிசுத்த ஆவியாகிய கடவுள் (15-27) கிருபாசன மூர்த்தியின் மகிமை (28-38) அவருடைய தெய்வீக நலன்கள் (39-53) என்று பகுத்துள்ளார் டாக்டர் வீ. ஞானசிகாமணி அவர்கள்.

கடவுள் மூவராய்த் தம்மை மனிதருக்கு வெளிப்படுத்திய மனிதாவதார நிலைகள், அவரது மங்கள குணங்கள், இறைவனின் மாண்புகள், வல்லமைகள், அருட்பாலிப்புகள், மனிதனின் வீழ்ச்சி, மீட்சி, மாட்சி, மண்ணிலே கடவுள் துதி, மண்ணவரும் விண்ணவரும் இணைந்து கடவுளைப்போற்றுதல், விண்ணிலே கடவுளைப் பரவல், மண்ணவன் விண்ணவனாகிக் கடவுளைப் புகழ்தல் முதலிய பல கருத்துகளைப் படிப்பார் தெளிவுறப் புரிந்து கொள்ளும் வகையில் ஆசிரியர் பாடியுள்ளார்.

இந்நூல் மாணிக்கவாசகரின் போற்றித் திருஅகவல் போன்று அமைந்துள்ளது. திருவாசகத்தின் தாக்கத்தினை இந்நூலில் காணலாம். இந்நூலில் வடமொழிக் கலப்பு அதிகமாகவே உள்ளது. போற்றித் திருஅகவல் தமிழ் மரபுகளின் அடிப்படையில் கிறிஸ்தவக் கோட்பாடுகளை வெளிப்படுத்தும் இறை இலக்கியமாகவும், பக்திப் பாடல்களின் தொகுப்பாகவும் அமைந்துள்ளது.

உலகெலாம் பரவு மொருதனி முதலாய்,
அலகிடற் கரிதாய், அகிலகா ரணமாய், 1

ஒப்பற உயர்ந்த வொருதிரி யேக
மெய்ப்பரம் பொருளாய், விமல வித்தகமாய், 2

அநாதி நித்தியமாய், அகளங்க விபுவாய்,
மநாதிகட் கெட்டா மௌனநன் னிலையாய், 3

போக்கு வரவு பொருந்தா தெவற்றொடும்
தாக்காது நின்ற தனியேக பரமாய், 4

முப்பொழு திகந்து முன்னுற வனைத்தும்
தப்பிலா துணரும் சர்வஞா னத்தொடு 5

திருவுளம் நினைத்த செயலெலா முடிக்கும்
பெருமைசே ராற்றல் பிறங்கிய சித்தாய் 6

வெஞ்சுடர் கோடி விரிந்தென மகிமைச்
செஞ்சுடர் விரிக்கும் தேஜோ மயமாய், 7

ஆழமும் நீளமும் அகலமு மினையவென்
றூழிநின் றளப்பினு முறைவிட வரிய 8

கருணை யாறன்பின் கடல்புக மண்டி
அருணனி கதித்த அலைகிளர்ந் தெழும்பி, 9

பாராதி யண்டப் பரப்பெலாம் புதைத்த
பேரா னந்த பிரளயா கரமாய், 10

சங்கற்ப மாத்திரம் ஜகமெலாம் சிருஷ்டித்
தங்கவை புரக்கும் அருட்குண நிதியாய் 11

சற்பனை யாலே விற்பன மிழந்து
கற்பனை கடந்த துற்ப்வந் தொலைய, 12

அருளுரு வாகி யிருளுறு மவித்தை
மருளற வொழித்துத் தெருளுறத் தெருட்டி, 13

இத்தரா தலத்துக்கு ரக்ஷணை யமைத்துப்
புத்துயி ரளிக்கும் புண்ணிய மூர்த்தமாய், 14

துன்னெறி யாய பன்னெறி யொழுகும்
புன்னெறி மாக்களை நன்னெறிப் படுத்தி, 15

பரிதியென் றொளிரும் சுருதியஞ் சுடரை
இருதயத் தேற்றி யொருதலை யாக(த்), 16

தீதிலா நித்திய ஜீவ பரியந்தம்
பாதுகாத் தளிக்கும் பவித்திராத் துமமாய், 17

இந்நிலை யறியா வேழை மாக்கள்
பன்னிய தெய்வப் பதர்பே லாது, 18

காம வெகுளி மயக்கங் கடிந்து,
தீமையை முருக்கிச் செம்மையைப் பெருக்கி, 19

நேமியைப் புரக்கும் நீதாதி பதியாய்,
நாம ரூப ரஹிதா விகாரியாய், 20

சர்வோத் கிருஷ்ட சர்வபரி பூரண
சர்வா திக்க சச்சிதா னந்தமாய், 21

துன்னிய பௌதிகத் தோற்றமும் ஒடுக்கமும்
மன்னிய சீலமும் வடிவுமென் றினைய 22

ஆதி யமைப்பி லணுபிச காமலெப்
போதுமோர் படித்தாய்ப் புரையற வொழுகலில், 23

ஜெகத்சர் வங்களுந் திவ்வியமங் களகுண
மகத்துவம் விளக்கி வரன்முறை வணங்க, 24

பாவசா கரத்தில் படருறீ யமிழ்ந்த
ஜீவகோ டிகள்புனர் ஜென்மமா யுய்ய(க்) 25

கடைக்கணித் தருளிய கருணையை உன்னி,
மடக்கொடி சீயோன் மகளுளங் கசிந்து, 26

காலையும் மாலையும் கைகுவித் திறைஞ்சிச்,
சீலமொடு போற்றி, ஜெயஜெய ஜெயவென, 27

கற்றறிந் தடங்கிக் கருதிமுப் பகையை
முற்ற முனிந்த முதுதவ முநிவரும் 28

எல்லாக் கனமும், எல்லா மகிமையும்,
எல்லாப் புகழும், எல்லாத் துதியும், 29

எல்லாம் வல்ல எந்தா யுனக்கென்
றல்லாய்ப் பகலாய் அனவரத மும்தொழ(ப்), 30

பானுமின் மினியெனப் பரந்தொளி கிளர்ந்த
வானக வாணரும் மாபெருந் தூதரும், 31

ஒருவா அன்பொடு வந்துசந் நிதியில்
திருவோ லக்கமாய்ச் சேவித் திறைஞ்சி, 32

அதிபாரி சுத்தர்! அதிபாரி சுத்தர்!
அதிபாரி சுத்தர்என் றகமகிழ்ந் தேத்த, 33

முறைமுறை அந்தரத் துந்துமி முழங்கத்,
துறைதொறுந் துறைதொறுஞ் சுருதியின் னிசையெழ, 34

சங்கீத கானந் தலைத்தலை மயங்க,
மங்கல வாழ்த்தொலி வயின்றொறு மலிய, 35

சத்தியங் கதிக்கத் தருமந் தழைக்க,
நித்திய சுகிர்த நீணில மல்க, 36

விண்ணு மண்ணும் விருப்புடன் போற்றிக்
கண்ணு மனமுங் கருத்துங் களிக்க(க்) 37

கருதரும் பரமா காயத் தும்பர்
ஒருகிரு பாசனத் துவப்புடன் வீற்றிருந்(து), 38

இலங்கிய பேரரு ளெந்தாய் போற்றி!
நலங்கொளும் பரம நாயகா போற்றி! 39

ஒன்றுமூன் றாய வொருவா போற்றி!
என்றென்று மாறா இறைவனே போற்றி! 40

சர்வ லோக சரணியா போற்றி!
சர்வ ஜீவ தயாபரா போற்றி! 41

அன்புரு வாய அப்பனே போற்றி!
மன்பதைக் கிரங்கிய வரதனே போற்றி! 42

தேவ தேவ ஜெகோவா போற்றி!
மூவா ஏக முதலே போற்றி! 43

முந்தா ரணநூலில் மொழிவிளக் கொளிரும்
சிந்தா சனத்திற் றிகழ்வாய் போற்றி! 44

இனிவருங் கோப மெமைத்தகிக் காமல்
தனியொரு மகவைத் தந்தாய் போற்றி! 45

பழுதிலா வேத பாரமார்த்தி கத்தை
வழிவழி காத்து வகுத்தாய் போற்றி! 46

மெய்யருள் வேத விழுச்சுடர் கொளுத்திப்
பொய்யிருள் கடியும் புராதனா போற்றி! 47

ஆவது கருதா அறிவின் மாக்கள்
சாவது கருதாத் தக்கோய் போற்றி! 48

தீவினை யென்னுஞ் சிறையிடைப் பட்டோர்
வீவினை விலக்கி மீட்டாய் போற்றி! 49

பொய்வழி யுழன்ற புலையரே முய்ய
மெய்வழி காட்டிய வித்தகா, போற்றி! 50

இடர்க்கட லமிழ்ந்த வேழையே முய்ய
அடைக்கல மாய அப்பனே போற்றி! 51

தீதணு காமல் ஜீவகோ டிகளைப்
பாதுகாத் தளிக்கும் பரமனே போற்றி! 52

நாயினுங் கடையாய் நன்றிகொன் றேற்குத்
தாயினு மினிய தற்பரா போற்றி! *53*



# 9

# முத்திவழி அம்மானை

**ஆசிரியர்: சுவீகரனார்**

**அறிமுகம்: ஆர்.எஸ். ஜேக்கப்**

விவிலியத்திற்கு அடுத்தாற்போல் உலகில் பல மொழிகளில் செல்வாக்குப் பெற்று விளங்குவது ஜான் பனியன் எழுதிய 'Pilgrims Progress' என்ற நூலேயாகும். இங்கிலாந்து நாட்டில் எழுந்த இந்நூலுக்கும், தமிழகத்தின் நெல்லை மாவட்டத்திற்கும் நெருங்கிய இலக்கியத் தொடர்பு உண்டு.

ஜான் பனியன் பன்னிரு ஆண்டுகள் சிறையில் இருந்தபோது பூத்தமலரே 'பில்கிரிம்ஸ் புராகிரஸ்' எனும் நூலாகும். சிறையில் பலமுறை மீண்டும் மீண்டும் விவிலியத்தையே படித்தார். அதிலேயே தோய்ந்தார். ஆன்ம ஈடேற்றத்திற்கான கனவுகள் பல கண்டார். விவிலியத்தையே முதன் நூலாகக் கொண்டு முழு உருவகக் கனவுக் காப்பியம் படைத்தார்.

17 ஆம் நூற்றாண்டில் ஜான் பனியன் எழுதிய சிறந்த நூல், 19 ஆம் நூற்றாண்டில் பரதேசியின் மோட்சப் பிரயாணமாக வந்தது. அந்த அழகு தமிழ், நெல்லைச் சீமையில் வசித்த இருவரைப் பெரும் புலவராக்கியது. இரு சமகாலப் புலவர்களின் உள்ளங்களை அந்நூல் கொள்ளை கொண்டது.

முப்பது வயது வரை வீர வைணவராய் வாழ்ந்த பாளையங்கோட்டை எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை, கற்றுத் துறைபோகிய கல்விமான்களும் போற்றுமாறு 'இரட்சண்ய யாத்திரிகம்' (1894) பாடினார். ஆழ்வார் தோப்பு சுவீகரனார், பாமர இலக்கிய வடிவான அம்மானை இலக்கிய வடிவில் 'முத்தி வழி அம்மானை' (1887, டிசம்பர்) பாடினார்.

நெல்லைத் திருமண்டிலத்திற்குக் கிழக்கே தாமிரபரணி ஆற்றின் வடகரையிலுள்ள பராங்குச நல்லூர் எனப்படும் ஆழ்வார் தோப்பு கிராமத்தில் சுவீகரன் நாடார் என்பார் கிராம முன்சீப்பாக இருந்தார். 'மோட்சப் பிரயாணம்' என்ற நூலைப் படித்து அந்நூலில் வரும் கிறிஸ்தியானின் உடன் பயணியானார். திருமணமாகாத விரக்தனான அவர், மோட்சப் பிரயாண வசன நூலை காவியமாக்கத் துடித்தார். எவ்வகைக் காவியமாக்குவது என்று சிந்திக்கலானார். பாமர மக்கள் கேட்டு மகிழும் வண்ணமாக அமைய வேண்டும் என்று ஆசை கொண்டார். இந்து மக்களின் துக்க வீடுகளில் அம்மானை பாடுவதைக் கண்டிருந்தார். அல்லி அரசாணிமாலை, பவளக் கொடிமாலை முதலிய அம்மானை வடிவக் கதைப்பாடல் நூல்களை நன்கு அறிந்திருந்தார்.

இறை அருளின் பலத்த தூண்டுதல் பெற்று 'மோட்சப் பிரயாணம்' என்ற வசன கதையை 'முத்திவழி அம்மானை' என்ற வசன காவியமாகப் பாடினார். படிப்பறிவு குறைவாயினும் ஆவியில் வரம் பெற்று அம்மானைகளுக்கெல்லாம் பேரம்மானையாக பன்னீராயிரத்திற்கும் மேற்பட்ட நாற்சீரடிகளில் நயம் சொட்டப் பாடியுள்ளார்.

மூலக்கதையைச் சிறிதும் மாற்றாமல் — வசன நடையை கவிதைச் சோலையாக்கி சாகாவரம் தந்துள்ளார். ஜான் பனியனின் உள்ளுணர்வைத் தமிழ் மணத்தோடு தந்துள்ளார். சுவீகரனார் தம் கிராமிய அனுபவங்களை இலக்கியத் தேன் சுவையுடன் திகட்டாமல் தருகிறார்.

எனக்குப் பெண் கொண்ட வழியில் சுவீகரனார் எம் இனத்தார். எனவே, ஆழ்வார்தோப்பு கிராமத்தை நான் நன்கறிவேன். முள் விருட்சங்களான கருவை, உடை மரங்களுக்குப் பேர் பெற்றது ஆழ்வார்தோப்பு கிராமம். முள் மரக் காட்டினுள் 'கொம்மட்டிக்காய்' என்னும் ஒருவகைக் கைப்புக்காய் நிறைய உண்டு. அந்தக்காய் பந்து போலிருக்கும். அதனைக் கொண்டே உவமை இலக்கியம் படைக்கிறார்.

*'குன்று விழும்போது கொம்மட்டிக்காய் தாங்கிடுமோ*
*நின்று விட்டேன் நல்ல நிலையறிய மாட்டாமல்.'*

இது போன்று எத்தனை உவமை நயங்கள். கிராம மக்களின் பழமொழிக்கும் கலை நயத்தோடு புது உயிர் தருகிறார்.

*'சண்டாளன் வாயதுதான் சர்க்கரைக் கொப்பாய் விடினும்*
*கண்டிடுவீர் இங்கிவன் கை கரணக்கிழங்காகும்.'*

என்று பேச்சு மொழிக்கு உயிர் மூச்சு தந்துள்ளார்.

*'போக்குமுட்டிப் பேயா நான் பொல்லாங்கு செய்ததெல்லாம்*
*மன்னித்து விட்டார் மனுவேல் என் தனக்கு'*

எனும் பகுதியில் 'போக்கு முட்டிப் பேயா' என்பது இளக்காரமாகச் சொல்லும் ஒரு கிராமிய வழக்கு. வட்டார வழக்கை ஒரு நூற்றாண்டிற்கு முன்பே இலக்கிய அரியணையில் ஏற்றி பெருமை அளித்துள்ளார்.

துயருற்றோர் சுற்றிச் சூழ அமர்ந்து இந்நூலைப் பாடிக் கேட்டு மகிழ வேண்டும் என்று விரும்புகிறார்.

*'பாவ இருள் மூடிப் பல கவலைக்கு உள்ளாகித்*
*துன்பம் துயரம் உற்றோர் சூழ்ந்திருந்தே இந்நூலை*
*இன்பமுடன் கேட்டால் இதயம் தெளிவாகும்'*

என்பது ஆக்கியோனின் உள்ளக்கிடக்கையாகும். அம்மானையை முடிக்கும் போது சுவீகரனார் உள்ளம் திறந்து,

*'நாசபுரி மீதிருந்தால் நாசம் வரும் என்றறிந்து*
*ஈசர்பதி நோக்கி வழி எல்லோரும் கூடிடுங்கள்*
*வழிகூடு எம்பரனை வந்தடைந்து கொள்வீரால்*
*அழியாத வாழ்வை அடைந்திடுவீர் அம்மானை'*

என நெஞ்சம் நெகிழப் பாடுகிறார்.

*முத்திவழி அம்மானை,* இரட்சண்ய யாத்திரிகம் எனும் இரண்டும் ஒன்றையே நோக்கும் இரு கண்கள் போன்றவை. இரண்டிற்கும் முதல் நூல் பரதேசியின் மோட்ச பிரயாணம். மூன்றிற்கும் மூல நூல் பரிசுத்த வேதாகமம்.

தமிழ்க் காப்பிய உலகில் கம்பராமாயணத்திற்குப் பிறகு பாஞ்சாலி சபதம், தேம்பாவணி, இரட்சண்ய யாத்திரிகம், முத்திவழி அம்மானை ஆகிய நூற்கள் சிறப்பிடம் பெறுகின்றன. முத்திவழி அம்மானை தமிழ் மக்களிடையே விரிவாகப் பரவாத காரணம் கிறிஸ்தவர்களின் இலக்கிய ஆர்வக் குறைவேயாகும். உழைக்கும் மக்களின் நாவிலேதான் தமிழ் உயிர் பெறுகிறது; உலா வருகிறது என்பதற்கு முத்தாய்ப்பாக அமைந்துள்ளது முத்திவழி அம்மானை. தமிழ் இலக்கிய வரலாற்றில் கிறிஸ்தவம் பெரும்பங்காற்றியுள்ளது என்பதற்கு முத்திவழி அம்மானை முழு முதல் சான்றாகும்.

## 1. பிரயாண ஆவல்

### கேளுங்கள் இதை

தெத்துவழியாம் பலநூல் ஆகமங்கள் சாத்திரங்கள் தேறித்தேறிச்
சித்திவழி அறியாமல் நரகவழி அலையும்இந்த தேசமாக்கள்
சுத்துவழி அலைந்துஅழியாது ஒருவழியாம் ஏசுவினால் சுவர்க்கம் சேரும்
முத்திவழி அம்மானை பத்தியுடன் கேண்மின்இனி மொழிகுவேனே.

சொப்பனத்தில் கண்ட சுருதிதனைக் கேளும்இனி
செப்பமுள்ள பூவுலகில் செழித்தஒரு காவனத்தில்
தன்னந் தனியாகத் தானோர் மனிதன்அவன்
வன்னம்இன்றிக் கெட்டகந்தை வஸ்திரம் ஒன்றுஉடுத்தி
வீட்டை அவன் பாராமல் வேறுமுகமாய்த் திரும்பிக்
காட்டிஒரு புத்தகத்தைக் கைதனிலே தான்பிடித்துத்
தன்முதுகில் ஓர்சுமையும் தாங்கொணாமற் சுமந்து
கன்மம்அதைக் கண்டு கலங்கிநின்றான் அம்மானை.

கலங்கிஅவன் தன்னுடைய கைமலரிலே இருந்து
துலங்கும் ஒரு புத்தகத்தைத் துரிதமுடனே விரித்து 5
வாசித்துப் பார்த்து, வகைவிபரம் அத்தனையும்
யோசித்து அறிந்தே உணர்வுஅடைந்து கொண்டவன்போல்
நடுக்கம் எடுத்து நளினஉடம்பு ஆனதெல்லாம்
அடக்கக் கூடாத அருந்துயரம் தன்னுடனே
ஏதோ பயந்தவன்போல், ஏங்கிப்பெரு மூச்செறிந்து
காதளவும் 'மார்பளவாய்'க் கண்ணீர் சொரிந்துநின்றான்—

பின்னும்அவன் தன்னுள் பெருகும் வியாகுலத்தைத்
தன்இரு தயந்தனிலே தான்அடக்கி வைக்கஎன்று
தன்னாலே ஆனமட்டும் தணிக்கவகை பார்த்தாலும்
மன்னும்அவன் துக்கம்அது மாறவில்லை, ஆனதினால் 10

திக்குமுக் கென்று திகைத்து மிகவேசீறி
மிக்க சத்தம்இட்டு வெகுநேரம் தான்அழுதான்
அழுதவனும், என்னசெய்வேன் ஐயோநான் என்னசெய்வேன்
பழுதுடையேன் என்றே பரிதாபத்தோடு உரைத்தான்
இந்தப் படியாக ஏழைஅந்த மானிடனும்
நொந்துஅழுது தன்வீட்டை நோக்கியே போகலுற்றான்
வீட்டில்அவன் தன்துயரை வேறொருவர் காணாமல்
தாட்டிகனும் தன்முகத்தைத் தான்துடைத்து, நன்றாக
மனக்கவலை சற்றும்இல்லா மலர்முகத்தைப் போலாக்கித்
தனக்குரிய வீடுதனில் தான்புகுந்தான் அம்மானை. 15

வீட்டிற் புகுந்து வெகுநேரம் தன் துயரைக்
காட்டாமல் தன்னுடைய கருத்தில் அடக்கிவைத்தான்
நிழலைக் குழிதோண்டி நிலத்தில் புதைக்கஎன்று
முழுநாளும் தானே முயலும்ஒரு மானிடன்போல்
அடக்கிவைத்துப் பார்த்தாலும் அவனுடைய மெய்விசனம்
மடக்கிவைக்கக் கூடாமல் வந்துபொங்கு மாம்மனதில்
பொங்கும்இந்த நல்லுணர்வைப் புதைப்பதற்கு ஏலாமல்இவன்
எங்கே இனித்தரிப்பேன் என்றுபரி தாபம்உற்றுப்
பாவமதன் கூலி படுமரணம் ஆகும்என்ற
தேவனது நீதிச் செயல்அதையும் கண்டவன்போல், 20

விம்மிப் பெருமூச்சு விடுவான் நடுநடுங்கிக்
கம்மிஅவன் தன்னுடைய கண்ணிரண்டும் நீர்பெருகத்
தன்துயரம் தன்னாலே தான்அடக்கக் கூடாமல்
பின்துயரம் ஆனதெல்லாம் பெண்டுபிள்ளை தங்களுடன்
சொல்லிவிட வேண்டும்என்று துயரமதை உள்ளடக்கி
வல்லதொரு மானிடனும் மக்கள்மனை யாள்உடனே
மானேஎன் தேவியரே மக்களே என்னருமைத்
தேனே ஒருவசனம் செப்புகிறேன் கேளும்என்றான்—
மெய்த்தபுகழ் மன்னன் விளம்பும்உரை தான்கேட்டு
மைத்தடங்கண் மாதவளும் மன்னவரே சொல்லும்என்றாள். 25

## 5. நம்பிக்கை இழவின் அவதி

இங்கிவர்கள் இந்தவிதம் ஆகஇசை பேசிக்
கங்குல்வரு முந்திவெகு காடுகள் கடந்து
தங்களின் மதிக்குறைவினால் இதய நட்பு
மங்கும்அவ நம்புதல் நொதிக்கரையில் வந்தார்கள்.

## அவநம்பிக்கைச் சகதியில்

வளமாய் இவர்கள்வரும் வழியின் குறுக்காக
அளறால் நிறைந்தநொதி ஆறுஒன்று இருந்ததுவே
வஞ்சம்உள்ள பேராற்றில் மறையோன் உடன்கூடி
நெஞ்சுஇணங்கும் மானிடனும் நேராக வந்திறங்கி
எச்சரிக்கைத் தாழ்ச்சியினால் இவ்விரண்டு பேர்களுந்தான்
அச்சமுறும் அந்த அளறுஆற்றில் வீழ்ந்தனரே
விழுந்தவர்கள் அந்நொதியில் விரைவாக நீஞ்சல்செய்து
அழுந்துகையில் தேகம்எல்லாம் அச்சகதி ஆனதுவே
மதுஅருந்து வோர்கள்புத்தி மங்குவதுபோல் மறையோன்
முதுகின் சுமையோடு முங்கிவிட்டான் அந்நொதியில் 5
முங்கிவிடக் கண்டு முதுமறையோனைக் கூவி
எங்கே இருக்கிறீர் என்றான் இணங்குநெஞ்சன்
இன்னஇடந் தன்னில் இருக்கிறேன் என்று சொல்லத்
தன்நினைவு தான்எனக்குச் சற்றும்இல்லை என்றானே.

மயக்கும்அந்தச் சேறாற்றில் மனவருத்தப் பட்டுஉலைந்து
தியக்கமுட னேஇணங்கன் செப்புகிறான் கோபமதாய்
வேதனையைக் கண்டு விலகிப் பிழையாமல்
சாதனையோ இப்படிநீ சாற்றுகிறாய் சண்டாளா
பாக்கியம்நீ சொன்னதுஒரு பாக்கியமும் இங்குஇவையோ
யோக்கிய னைப்போலே உரைத் தாயே மெத்தமெத்த 10
கூட்டிவந்து இச்சேற்றின் குழிக்குள்ளே தள்ளிவிட்ட
மேட்டி உள்ள மானிடனே மெத்தநீ கெட்டிகண்டாய்
மோட்சம்அதன் பாக்கியங்கள் மூடா இதுதானோ
காட்சிஅதை நீயேபோய்க் கண்டுகொள்ளு கண்டுகொள்ளு
கால்எடுத்து வைக்குமுன்னே கடும்பாடு இதுவானால்
மேல்எடுத்துப் போகும்மட்டும் வெகுபாடு தாங்கரிது
குருடனுடன் கூடும் குருடனைப் போல் நானும்இந்தத்
திருடனுடன் கூடிவந்து தீமைக்குஉள் ளானேனே
கண்ணிருக்கும் போதுலகில் காண்பதுவே காட்சிஅல்லால்
விண்ணிருக்கும் காட்சிஅதை மேதினியில் கண்டவரார் 15
உயிர்இருக்கும் போதே ஒப்புடனே தப்பெனும் நற்
செயலதுபோலே நான் திரும்பிப் பிழைத்திடுவேன்
பேயா பிழைக்குகிற புத்திஉனக்கு இல்லைஎன்று
வாயாலே தன்மனதில் வந்ததெல்லாம் பேசிஅவன்
அந்நொதியை விட்டே அகன்று கரைசேர்ந்து
தன்நகரம் நோக்கிவழி தான்நடந்தான் அம்மானை.

## வீடு திரும்பினான் இணங்குநெஞ்சன்

பன்றிதான் சுத்தம்ஆக்கப் பட்டபின் சேற்றில்வீழ்ந்து
குன்றிய வாறுபோலும், குலைக்குநாய் கக்கும்எச்சைத்

தின்றிடு வாறுபோலும் திரும்பிமண் உலகைநோக்கி
நன்றில்லா நாசதேசம் நாடியே வீடுசேர்ந்தான்

வீடுவந்து சேர்ந்தானாம் மென்னெஞ்சன் என்றுசொல்லி
ஓடிவந்து பார்ப்பார்அவ் ஊர்ச்சனங்கள் எல்லாரும்
பித்தன் பிறகேபோன பித்தன்வந்தான் என்றுசொல்லிச்
சுற்றிவந்து கூடிநின்று சொல்வார் தனித்தனியே 20
துர்ப்புத்தி நாங்கள்இனிச் சொன்னாலும் கேட்பதற்காய்
நற்புத்தி யோடுவந்தாய் நல்லவன்என் பார்சிலபேர்
உந்தன் மனைவிமக்கள் உடன்கூடி வாழ்வதற்காய்
வந்ததுவே எங்களுக்கு மனக்களிப்புஎன் பார்சிலபேர்
பித்தாநீ புத்திகெட்டே பேயனுடன்போனாயே
செத்தாலும் இவ்இகழ்ச்சி தீராதுஎன் பார்சிலபேர்
போனாயே நீதுணிந்துபோனவன்தான் ஆனாலும்
ஏனோ திரும்பிவந்தாய் என்பார் சிலபேர்கள்
ஏழைத் தனமாக ஈங்கிசையைக் கண்டுஅகன்றாய்
கோழைத்தனம் இதென்று கூறிடுவார் சிற்சிலபேர் 25
என்னஒரு காரியமும் எண்ணிஅல்லோ செய்தல்நன்று
சின்னத்தனம் ஆகவும்போய்த் திரும்பிவந்து விட்டாயே
முட்டிக் குனிந்த முழுமூடன் என்பார்சிலபேர்
மட்டிக்குப் புத்திசற்றும் வாராதென்பார் சிலபேர்
வந்தவர்கள் எல்லாம் வசைகூறிச் சொன்னசொல்லை,
சிந்தைஉற்றுக் கேட்டுஅவனும் சென்னிகவிழ்ந் தேஇருந்தான்
இறங்குதலை போட்டே இவன்இருக்கக் கண்டவர்கள்
குரங்காட்டம் கொள்ளஎன்று கூட்டமிட்டார் அம்மானை

கூட்டம்இடக் கண்டுமனக் கோழைஅந்த நெஞ்சிணங்கன்
வாட்டம் இட்டால் நம்மை வளைந்துகொள்ளு வார்கள்என 30
ஏது தெரியுதுஇல்லை ஏழைஎன்று பார்த்தீரோ
வாதுசெய்ய உங்களுடன் வந்தவன்ஆர் போனவன்ஆர்
எம்பாடு தான்கேட்க இங்கொருவ ரும்வேண்டாம்
தம்பாடு அவரவர்க்குத் தாமிருக்கும் என்றுசொன்னான்
சொல்அதையும் கேட்டுஇவனைத் தூஷணிப்பதை நிறுத்தி
இல்அதைவிட்டு ஏகினதோர் ஏழைக் கிறிஸ்தவனை
வாய்கொண்ட மட்டும் வலுவாகக் கேலிபண்ணிப்
பேய்கொண்ட மாந்தர் பிதற்றிநின்றார் அம்மானை.

## அபயம்! அபயம்!

இச்சரிதை யாக இணங்குநெஞ்சன் போனபின்பு
அச்சகதி ஆனதிலே அருமறையோன் தான்கிடந்து 35
தன்னாலே ஆனமட்டும் தாவித்தாவிப் பாய்ந்து
முன்னேற வேண்டும்என்று முயன்றுஅவன்தான் பார்த்தாலும்

நினைத்தபடி சேறாற்றை நீந்துதற்கு ஏலாமல்
கனத்த சுமையாலே கால்கரமும் ஓய்ந்ததுவே
ஓய்ந்தாலும் வீட்டைஅவன் ஒருக்காலும் நோக்காமல்
வாய்ந்தமன தோடுதிட்டி வாயிலுக்கு நேராக
உன்னிஉன்னிப் பார்த்தாலும் ஒன்றும்உத வாததனால்
தன்மனதிலே மிகவும் சஞ்சலம் உண்டானதுவே
நிலையில் பிரிந்தாலும் நெருப்பே கிடைக்கும்என்று
உலையின் மெழுகாய் உருகினான் உள்ளம்எல்லாம் 40
கனவருத்தம் ஆகிஅவன் கைகால் உளைவதிலும்
மனவருத்தம் இப்பொழுது மட்டுமிஞ்சி வந்ததுவே
வந்த துயராலே மனதை அசையாதுஇருத்தி
அந்தரத்தை நோக்கி அபயம்இட்டான் அம்மானை

## வழிநடத்து பராபரனே

மூலப் பொருளாய் நடுவாகி, முடியா திருந்த முப்பொருளே
தாலப் பொருளே தனிப்பொருளே தானாய் இருந்த தவப்பொருளே
ஆலப் பனியின் விஷம்போலாம் அளறாறுஅதனில் அமிழாமல்
ஞாலப் பொருளே கைதூக்கி நடத்தாய் கருணா லையப்பரனே.

என்னைத் தொடர்ந்தே வந்தவர்கள் எங்கே திரும்பிப் போயினர் பார்
உன்னைச் சதம்என்று ஓடிவந்தேன் உலகின் மயக்கில் மருண்டுவழி
தன்னைத் தெரியாது இந்நொதியில் தானாய்விழுந்து தயங்குகிறேன்
என்னைக் கருணைக் கரத்தாலே எடுத்துஆட் கொள்வாய் இறையவனே.

வஞ்சம் சூது கோள்களவு வன்மம் பகைகள் இச்சகங்கள்
நெஞ்சில் நிறைந்த தோஷியும்நான் நிலையாச் சேற்றில் நீந்துவனோ
நஞ்சுக் கனியின் வினைநீக்க நரனாய் வந்த இரட்சகனே
கஞ்ச மலரின் திருக்கரத்தால் கரைசேர்த்து எடுக்க வருவாயே.

எந்தன் பலத்தால் உன்னிஉன்னி எழும்பிப் பார்த்தேன் கூடுதில்லை
உந்தன் பலத்தால் அல்லாமல் ஓகோ என்னால் ஒன்றும்இல்லை
வந்தென் கரத்தைத் தான்பிடித்து மயக்க நொதியில் அமிழாமல்
சிந்தை தெளியக் கிருபைதந்து செவ்வே நடத்தாய் திருச்சுதனே.

ஓசை முழங்கும் பர்லோகம் ஒளியே விளங்கும் உன்சமூகம்
பாஷை முழங்கும் பலராகம் பாடி மகிழ்ச்சி கொள்வதற்கே
ஆசை எனக்கு மிகஆசை அதுவே மெத்த ஆசைஐயா
நேசக் கரத்தால் தூக்கிஎனை நேரே நடத்தாய் பராபரனே.

## வந்தார் சகாயர்

பரனே பராபரனே பத்தர்களின் ஆரமுதே
நரனாய் உலகில்வந்த ஞானச்சுட ராம்பொருளே
உன்னைஅடைவதற்காய் ஓடிவரும் பாதையிலே
இந்நொதியின் சஞ்சலங்கள் என்னாலே தாங்கரிது
ஐயோ எனக்குஇனிமேல் ஆர்உதவி செய்வர்என்று
மெய்யே சலித்துஅவனும் விண்நோக்கி நிற்கையிலே
தயங்கிநிற்கும் பிள்ளைமுன்னே தாய்வந்து சேர்ந்ததுபோல்
மயங்கிநிற்கும் பத்தன்முன்னே வந்தனர்காண் அங்கொருவர் 45

வந்த சகாயன் மறையோன் தனைக்கூவி
இந்நொதி ஆனதிலே என்னசெய் கிறாய்எனவே—
பேதைஅந்த மானிடனும் பேசுவான் வாய்திறந்து:
வாதை வரும்என்று மனம்கலங்கி நிற்கையிலே
தப்பிப் பிழைப்பதற்குத் தக்கவழி ஈதெனவே
ஒப்பாய் ஒருவர் உரைத்தமொழி யான்கேட்டு
அங்கிருக்கும் வாசல்தனை ஆவல்கொண்டே ஓடுகையில்
இங்கே இச்சேற்றில் இறங்கிவிட்டேன் என்றுஉரைத்தான் 50

அந்தஉரை கேட்டே அருள்உதவி செய்யும்அவர்
இந்தவழியாய் வருவோர் எட்டி நடப்பதற்காய்
மிதிகல் புதைந்திருக்கும் விதம்அறிய மாட்டாமல்
நொதியில் விழுந்துவிட்ட நோக்கம்உரை என்றுரைத்தார்
சகாயர்இது கேட்டவுடன் சாற்றுகிறான் இம்மனிதன்
மகாபயத் தோடுஇந்த வழிஓடி வந்ததனால்
கற்படியைக் காணாமல் கண்மயங்கி இந்நொதியில்
எப்படியோ வீழ்ந்துவிட்டேன் எனக்குஉதவி செய்யும்என்றான்
வருத்தம்உற்ற வேதியனின் வார்த்தைஅது கேட்டுஇரங்கிக்
கருத்தாகப் பத்தாஉன் கைகளைநீட்டு என்றுரைத்தார் 55
வாக்குஉரைக்கும் முன்னே மறையோன்கை நீட்டல்உற்றான்
தூக்கினார் கைஅதனால் தொட்டுப்பிடித்து அவனைத்
தரையில் நிறுத்தித் தயவாகக் கூறுகிறார்
மரையின் மலர்முகனே மயங்கித் தயங்காதே
பிழைக்கும் வழிஇதுதான் பின்திரும்பிப் பாராதே
மழைக்கு முகில்போலே வான்பரன் உண்டுஉனக்கு
வேறே நினைவுகொண்டு விலகியுமே போகாதே
நேராம் வழிஇதுகாண் நில்லாமல் ஓடுஎன்றார்
நன்றிசெய்த பேரைஒரு நாளும் மறப்பேனோ
என்றுசொல்லிப் பத்தன் இருகரமு மேகுவித்து 60
சகாயம் புரியவந்த சகாயர்இரு தாள்வணங்கி
மகாவிருப்பத் தோடுதிட்டி வாசல்நோக்கி நடந்தான்.

## பாவ பள்ளம் பற்றிப் பகர்ந்தார் சகாயர்

நடந்துஇவன் போனபின்பு நலமுடன் இந்நூல்தன்னைப்
படர்ந்திடும் கனவாய்க்கண்ட பன்னியன் என்றவள்ளல்
தொடர்ந்திடும் சகதிதன்னில் துணைபுரிந் தோனைநோக்கிக்
கடந்திடும் நொதியைப் பற்றிக் காரியம் ஒன்றுகேட்டான்.

சொப்பனத்தைக் கண்டோன் துணைபுரிய வந்ததொரு
தப்பில்லா ஞான சகாயருடன் ஏதுரைப்பான்
ஏன்ஐயாஇந்தவழிஇவ்விதமாய்ச் சீர்கெட்டுப்
போனதுஎன்ன, ஏழைவழிப் போக்கர்இந்தச் சேறாற்றைத்
தாண்டுதற்கோர் பாலம் சமர்ப்பிக்கக் கூடாதோ
ஆண்டே எனக்கு ஈது அறிவிப்பீர் என்றனனே
அப்போ சகாயர் அவரும்அங்கே ஏதுசொல்வார்
செப்பன்இடக் கூடாத சேற்றாறு காணும்இது 65
இருதயத்தில் நல்லுணர்வு எழும்புகையில் பாவமதை
அருவருத்திடு நுரையும் அழுக்கும் நிறைந்தபள்ளம்
பாவமதை எண்ணிஒரு பாவி விழிப்பளவில்
ஆவிதனில் கொந்தளிப்பும் அதனால் பயங்கரமும்
சந்தேகத் தோடு தளர்ச்சிகளும் உண்டாகும்
அந்தோ இவைகளைப்போல் அநந்தம்உண்டு சொல்லஎன்றால்
ஓடியவை கள்பல ஊற்றுகள்போ லேமனதில்
கூடிக் கொதித்துக் குளப்பி இருதயத்தை
ஒட்டிஅந்த ஊறல்எல்லாம் ஒன்றாகவே சேர்ந்து
கட்டிஇந்தப் பள்ளம் கசடாய் இருக்குது காண் 70

சங்கடம் சேர்இந்தச் சகதிஇந்த வாறிருக்க
எங்கள்மகா ராசாவுக்கு எவ்வளவும் சித்தம்இல்லை
நல்லமனதுள்ள எங்கள் ராசாவின் ஊழியர்கள்
வல்லசிற்பா சாரிகளின் மகாயோசனைப் படியே
பள்ளம்இதை மேடாக்கிப் பாதைதனைச் சீராக்க
உள்ளபடி ஆசைகொண்டே உலகம்முழு தும்திரிந்து
பார்த்தார்கள் ஆண்டு பதினாறு நூறளவாய்ச்
சேர்த்தார்கள் காணும்வெகு செம்மையுள்ள சாமானாய்த்
தாசர்களால் சேர்த்த தளவாடம் ஆனதெல்லாம்
மாசடையும் இந்நொதியை மாற்றுவதற்கு ஏற்றதுதான் 75
சீராரும் தேவன் திருவடியார் சேர்த்ததுபோல்
ஆர்சேர்ப்பார் என்றே அறிந்தவர்கள் சொல்வார்கள்
கர்த்தன் உரைப்படியே காவலர்கள் சேர்த்துவைத்த
சுத்தாங்க மான சுகிர்தஉப தேசம்என்னும்
எண்ணிறந்த கோடிவண்டி ஏற்றுவரும் பாரம்எல்லாம்
மண்ணில்இந்தச் சேறாற்றில் வைத்தார்கள் கொண்டுவந்து
கோடானு கோடிவண்டி கொண்டபெரும் பாரம்எல்லாம்

மேடாகும் என்று விரும்பிவைத்துப் பார்த்தாலும்
பாழ்கிடங்கு மல்கிநல்ல பாதையைப்போல் ஆகாமல்
மூழ்க்கும்இந்தப் பள்ளநொதி முன்போல் இருக்குதுகாண். 80

ஆனாலும் இந்த அவநம்பிக்கை நொதியில்
வானோர் புகழ்அரசன் வாக்குகளால் செப்பன்இட்ட
உரப்புடைய கல்படிகள் உழைநெடுக வேஇருக்கும்
சிறப்புடைய நற்படிகள் சீராய் இருந்தாலும்
காலம்அது மாறுகிற காரணத்தால் இந்நொதியில்
ஆலவிஷம் போலே அழுக்குஎழும்பிப் பொங்குவதால்
செப்பமுள்ள கல்படிகள் தெளிவாய்த் தெரியாது
அப்படியும் அல்லாமல் அதுதெளிவாய்த் தோன்றிடினும்
தலைமயக்கத் தால்படியில் தான்மிதித்துச் செல்லாமல்
விலகி மிதித்து விழுந்துஅழுக்கா வார்சிலபேர்
அங்கே இருக்கும் அழகுதிட்டி வாசல்சென்றால்
திங்கள்நிகர் சான்றோனே சீர்பாதையாய் இருக்கும்
என்று சகாயர் இவைஉரைக்கப்—பன்னியனும்
நன்றாகும் என்று நடக்கும் கனவுதன்னில்
பின்னும் கிறிஸ்தவன்தான் பெரும்பாதை நேர்வழியே
உன்னி நடந்தான் ஒருபரனே தஞ்சம்என்று
நெருக்கம்உள்ள வாசல்அதை நேராகவே நோக்கிச்
சுறுக்காய் நடக்கையிலே சூழும்வினை தான்கேளும் 85

## 25. பிரயாணிகள் தேவநதி சேருதல்

### வழி நடந்தனர் இருவரும்

நடந்தனர் காணிபூமி நகரங்கள் தமையும்விட்டு
நடந்தனர் பணம்பொன்இன்ப நாட்டங்கள் தமையும்விட்டு
நடந்தனர் மனவிமக்கள் நல்லின சனத்தைவிட்டு
நடந்தவர் இன்பாய்த்தேவ நதிக்கரை வந்துசேர்ந்தார்

சந்தோஷ மாய்இவர்கள் தாம்நடந்து கானகத்தில்
வந்தார் வளம்நிறைந்த மாநதியின் பாங்கதிலே
அன்பு நதிஇதனை அரசனாம் தாவீதும்
இன்பமுள்ள தேவநதி என்றுபெயர் சொல்வதன்றித்
தீர்க்கன்அந்த யோவானும் சீவதண்ணீ ரால்நிறைந்த
மார்க்கநதி என்று வழுத்துகிறார் இந்நதியை
பளிங்குஒளிபோல் தண்ணீரும் பலகனிக ளால்நிறைந்த
இளங்கிளையின் நல்மரங்கள் இருகரையுந் தோன்றுவதும்,
லீலியா புஷ்பம் நிறைந்தபுல்லின் மைதானம்
பாலியந்த ஆற்றின்இரு பக்கமெல்லாந் தோன்றுவதும் 5
கண்டுஇருவர் உள்ளம் களிப்பாகிப் பார்ப்பளவில்
பண்டவர்கள் தாம்நடக்கும் பாதையந்த நன்னதியின்

செய்யகரை மேலாகச் சென்றிடவுங் கண்டவர்கள்
துய்யன் கிறிஸ்தரசைத் துதித்து வழிநடந்தார்
மெத்தமகிழ் வோடுஅவர்கள் மேவி நடக்கையிலே
சுத்தநதித் தண்ணீரைச் சுகமாய்க் குடித்ததினால்
இளைத்திருந்த ஆவி இறுகிமிக வேபலத்துத்
தழைத்துவிட்டது அங்குஅவர்கள் தைரியம் குன்றாதபடி
ஆவி தழைத்ததன்றி அக்கரையும் இக்கரையும்
தாவி யடர்ந்தமரந் தன்னில்உள்ள நல்லிலையை 10
அருந்தினார் அங்கு அவர்கள் அமிர்தமது போலாக
திருந்தும்அந்த நல்லிலையைத் தின்றதினால் அங்கவர்க்கு
பேருணவால் உண்டாம் பெரும்பிணிக ளானதுவும்
ஊரும்நடையால் அணுகும் உதிரக் கொதிப்பதுவும்
தீர்ந்துவிட்ட தாலே திடமாகி உள்ளமெல்லாம்
சார்ந்துவிட்டது எம்முடைய சாமிகிறிஸ்து ஏசுவின்மேல்
வசதியுள்ள லீலியப்பூ வால்நிறைந்த மைதானம்
பசுமையுள்ள புல்மேல் படுத்துஉறங்கி னார்இவர்கள்
உண்ண இலையும் உடன்பருகத் தண்ணீரும்
பண்ணுறங்கப் புல்லின் பசுந்தரையுங் கிட்டினதால் 15
நடப்பார் வெகுதூரம் நாள்தோறும் உண்டுஉறங்கி
கடப்பார்கள் அந்நதியின் கரைமேல் இருக்கும்வழி
இந்தப் படியாய் இவர்கள்நெடு நாளளவும்
அந்தப் படியாக ஆற்றருகி லேநடந்தார்
இன்பநதி யின்மகிமை இவர்களுக்குஅந் நாட்களிலே
துன்பமில்லை நெஞ்சில் துயரம்ஒன்றுந் தோன்றவில்லை
ஆனந்த மாகி அவர்கள் இருதயத்தில்
ஞானந் தமதாகி நற்கவிதை பாடுகிறார்:

## இன்ப மா நதி

அன்புற்ற ஏசு கிறிஸ்துவைப் போற்றி அனுதினமும்
துன்பம் துயரம் பலவாகத் தாண்டிஇத் தொல்புவியில்
நென்புற்ற சுத்தப் பளிங்குஒளி போல்இந்த நேர்வழியில்
இன்ப மகாநதி ஓடுது பார்என் இருதயமே.

மாய்ந்திடுந் தேகம் அழியாதுஇருக்க வகை பெறுதற்கு
ஆய்ந்திடும் வேத முறைராச பாதை யதில்ஒழுகிச்
சாய்ந்திடும் பத்தர் இருதயங் கொள்ளும் தகைதணியப்
பாய்ந்திடும் இன்ப மகாநதி ஓடுது பார்மனமே.

நச்சரவால் விளை மாமிசதா பத்தின் நாற்றம்ஒழிந்து
இச்சை அடக்க நறுமணம் கம்கம் எனமணக்க
அச்சமி ல்லாமல் பரிசுத்த ஆவி யருள்நிறையும்
பச்சைப் பசும்புல் நிறைந்த மைதானத்தைப் பார்மனமே.

தேவ நதியின் இருபுறமும் நிறைந் தேயிருக்கும்
காவில் மரத்தின் கனியிலை தின்று களைப்படைந்த
ஆவி தழைத்திடும் ஆரோக்கியம் பெறும் அன்புமிகும்
பாவிநெஞ்சே இதைப் பாராய் உலகத்தின் பாசம் விட்டே.

பாங்குறும் இன்பம் இதை அறிந்தோன்இப் பசுந்தரையை
வாங்குதற் காகத் தனக்குள்ள யாவையும் மாற்றிடுவான்
சாங்கமுடன் கிறிஸ்து ஏசுவைச் சார்ந்து தனைவெறுப்பான்
ஈங்கிதைப் பார்த்து மகிழ்ந்திடுவாய் என் இருதயமே

என்று கவிபாடி இருதயம்எல்லாம் மகிழ்ந்து
அன்றுகுரு சூடிறந்த ஆண்டவன்மேல் அன்புபற்றி 20
காட்சிபெரு தேவநதிக் கரையருகிற் செல்லும்வழி
மாட்சியுட னேநடந்து வந்தார் வெகுதூரம்
பலன்கொடுக்கும் சீவநதிப் பாங்கில்இந்தப் பத்தர்கள்தாம்
நலம்பெறவே நாடி நடந்துவழி போகையிலே
ராசவழி தானும்அந்த நன்னதியின் பாங்கைவிட்டு
வாசமுட னேபிரிந்து மாற்றிடமாய்ச் சென்றதுவே
பாதை பிரிந்துசெல்லப் பத்தர்மனம் சோர்வடைந்து
வேதவழி தன்னை விடாமல் நடக்கலுற்றார்
பிரியாது இவர்கள்அந்தப் பெரும்பாதை செல்லுகையில்
துரிதாய் இவர்கள்வரும் துலக்கமுள்ள பாதையிலே 25
கரடும் முரடும்வெகு கல்லுகளும் சில்லுகளும்
திரடுகரண் கட்டிகளும் திரளாய் இருந்ததினால்
கால்அழுத்தி நோவு கனவருத்தம் உண்டாகி
மேல்அழுத்தித் தேகம் மிகவும்வலி கண்டதுவே
இத்தனை தூரம்இவர்கள் இவ்வழியிலே நடந்து
அத்தனையாய்த் தங்கள் அடிதேய்ந்து போனதுபோல்
கரடுதட்டித் தங்களுட காலில்வலி கண்டிடவே
முரடுதட்டித் தங்கள்மனம் முழுதுந் தளர்ந்ததுவே.



# 10

## அதிசயக் கும்மி

**ஆசிரியர்: அ. வேதக்கண் (1832-1892)**
**அறிமுகம்: எம். இராஜதாஸ்**

தமிழகத்தில் கல்வியில் முதலிடம் வகிக்கின்ற கன்னியாகுமரி மாவட்டம் ஈன்றெடுத்த கவிஞர்களும், அறிஞர்களும், அரசியல் தலைவர்களும், ஆன்மீகத் தலைவர்களும் பலர் உண்டு. ஒளி வீசும் தீபங்களாக, மணம் வீசும் நறுமலர்களாக, வாழ்ந்து வழிகாட்டியவர்களில் ஒருவரே, கவிஞர் அருள்திரு. அ. வேதக்கண் அவர்கள்.

இன்றைய குமரி மாவட்டத்தில் (முன்பு தென் திருவிதாங்கூர்) மண்டைக்காடு என்னும் ஊரின் அருகிலுள்ள கோவிலான் விளையில், இயேசுநாதரை அறியாத ஒரு குடும்பத்தில் 1832 ஆம் ஆண்டில் (மே மாதம்) பிறந்தவர் இக்கவிஞர். அம்மை நோயால் மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டு, கண்கள் திறக்க முடியாத நிலையில், நாட்டு மருத்துவத்தால் எவ்வித பலனும் ஏற்படாது என்ற நிலை உருவாகிய போது, சோதிடன் ஒருவனைத் தேடிச் சென்றனர் பெற்றோர்கள். அந்த சோதிடன் கிறிஸ்தவர்கள் தொழும் இறைவனால் மட்டுமே இந்நோய் தீரும் என்று கூற, நெய்யூரில் தங்கியிருந்த அருள்திரு. சார்லஸ் மீட் ஐயரிடம் குழந்தையை எடுத்துச் சென்றார்கள். அருள்திரு. சார்லஸ் மீட் ஐயர் இறைவேண்டல் மேற்கொண்டு, இறை நம்பிக்கையோடு வீடு செல்லுமாறு கூறினார். வீடு சென்றதும் குழந்தை கண்விழித்தது. அதனால் அக்குழந்தைக்குப் பெற்றோர்கள் 'வேதக்கண்' என்று பெயர் வைத்தார்கள்.

குமரி மாவட்டத்தில், நெய்யூர் போர்டிங் பள்ளியில் கல்விகற்று, நாகர்கோவில் செமினரியில் ஆசிரியப் பணியில் சேர்ந்தார். இவருக்கு வாழ்க்கைத் துணைவியாய் வாய்த்தவர் அன்னம்மாள் என்பவர்.

நாகர்கோவில் கஸ்பா சபை சுயசார்புச் சபையாக மாறக் காரணமாய்த் திகழ்ந்தவரும் இக்கவிஞர் பெருமகனார் தான். இக்கவிஞர் வாயிலாக இறைவன் செயல்பட்டார் என்பதே மிகப் பொருத்தம். ஒவ்வொரு மாதமும், முதல் திங்கள் கிழமை இரவில் சபையார் கூடி வருவதும், 'சுவிசேஷ பிரபல விளக்கம்' என்னும் மாத இதழை வாசித்து, உலகில் நற்செய்தி பரப்பும் வரலாறுகளை ஒருவர் விரிவாக எடுத்துரைப்பதும், தொடர்ந்து பாடல்கள், ஜெபங்கள் வாயிலாக இறைவனைத் துதிப்பதும் வழக்கமாக நிகழ்ந்து வந்தன. ஒரு நாள் இரவு இவ்வாராதனை நடத்த வேண்டியவர் எவருமே வராமையால், முன் அனுபவம் இல்லாத வேதக்கண் அவர்களே இவ்வாராதனையை நடத்தினார்.

மாத இதழை வாசிக்கும் போது, கிறிஸ்தவர் ஒருவர் விலை உயர்ந்த பொன், வெள்ளி உடைமைகளைக் காணிக்கை கொடுத்த நிகழ்ச்சியை வாசிக்க, தூய ஆவியானவரின் தூண்டுதலால் வேதக்கண் தனது ஒரே மோதிரத்தைக் கழற்றி காணிக்கையாகப் படைத்தார். கர்த்தருக்குக் காணிக்கை படைக்க விருப்பம் உள்ளவர்கள் முன்வந்து படைக்கலாம் என்று கூற, அவரது துணைவியார் முன்வந்து தன் கழுத்து நகைகளில் ஒன்றைக் கழற்றி மேஜை மீது வைத்தார். தொடர்ந்து பலரும் அவ்வாறே, தூய ஆவியானவரின் தூண்டுதலால் மன நிறைவோடு படைத்தார்கள். பலர் வீட்டிற்குச் சென்று, விலை உயர்ந்த பொருட்களை எடுத்து வந்து, இறைப் பணிக்கென்று முழுமனதோடு படைத்தார்கள். அன்றிலிருந்து நாகர்கோவில் கஸ்பாசபை, வெளிநாட்டு உதவியின்றி சுயசார்புச் சபையாக மாறியது. இதைப் பற்றி 'நீலகண்டன் தேவதாசன் ஐயர் சரித்திரம்' என்னும் நூலில் வேதக்கண் விரிவாக எழுதியுள்ளார்.

1862 ஆம் ஆண்டில் வேதக்கண் அவர்கள் இலங்கை சென்றார். அங்கு காப்பித் தோட்டத்தில் உயர்ந்த சம்பளத்திற்கு வேலையில் சேர்ந்தார். ஞாயிறு தினங்களிலும் வேலை செய்ய வேண்டியிருந்ததால், அவ்வேலையை உதறிவிட்டு, கொழும்பில் சில வீடுகளுக்குச் சென்று சிறுவர்களுக்குப் பாடம் புகட்டினார். இவரது இச் செயலைக் கேள்விப்பட்ட அருள்திரு. ஜார்ஜ் பென்னட் என்ற போதகர், தன் தலைமையில் இயங்கி வந்த, 'தூய தோமா வேதாகமக் கல்லூரி'யில் சேர ஒழுங்கு செய்தார். அங்கு பயின்று, வேதக்கண் அவர்கள் 1866 இல் போதகராக அருட்பொழிவு செய்யப்பட்டார்.

சில ஆங்கிலச் சபைகளிலும், பல தமிழ்ச் சபைகளிலுமாக 25 ஆண்டுகள் இறைப்பணி செய்தார். இவர் அருளுரை நிகழ்த்தும் போது, சபை மக்களின் இதயம் குளிரும்; இறையன்பு பெருகும்; ஜெபமே ஜெயம் என்பதனைத் தனது வாழ்வில் கைக்கொண்டவர் இவர். இவ்விலக்கணத்திற்கு ஏற்ற இலக்கியமாக வாழ்ந்தவர் இவர்.

1891 இல், இவர் இறைப்பணி செய்து வந்த அமைப்பிற்குட்பட்ட, ஏழைக் கிறிஸ்தவர்களின் கிராமத்தைச் சிலர் நெருப்பால் அழித்தனர். குற்றவாளிகள் கண்டுபிடிக்கப்பட்டு அபராதமும், சிறைத் தண்டனையும் அடைந்தனர். ஐயர் அவர்களின் முயற்சியால், எரிந்த வீடுகளுக்குப் பதில் வேறு வீடுகள் கட்டப்பட்டன. இவ்வழக்கில் தண்டிக்கப்பட்டு, விடுதலை பெற்ற ஒருவன், இவரைக் கத்தியால் குத்தி, இவர் இறந்து விட்டதாக நினைத்துச் சென்றுவிட்டான். ஆபத்தான நிலையில் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு, இறையருளால் குணமடைந்தார்.

1891 இல் உபகாரச் சம்பளம் பெற்று ஓய்வு பெற்றார். ஆயினும் இறைப் பணியிலிருந்து ஓய்வு பெறவில்லை. 1892 ஆம் ஆண்டு ஏப்ரல் 19 ஆம் நாள், ஓர் உயிர்த்தெழுதல் பண்டிகை நாளில் இறைவனின் திருக்கரங்களில் தன் உயிரை ஒப்படைத்தார். இவர் மூன்று நாட்களுக்கு முன்பு புனித வெள்ளிக் கிழமையன்றும் ஆலயத்தில் அருளுரை நிகழ்த்தினார். அருள்திரு. வேதக்கண் அவர்களுக்கு மூன்று புதல்வர்களும், ஒரு மகளுமாக மக்கள் நால்வர்.

இவர் செய்யுள் நடையில் இயற்றிய நூற்கள் வேதமொழி நூற்றிருபது, நல்லுரை நாற்பது, நவநீதம் இருநூற்றறுபது, சின்னத்தங்கம், சங்கீத பூரணி, தத்துவ போதினி, அதிசயக்கும்மி, வாரிமருவுமணி, ஞானக்குறள், இலங்கைக் கும்மி, ஆதி நந்தாவனப் பிரளயம், ஆதி நந்தாவன மீட்சி என்பனவாகும்.

இவரது உரைநடை நூற்கள் 1-ஆம், 2-ஆம் நவவிரி இலக்கணம், வேத ரூபக நிகண்டு, தெரிந்து தெளிதல், நீலகண்டன் தேவதாசன் ஐயர் சரித்திரம் என்பன.

மேற்குறிப்பிட்ட நூற்களில் சிறுவர்களுக்காக எழுதப்பட்ட நூற்கள் வேதமொழி நூற்றிருபது, நல்லுரை நாற்பது ஆகியனவாகும். நீலகண்டன் தேவதாசன் ஐயரது வாழ்க்கை வரலாறு எனும் நூல், நாகர்கோவில் சபையின் முதல் போதகரும் பிராமண குலத்தவருமான நீலகண்டன் தேவதாசன் ஐயரது (1814 - 1874) வாழ்க்கை வரலாற்றைக் கூறுவதாகும். 1875 ஆம் ஆண்டு தமிழில் எழுதப்பட்ட இந்நூல் சென்னையைச் சேர்ந்த புகழ்பெற்ற கிறிஸ்தவ டாக்டர் பழனியாண்டி M.D., F.L.S. என்பவரால் 1887 இல் வெளியிடப்பட்டது.

### ஆதிநந்தாவனப் பிரளயம், ஆதிநந்தாவன மீட்சி

அருள்திரு. வேதக்கண், ஜான் மில்டனின் Paradise lost, Paradise Regained ஆகிய இரு நூற்களையும் ஆதாரமாகக் கொண்டு தமிழில் ஆதிநந்தாவனப் பிரளயம், ஆதிநந்தாவன மீட்சி எனும் கீர்த்தனை நாடக நூற்களைத் தந்துள்ளார். ஆதிநந்தாவனப் பிரளயம் நாகர்கோவிலில் 1862 ஆம் ஆண்டு மே மாதத்தில் முதற்பதிப்பாகவும், 1867 மார்ச்சில் இரண்டாம் பதிப்பாகவும் வெளியிடப்பட்டது. ஆதிநந்தாவன மீட்சி 1868 இல் சென்னையில் பதிப்பிக்கப்பட்டது. இதன் பின்னர் அச்சேறாமல் இருந்த இவ்விரு நூற்களையும் கிறிஸ்தவ இலக்கியச் சங்கம் 1992 ஆம் ஆண்டு மூன்றாம் பதிப்பாக வெளியிட்டுள்ளது.

இவ்விரண்டு நூற்களும் கிராமிய இசை கலந்து வில்லுப் பாட்டாகவோ, கதாகாலட்சேபமாகவோ வழங்கச் சிறந்தவை. இந்நூற்களை ஆசிரியர் தமிழ்க் கீர்த்தனைநாடக அமைப்பில் தந்துள்ளார். இவ்விரண்டு நூற்களிலுமுள்ள இராகம் பெரும்பாலும் ஞானப்பதக் கீர்த்தனைகளில் காணப்படுவனவாகும். எஞ்சியவை இராம நாடகத்திலுள்ள கீர்த்தனைகளைத் தழுவி எழுதப்பட்டதாகும் என நூலாசிரியர் கூறுகிறார். கீர்த்தனை வடிவில் நூல் எழுதப்பட்டதற்கான காரணத்தை ஆசிரியரே பாயிரப் பகுதியில் ''கிறிஸ்தவப் பொதுவான ஜனங்கள் கல்யாண முதலிய சந்துஷ்டி காலங்களில் அஞ்ஞான பாப்பிய கட்டுகளான பல நாடகப் பாடல்களைப் படித்துப் பொழுதுபோக்கி வருகிறார்கள். நாடகச்சீர் எவரும் எளிதில் பழகத்தக்கதும் எவர் மனதையும் கவரத்தக்கதுமாய் இருப்பதால், தற்காலத்தில் இவ்வித நூல்களும் அவசியமாகவே இருக்கின்றன'' எனக் கூறுகிறார். ஆதிநந்தாவனப் பிரளயம் நூலின் அவையடக்கத்தில்,

> *''கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி*
> *தானுமொரு வாறு சமைவதுபோல் - நானும்*
> *கவிக்கிறைவன் மில்ற்றன் கதைக்குத் தமிழ்பாட*
> *சபைக்குள் வந்தேன் ஏசு சரண்''*

எனப் பாடுகிறார். மில்டனின் பெரிய காவியத்தைத் தமிழின் சில நாடகச் சீரில் பாட முயற்சிக்கிறேன் எனக் கூறுகிறார். தமிழ் மரபிற்கேற்ப மாற்றியமைக்கப்பட்டிருக்கும் கதையமைப்பினைக் கொண்ட இக்கீர்த்தனை நாடகத்தில் ஆங்காங்கே உரைநடைக் குறிப்புகளும் உள்ளன.

## அதிசயக் கும்மி

அருள்திரு. வேதக்கண் ஐயர் இயற்றிய 'அதிசயக்கும்மி' இசையோடு பாடுவதற்கு ஏற்ற ஓர் கவிதை நூல். இள மங்கையர் கைகோர்த்து நின்று, காலில் சதங்கை கட்டி தாளத்தோடும், இராகத்தோடும் இப்பாடல்களைப் பாடி நாட்டியமாடுவர்.

1861 இல் இயற்றப்பட்ட 'அதிசயக்கும்மி' 1874 ஆம் ஆண்டிற்கு முன் நான்கு முறை அச்சிடப்பட்டதென்றால், இந்நூலின் சிறப்பினை நாம் புரிந்து கொள்ள இயலும்.

எளிய நடையில், ஓசை நயத்தோடு, சாதாரண மக்களும் புரிந்து கொள்ளும் வகையில் இக்கவிதைகள் அமைந்துள்ளன.

இறைமைந்தர் இயேசுநாதர் செய்த அற்புதங்களையும், நிகழ்ந்த இடங்களையும் குறிப்பிட்டு நிரல்பட அமைத்துள்ளார். இயேசுநாதர் திருவாய் மலர்ந்த உவமைகளையும் இசையோடு எடுத்தியம்பியுள்ளார். மகளிர் பின்பற்ற வேண்டிய இன்றியமையாப் பண்புகளை இனிதாக எடுத்துரைக்கின்றார்.

'அதிசயக்கும்மி'யைப் பாடியதன் நோக்கத்தை இரண்டாவது பாடலில் இவ்வாறு குறிப்பிடுகிறார்:

*"மங்களமான திருச்சபையானது*
*மகிழ்ந்து கும்மியடிப்பதற்காய்*
*சிங்காரமான அதிசயக் கும்மியை*
*செப்புவேன் ஏசு துணையாமே"*

நூற்றுவர் தலைவனின் வேலையாளைக் கப்பர்நாகூமில் குணப்படுத்தின நிகழ்ச்சியைக் கீழ்வருமாறு அமைத்துள்ளார்:

*"பதினோராம் வேளை கப்பர்நாகூமில்*
*பதிற்றுப்பத்து பேரின் தலைவன்*
*மதிபெறும் வேலைக்காரனை ஆற்றின*
*மகத்துவம் நினை, ஞானப் பெண்ணே"*

தமிழ்ப் பெண்கள் 'கும்மிப்பாடல்' பாடும் நிலையிலேயே 'ஞானப்பெண்ணே' என்று இறுதிச் சொற்களை அமைத்துள்ளமை பாராட்டுதற்குரியது. பாலஸ்தீனா தேசத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளை, தமிழிசையில் தமிழ் முறைப்படி பாடும்போது, பாலஸ்தீனா தேசத்தைத் தமிழகத்துக்குக் கொண்டு வருகிறார் கவிஞர். இங்கே தமிழர் பண்பாடு மேலோங்கி நிற்பதைக் காண்கிறோம்.

இறைமைந்தர் இயேசுநாதரின் முப்பத்து மூன்று அற்புதங்களை வரிசையாக எடுத்தியம்பிய பின்,

*"வானமும் பூமியும் கொள்ளாதே ஏசு*
*வானவரின் செயல் விள்ளுதற்கு*
*ஏனையவை மிகவாகும் அவை புதி*
*யேற்பாட்டில் பாரம்மா, ஞானப்பெண்ணே"*

என்கிறார்.

இயேசுநாதர் உவமைகளாலும், உருவகங்களாலும் கருத்துச் செறிவோடு அக்கால மக்களுக்கு எடுத்தியம்பிய திறன், இன்றும் நம்மை மெய்சிலிர்க்க வைக்கிறது. காலத்தையும் வென்று நிற்கும் அவரது சிந்தனைகள், பாமர மக்களுக்கும் எளிதில் புரியும் வண்ணம் அமைந்துள்ளன. இதனைக் கவிஞர் அவர்கள் இவ்வாறு குறிப்பிடுகிறார்:

*''விதைகள் பேரில் ஒருவசனம் - களை*
*விழுதல் பேரில் ஒருவசனம்*
*சிதர் கடுகு விதையிலும் ஓர் உரை*
*செப்பினர் கேளம்மா, ஞானப்பெண்ணே''*

இயேசுநாதர் மொழிந்த முப்பது உவமைகளைக் கூறியபின், தொடர்ந்து பல பாடல்களில் இளம் மகளிர்க்குக் கிறிஸ்தவ நோக்கில் அறிவுரை வழங்குகிறார்:

*''கற்பு குலைந்து நடவாதே''*
*''குண்டணி கோள் ஒன்றும் சொல்லாதே''*
*''பொய் சொல்லும் வாயை நீ கல்லாதே''*
*''வீடுகள் தோறும் அலையாதே''*
*''எப்போதும் தேவ பயத்தில் நடப்பதே*
*எச்சரிப்பாகும் காண் ஞானப்பெண்ணே''*

இப்படி இளம் மகளிர்க்கு எத்தனையோ அறிவுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

கவிமணியின் கவிதைகள், குழந்தைகளின் உள்ளங்களில் பசு மரத்தாணி போல் பதிந்துவிடும். அதேபோன்று அருள்திரு. வேதக்கண் அவர்களின் கவிதைகளும் ஒருமுறை படித்தாலே இதயத்தில் பதிந்துவிடும்.

*''சத்திய வேதத்தை வாசியுங்கள், அது*
*சாற்றும் முறையினை நேசியுங்கள்''*

இத்தகைய ஓசையோடு அமைந்த இனிய அடிகளை இவரது படைப்பில் காணமுடிகின்றது.

96 கவிதைகளில் அமைந்துள்ள 'அதிசயக்கும்மி'யில் திருமறையின் சாற்றைப் பிழிந்து தரும் கவிஞனின் திறமை மிகவும் பாராட்டுதற்குரியது. இயேசுநாதர் செய்த 33 அற்புதங்கள், புதிய ஏற்பாட்டில் இடம் பெறும் நூற்களை எழுதியவர்களின் காலம், இடம் தொடர்பான செய்திகள், இயேசுநாதர் மொழிந்த 30 உவமைகள் ஆகிய அனைத்தையும் கோவைப்படுத்தி அமைத்துள்ளார். அத்துடன் திருமறைநோக்கில் மாதர்களுக்கு அறிவுரையும், எளிய நடையில் இனிதாக வழங்கியுள்ளார்.

தமிழகத்திலும், தமிழ் பேசப்படும் நாடுகளிலும், ஒவ்வொரு கிராமங்களிலும் இசைக்கப்பட வேண்டிய இனிய கவிதைகள் இவை.

வாழ்நாளெல்லாம் திருமறையைப் பாதைக்குத் தீபமாகவும், கால்களுக்கு வெளிச்சமாகவும் கொண்டு இனிய வாழ்க்கை வாழ்ந்த அருள்திரு. வேதக்கண் ஐயர் அவர்கள் பலரின் மனக்கண்களைத் திறந்தவர்.

கவிஞரது வாழ்க்கையாலும், வார்த்தைகளாலும் இறை நாமம் மகிமைப்படுகின்றது; மாட்சிமை பெறுகின்றது.

## அதிசயக்கும்மி

1 ஆரண காரணனார் கிறிஸ்தேசு
அதிசயக் கும்மியை யான் பாட,
பூரண ரான தயாபரனார் செயம்
புரிந்தளிப்பர் துணையாமே.

2 மங்களமான திருச்சபையானது
மகிழ்ந்து கும்மி யடிப்பதற்காய்,
சிங்காரமான அதிசயக் கும்மியை
செப்புவேன் ஏசு துணையாமே

3. கானா ஊரில் ஒரு கலியாணத்தில்
கற்சாடி ஆறு நிறைந்த தண்ணீர்,
பானம் பண்ணும் அதிரசமாய் ஏசு
பண்ணிக்கொடுத்தனர், ஞானப்பெண்ணே.

4. ரண்டாவ தந்த கானா ஊரினில்
ராச சங்கத்தான் ஒருவன் மகன்
கொண்ட வியாதியை தீர்த்த கிறிஸ்துவை
கும்பிட்டடி பணி, ஞானப்பெண்ணே.

5. மூன்றாம் வேளை கலிலேயாக் கடல்
முந்தி வருந்தின மீன்காரர்
வான்றிறத்தாலே பெரிய மீன்கள் பல
வாரச் செய்தார் அம்மா, ஞானப்பெண்ணே.

6 நாலாம் வேளை கலிலேயாக் கடல்
நடுவில் காற்றோ டலை யுரக்க,
ஓலம் இட்டவர் ஆறிடவே திறம்
உடன் அமர்த்தினார், ஞானப்பெண்ணே.

7. ஐந்தாம் வேளை கதரேனர் தேசம்
அலகை கொண்ட மனுடர்களை
புந்தியுறச்செய்து பேய்களை ஓட்டின
புதுமை கொஞ்சமோ, ஞானப்பெண்ணே.

8. ஆறாம் வேளை பெரும்பாடுள்ளவள்
அங்கே கப்பர்நாகூம் ஊரில்,
கூறை தொட மனம் சம்மதித்தாற்றினார்
குணப்பட்டாளவள், ஞானப்பெண்ணே.

9. ஏழாம் வேளை கப்பர்நாகூம் ஊரினில்,
இறந்துபோன யாவீர் மகளை,
சூழ அழுதவர் பார்க்க உயிர்ப்பித்த
சூட்சம் பாரம்மா, ஞானப்பெண்ணே.

10. எட்டாம் வேளை கப்பர்நாகூம் ஊரில்,
இருவர் அந்தகர்க்குப் பார்வை,
சட்டமுடனே அளித்த புதுமைக்கு
தகுதி இல்லையே, ஞானப்பெண்ணே.

11. ஒன்பதாம் வேளை கப்பர்நாகூம் ஊரில்
ஒரு திமிர்வாதக்காரனுக்கு
அன்புடன் சொஸ்தம் அளித்த கிறிஸ்துவுக்
கடிமையாய் நட, ஞானப்பெண்ணே.

12. பத்தாம் வேளை கப்பர்நாகூம் ஊரில்
பயங்கர குஷ்ட ரோகம் உற்று
செத்தவன் போல்வனை ரெட்சித்த ஏசுவை
சேவிப்பது கடன், ஞானப்பெண்ணே

13. பதினோராம் வேளை கப்பர்நாகூமில்
பதிற்று பத்துப் பேரின் தலைவன்
மதி பெறும் வேலைக்காரனை ஆற்றின
மகத்துவம் நினை, ஞானப்பெண்ணே

14. பன்னிராம் வேளையில் நாகூமில்
பசாசு கொண்டோன் செப ஆலயத்தில்
சன்னை செய்யக்கண்டு பேயை விரட்டின
தத்துவம் மெத்தவே, ஞானப்பெண்ணே.

15. பதின் மூன்றாவது நாகூமில்
பல நாளாக சுரம் பிடித்த
விதவை பேதுரு மாமியை ரட்சித்த
வினோதம் பாரம்மா, ஞானப்பெண்ணே.

16. பதினாலாவது நாயீனில்
பார்த்த விதவைக்கொரே மகன் தான்
சதியடைந்த பின்னே உயிர்ப்பித்தனர்
சற்குருவானவர், ஞானப்பெண்ணே.

17. பதினைந்தில் முப்பத்தெட்டாண்டாய்
படுத்திருந்து பெதஸ்தாவில்,
மிதியுற்றோனுக்கு நன்மையளித்த
விசித்திரம் பாரம்மா, ஞானப்பெண்ணே.

18. பதினாறில் தெக்கப்போலியிலே,
பசித்த ஐயாயிரம் பேர்க்கு,
அதிசயமாய் பொசிப்பளித்த நம
தச்சயனைத் துதி, ஞானப்பெண்ணே.

19. பதினேழில் கலிலேயாவில்
பயமின்றி கடல் மேல் நடந்தார்,
இதுவும் தேவ செயல் அல்லவோ கிறிஸ்
திறைவனை நம்பு, ஞானப்பெண்ணே.

20. பதினெட்டாவ தெருசலையில்
பார்வையற் றபிற விக்குருடன்,
புது விழி அடைந்தான் அவரால் மனம்
புகழ்ந்து பாடம்மா, ஞானப்பெண்ணே.

21 பத்தொன்பானில் யூதேயாவில்
பார்த்தார் சூம்பின கையனையே
சத்தியன் குணமளித்த வெகு
சமர்த்தை நீ நினை, ஞானப்பெண்ணே.

22. இருபதில் கலிலேயாவில்
இருந்தாள் கூனி ஒருத்தி முன்னே
சருவ வல்லவனார் செயலால் அவள்
சரிப்பட்டாள் அம்மா, ஞானப்பெண்ணே.

23 இருபத்தொன்றில் கலிலேயாவில்
இருந்தான் பாண்டு வியாதியுற்றோன்
கருணையால் அவர் தொட்டளித்தார் சுகம்
கர்த்தன் அன்றோ இவர்? ஞானப்பெண்ணே.

24. இருபத்திரண்டில் சமாரியா ஊரதில்,
ஈரைந்து குஷ்ட ரோகிகளையே
மருவி வார்த்தை உரைத்தளித்தார் சுகம்
மகிபனார் ஏசு, ஞானப்பெண்ணே.

25 இருபான் மூன்றினில் தீருவின் அருகே
ஏந்திழை ஏழை ஒருத்தி மகள்
வெருவுற்ற கடும் பேயை விரட்டின
வேடிக்கை பாரம்மா, ஞானப்பெண்ணே.

26. இருபான் நாலினில் தெக்கப்போலி என்னும்
இடத்தில் கொன்னையோடு செவிடன்
புருடனை எப்பத்தா என்று சொல்லி
புலப்படுத்தினார், ஞானப்பெண்ணே.

27. இருபத்தைந்தினில் தெக்கப்போலியினில்
இளைத்த நாலாயி ரம்பேர்க்கு,
உருகி அப்பம் ஏழால் பூரிப்பாக்கின
உண்மை மெத்தவே, ஞானப்பெண்ணே.

28. இருபத்தாறில் பெதுசாயிதாவில்,
இருந்த அந்தகன் ஓர்வனுக்கு,
திருவுளம் இரங்கி சுகம் ஈந்த
செயலை பாரம்மா, ஞானப்பெண்ணே.

29 இருபத்தேழினில் தாபோரில்,
இளையன் சந்திர ரோகியையும்
சருவ வல்லவனார் குணமாக்கினார்
சமர்த்திது அன்றோ? ஞானப்பெண்ணே.

30. இருபத்தெட்டில் கலிலேயாக்கடல்,
எடுத்தான் பேதுரு மீன் ஒன்றை,
ஒரு வெள்ளிக்காசு வாயுற்ற தேசுவின்
உரைப்படி சரி, ஞானப்பெண்ணே

31. இருபத்தொன்பதில் பெத்தானி,
இஷ்டனாம் லாசரு செத்த பின்பு,
கிருபையாக நாலாம் நாளில்,
கிறிஸ்துயிர்ப்பித்தார், ஞானப்பெண்ணே.

32 முப்பதில் எரிகோ அருகே,
முழுக் குருடர் இருவருக்கு,
அற்புத பார்வை அளித்த கிறிஸ்துவுக்
காரும் நிகராமோ? ஞானப்பெண்ணே.

33. முப்பத்தொன்றில் பெத்தானியினில்,
முற்றும் கனியற்ற அத்தி ஒன்றை,
செப்பின வார்த்தையில் பட்டுப்போகச் செய்த
செயலை பாரம்மா, ஞானப்பெண்ணே.

34. முப்பத்திரண்டில் கெதுசமனேயினில்,
மூர்க்கமாய் பேதுரொருவன் செவி
வெப்பமாய் வெட்டினான் தொட்டதை ஆற்றினார்
வெகு தயவுடன், ஞானப்பெண்ணே.

35. முப்பத்து மூன்றில் கலிலேயாக்கடல்,
முன்னைப்போல் மீன்கள் வலை படவே,
ஒப்பற்ற ஏசு திருவுளமாயின
ஒயிலைப் பாரம்மா, ஞானப்பெண்ணே.

36. வானமும் பூமியும் கொள்ளாதே ஏசு
வானவரின் செயல் விள்ளுதற்கு,
ஏனையவை மிகவாகும் அவை புதி
யேற்பாட்டில் பாரம்மா, ஞானப்பெண்ணே.

37. மத்தேயு யூதேயா விருந்து
வருஷம் முப்பதோ டெட்டினிலே,
சுத்த எபிரேயர்க்காய் அவர் பாஷையில்
சுவிசேஷம் விட்டான், ஞானப்பெண்ணே.

38. இன்னும் அவன் ஆண்டறுபதிலே அதை
எங்கெங்கும் உள்ள கிரேக்கருக்காய்,
பன்னி கிரேக்கெனும் பாஷையிலே பரி
பாஷைப்படுத்தினான், ஞானப்பெண்ணே.

39. ஐம்பத் தொன்றா மாண்டு பவுல் வரைந்
தனுப்பி னான்க லாத்தியர்க்குத்
தென்படவில்லை யெங் கேயிருந் தென்பது
தேடிப் பார்த்ததில், ஞானப்பெண்ணே.

40. ஐம்பத்திரண்டினிலே பவுலு முத
லாமிரண்டாம் தெசலோனியரை,
சம்பிரமான கொரிந்து நின்றே விடுத்
தானதை நீ படி, ஞானப்பெண்ணே.

41. ஒன்று கொரிந்தர் நிருபமதை எபே
சூரிருந் தாண்டைம்பத் தேழினிலே,
நன்றுறவே பவுல் தீட்டிவிட்டான் அதை
நன்றாய் நீ படி, ஞானப்பெண்ணே.

42 ரோமருக் காண்டைம்பத் தெட்டினிலே வி
நோதமாய் ஆன்ற கொரிந்துவினில்,
தாமதமான பவுல் மகா நீடிய
சஞ்சிகை விட்டனன், ஞானப்பெண்ணே.

43. ரண்டு கொரிந்தர் நிருபமதைப் பவுல்
நாடு மக்கேத்தோனி யாவிருந்து,
பண்டு கடந்த ஆண்டைம்பத் தெட்டானதில்
பண்பில் விட்டான் அம்மா, ஞானப்பெண்ணே.

44. யாக்கோ பென்பவன் யூதேயா எனும்
நாட்டிலிருந்தோர் அறுபத்தொன்றில்,
தாக்கினான் யூத சபைக்காக சிறி
தான நிருபமே, ஞானப்பெண்ணே.

45. மாற்கு கிரேக்கை கிறிஸ்தவர்க்காய் றோமில்,
வருஷம் ஓரறு பத்தொன்றில்,
பாக்கியன் ஏசு சரித்திரம் தீட்டினான்
படித்தொழுகு நீ, ஞானப்பெண்ணே.

46. ஏபேசென்ற சபையாருக்
கெழுதினான் பவுல் ஓர் நிருபம்,
மா பெரி றோமையிலே அறுபத்தொன்றாம்
வருஷ மீதிலே, ஞானப்பெண்ணே

47. பிலிப்பியர்க்கும் கொலோசருக்கும் பவுல்,
பெரிய றோமை நகரியினில்
பெலப்பட்ட அறுபத்திரண்டில் உரை
பெய்து விட்டான் அம்மா, ஞானப்பெண்ணே.

48 கவலையுற்ற எபிரேயர்க்கும்,
கருணையுள்ள பிலேமோனுக்கும்,
பவுல் அறுபத்து மூன்றில் உரோமையில்
பரிந்தனுப்பினான், ஞானப்பெண்ணே.

49. லூக்கா ஆண்டறுபான் மூன்றில்,
நுதலினான் சுவிசேஷமதை,
வாக்கியம் ஆன்ற கிரேக்கை நின்றே, நல்ல
வயித்தியன் அவன், ஞானப்பெண்ணே.

50. நடபடியை லூக்கா வரைந்தான்,
நவின்ற நாடு கிரேக்கையினில்,
திடம் அறுபத்து நாலாண்டில்,
தெரிந்து பாரம்மா, ஞானப்பெண்ணே.

51. ஒன்று தீமோத்தேயொடு தீத்தும்,
ஒரறுபத்து நாலாம் ஆண்டில்,
வென்றி மக்கேதோனியாவிருந்து பவுல்
விடுத்தனன் படி, ஞானப்பெண்ணே.

52 பேதுருவின் முதலாம் நிருபம்,
பெரிய பாபிலோனிலிருந்தே,
யூதர் முதல் அனைவோருக்கும் ஆகவே
விட்டான் எட்டெட்டில், ஞானப்பெண்ணே.

53. யூதா எங்கிருந்தோ எவர்க்காகவும்,
நூங்கல் உற்ற தன்னிருபமதை,
தீதற ஆண்டறு பானைந்தில்,
தெரிந்தனுப்பினான், ஞானப்பெண்ணே.

54. பேதுரு தன்னிரண்டாம் நிருபமதை,
பேர் பெரிதான பாபீலோனில்,
காதலுடன் அறுபத்தைந்தில்,
கருதி விட்டனன், ஞானப்பெண்ணே.

55. ரண்டு தீமோத்தே நிருபமதைப் பவுல்,
நகரி ரோமை இருந்தெழுதி
கண்டுணர அறு பானைந்தில் விட்டதை,
கற்று நடந்திடு, ஞானப்பெண்ணே.

56. யோவான் தன் முதலாம் நிருபமதை,
யூதர் முதல் அனைவோருக்குமே,
ஏபேசிலிருந் தாண்டறுபான் எட்டில்,
இயற்றி விட்டனன், ஞானப்பெண்ணே.

57. தெரிந்துகொண்ட அம்மாளுக்கு யோவான்,
செப்பினான் மற்ற ரண்டா நிருபம்,
பரிந்தெபேசில் அறுபத்தொன்பானதில்,
படித்தொழுகு நீ, ஞானப்பெண்ணே.

58 மூன்று யோவானை எபேசிருந்தே அவன்,
முடித்தான் காயுவின் பேருக்கென்று,
சான்றவர் கூடி அறுபத்தொன்பான் என
தக்க கணக்கிட்டார், ஞானப்பெண்ணே.

59 அறிவிப்பென்னும் விசேஷமதை,
அறைந்தான் தொண்ணூற்றேழாம் வருஷம்,
சிறுமை மேவி பதமு தீவில் யோவான்,
தெரிசனம் உற்றான், ஞானப்பெண்ணே.

60. ஏபேசென்ற இடமிருந்தே யோவான்,
எழுதினான் சுவிசேஷமதை,
சோபிதமாக எழுதின ஆண்டு கேள்,
தொண்ணூற்றெட்டாம் அம்மா, ஞானப்பெண்ணே.

61. அற்புதம் செய்த பரஞ்சோதி அவர்,
அருளினார் உரை தேன் அமுதாய்,
செப்பின நல் உபமானங்களின் வகை
தெரிந்து கேள் அம்மா, ஞானப்பெண்ணே.

62. விதைகள் பேரில் ஒரு வசனம், களை
விழுதல் பேரில் ஒரு வசனம்,
சிதர் கடுகு விதையிலும் ஓர் உரை
செப்பினர் கேளம்மா, ஞானப்பெண்ணே.

63. புளித்த மாவில் ஒரு வசனம்,
புதை பொருளில் ஒரு வசனம்,
ஒளி துலங்கும் நல் ஆணி முத்தில்,
ஒரு வசனம் கேள், ஞானப்பெண்ணே.

64. வலையின் பேரில் உவமை ஒன்று,
வன்கணன் பேரில் வசனம் ஒன்று,
நல் திராட்சத்தோட்ட வேலைக்காரரில்,
நயந்தொரு உரை, ஞானப்பெண்ணே

65. ரண்டு குமாரரில் ஓர் வசனம்
நண்பறு தோட்டக்காரர் பேரில்,
விண்டவர் சொன்ன உபமானம் வெகு
விற்பனம் அல்லவோ? ஞானப்பெண்ணே.

66. ராச குமாரன் விவாகத்தின் மேல் ஒன்று,
ரண்டு வித பத்து கன்னிகள் மேல்,
பேசினார் ஒன்று தாலந்து தொட்டொன்றிவை
பேணி நடந்து வா, ஞானப்பெண்ணே.

67. தெரிந்திடா விதம் வித்து முளைத்து,
செழித்த பயிரில் உவமை ஒன்று,
வருந்தின கடனாளிகள் ரண்டு பேர்
வகையில் ஒன்று கேள், ஞானப்பெண்ணே.

68. நல்ல சமாரியன் மேல் ஒன்றும், நடு
ரா அப்பம் கேட்டவன் மேல் ஒன்றும்,
செல்வம் உள்ள மதி கேடன் மேலொன்றவர்
செப்பினர் பார் அம்மா, ஞானப்பெண்ணே.

69. கனி கொடா அத்தி மேல் ஒன்றும்,
கனத்த ஓர் விருந்தின் மேலும்,
இனிமையாக உவமை சொன்னார், அவை
இணங்கி நீ நட, ஞானப்பெண்ணே.

70. காணா ஆட்டின் மேல் ஒன்றுண்டு,
கை இழந்த வெள்ளிக்காசு தொட்டும்,
வீணா கெட்ட மகன் மேலும் அவர்
விடுத்தனர் உரை, ஞானப்பெண்ணே.

71. நீதம் அற்ற உக்கிராணனையும்,
நெறி அற்ற தனவானுடனே,
நோதல் உற்ற ஏழை லாசருவை இட்டு
ஓதினார் நல்லுரை, ஞானப்பெண்ணே.

72. பாத்திரம் இல்லாத வேலைக்காரன்
படும் பாடுக்கொரு வார்த்தை சொன்னார்,
காத்திரம் அற்ற அநீத நடுவனைக்
காட்டி ஒன்றோதினார், ஞானப்பெண்ணே.

73 மாய பரிசேயன் பேரிலேயும்,
வறிய ஆயக்காரன் மேலும்,
நேயமாய் சொன்ன உபமானங்களை
நினைந்து நீ நட, ஞானப்பெண்ணே

74. தூர தேசத்துக்கு போன பிரபுவை
தொட்டொரு நல் உபமானம் இட்டார்,
பார் இந்த முப்ப துவமைகளின்படி,
பத்திரமாய் நட, ஞானப்பெண்ணே.

75. மரியம்மாளே! குழைந்தாடு, நல்ல
மார்த்தாள்! வீண் கவலையை விடு,
உரிமையுள்ள மகுதலேனாளே! நீ
உகந்தடி கும்மி, ஞானப்பெண்ணே.

76. சூசன்னாளே! வளைந்தாடு உற்ற
தோற்காள் வந்து மகிழ்ந்தாடு,
நேசமுள்ள யோவன்னாள் எஸ்தரே!
நெருங்கி ஆடுங்கள், ஞானப்பெண்ணே.

77. அன்னாள்! ரூத்து! செறிந்தாடு, கிறிஸ்
தன்பை நினைந்து புகழ் பாடு,
மின்னே ராகேல்! குயிலாடு, மூத்த
மிரியாம்! வந்தடி, ஞானப்பெணணே.

78. சாறாளே! எலிசப்பேத்து
தன்னையும் கூட்டு நாகாமியையும்,
வாறாயா? என்று தே போறாளையும்,
வருத்தி ஆடுங்கள், ஞானப்பெண்ணே.

79. அக்காள் தங்கைகளே! கூடும், எனக்
கன்பாம் மச்சினிமார் ஆடும்,
முக்கியமான இயேசுக்கிறிஸ்துவின்
முன்னால் ஆடுங்கள், ஞானப்பெண்ணே

80. கன்னியர் கூட்டம் எல்லாம், வேத
கற்பு நெறியில் நட வாரும்,
மன்னவன் ஏசு முன்னே பாடும் உம்மை
மாலை இடுவாரே, ஞானப்பெண்ணே.

81. பொன்னொடு ரற்றினமும் தருவார், அவர்
போத வரங்களும் தாம் அளிப்பார்;
இன்னொருவர் முகம் பாராமல் கிறிஸ்
தேசுவை சேருங்கள், ஞானப்பெண்ணே.

82. கற்பு குலைந்து நடவாதே, கொண்ட
கணவன் சொல்லை கடவாதே;
எப்போதும் தேவபயத்தில் நடப்பதே
எச்சரிப்பாகும் காண், ஞானப்பெண்ணே.

83. குண்டணி கோள் ஒன்றும் சொல்லாதே, இவை
கொடுமை நீடு நாள் நில்லாதே,
ரண்டகம் தள்ளி நடந்தாலே, தேவ
ராச்சியம் சேரலாம், ஞானப்பெண்ணே.

84 பொய் சொல்லும் வாயை நீ கல்லாதே, கள்ள
புரட்டு வார்த்தைகள் நில்லாதே,
மெய் சொல்லி உண்மை வழி போவாய், இதே
வேத முறைமை காண், ஞானப்பெண்ணே

85. வீடுகள் தோறும் அலையாதே, சும்மா
வீணா காலம் தொலையாதே,
பாடுகள் சோலிகள் பார்த்துக்கொண் டுந்தனின்
பாட்டில் இருந்திடு, ஞானப்பெண்ணே.

86 மற்றவர் பேச்சை எடாதே, நீ பல
வலையில் பட்டு கெடாதே காண்!
சுற்றிச் சுற்றி பல பேசாதே, வெறுந்
தொல்லை அல்லால் என்ன! ஞானப்பெண்ணே.

87 சன்னைகள் சாடைகள் கூறாதே, வீண்
சண்டைசெய்துபெயர் நாறாதே,
என்னைப் போல் ஆள் இல்லை என்று மற்றோரை நீ
இகழ்ந்துரையாதே, ஞானப்பெண்ணே.

88 சந்தியில் வந்து தரியாதே, வீண்
சரசம் சொல்லி சிரியாதே,
முந்தி கொண்டை கொலையாதே, நீ தெரு
வீதியில் நிற்கையில், ஞானப்பெண்ணே.

89. கூடிக்கூடி ஒன்றும் பேசாதே, அதில்
கொடுமை உண்டு பிசகாதே,
ஆடிப் பாடி வழி போகாதே, உனக்
கடுத்த தல்லவே, ஞானப்பெண்ணே.

90. கொடு கொடென்றுரை கூறாதே, உன்
குரலை நீட்டி ஊர் கூவாதே,
நடுநடுங்கி நீ நில்லடியே உன்
நாயகன் முன்னாலே, ஞானப்பெணணே

91 சொல்லறி யாதொன்று சொல்லாதே, சொல்லால்
தொந்தரவு வரும் பொல்லாதே,
சல்லியக் காரியை சேராதே, அவள்
சங்காத்தம் தள்ளம்மா, ஞானப்பெண்ணே.

92. பூலோக வேஷம் நிலையாதே, இச்சை
பூண்டு மனது கொலையாதே,
மேலோக வாழ்வு தனைத்தேடு, மோட்ச
வீட்டு வழி நட, ஞானப்பெண்ணே.

93. கற்புக்குரிய உடை போர்த்து நாணம்
கரத்து தெளிவான புத்தி உற்று,
நற்கருமங்களாலே அலங்காரித்தல்
நாயனுக் கேற்றது ஞானப்பெண்ணே.

94 சத்திய வேதத்தை வாசியுங்கள், அது
சாற்றும் முறையினை நேசியுங்கள்,
முத்தியில் சேரும் முறை இதம்மா, முழு
மோசம் மற்றவை, ஞானப்பெண்ணே.

95. தேவ பிதாவுக்கு கும்மி அடி, பெண்ணே!
திருச் சுதனுக்கு கும்மியடி,
ஏவும் துய்யாவிக்கு கும்மியடி, திரி
ஏகனை கும்பிடு, ஞானப்பெண்ணே.

96. ஆமன் என்று குதியுங்கடி, கிறிஸ்
தாண்டவர் பாதம் துதியுங்கடி,
பூமி எங்கும் ஏசுவானவர் நாமத்தை
போற்றிப் பாடுங்கள், ஞானப்பெண்ணே.



# 11

## பஞ்சரத்தினக் கவிதையும் கீர்த்தனைகளும்

**ஆசிரியர்: ஞா. சாமுவேல் ஐயர் (1850-1927)**
**அறிமுகம்: தி. தயாணந்தன் பிரான்சிஸ்**

*இருபதாம் நூற்றாண்டில் கிறிஸ்தவ இலக்கியப் பணியில் முனைந்து ஈடுபட்ட அருள் திருவாளப் பெருந்தகையருள் ஞா. சாமுவேலர் குறிப்பிடத் தகுந்தவர். பரமானந்தம் ஐயர், ஜி.எஸ். வேதநாயகம் ஐயர், வே. சந்தியாகு ஐயர் ஆகியோரைப் போன்று நூற்றுக்கணக்கான இசைப் பாடல்களை எழுதி வழங்கிய பெருமை இவருக்கு உண்டு. லூத்தரன் பின்னணியைக் கொண்ட ஐயரின் தந்தை ஞானாச்சரியம் தமிழ் வல்லுநராகத் திகழ்ந்தவர். நாவலர் என்னும் பட்டம் பெற்றவர். அவருடைய தந்தையார் ராமனாதபுரம் சேதுபதி மன்னரிடம் அமைச்சராகப் பணியாற்றியவர் என்று அறிகிறோம். சாமுவேல் ஐயர் கும்பகோணத்தில் 1850 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் பதினெட்டாம் நாளன்று பிறந்து எழுபத்தேழு ஆண்டுக் காலம் வாழ்ந்து, பணியாற்றி 1927 ஆம் ஆண்டில் மே திங்கள் இருபதாம் நாளன்று சென்னையில் ஆண்டவருக்குள் துயிலுற்றார். அவர் வாழ்ந்தபோதும் அவருடைய மரணத்திற்குப் பின்புமான கடந்த எண்பது ஆண்டுகளின் போதும் அவருடைய அருட்பாடல்கள் தமிழ்க் கிறிஸ்தவர்கள் வாயில் மணக்காமல் இருந்ததில்லை. சபை வேறுபாடுகளின்றி தமிழ்க் கிறிஸ்தவர்கள் அவர் பாடல்களை வழிபாடுகளில் பாடி மகிழ்கின்றார்கள். 'சீர்திரி ஏக வஸ்தே', 'நான் விடமாட்டேன் என் இயேசுவை', 'குணப்படு பாவி', 'என் மீட்பர் உயிரோடிருக்கையிலே' முதலிய பாடல்கள் அவருடைய பக்தியுள்ளத்தையும் பாட்டுத் திறனையும் எடுத்துக்காட்டுகின்றன. பெப்ரீஷியஸ் ஐயர் வழிவரும் சாமுவேலரின் பாடல்களும் 'நெஞ்சுருக்கிப் பாடல்கள்' என எண்ணத் தகுந்தவை ஆகும்.*

*ஐயரின் 'குணப்படு பாவி', 'நான் விட மாட்டேன்' ஆகிய பாடல்களை மிகவும் விரும்பிப் பாடி வந்துள்ளவனாக ஏறத்தாழ இருபது ஆண்டுகளுக்கு முன்பு ஐயருக்கு அஞ்சலியாக நான் எழுதியதொரு பாடல் இங்ஙனம் அமைந்தது:*

*''படுபாவியாம் என்றன் உள்ளம்-குணப்*
*படுபாவி எனும்பாட்டுக் குருகும்!*
*விடமாட்டேன் என்கின்ற பாட்டு - இயேசு*
*விடம் மட்டும் பற்றெனக்கே ஊட்டும்.''*

*"விடமாட்டேன் இயேசுவை நான் என்றார் — எந்த*
*வினைவரினும் வரட்டுமென நின்றார்!*
*திடமான இறைப்பற்றும் கொண்டே — அவர்*
*திருச்சிலுவை தினஞ்சுமந்து சென்றார்"*

ஞா. சாமுவேலர் முறைப்படி தமிழும், இசையும், இறையியலும் பயின்று பிறர்க்குப் பயிற்றுவித்தவர். தருமபுரி ஆதீன மடத்தில் சேர்ந்து தமிழ் பயின்று புலமை பெற்றதோடு கர்னாடக இசைக் கலையின் நுட்பங்களை வல்லுநர்களிடம் கற்றுக் கொண்டார். தரங்கை இறையியல் கல்லூரியில் 1877 ஆம் ஆண்டில் சேர்ந்து ஆர். ஆண்டுமன் முதலியோரிடம் இறையியலோடு விவிலிய மொழிகளுடன் ஜெர்மன் மொழியும் பயின்று அக் கல்லூரியில் மட்டுமல்லாமல் பெங்களூருவில் உள்ள ஐக்கிய இறையியல் கல்லூரியிலும் 1921 ஆம் ஆண்டிலிருந்து சில ஆண்டுகள் பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

ஐயர் இயற்றிய உரைநடை நூல்களுள் புகழ்வாய்ந்தது 'உள்ளது நாற்பது' என்னும் கட்டுரைத் தொகுப்பாகும். அவர் தமிழ்ச் சுவிசேட லுத்தரன் சபையின் 'அருணோதயம்' என்ற இதழில் 1885 முதல் 1908 வரை பணிபுரிந்த காலத்தில்' உள்ளது சொல்வோன்' என்ற புனைபெயரில் எழுதிய தொகுப்பே அந்நூல். நகைச்சுவை, பொருட்சுவை, பக்திச்சுவை ஆகியவை நிரம்பிய இனிய தமிழ் நடையில் எழுதப்பெற்ற நாற்பது கட்டுரைகளிலும் அடுக்குமொழி, எதுகை மொழி நயத்தைக் காணமுடிகின்றது. சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளை மற்றும் அறிஞர் அண்ணா ஆகியோர் அத்தகு மொழிநடையைத் தங்கள் எழுத்தில் கையாள்வதற்குப் பல ஆண்டுகளின் முன்னர் ஐயர் அதனைத் தம் கட்டுரைகளில் அறிமுகப்படுத்தியுள்ள பாங்கு போற்றற்குரியதாகும்.

ஐயரின் பிற நூல்களுள் சத்திய வேத பாயிரம், திருச்சபை வருஷ விபரம், தியானப் புஸ்தகம், திருவிருந்தாடி, தூபக் கலசம், பாலர் பூச்சரம், கதா மலர்க் கூடை (சிறுகதைத் தொகுப்பு), லுத்தர் சரித்திரப் புத்தகம், பிரசங்கப் புத்தகம், குடியின் கேடுகள் ஆகியவை குறிப்பிடத் தகுந்தவை ஆகும்.

ஐயர் தாம் இயற்றிய பாடல்களுள் 94 கீர்த்தனைகளைக் கொண்டதொரு நூலைச் 'சுவிசேஷக் கீர்த்தனை' என்ற பெயரில் வெளியிட்டார். இந்நூலில் அடங்கும் பாடல்களுள் நாற்பது பாடல்கள் தமிழ்த் திருச்சபைகளில் பயன்படுத்தப்படுகின்றன. லுத்தரன் சபைகளின் பாடற்புத்தகங்களோடு 'கிறிஸ்தவக் கீர்த்தனைகள்' நூலிலும், ஆசிரமப் பாமாலை, யாழ்ப்பாணப் பாடற்புத்தகம் ஆகிய நூல்களிலும் ஐயரின் பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

கர்னாடக இசையின் நுணுக்கங்களை நன்கறிந்தவர் ஆதலின் ஐயர் தம்முடைய 'சேனைகளின் கர்த்தரே நின் திருவிலம்', 'பூமியின் குடிகளே' முதலிய பாடல்களை கர்னாடக இசை வல்லுநர்கள் வியந்து போற்றும் வகையில் படைத்தளித்துள்ளார். தியாகராசர், ''ராமா நீ சமானவெவரு'' என்று எழுதிய கீர்த்தனையின் கரகரப் பிரியா ராகத்தில் ஐயர் 'நான் விடமாட்டேன் என் இயேசுவை' என்ற அருமையான பாடலை எழுதியுள்ளார்.

இங்குத் தரப்படும் தேர்வுப் பகுதியில் ஐயரின் ஐந்து பாடல்களும் அவர் பன்னிரு சீர்களால் யாத்த லுத்தர் வரலாற்றுச் செய்தியை வழங்கும் 'பஞ்சரத்தினக் கவிதை'யும் அடங்குகின்றன.

## மார்டீன் லுத்தர் பேரில் ஞா. சாமுவேல் ஐயர் பாடிய பஞ்சரத்தினக் கவிதை

1

சீர்மேவு சக்கோனி தேயத்தில் ஐஸ்லேபன்
சிறிய நகரதில் ஜெனனமாய்
தெய்வதா பக்தி மிகு மாகரேத் ஆன்சென்ற
சீரியரின் மகவதாகி
பேர்மேவு மன்ஸ்பெல்து மகதெபுர்க் ஐசினாக்
பிரவேசக் கல்லூரியில்
சேதமற வேசல்லி கற்றுமிடி யுற்றுமா
பிதாவருள் பெற்றுயர்ந்து
கார்மேவு பாப்புமார்க் கந்தந்த காரத்தைக்
கண்டுணரும் வழி புகுந்து
கலைபலவு மேகற்க எர்புர்த்து நகரக்
கலாசாலை புக்கியங்கே
ஏர்மேவு மருமறையைக் கண்ணுற்ற வகமகிழ்ந்
திசைகலா நிதியுமானாய்
இத்தரையி லத்தனது சுத்தசுவி சேடமுரை
பத்தமணி லுத்தர் குருவே.

2

வயதினி லிருபத்தி ரண்டாக சந்யாச
மடத்தில் தபங்கள் பண்ணி
மாபரன் தயவுபெற வேகிரியை பல செய்தும்
மனவாதை அதிகரிக்க
நயமடத்ததிபனும் வேறு பல பக்தரும்
நல்லுரைகள் பலவுமொழிய
நான் பாவ மன்னிப்பை நம்புகிற துண்மையெனு
நற்சொல்லி னாற்றிடத்து
ஜெயமிகும் சக்சோனி பிரதரிக் பிரபுவின்
சிறந்த சாஸ்திரச் சாலையில்
தேர்ந்த போதகராகி வேதப்ரசங்கங்கள்
சிங்காரமாய்ப் பொழிந்து
இயல்புறவே நீதிமான் தனது விசுவாசத்தி
னால் பிழைப்பானென்றறிந்
தித்தரையி லத்தனது சுத்தசுவி சேடமுரை
பத்தமணி லுத்தர் குருவே.

3

ஆகாத பாப்புமத வுண்ணிலைமை காண்டிடற்
கருவருப்பான ரோமை
யதுகாண வருள்பெற்று வங்குசென்றயாவாகி
அவனிதனிலே நீதிமான்
வாகான விசுவாசங் கொண்டுயிர் பெறுவனெனும்
மகிமையாம் வாக்கியத்தால்

மகிழ்வுற்று வந்தரிய வேதசாஸ் திரிப்பட்டம்
வளமையாய்ப் பெற்ற பின்னர்
தீகாசினாசையுறு சிற்றின்பதசலேயோ (LEOX)
சீட்டுகளை விற்றவைகளால்
தீயபவமே பொறுத் தத்தனது நன்மைதர
திருவாக்கு மீறியறைய
ஏகாந்தமாகவே ஐந்துகுறை சதஞாய (95 theses)
மெழுதிரோ மையைபிடித்தே
இத்தரையி லத்தனது சுத்தசுவி சேடமுரை
பத்தமணி லுத்தர் குருவே

4

பதிதனென் றுன்னையே தீர்ந்திடக் காயதான்
மில்திச்சு (MILTITX) பதித எக்கும் (ECK)
பலவாக நாடியுங் கூடாமல் பாப்புவின்
பட்டோலை யாற்சபிக்க
சதியோலை தன்னையே யக்கினிக் கிரையாக்கி
தைரியத்தோடு வொர்ம்சூர் (WORMS)
சங்கத்தில் ராயன்றான் சாற்றியும் உண்மையைச்
சாபமுற் றந்நீமாய்
அதிசீல பிரதரிக் அன்பினால் வார்த்புர்க் (WARTBURG)
அரங்கத்தில் தங்கியங்கே
அரியபுது வேற்பாடு கர்மனில் மொழிபெயர்த்
தன்பாயளித்து வப்பால்
இதமிலா கார்ல்ஸ் தாற்றி (CARLSTADT)னால் வந்த மோசத்தை
யின்பவாக்கால் ஜெயித்து
இத்தரையி லத்தனது சுத்தசுவி சேடமுரை
பத்தமணி லுத்தர் குருவே.

5

மஞ்சுறுங் கத்தரின் மாதைமண மேசூட்டி
மகவாசி மிகுதி பெற்று
மாண்பெரிய சிறியஉப தேசமாம் பொன்னூலும்
மகிமைபோ தகநூல்களும்
நெஞ்சினில் தைத்திடும் பிரசங்கநூல்களும்
நேர்வேத வியாக்கியானமும்
நெறியோடு செய்துமே வாக்கிலும் நடையிலும்
நின்மலன் வழிகாட்டியே
துஞ்சினாய் அறுபத்து மூன்று வயதானபின்
சுகிர்தமாய் ஜெனன ஊரில்
சுகுணராம் பிரபுக்கள் சாஸ்திரிகள் மாணாக்கர்
துங்கனின் சடலமதனை

*(இறுதி நான்கு அடிகள் கிடைத்தில).*

# கீர்த்தனைகள்

## 1. ஐயனே உமது திருவடிகளுக்கே

சங்கீதம் 96

இராகம்: சங்கராபரணம் ஆதிதாளம்

### கண்ணிகள்

1. ஐயனே! உமது திருவடிகளுக்கே
ஆயிரந்தரந் தோத்திரம்
மெய்யனே! உமது தயைகளை அடியேன்
விவரிக்க எம்மாத்திரம்.

2. கண்விழிபோலே அடியனைக் காத்த
கர்த்தனே! நமஸ்காரம்
மண்மிசையும்மா லன்றியிப் பூச்சி
வாழுமோ இந்நேரம்.

3. உடலுயிரும்மால் ஒரு குறைவின்றி
உய்கிற தம்பரனே
திடமுடனுமக்கே ஒப்புவிப்பே னென்னைச்
செப்பரும் அருள்கரனே.

4. சென்றதா மிரவில் தேவரீரென்னைச்
சேர்த்தரவணைத்தீரே;
அந்தடைவாயிப் பகலிலுங் கிருபை
யாக வாதரிப்பீரே.

5. இருதயந்தனை நீர் புதியதே யாக்கும்,
ஏழையைக் குணமாக்கும்
கருணையா யென்னை யுமதகமாக்கிக்
கன்மமெல்லாம் போக்கும்

6. நாவிழி செவியை, நாதனே! இந்த
நாளெல்லாம் நீர் காரும்
தீவினை விலகிநான் திருமுகம் நோக்க
தெய்வமே, அருள் கூரும்.

7. கைகாலால் நான் பவம்புரி யாமல்
கர்த்தனே துணை நில்லும்.
துய்யனே, உம்மால் தான் எனதிதயம்
தூய்வழியே செல்லும்.

8. ஊழியந் தனைநான் உண்மையாய்ச் செய்ய
உதவிநீர் செய்வீரே.
ஏழைநான் உமக்கே இசையநல் ஆவி
இன்பமாய்ப் பெய்வீரே.

9 அத்தனே! உமது மகிமையை நோக்க
அயலான் நலம்பார்க்கச்
சித்தமா யருளும் மெய்விசுவாசம்
தேவனே உமக்கேற்க.

10. இன்றுமென் மீட்பைப் பயம் நடுக்கத்தோ
டேயடியேன் நடத்தப்
பொன்றிடா பலமே தாரும் என் நாளைப்
பூவுலகில் கடத்த.

11. இந்த நாளிலுமே திருச்சபை வளர
ஏகா, தயை கூரும்;
தந்தையே, நானதற் குதவியாயிருக்கத்
தற்பரா வரந்தாரும்.

12 ஊனுடை சுகமே யருள்வதுன் பாரம்
உன்னதத் திருநாதா!
மாண்புற அளித்தேன், என்னயென் னவரை
வல்லமை நிறைபாதா.

## 2. சத்திய வேதம்

**சங்கீதம் 19:10; எபிரேயர் 4:12**

**இராகம்: கமாஸ்** **ஆதிதாளம்**

**பல்லவி**

வேதமே என்ன சொல்லுவேன்! - நின் மாட்சியை

**அனுபல்லவி**

சேதமில்லாது நன்னாதர் தம் அருள் திருப்
பாதமுறும் நெறியோது மொரேசத்ய — வேத

1. கண்முன் நீ எழுத்தானால் கரையிலா ஞானம்,
காந்தி நற்பனி மழை கசிந்திடும் வானம்
புண் மனமுடையோர்க்குப் புகழருந் தானம்,
புசித்திடப் புசித்திட ருசித்திடும் பானம் — வேத

2. சிறியவர் பெரியவர் செல்வர்கள் வலியார்
தீரர்கள் வீரர்கள் சீரியர் எளியார்
அறிஞர்கள் அல்லவர் ஆடவர் மெலியார்
அனைவரும் அருந்திட அருந்திடச் சலியார். — வேத

3. கன பல மருளுவாய் தினந்தினங் காலை,
களைப்பினைப் போக்குவாய் களைப்புறு மாலை,
தினமெனதிதயமே திருத்தலுன் வேலை
செப்பருங் கனிதருங் கற்பகச் சோலை. — வேத

4. அகமுறுமானைகள் விழுந்து தள்ளாடும்,
அருள்நதி ஆடுகள் நடந்துனிலோடும்,
தகவுனின் கரைகளில் குருவிகள் கூடும்,
தருக்கள் செழித்திருக்கும் தாசர்கள் நாடும். — வேத

5. பொன் அபரஞ்சியிலும் உன் விலை பெரிதே
பூவுலகினிலுனக் குவமைகளரிதே
நின்னை யசட்டை செய்வோர் நிலை மிகவறிதே
நின் படிப்பறியாதோர் கல்விமா சிறிதே. — வேத

6. இருபுறங் கருக்குவாள் தனிலும் நீ கூரே
இகபரம் இரண்டிற்கும் உன்வழி நேரே
கிருபை எத்தன முனக்கேற்ற நற்பேரே
கிறிஸ்துவின் அருள் தனை எனக்கு நீ வாரே. — வேத

### 3. கிறிஸ்துவுக்குரிய மேலான பல நாமங்கள்

பிலிப்பியர் 2:10-11

இராகம்: நாதநாமக்கிரிய ஆதிதாளம்

**திபதை - கண்ணிகள்**

1 ஐயாவே, இந்த அகிலந் தனிற் பிறந்த
அற்புதனே என்னைப் பாரும்.
துய்யாவே லோக துஷ்கருமங்க ளென்னைத்
தோஷஞ்செய்யாதென்றுங் காரும்

2. வெட்டுண்ட ஈசாயின் வேர்மரம் நின்றுதித்த
மேன்மை விருக்ஷமே! நீர் பாரும்;
கெட்ட பூலோகத்தின் கேடென்ற காங்கையால்
கேடமையா தென்னைக் காரும்

3 ஜீவனினப்பமென்ற திவ்ய குமாரனே
சிறியன் என் முகம் நோக்கிப் பாரும்
ஆவல்மிகுந்த எந்தன் ஆத்துமத்தின் பசியை
அன்புடன் நிவிர்த்தித்துக் காரும்.

4. மிக்க மணக்குஞ் சாரோன் வெளியின் மலரே யெந்த
வேளையும் ஏழை யெனைப் பாரும்
அக்ரம நாற்றமென்னில் அணுவுமிராது தள்ளி
ஆண்டென்னை யெந்நாளும் காரும்.

5. தீவித்ராட்சைச் செடியே சிறிய கொடியாமென்னைத்
தேவ கிருபையுடன் பாரும்
பாவத்தினா லுந்தன் பற்றுதலை விடாமல்
பக்கிஷமா யென்னைக் காரும்.

6. தேவ திருச்சபையின் சிரசே அவயவத்தைச்
சிந்தை மகிழ்வுடன் நீர் பாரும்
பூவுலகினிற் கள்ள போதகத்தாலடியேன்
புரளாதிருக்க என்னைக் காரும்.

7. அமிர்த ஜலஞ் சுரக்கும் அரிய நல்லூற்றே நீர்
அன்புடனே என்னைப் பாரும்
தமியன் பிழையழுக்கைத் தக்கவண்ணங் கழுவித்
தாகம் நிவர்த்தித் தென்றுங் காரும்.

8. பாவந்தன்னைத் தகிக்கும் பலமான அக்கினியே
பாவி யெளிய னென்னைப் பாரும்;
தாவுமடியே னென்னைத் தக்கபடி யுருக்கித்
தக்க பசும் பொன்னாக்கிக் காரும்

9 என்றென்றுமே நிற்கும் யேசென்னுங் கன்மலையே
ஏழைக் குழந்தையென்னைப் பாரும்;
துன்று மவஸ்தைதன்னில் துயரமுறாது நிற்கத்
தூய நம்பிக்கை தந்து காரும்

10. சீயோன் மலைக்கடியேன் திடமாகச் செல்லுதற்குத்
திவ்யவழியே எனைப்பாரும்,
தீய பிசாசின் பொல்லாத் தீட்பம் வழியதினில்
செல்லாமலே யென்னைக் காரும்.

11. ஆடுகள் மேய்ச்சலுக்கா யச்சமில்லாது செல்லும்
அரிய நல் வாசலே நீர் பாரும்
நாடிப் பசும்புல் தின்று நற்சலமே யருந்த
ஞானமதா யென்னைக் காரும்.

12. ஐயா! திருச்சபையின் ஆதாரங் கோடிக் கல்லே!
ஆவலாய்க் கூவுமென்னைப் பாரும்;
மெய்யாவென் நம்பிக்கை நின் மேலன்றி எங்கு வைப்பேன்
விட்டிடாதெந்தனை நீர் காரும்

13 சத்ய தெய்வாலயமே சங்கீதம்பாடி யும்மைச்
சாரும்படி யென்னைப் பாரும்,
நித்ய நாளாய் உம் வீட்டில் நேயமுடன் தரித்து
நிற்க அருள் புரிந்து காரும்.

14. காலை வெள்ளிவான் மீனே கன்மி பாவத்துயிலில்
கலங்கி நிற்காம லென்னைப் பாரும்
ஞாலத்தில் நான் பிழைக்கும் நாட்களெல்லாம் விழிப்பில்
நான் வாழச் செய்தமலா! காரும்.

15. தூய்மையுடனன்னீதி ஜோதி மிகுத்ததான
சூரியனே என்னைப் பாரும்;
காய்மகாரப் பிசாசின் காரிருள்லோகம் நின்று
கலையக் கிருபை செய்து காரும்.

## 4. ஆயக்காரன் ஜெபம்

### லூக்கா 18:13

இராகம்: மோஹனம் ஆதிதாளம்

### பல்லவி

ஆண்டவனே! கிருபை கூராய் - எனக்
காதார முந்தனின் பாதாரவிந்தம்

### அனுபல்லவி

மீண்டெனின் மேல் தயை பூண்டருள் நாதா!
ஈண்டுனின் தாள் பணிந்தேன் திருப்பாதா! - ஆண்

### சரணங்கள்

1 துர்குணத்தி லுருவானேன் - பொல்லாத்
தோஷியாய்ப் பேயவன் தோழனாய்ப் போனேன்,
நற்குணமென்னில் நான் காணேன் - நித்ய
நாச மரண நரகுக்குள்ளானேன்,
சற்குண மன்பு தயைமிகு தேவா!
தாவிப் பிடித்தேனான் மேவி நீ காவா — ஆண்

2. பாவ ஊற்றெனதுள்ளம் மெய்யே - பாவம்
பாய்வழி யென்செவி வாய் கண் கால்கையே
நோவென்னைப் பிடித்ததென் ஐயே! - எனை
நோக்கி யுலகு சொல்லும் ஆறுதல் பொய்யே;
ஏவை புத்திரனழு தேங்கல் நோக்காயோ?
என் பாவச் சேற்றை விட்டென்னை தூக்காயோ? — ஆண்

3 பாடெனக்காய்ப் பட்டீரன்றோ? என்தன்
பத்தாநின்சாவு நான் சாவதற்கன்றோ,
கேடென்னில் நிற்பதும் நன்றோ - உன்னைக்
கேளாதிருக்க உன்தன் மனங்குன்றோ?
நாடறியப் பாடு பட்டுயிர் தந்தாய்;
நம்பினபேர்க்கா யுயிர்த்தங்கு சென்றாய் — ஆண்

4. மன்னித்தோமென்று சொல்வாயே, - அப்போ
மாபாவி நான் மெய்யாய் உன் நேசர் சேயே!
பொன்னுல கென்னைச் சேர்ப்பாயே, - நின்னைப்
போற்றிடும் என் மனதோ டென்றன்வாயே;
மன்னவா! துய்யநல் இருதயந் தாராய்;
வானவழிதன்னில் காவென்னை நேராய் — ஆண்

## 5. சுவிசேஷ பலனுக்காகக் கெம்பீர கீதம்

சங்கீதம் 100:1

இராகம்: போர்த்துகீஸ் திஸ்ரஏகதாளம்

### பல்லவி

கெம்பீரமாகவே, சங்கீதம் பாடுவோம்

### அனுபல்லவி

நம்பாரமே யெந்நாளும் நீக்குவோனை நாடுவோம் கெம்

### சரணங்கள்

1 மங்காத தீபமாய் விளங்கும் மா வசனமே
சிங்காரமா யித்தீபம் நாடிச் சேர்ந்ததினமே— கெம்

2 படாமுடிக் கொடூரனைப் பதைக்கவே கொல
குடாரமாக வெய்ததேவ வேதமே வெல— கெம்

3. எக்காளமே தொனித்திடப் பொல்லாப் புரிவிழ
முக்காலமும் திரியேகரை முதன்மையாய்த் தொழ — கெம்

4. ஜீவாதிபற் கெலா மகத்வமே சிறந்திட
தேவாதி தேவன் யேசுவென் றெலாமறிந்திட— கெம்

5. அகோரப்பேய் நடுங்கியோட யாமகிழ்ந்திட
மகாமகத்வன் யேசுவென் றெலாம் புகழ்ந்திட — கெம்



# 12

# கிறிஸ்து மான்மியம்

**ஆசிரியர்: ஸ்டோஷ் ஐயர் (1851- ——)**

**அறிமுகம்: எஸ். லாரன்ஸ்**

*கிறிஸ்து மான்மியம் எனும் இச்சிறு காப்பியம் அருள்திரு. ஸ்டோஷ் (Rev. Stosch) என்பவரால் இயற்றப்பட்டதாக நூலில் அச்சிடப்பட்டுள்ளது. ஜெர்மானிய மிஷனெரியாகிய இவர் 2-9-1851 இல் பான்சென் (Bantzen) ஊரில் பிறந்தவர். லைப்சிக் மற்றும் எர்லாங்கன் ஊர்களில் கல்வி பயின்றுள்ளார். பான்சென் நகரில் 10-10-1876 இல் குருபட்டம் பெற்றுள்ளார். 12-10-1888 இல் இந்தியாவிற்கு இறைத் தொண்டராக (மிஷனெரியாக) அனுப்பப்பட்டுள்ளார். இவர் தரங்கம்பாடியில் அன்று அங்கு இருந்த தரங்கம்பாடி அச்சகத்தின் மேலாளராகப் பணிபுரிந்துள்ளார். 1892 இல் இந்திய நாட்டில் இருந்து தாயகம் திரும்பியுள்ளார். தமிழகத்தில் ஐந்து ஆண்டுகளே தங்கியுள்ள இவர் ''கிறிஸ்து மான்மியம்'' என்ற தமிழ்க் காப்பியத்தை இயற்றியுள்ளார் என்பது சர்ச்சைக்குரிய செய்தியாகும். அச்சகப் பொறுப்பில் இருந்த இவர் கடந்த நூற்றாண்டின் வழக்கப்படி கதையின் கருவை ஒரு தமிழ்ப் புலவரிடம் சொல்லி இம்மான்மியம் எழுதத் துணை புரிந்திருக்கலாம். பிற மதத்தைச் சார்ந்த புலவரின் பெயரைப் போடாமல் பதிப்பாசிரியரான இவர் தமது பெயரையே நூலில் அச்சிட்டிருக்கலாம். கடந்த நூற்றாண்டில் இத்தகைய பழக்கம் இருந்ததாகத் தமிழ் இலக்கிய வரலாற்றில் அறிகிறோம்.*

*இந்நூலில் அதிக உவமை நயங்கள் இல்லை. ஆனால் கிறிஸ்தவ வழக்குத் தமிழுக்கு மாறான தூய தமிழ்ச் சொற்கள் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. கிறிஸ்தவச் சமயப் பாடல்களையே ஜெர்மானிய மொழியில் இருந்து தமிழாக்கம் செய்த கால கட்டத்தில் தமிழ் இலக்கியப் போக்கில் ''கிறிஸ்து மான்மியம்'' என்ற இந்நூலை அச்சிட்ட ஐயர் பாராட்டத்தக்கவரே!*

## காற்றையுங் கடலையுமடக்கிய சருக்கம்

1

உலகமெலாம் புகழ்மகிமைக் கிறிஸ்துநாயகர் பலரையொருங்கு கண்டு
கலிலெய நாட்டினினடு வாங்கரங்குதிரையேரியினைக் கடந்து மேற்கா
யிலகுகரையுள கெர்கேசேனர் நாடெய்திடக் கட்டளையிட்டாரா
லலைமலியவ்வேரியினைக் கலிலேயாக்கடலென்பாரந்த நாட்டார்.

2

திரையெழும்பி நுனிவளைந்து மிகவொலித்துக்கரையருகே சென்றுச் சென்றுத்
தரையினிடைப்படிவதுதான் றன்னிடத்துங் கிறிஸ்து குருசார்தல் கண்டு
விரைவுடனக்கடலு மெழுந்தெதிர்கொண்டே தலைவணங்கி விளம்ப வாந்தோத்
திரமுடனே பலதண்டனிடுவதுபோன் மகிமைகொளத்தேவருக்கே.

3

இத்தகைய தாங்கடலைப் பிற்படுத்தப்படவுதனி லேறியேசு
கத்தரிருந்திடும்போதுச் சீடர்களும்பின்னர்வந்து கருத்தாயுற்றார்
தத்துமரக்கலன்செல்லுங் காலலகைத் தன்மையினாற் சரேரென்றேயா
பத்துவிளைத்திடுந்தன்மைத் தாய்த்தோற்றப்படவு நடுக்குறவப் பவ்வம்

4

பொங்குதலையடைந் தலைகளெழுந்தெழுந் தொன்றுடனொன்று புணர்ந் தேகித்தே
யெங்கணும் பேரிரைச்சலிட்டுக் கொந்தளிப்புற்றிடச்சூறை யெழும்பி மோதக்
சங்குகரைகாணாராய்ப் புணையிருக்குமிணையிலார் துணைக் கண்ணாராய்ப்
பங்கமுற்றோமென்றெண்ணித் தங்களைத்தாங் காப்பாற்றப்பதறிக் கொண்டு

5

சீடர்களெல்லோரு மென்னசெய்வோஞ் செய்வோமென்று திகைத்தார் சீட
ரோடவர்கள்குடிமுழுதும் புவிமுழு துங்காப்பாற்று முலகநாதர்
மூடியகண்ணுடையவராய்ப் படுத்தனந்தல்செய்கின்றார் முன்னர் வந்து
வாடுமெமைக் காப்பாற்றுமென் றெழுப்பினார் கூளிவந்ததோரார்.

6

அவ்வேலையைய ரெழுந்தற்ப விசுவாசிகாளஞ்சாதீரென்
றிவ்வேலையுலவைதமை யதட்டினாரிம்மென்னு மளவிலோய்ந்து
செவ்வேயுற்றமர்ந்தவதைப் பார்த்தவர்கள் வியந்திவர்தஞ் செய்கையென்னோ
வெவ்வேலை வெஞ்சூறையஞ்சினவே யென்றுவந்து மெய்யன் புற்றார்.

## வேறு

எல்லவருங்கண்டு பிரமிப்புற்றிம் மான்மியத்தை யெய்தியச்சஞ்
சொல்லவரும்பாவ மன்னிப்பதிகாரமானவன்பாற் றோற்றுவித்த
வல்லபராபரன் மகிமைகளையெண்ணித் துதிகள்வாயாரச்சொல்லி
நல்லவிசுவாசிப்புட்கொண்டிவரைச் சூழ்ந்திருந்தார் நட்பினோடும்

## பிறவிக் குருடன் கண்பெற்ற சருக்கம்

1. எருசலேமெனும் பெரிய வூரிடையிருக்கும்
பெரியதிரு வாலயமிருந்து பிரவேசித்
தொருவி வருபோது வழியதனி லொருபிறவிக்
குருடனை யெதிர்ந்தன ரியேசு குருநாதர்.

2. பின்னர்வரு சீடர் பிறவிக் குருடனைக் கண்
டென்னவிது வென்னவிது வென்றுள மிரங்கி
யன்னையென மானிடர் பவத்தை யடியோடுந்
தன்னுடலை விட்டு விடுவிக்கவரு தந்தை.

3. அருகினிலே வந்தடி வணங்கி யனைவர்க்குங்
குருபரவிவன் குருடுகொண்ட பிறவிக்கு
வருவிது விவன்செய் பவமோ வலது மாதா
வுரிமைகொள் பிதாவிவரு ஞற்று பவமோ நீர்.

4. சொல்லி யருள்வீரெனவித் தூயரிதன் மூல
மல்லனிவனும் மிவன தன்னையு மேயல்லள்
புல்லிய பிதாவுமலன் போந்தவிது வெல்லாம்
வல்லன் மகிமைகள் வெளியில் வரவென வுரைத்தார்.

5. இவ்வுடலினில்லளவு மெக்கிரியையுஞ் செய்
தவ்வுல கடைந்திடுவனென்றறைய வேண்டிச்
செவ்வையுறவே பகலிற் செய்பவைகள் செய்வெ
னெவ்வெவனுங் கிரியை யேலா விரவு வெய்தும்.

6. என்றன ரிவ்வாக்கிய வுள்ளீடுலகிறானே
துன்றலொளி யின்மை யிருளென்று சொனதாமா
னின்றவவர் சீடர்களெருங்கினவர் நேரே
தன்றன் மகிமைக் குளொரு சாட்சிதரலானார்.

7. வாயினுமிழ்நீரை யொரு மண்டரை யுமிழ்ந்தா
ராயவதனாலளறு செய்ததை யெடுத்தார்
தூயபிறவிக் குருடனோக்கிடை துமித்தார்
போயி சிலொவாங் குளம்புகுந்து கழுவென்றார்.

8. பெற்றவர்கண் மற்றவர்கள் பெற்றவிரு கண்ணா
வுற்றவர்களாற் புவியிலுள்ள வைகளோர் வான்
பற்றுமொரு கோல் கைகொடுபார் மிசைநடப்பான்
சற்றுமதியாமலே சரேரென வெழுந்தான்.

9. மண்ணதனை வாரியிரு கண்ணினிடையிட்ட
வண்ணலது சொற்படியடைந்து கழுவுங்கால்
விண்ணுலகு மண்ணுலகு மேன்மைசெய் கிறிஸ்தைப்
பெண்ணொருவள் பெற்றுபெறு பேருவகை பெற்றான்

## வேறு

10. பார்த்தனன் றன்னைப் பார்த்தான் புவியினை பார்த்தானெல்லாந்
தீர்த்தர் பாலடைந்தே யந்தத் தேவரைப் பார்த்துவந்தான்
சேர்த்தவிக் கைகாலாதி யவயவத் திரளைவைக்குஞ்
சீர்த்தது கண்ணேயன்றி வேறிலை யென்று தேர்ந்தான்.

11. வானத்தின் கண்ணிருந்து வந்தனைவருக்கும் ஞானத்
தானத்தைக்கொடுத்து மோட்சத் தானத்தையடையச் செய்யும்
ஞானக்கண் டருங்கிறிஸ்து நாதரோர் குருடனுக்கே
யூனக்கண் டந்தாரென்ப துவக்குமோர் புகழுமாமே.

12. அப்பொழுதயலகத்தோ ரவன்றனை யறிந்தோர் யாரு
மிப்பொழுதிவன் குருட்டோ டிருந்திரந்திட்டானெவ்வா
றொப்பிலாக் கண்படைத் தானுவனென்பா ருரித்தாய்ப் பார்ப்பார்
செப்பிடற் கரிதாமீதைச் செய்தவரெவரோ வென்பார்

13. கண்ணிலாதவர்க்குக் கண்ணைத் தருமொரு கருவியிந்த
மண்ணுலகத்திலில்லை வானகத்தினு மிராதே
யெண்ணிடிலவனேயல்ல னிவனென்பாரவனே யென்பார்
திண்ணமாய் நமதுகண்ணே திறம்பிற்றோ வென்பார் சில்லோர்

14. இவன்றன்னை யவன்றானா னென்றெத்தனை விதஞ் சொன்னாலும்
பவந்தனிற் குருடாய் வந்தான் பார்த்தன மிதுவரைக்கு
மெவனெவனெது சொன்னாலும் யாநம்போ மென்பார் சில்லோ
ரவனிவன் சாயையாலே யவனிவ னென்பார் சில்லோர்.

15. தாரை தந்தாரைத் தந்தாரைகளினாற் காணாதாராய்
காரணமறியக் கூவாக் கண்ணனை நினது கண்ணைச்
சீருணச் செய்தார் யாவரென்றன ரவர்கள் சேர்ந்து
பூரணவொளிகொள் கண்ணான் பகலுவான் களிப்பிற்பொங்கி

16 நேத்திரங்களினிற் சேற்றை நீவியிச் சிலோவா நன்னீர்
வார்த்திதைக் கழுவிவிட்டு வாவென்றாரேசு வென்னு
நாத்திதிப்புறச் சொனாமத்தொருவர் நானம்பிச்செய்தேன்
பார்த்தனனென்றும் பாராப் பாருள பொருள்களென்றான்.

17. எவ்விடத்துற்றானென்றா ரறியெனா னென்றுரைத்தான்
வவ்வியே யவனைக்கொண்டு பரிசேயர் வாய்விடுத்தா
ரவ்விய மிகுமனத்துப் பரிசேயரவனை நோக்கிச்
செவ்வை பெற்றதனை நின்கண் செப்புவாயென்று கேட்டார்.

18. நடந்ததைச் சொன்னான் கேட்டார் நடந்தநா ளோய்வுநாளாய்க்
கிடந்திடத் தக்கதன்றோ கிறிஸ்து வென்றுரைத்துக் கொள்வோ
னடங்கலுஞ் செய்ய வல்ல பராபரனாலனுப்பப்
படுந்தகையுடையானல்ல னென்றனர் பலர் தமக்குள்.

19. பாவியென்றெண்ணுகின்றீர் பராபரனனுப்ப வல்லா
னாவனேலற்புதங்க ளெப்படி யவனாற் செய்வ
னீவிரே சொன்மினென்றார் சிலர்கணீர் நின்மினின்மின்
றேவனா நரனாவென்று கண்டெரிந்தவனைக் கேட்போம்.

20. என்று பற்பலருங் கூடியிவனையுன் கண்டிறந்து
நின்றவன்றன்னைப் பற்றிநீ யென்சொல்கின்றா யென்றார்
மன்றவுண் மகிழ்ந்துதீர்க்க தரிசியே வந்தாரென்றா
னின்றுதான் றெரிந்த கண்ணனிவனெனம் பாராகி.

21. தந்தை தாயரையழைப்பித்தும் மகன்றாரையில்லா
னந்திலென் றுரைத்தீர் ரிற்குமவனெவனீரே பெற்ற
மைந்தனென்றுரைத்தாலிந் நான்மாசிலாக் கண்ணடைந்த
தெந்தகாரண நீர் சொன்மினென்றது யூதர்கூட்டம்.

22. அதற்கிவனெங்கண் மைந்த னந்தகனறிவோங் கண்டே
ரிதற்குக் காரணமே யாதுந் தெரிகிலோ மிவனோவாயுண்
முதிர்ச்சியானவனே சொல்வா னென்றங்கே முன்னரேயற்
புதத்தவியேசுவைத்தான் கிறிஸ்துவென்றவனைப் போக்கி.

23 ஆலயத்தெய்தா வண்ண மாஞ்ஞையை யூதர்செய்த
தாலவரதனுக் கஞ்சியறைந்தன ரதன்பின் யூதர்
சாலவே கண்படைத்தோற்கூய்ச் சருவேசன்றன்னை
மேலுறச் செய்நீ பாவியவனென விளம்பினாரே

24. தெரிந்தவன் பாவியென்று செப்பிடமாட்டேன் கண்ணை
யருந்தனமாகப்பெற்றே னென்றிடவதற்கு யூதர்
வருந்தவன் கண்ணிலென்ன செய்தனனென வகுத்தே
னிருந்தநீர் சீடராதற் கெண்ணியோ வினவுகின்றீர்

25 சொல்லுமினெனவே யூதர் தூய்மையில் சொற்கள்சொல்லி
நல்லனீயல்லை மோசெசீடரே நாங்கண் மோசே
யெல்லிடுந் தேவனாலே யியம்புறப் பெற்றானிந்நோன்
புல்லியெவ்விட நின்றிங்குப் போந்தனென்றறியோ மென்றார்.

26. எனதுகண் டிறக்கக்கண்டுங் காணாததென்னோ வந்தோ
கனமிகுந்தேவர் பாவி சொல்லினைக் கேளார் காதான்
மனமுகந்தவன் சொற்கேட்பா ரென்பதும் வையந்தோற்றத்
தினமுதற்குருடு நீக்குஞ் சொல்லு மில்லெனலுந்தேர்ந்தோம்.

27. இப்படியிருக்கத் தேவனிடத் திருந்தெய்திலாரே
லெப்படி மகிமைசெய்வா ரவரென்றான் கிறிஸ்துவன்பன்
றப்பித யூதர் முற்றும் பாவத்திற் சனித்தோய் புத்தி
செப்புகின்றனையோவெங்கட் கென்றவற் செலுத்திவிட்டார்

## வேறு

28. பின்பவ னவர்களாற் பேதப்பட்டதை
யன்பருக் கருளி யேசுவு மறிந்தோர்காற்
றன்பரிவோடுங் கண்டவனைத்தான் பிதா
வின்சுதனிட மன்பாயிருப்பையோ வென்றார்.

29. அவனதற்கைய நானன்பு செய்பவ
ரெவரெனவவனைக் கண்டிருக்கின்றா யிப்போ
திவணின்னோ டெதிர்மொழி யியம்புகின்றனன்
றவவெனப் புகன்றனர் தன்கணோர்ந்தவன்.

30. விழைந்துள மகிழ்ந்துகண் டடியில் வீழ்ந்து வீழ்ந்
தெழுந்தெழுந் தாண்டவவாண்டவ வென
மொழிந்து நேசிக்கின்றேனென முன்றாழ்ந்தனன்
குழந்தைபோல் வந்தருள் குருவுங் கூறுவார்.

31. கண்ணிலார் காணவுங் கண்ணரந்தக
நண்ணவு நியாயத் தீர்ப்புக்கு நானிந்த
மண்ணுலகினில் வந்தேனெனலு மங்குவந்
தண்ணிய சிலர் பரிசேயர் கேட்டதை.

32. நாங்களுங் குருடரோவென நவின்றனர்
நீங்களப்படியரேற் பாவ நிற்குமோ
யாங்கள் காண்கிறமென வியம்பலானும் பாற்
றேங்கிடுமது வென்றே கிறிஸ்து செப்பினார்.

## அடக்கப்பட்ட விலாசரு வெழுந்த சருக்கம்

1. முன்னொருகாற் கிறிஸ்து விருகாற் குபசாரஞ் செயத்தன் மொய்த்த கூந்த
றன்னினறுந் தைலப் பூச்சிட்டதனாற்றடவு மரியாளு மார்த்தா
ளென்னுமவள் சோதரியுஞ் சோதரனி லாசருவு மிருந்து வாழ்ந்தார்
நன்னகர் பெத்தானியாவி னிலவ்விலாசரு நோய் நண்ணினானே.

2. அவனாலு நேசித்த கிறிஸ்துவினுக்கீ துரையாளனுப்பினார்கள்
செவிகொடுத்த வேசிந்நோய் மரணஞ் செய்வதற்காகச் செறிந்ததன்றா
முவமையிலாத் தேவன் மகிமையை விளக்குமேதுவிற் காமுற்றவீதாற்
புவியினில் வந்தமர் தேவபுத்திரரு மகிமையினைப் புணர்வாரென்றார்

3 மார்த்தாண்முன் மூவரிடத்தன்பிருந்தும் வைகுமிடத்திரண்டுவைகல்
சேர்த்திருந்தார் திரும்பவு நாம் யூதேயாக்குச் செல்வோஞ் சென்மினென்று
பார்த்துரைத்தார் சீடர்களையவர்களிரபீயூதர் பழுதிலும்மை
வேர்த்துக் கல்லாலெறியத் தேடியவிப்பொழுதே நீர் மேவலாமோ

4 என்னவியேசுவுங் கர்த்தரருளொளியுண் டென்பதனுக்கெவன் வெளிச்சந்
தன்னினடப்பவனவனே யிடறுபடா னென்றுரைத்தார் தஞ்சினேக
முன்னியவிலாசரு நித்திரையடைந்தா னெழுப்பவங்கணுறுவே னென்றா
ரன்னவர் கணித்திரையாற் சுகமடை வானென்றார் சொல்லருத் தந்தேரார்.

5 அப்பொழுதி லாசருதான் மரித்தானென்றுரைத்து நானங்கிலாம
லிப்படியே யிருந்ததனாலுங்கள் விசுவசிப்புக்கீ தேதுவாகுந்
தப்பறு நுந்நிமித்த முவக்கின்றே நாமெல்லோருஞ் சார்வோம்வம்மின்
குப்பலொடு மென்றுரைத்தார் கிறிஸ்துவங்கே திதிமுவெனக் கொண்டபேரோன்.

6. ஆயதோமா மற்றச் சீடர்களை நோக்கியவரோடுகூட
மாயவே யூதர்களாற் போவோம் வாருங்களென்றான் வந்த காலை
நாயகரிலாசரு கல்லறைப் பட்டு நாலுநாளென லறிந்தார்
போயபெத்தானியா வெருசலே நகர்க்கருகாம் புரியிலொன்றாம்.

7. யூதர்களிற் சிலர் மார்த்தாண் மரியாட் காறுதலுரைக்க வுற்றிருந்தார்
நாதர் வருவதைக் கேட்ட மார்த்தாள் போயெதிர்கொண்டு நாதரேயென்
சோதரனீ ரிங்கிருந்தான் மரிக்கானேயிப்பொழுதுந் தூயதேவ
ரோதி நீர்கேட்பதெதுவோ வதுதந்தருள்வாரென் றுணர்வே னென்றாள்

8. உனது சகோதரனுயிர்பெற் றெழுவானென் றேசுசொல வுயிர்த்தெழும்புந்
தினமெனுந் தீர்ப்புறுநாளி லெழுவனெனவறிவனென்றா டேவமைந்தர்
வினவுற வந்தவனானே யுயிர்த்தெழலுஞ் சீவனுமாய் மேவுகின்றே
னெனை விசுவசிக்கிறவ னிறந்தாலும் பிழைப்ப னிறவாதிருந்தே

9 என்னை விசுவசித்திருக்கு மெவனு மென்றென்றைக்கு மிறக்கானிற்பான்
சொன்னவிதை விசுவசிக்கின்றனையோ வென்றாரவளுந் தூயரே நீர்
பின்னுலகில் வருகுவாரென்று பேசிடப் பெற்ற கிறிஸ்துவென்று
நன்னயமாய் விசுவசிக்கிறேனென்று நடந்தனள் வீடடைவானண்ணி.

10. அந்தரங்கமாய் மரியாளிடங் குரு வந்தாருன்னை யழைத்தாரென்றா
ளிந்தமொழி கேட்டவளுங் கிறிஸ்துவ மரிடந் தேடி யெய்தினாள்பின்
வந்தனரங்கிருந்த யூதர்கண் மரியாள் கல்லறை வாயழ வெய்தாளென்
சிந்தையராய் மரியாளையரைக் கண்டவுட னடியீற் றேம்பி வீழ்ந்தாள்.

11. என்றன் சோதரன் மரித்தானீரிங்கிலாததினா லென்றே யேங்கி
நின்றழுதா ளுடனின்ற யூதரழுதார்கணோர் கண்ட தேவர்
தன்றனாவியிற் கலங்கித் துயரடைந்து கண்ணினீர் ததும்பி யெங்கே
பொன்றினவன்றனை வைத்தீரென வவர்கள் போய்ப் பாருமென்றார் பின்னும்.

12. நேசித்தாரிவரவனை யெவ்வளவா யென்றார்க ணின்ற சில்லோர்
மாசுடைய குருடனுக்கு மாசிலாக் கண்ணளித்த மகிமையுள்ள
வீசரிவரிவனைச் சாகாதிருக்கச் செய்யவியலாதா வென்றா
ரேசு மறுபடியுந் தம்முட் கலங்கிக் கல்லறையினிடத்தே வந்தார்.

13. கல்லறையாங் குகைமேல் வைத்திருக்குமொரு கல்லை யெடுத்திடுமினென்றா
ரல்லலுறு மார்த்தா ணானாளானதா னாற்றமாமே யென்றாள்
வல்லவர் நீ விசுவசித்தாற் றேவன் மகிமையைக் காண்பாயென்று நான்முன்
சொல்லவிலையாவென்றாரக்கல்லை யெடுத்துவிட்டுச் சூழ்ந்து நின்றார்.

14. ஏசுநாயகர் தமது கண்களையேறெடுத்துப் பிதாவேயென்ற
னோசைகொளச் செவிகொடுத்தபடியினாலும்மைத் தோத்திரிக்கிறேனீ
ராசையாய்ச் செவிகொடுக்கிறீ ரென்றே யறிந்திருக்கிறேனானாலு
நேசமுடனீ ரென்னையனுப்பினதைச் சூழ்ந்துகொண்டு நிற்குமாந்தர்.

15. விசுவசிக்கும்படியாக வவர்கணிமித்த மிதனை விளம்பினேனென்
றசைவற நின்றொரு நொடியிலாண்டவனார் மாண்டவனை யருமை வாயா
லிசைகொளக்கூயி லாசருவே வெளியே வாவென்று ரைத்தாரிறந்தான் வந்தான்
விசைய மகிமைகளிவரை யெதிர்பார்க்கு மிவர்க்கிஃதோர் வியப்போவம்மா.

16. இறந்தவனே திரும்பி வந்தானென்பதனுக் கடையாளமாயிருக்கும்
பிறந்தவர்கணே சத்தாற் சிறந்தவர்களிவன் மரித்தபின் பிரேதந்
திறந்திராவண்ண முகஞ்சுற்றிய சீரையுங் கைகால்களிலே சீலை
தறிந்ததனாற் கட்டிய கட்டையுங் கண்டாரதிசயித்தார் தரணிமாந்தர்.

17. இக்கட்டையவிழ்மி னென்றார் மரணக் கட்டவிழ்த்து விட்டவேசுநாத
ரக்கணமே யவிழ்த்தெறிந் தாச்சரிய மாச்சரியமென வங்கிருந்தோர்
திக்கெட்டும்பரவி நின்றுதத்தமக்குட் சிந்திப்பார் தேறார் சொல்லும்
பக்குவமு நமக்குண்டோ வென்பாரையரைப் பார்ப்பார் பார்த்துவப்பார்.

18. நாலுநாளாயுயிரை விட்டுடலங் கல்லறையுணலிந்து மிந்தச்
சீலரால் விழித்துவந்தான் கண்டதாற் செழித்துவந்தோஞ் செய்யுமன்பின்
பாலதொன்றாயினுஞ் செய்யுமிடங்களாற்பலன் வேறுபடுதல் கண்டோஞ்
சாலவி லாசருக்கு நம்மாலென்னபலன் பலனிலன்பைச் சார்ந்தோ மென்பார்

19. அன்புசெய்தாலித் தகையோர்க்கன்பு செயவேண்டுமென வறிந்தோ மென்பார்
அன்பிவரை யல்லாமற் செய்யுமன்பாலாம் பலனுண்டாமோ வென்பார்
அன்பதனால் வருபலனையறிந்து மினியன்பிலராயர்கோ மென்பார்
அன்புசெய்வார்க் கன்பராய்க் கிறிஸ்துவையல்லா தருள்வாராரே யென்பார்.

20 மானிடப் புத்திரராகுந் தேவரிவரோ வென்பார் மார்த்தாண் மட்டுந்
தானறிந்தாளோ வென்பார் மரியாளெவ்விதத்தாற் றானறிந்தா ளென்பார்
போன மனிதனையுமழைத்திடமுடியாதிவர் புதுமை புதுமை யென்பா
ரான மனிதர்களிலனேகம் பேர்களையரிடத்தன் புவைத்தார்.

21. அங்கிருந்த யூதர்களிற்சிலர்கள் பரிசேயரிடமடைந்தியேசு
பொங்குமகிமைகளை யுரைத்தார்களவர்களுக்குள்ளம் புழுங்கிக் கூடிச்
சங்கமதை வரச்செய்து நாமென்ன செய்கிறதித்தனின்றானே
யெங்கெங்கு மற்புதங்கள் செய்கின்றானிவனை விட்டு விட்டோமானால்

22 எல்லவருமிவனையே விசுவாசித்தரசனாவெடுப்பாரன்றே
மல்லெழும்பி ரோமர் வந்து நமதிடநம்மவரையெல்லாம் வாதிப்பார்க
ளல்லவா வெனவவருளவ்வருடப் பிரதானாசரியனென்றே
சொல்லுங் காய்பாவென்போனவர்களைப் பார்த்துமக்கொன்றுந் தோன்றாதென்றே.

23. தன்னறிவாற் சொல்வதாய் மனிதரெலாங் கெடுதிபடாத் தன்மையாகச்
சொன்ன வொரே மனிதன் மரிப்பது நமக்கு நலமென நீர் சூழ்கிலீரே
யென்னவுரைத்தனனிந்த மொழியை யவன் சுயமாக வியம்பிடாம
லன்னவருடப் பிரதானாசாரியாகையினா லறைந்தானானான்

24. யூத சனங்கட்காகவே யேசு மரிப்பினையேயுறுவாரென்று
மோதவருக்கன்றியும் வையகமெங்குஞ் சிதறுபட்ட வொன்றாந்தேவ
நாதனது பிள்ளைகளை யொன்றாகச் சேர்ப்பதற்கு நசிப்பாரென்றும்
போதமுறுந் தீர்க்கதரிசனமா யிற்றன்னவன் சொல் பொய்யுறாமல்

25. அந்நாண் முன்னாகவேசுவைக் கொலைசெய்வானவர்களா லோசித்தார்
பன்னரிய மகிமையுளவேசுயூதர்கள் கண்ணாற் பாராவண்ணந்
துன்னுமிடமாய் வெப்பிராயீமென்றிடு பெயராற்றோன்றும் பேரூர்
தன்னிற்றஞ் சீடருடனே கூடத் தங்கினார் சஞ்சரித்தார்



# 13

# மெய்ஞ்ஞான மாலை

**ஆசிரியர் : திட்டூர் தேசிகர் (1858 - 1932)**

**அறிமுகம் : த. இயேசுதாஸ்**

மதிக்க முடியாத மாபெரும் மாணிக்கம் மண்ணுக்குள் கிடப்பினும் இறையருளால் ஒரு நாள் உலகுக்குக் கிடைத்து விடுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் குமரி மாவட்டம் திட்டுவிளையில் வாழ்ந்த திட்டூர்த் தேசிகரின் நூல்களும் இவ்வகையிலேயே தமிழ் இலக்கிய உலகிற்குக் கிடைத்துள்ளன. தேசிகருடைய இயற்பெயர் ஈஸ்வர பாக்கியம் என்பதாகும். இவர் 1858 ஆம் ஆண்டு குமரி மாவட்டத்திலுள்ள திட்டுவிளை என்ற ஊரில் பக்தி வைராக்கியம் நிறைந்த இந்து சைவக் குடும்பத்தில் தோன்றினார். கிறிஸ்து நெறியைத் தழுவிய பின்னர் ஈஸ்வர பாக்கியம் ஈசாக்கு என்று தமது பெயரை அமைத்துக் கொண்டார். எனினும் குமரி மாவட்டத்தில் இவரைத் திட்டூர் தேசிகர் என்றே அழைத்து வருகின்றனர்.

தேசிகர் இளமையிலேயே புத்திக்கூர்மை உடையவராகத் திகழ்ந்தார். நன்முறையில் கற்றுத் தேர்ச்சியடைந்து தம்முடைய 15 ஆவது வயதில் ஆசிரியரானார். ஆசிரியராகப் பணியைத் தொடங்கிய ஈஸ்வர பாக்கியம் ஈசாக்கு சமயக் கல்வி கற்கும் ஆவலுள்ளவராய், நாகர்கோவிலில் இருந்த இறையியல் பள்ளியில் (செமினெறி) பணியாற்றிய டதி பண்டிதரிடமும் ஏசுவடியான் ஐயரிடமும் இறையியல் கல்வியும், சமயக் கல்வியும் சொந்தமாகக் கற்றுத் தேறி உபதேசியாராகவும் ஆசிரியராகவும் தொடர்ந்து பணியாற்றினார்.

மேலும் தமிழ் மொழியில் நாட்டமுள்ளவராய்த் தமிழ் இலக்கணம், இலக்கியம் மற்றும் தமிழ்க் கலைகள் பலவற்றையும் தாமாகக் கற்கத் தொடங்கிப் பெரும்புலவராக மாறினார். இவருடைய நூல்கள் சுமார் முன்னூற்றுக்கு அதிகமானவையாகும் என்பர். ஆனால் இவரது படைப்புகளாக இப்போது 172 நூல்கள் கிடைக்கின்றன. இப்போது கிடைத்துள்ள நூல்களில் 36 மருத்துவ நூல்களும் இடம் பெற்றுள்ளன. இவரது நூல்கள் பெரும்பாலும் துதி, விண்ணப்பம், கிறிஸ்தவப் போதனை, விசுவாசம் ஆகியவற்றைப் பற்றிய சிற்றிலக்கியங்களாகும். சிற்றிலக்கிய வகையான ''மாலை'' நூல்கள் 16 பாடியுள்ளார். அவற்றுள் மெய்ஞ்ஞான மாலை, அருணோதய மாலை, மாணிக்க மாலை, கிறிஸ்தேசு மாலை, போற்றி மாலை, உபதேச மாலை, பூரண மாலை, கிறிஸ்து மாலை, ஔசதமாலை என்பன குறிப்பிடத்தக்கன.

குமரித் திருச்சபையின் முதல் பேராயரும், தென்னிந்தியத் திருச்சபையின் பிரதம பேராயருமாகத் திகழ்ந்த உயர் மறைத்திரு ஐ.ஆர்.எச். ஞானதாசன் அவர்கள் தமது பாட்டனாராகியத் திட்டூர்த் தேசிகரின் நூல்களைப் பாதுகாப்பதிலும், பதிப்பித்து

வெளியிடுவதிலும் பேரார்வம் காட்டினார். அவரது முயற்சியால் 'மெய்ஞ்ஞானமாலை' என்னும் கிறிஸ்தவச் சிற்றிலக்கியம், பேராசிரியர் மோசசு பொன்னையா அவர்களின் (மேனாள் மதுரை அமெரிக்கன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்) உரை விளக்கங்களுடன் 1968 இல் வெளியானது. இதனைத் தொடர்ந்து பேராசிரியர் சூ. இன்னாசி அவர்கள் (சென்னைப் பல்கலைக்கழகம்) தேசிகரின் சௌமியத்துறை, கிளிக்கீதை, அகப்பேய்க்கமைவு, வேத நீதி முதலிய நூல்களைச் சிறந்த முறையில் உரைக் குறிப்புகளுடன் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். அண்மையில் வேறு சில நூல்களும் அச்சாகி வெளிவந்துள்ளன.

திட்டூர்த் தேசிகரைத் தமிழ் இலக்கிய உலகிற்கு முதன் முதலில் அறிமுகம் செய்த மெய்ஞ்ஞான மாலையின் சிறப்புகள் சிலவற்றை அறிமுகம் செய்வது இங்குச் சாலப் பொருத்தமாக அமையலாம். 303 செய்யுட்களைக் கொண்ட மெய்ஞ்ஞானமாலை சத்திய வேதத்தின் வழி நூலாகும். இந்நூல் செய்யக் காரணம் கூறும் இடத்து,

*''கொண்டேன் ஏகந் திரித்துவமாய்க்*
*குணத்தி னன்மாற் றம்பெற்றேன்*
*கண்டேன் றேவ பெரிய அன்பைக்*
*கல்வா ரியின்வெஞ் சிலுவையிலே*
*அண்டேன் என்ன வந்தாலும்*
*ஆகா வுலகத் தேவர்களை*
*விண்டேன் அறிக்கை மெய்ஞ்ஞான*
*மாலை யாக மெய்ப்படவே''* (மெய்ஞ்ஞானமாலை, பா 146)

என தேசிகர் கூறுகின்றார்.

''சுய நீதியை விடல் துறவு'' என்கிறார் ஈஸ்வர பாக்கியர். அதாவது தன்னலம் துறத்தல் துறவு; பிறர் நலம் பேணுதல் துறவு என்கிறார். இல்லறத்திற்கும், துறவறத்திற்கும் நடுவாய்நிற்கும் நடுநாயகக் குருவின் தாள் நாடு. கிறிஸ்து துறவியானாலும் இல்லறத்தார்க்கும், தம் தாயார்க்கும், குழந்தைகட்கும், விதவையர்க்கும் அருள் உதவி பொழிபவராகவும் திகழ்ந்தார். மாந்தரைச் சீர்த்திருத்தும் பணியில் தன்னையே தத்தம் செய்தல் துறவாகும் என்பதனை,

*''இல்லந் துறப்பதில் என்? ஈனசுய நீதிவிடல்*
*நல்ல துறவதனை நாடிச்செய் - வல்ல*
*கடுவாய் அரவடவி கன்முழையுற்று என்கொல்?*
*நடுவாய் எழுங்குருதாள் நாடு''* (மெய்ஞ்ஞானமாலை, பா. 81)

எனப் பாடுகின்றார். சாதி வெறியில்லாத ஒரு சமுதாயத்தைக் காண விரும்பிய தேசிகர், மானிடர் வாழ்வடைவதற்குரிய சமயம் எது என்பதனைப் பின்வருமாறு பாடுகின்றார்:

*''கிறித்து சமயமே மானிட ருய்யக் கிடைத்தவழி*
*கிறித்து சமய மறைகுரு தேவன் கிழமைபொது*
*கிறித்து சமயத் தவரே சிறந்த கதிவுடையோர்*
*கிறித்து சமயத்தில் சேருமின் ஆயுள் கெடாமுனமே ''* (மெய்ஞ்ஞானமாலை, பா 292)

அவருடைய ஆழ்ந்த பக்தியின் காரணமாக அனைவரையும் கிறிஸ்து சமயத்தில் சேர அழைக்கின்றார். அனைவருக்கும் பொதுவான கடவுள் கிறிஸ்துவாகிய கடவுளே. எனவே கிறிஸ்தவமே மானிடருய்யக் கிடைத்த வழி என்பது அவர்தம் அசைக்க முடியாத நம்பிக்கை.

தினமும் வேதத்தைத் தியானம் செய்தல் வேண்டும்; கனமும் துதியும் இறைவனுக்குச் செலுத்துதல் வேண்டும்; உலக வாழ்க்கை நிலையற்றது; மக்கள், உறவினர், செல்வம் மற்றும் பிறவும் சாகும் போது துணைக்கு வருவதில்லை என்பதைப் பின்வருமாறு பிற சமயத்தவரும் ஏற்றுக் கொள்ளும் வகையில் பாடுகிறார்.

*"தினமும் தெளிவு நூலை யோதித்*
*தியானஞ் செய்தொழுகாய்*
*கனமும் துதியும் பரனுக் காக்கற்*
*கடமை நிறைவேற்றாய்*
*இனமும் நிலையில் உலகைச் சதமென்*
*றிருந்தே மயங்குவதேன்?*
*சனமும் தமரும் தனமும் பலவும்*
*சாம்போ துதவாதே."* (மெய்ஞ்ஞானமாலை, பா. 220)

மேலும், கீழ்வரும் பாடலை,

*"ஓராய் பாராய் ஊராய் தேராய்*
*சீராய் வாராய் சேராய் காராய்*
*பேராய் ஆராய் பீராய் நேராய்*
*தோராய் நாராய் சோராய் தாராய்"* (மெய்ஞ்ஞானமாலை, பா. 71)

என்று முழுவதும் ஏவலில் பாடியுள்ளார். ஒலி நயம்மிக்க சொற்களால் மனிதனின் கடமைகளை வலியுறுத்தும் திறன் வியத்தற்குரியது.

*"வெட்டை வெளியடா! வேறெது மில்லையடா!*
*வெட்டை வெளியடா! மெய்த்தசங் குணியடா!*
*வெட்டை வெளியடா! விளங்கெண் செயலடா!*
*வெட்டை வெளியடா! மிகுபரி வுறுமடா!"* (மெய்ஞ்ஞானமாலை, பா.17)

என்று 'அடா' என்ற அசை நிலைகளைக் கொண்டு ஓசை நயத்துடன் அமைத்துள்ளார். பத்துக் கற்பனைகளையும் (மெய்த்தசம்) எண் வகை நற்செயல்களையும் மனிதன் பின்பற்ற வேண்டுமென்பதை இங்கு வலியுறுத்துகின்றார்.

*"தானதான தான தான தான தான ஏகனே*
*தானதான தான தான தான தான தந்தையாம்*
*தானதான தான தான தான தான மைந்தனாம்*
*தானதான தான தான தான தான வாவியே"* (மெய்ஞ்ஞானமாலை, பா.188)

என்று சங்கீத தாள ஓசை நயத்துடன் இப்பாடலைப் பாடியுள்ளார். ஏகனே என்று விளித்துத் தந்தை, மைந்தன், ஆவியாம் என்றது திரித்துவ விளக்கமாகும். பாடல்கள் அனைத்திலும் எதுகை தத்தித் தவழுகின்றது. எதுகையில்லாப் பாடல்கள் ஒன்றுகூட தேசிகர் நூல்களில் இல்லை எனலாம். செய்யுள் அமைப்பு முறையிலும் அப்பழுக்கற்று விளங்குகிறது. கருத்தாழம் வாய்ந்த கவிதை புனைவதிலும் தேசிகர் தன்னிகரற்று விளங்குகிறார்.

*"மூவாசைக் காடெரித்து முத்திவிக்கினம் மூன்றும்*
*தேவாசை யாலே செயித்துவரும் - பாவாசை*
*வித்தாஞ் சுயநீதி விட்டேசு கானந்த*
*சித்தா மிறைநீதி சேர்"* (மெய்ஞ்ஞானமாலை, பா.37)

எனும் இப்பாடலில் மூவாசை, தேவாசை, பாவாசை என்ற மூன்று ஆசைகளைக் கூறியுள்ளார். இவற்றுள் மூவாசை-மண், பெண், பொன்னாசைகள்; முத்தி விக்கினம்-காமம், வெகுளி, மயக்கம் என்பனவாம்.

பின்வரும் இரண்டு பாடல்களும் தேசிகரின் வாழ்வியல் தத்துவத்தை அறிவதற்குத் துணையாகின்றன:

*''இடுகாடு போமுடலை யேன் பவத்துக் கேதாய்*
*அடுகாடு கொண்டு கொழுப்பாக்கிப்-படுகாடு*
*செல்லாமற் சிற்றின்பத் தீவிளை யாடுகின்றாய்*
*நில்லாமற் செல்லுயிர்நா ணீ''* (மெய்ஞ்ஞானமாலை, பா.40)

*''நதியாடிப் பாவதுயர் நலியா விருத்த*
*நதியாடிப் போக்குதலும்நேரா திகத்தார்*
*பதியாடி யோட்டுதலும் பற்றா கிறித்தின்*
*துதியாடி விசுவாசச் சூழ்வே துரத்தும்.''* (மெய்ஞ்ஞானமாலை, பா.233)

தேசிகர் சாதிப் பெருமை, சாதி பேதம், தீண்டாமை ஆகியவற்றை வன்மையாகச் சாடுகின்றார். பின்வரும் பாடல்கள் இக்கருத்துகளை நன்கு வலியுறுத்துகின்றன:

*''பாரில் மவுட்டியம் மேட்டிமை யேறியே பாவநரர்*
*சீரில் வருணமுந் தீண்டலுங் கூறினர் தீமைநன்மை*
*ஊரில் உயர்விழி வாதிக்குக் காரண முற்றுணரார்*
*தாரில் முளைத்த பெருஞ்சாபப் பூண்டென்ப சாதுக்களே.''*
(மெய்ஞ்ஞானமாலை, பா. 250)

*''கத்துவோர் சாதி பேதம் காசினி யோரை வீணாய்*
*எத்துவோர் மூடரென்றே யியம்புவர் வித்தர் பத்தர்*
*நத்துவோர் பிரபஞ் சத்தை நடபெளி யோரில் வையார்*
*முத்துவோர் கிறித்து பாதம் முனைகிலார் யாரையுந் தான்''*
(மெய்ஞ்ஞானமாலை, பா 254)

ஈஸ்வர பாக்கியம் ஈசாக்கு தேசிகரது தமிழும், கிறிஸ்தவப் பற்றுறுதியும், கிறிஸ்து பெருமானைப் புகழ்ந்து பாடியுள்ளப் பாடல்களும் தனித்தன்மையுடையனவாகப் போற்றத் தக்கன. மெய்ஞ்ஞான மாலை என்னும் பக்திப் பனுவலில் காணப்படும் சிறப்புகள் அளவிறந்தன. அவற்றுள் ஒரு சில அணுகுமுறைகளே இங்குச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. சுவைகள் மலிந்த இப்பனுவலைப் போலவே திட்டூர் தேசிகரின் பிற நூல்களும் தகுதிகள் மிகுந்தனவாய் விளங்குகின்றன.

## நேரிசை வெண்பா

1 அருவ பரிபூர ணானந்தன் றுய்ய
சொருவ மகிமைச் சுதனா - லுருவ
உலக மமைபொருளும் ஓதருமெஞ் ஞானம்
இலக வமைத்தா னிசைந்து

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

2. இசையவே படைத்த மாந்தரிச் சையை யறிவால் வென்று
வசையவே மனதற் றையன் வழுத்துநல் லுரையை மீறி
அசையவே முளைத்த பாவ மகன்றுயக் கருணை மைந்தன்
மிசையவே யவத ரித்தல் விளம்புதற் கெட்டா வன்பே

## கட்டளைக் கலித்துறை

3 எட்டாத வன்பே திருவுரு வாகி யெழுந்தருளி
முட்டாத ரட்சிப்பின் முறைமை யீதென் றுரைத்தருளி
தட்டாத மெய்வழி காட்டிவிண் ணேறிய தண்ணளியைக்
கிட்டாத மன்பதை யைம்பலன் போக்கியே கேடுறுமே.

## கலிவிருத்தம்

4. கேடு நீங்கக் கிருபைக ளோங்கிட
நாடு யர்ந்தே நலம்பெற்று வாழ்ந்திட
நீடு வாழ்க்கை நிறைபரம் பெற்றிடத்
தேடு மார்க்கந் திரித்துவத் தேவனே.

## நேரிசை வெண்பா

5 தேவ னொருவன் திரித்துவ னந்தரங்கம்
சீவ மொழிவேதஞ் செப்பற்கு-மாவன்
புடனே யடங்க லுயர்கடனென் றுன்னி
உடனெ குருவடியை யொண்டு.

## கொச்சகம்

6 ஒண்ட நலமடைய ஊக்கமுடன் றொண்டியற்ற
அண்ட ரடிபரவு மம்பரன்மேற் கூர்பரிவால்
கண்ட வுலகிற் கனிவுறலை வெல்லதிருத்
தொண்ட ரவையாளாய்ச் சூழ்வர்விசு வாசிகளே.

## கலிவிருத்தம்

7. வாசி தாரரணை மற்றுள கன்மங்கள்
பாசி போலகம் பற்றுவெம் பாவநோய்
வீசி டாதுயிர் மீண்டுவிண் சேர்ந்துயற்
காசி யேசைய னற்புத புண்யமே.

## நேரிசை வெண்பா

8 புண்ணிய வானாகப் பூரணமாய்க் கையடைகொள்
கண்ணிய யேசுபரன் காலிணைகள் - நண்ணிய
சுத்தஞ் சுகானந்தஞ் சோதனைமேற் கெம்பீரம்
நித்த முறும்விழிப்பாய் நில்

9. நில்லென மூவாசை நீக்கவரு டேடியடி
மெல்லெனவன் பின்வழி மேற்பதித்தே - செல்லெனச்
சொன்ன வுரைமீறேல் சோம்பிக் கிடக்கேல்பார்
மன்னவருஞ் சாகா வரம்

## கட்டளைக் கலித்துறை

50. தழுவார் கடவுளை யன்பா லறிந்தவர் தற்பெருமை
தொழுவார் இருதயம் வாயு மொருமிக்கத் தோத்திரித்து
விழுவார் தனையறி யாதவர் ஞாய விதிதினத்தில்
வழுவார் அருளினா னீதியின் மார்க்க மமைந்தவரே

51. வரையேறிக் கன்முழை வாழ்கினும்
யோகத்தில் வல்லவராய்
நரையேறி ஞானங்கள் பேசினு
மோனமாய் நாள்வீடினும்
புரையேறி நெஞ்சிடி கொண்டவர்
வெம்பவம் போக்கடித்துக்
கரையேறி வாழ்தலி லேசுவை
யன்றியே காண்கிலரே.

## கலிவிருத்தம்

52. ஏக மாய்த்திரி யேகமாய் நிற்போனைத்
தாக மாய்ச்சிரந் தாழ்த்தியே போற்றினேன்
மோக மாற்றினன் மூடத்தை நீக்கினன்
தேக மாத்துமம் திவ்வியஞ் செய்தனன்

53. செய்த நன்மையைச் சிந்தித்துக் கொண்டாட
பெய்த தூயாவிப் பேர்மழை யீரத்தாம்;
எய்த நன்குணரின் பக்கு ணந்தேவை
உய்த லாமதா லொண்டந்நல் லானையே

54 நல்ல பாதையை நாடியே போதித்தான்
வல்ல வாவியின் மாத்துணை யாற்றினான்
செல்ல வென்னைக்கை சேர்த்துந டத்தினான்
வெல்ல மேலான மெய்யன்பு நாதனே.

55. நாத மற்றவர் நற்கதி பெற்றிட
நீத னுன்னத நீதிபா ராட்டினான்
வாத மென்கொலோ? வன்மனந் திரும்புவீர்
தீத தற்றிடுஞ் சேருவீர் மோட்சமே

56. சேரு மார்க்கமுஞ் செல்வமும் யேசுவே
ஆரு மேவியா னந்தம டைந்திடச்
சீரு லாவிய சிந்தைய னம்பியே
வாரு மேயந்த மாணடி நீழலே.

## நேரிசை வெண்பா

57. நீழ லணைசீவ னீங்கிவிடு முன்பாவப்
பாழ தொழியவழி பாராக்கால் - வேழ
மருந்து கனிபோல் வகைக்காகா யுண்மையுள்
திருந்து விதித்தவழி செல்.

58. செல்லேல் விலக்குவழி தீய சுவடியெதுங்
கல்லேல் அனித்தியத்தைக் காதலித்து - நில்லேல்
சிரம தறுந்தாலுஞ் செப்பேல் படிறு
பரம கிறித்து சிந்தை பற்று.

## கலிவிருத்தம்

59 பற்று பேரின்ப பாக்கியம் பெற்றிட
முற்று நம்பிரான் முத்தடி, பித்தரின்
தெற்று ளாகிநீ சீவநாள் வீண்செய்தால்
சுற்று மேதுயர் சொல்லரும் நித்தியம்

60. நித்தி யஞ்செயும் நின்சீவி யத்திலே
சத்தி யம்நீதி சாந்தமும் மெய்த்தேவ
பத்தி யோடன்பும் மாறாதி லங்கிடில்
சுத்தி யுன்னுளிற் சூழ்ந்ததென் றாகுமே

## நேரிசை வெண்பா

61. ஆகும் விசுவாசர்க் காண்டவனின் காருண்யம்
போகும் கலியும் பொருதலகை - ஏகும்
உடனே நிறைவேற்ற லுண்மைபல நன்மை
திடனே யளிக்குஞ் சிறந்து.

62 சிறந்து விளங்கத் தினமு முயற்சி
மறந்து விடாதியற்று வாணா-ளிறந்து
கடருமுனந் தேடு கதிநலமுண் மூடம்
அடரும் படியடைஞா னம்

63 ஞான மறிவென்னும் நல்லபொக்கி டங்களெலாம்
வான பரனேசுள் வைப்பதனால்-ஈன
நரரைக் குருவெனநீ நம்பி யலையேல்
சுரரை வகிகிறித்தைச் சூழ்.

64 சூழு மெழுத்தெண்ணிச் சொல்லுவர்நா னாவிதமாய்ப்
பாழும் படினமவை பற்றாதே-வீழும்
கருத்து நமக்கேன் கடவுண் மகிமை
பெருத்து விளங்குவழி பேண்.

### கொச்சகம்

65 பேண வகையறியாப் பேதைகட்கும் பொன்னணிகள்
பூண விருப்பம் பொலிவாகப் பூட்டுவரே
காண விருதயத்தின் கண்டிறக்கா ராயிடினும்
தோண அவாவுறுகிற் றூயோன்று ணைசெய்வானே

### கலிவிருத்தம்

66. வானக் கண்பரு வக்காலந் தோன்றிடும்
மோனக் கண்ணுரை மொழியத்தி றந்திடும்
ஊனக் கண்ணரு ளொண்டவி ளங்கிடும்
ஞானக் கண்ணதே நன்றாய்த்து லங்குமே,

### அறுசீர் ஆசிரியவிருத்தம்

67. துலங்கு மொருமா புஞ்சையின் மாரி
சொரியா மற்றானே
இலங்கும் வித்திற் றதிசயத் தருவொன்
றெழும்பிக் கனிமலிந்தே
மலங்கு மாக்கண் மனங்கனிப் பிக்கும்
மகத்துவந் தெரிந்தாக்கால்
அலங்குங் குணநடை அழகுட னாயுளும்
அதிகரித் திடும்நிசமே.

68. நிசமே மரத்தில் விளைதீ விடத்தை
நெடுமர மொன்றாலே
நசமே புரியத் திருவுளங் குறித்த
நாளதி னிறைவேற்றி
வசமே திரும்பு மன்பதைக் குதவி
வருமதி சயங்கண்டால்
தசமே தவற லினியொருக் காலும்
தலையெடா தொழிந்திடுமே

69 இடுகா டத்தம் வாழ்வா ரம்பரம்
எல்லா மிழந்தையோ
முடுகா முன்னர் முத்திநல் லின்பம்
மொய்த்திட வழிதேடார்
கெடுகா லத்திற் கூவென் றலறிக்
கேடுறல் பயங்கரமே
மடுகா வுறுமான் நிகர்மகி ழொடின்னே
மாசில னடிபரவே

## எண்சீர் விருத்தம்

70 பரவை யோடம் பாறை மோதி
பாழி லமிழ்ந்திக் கேடா காமல்
இரவை யொளியாற் பகற்போ லாக்கி
இடற லணுகா மார்க்கத் தோட்டும்.

## கலிவிருத்தம்

173 ஆபத்துக் காலத்திற் றைபத்து நட்டான்
தாபத்துக் காலத்திற் காபத்த றுப்பான்
ஆபத்துக் காலத்திற் றைபத்தி டானேல்
தாபத்துக் காலத்திற் காபத்தெ டானே

174. காபத்தி நெஞ்சத்திற் கர்த்தன்வ சிப்பான்
மாபத்தி ரத்தோடு மாவீடு சேர்ப்பான்
கோபத்தி னாளதிற் குன்றமுழை மேவாய்
தேபத்தி யெம்மையுஞ் சிறப்புள தறியே.

## நேரிசை வெண்பா

175. சிறந்தோர் இயேசிறைவன் சிந்தை தரித்தோர்
இறந்தோர் அதனை இழந்தோர் - மறந்தோர்
இருண்ட துறைபோய் எரிநர காழ்வார்
அருண்ட மனதை யகற்று

176 கற்ற நெறிநில் கதியேசு மற்றோர்க்குப்
பெற்ற வரமபகர் பேதைமை - உற்ற
இனத்துக் குருகி யியற்று கிரியை
மனத்துக் கமையு மகிழ்.

177 மகிழ்ச்சி பெருகமன மாகிற்செய் நன்மை
மகிழ்ச்சி சிறுகவெனின் மாற்று - மகிழ்ச்சி
இகத்திற் குறைவென் றிடையேல் பரம
அகத்தில் நிறைவறி வாய்

## கட்டளைக் கலித்துறை

178 வாட்டம் அகற்றிப் படிமூன்று மேறி மகிழ்ந்துதினம்
ஓட்டம் பிடிலக்கைச் சற்றும்வி டாமலு லகவகை
கோட்டம் புரியுடன் மேற்சயம் வாய்த்திடுங் கோதகற்ற
நாட்டம் பொருந்தி யிங்குற்றோ துனக்கென்றும் நல்லிடமே.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

179. இட்ட தருந்து சுவைநாடிப்
பிறந்த வெரிச்சல் விடுபரிந்து
அட்ட திசைக்கும் அத்தனே
சருட்செய லன்புடனே சாற்றாய்நீ
சட்ட முணர்ந்தப் படியேசெய்
தலைவ னேய மறக்காதே
துட்ட சகவா சம்போக்கு
துயர முறுவோ ருளந்தேற்றே

180 தேற்றத் துடனே ஞான முரை
சிலுவைக் கல்விச் சாலையிற்கல்
ஆற்ற லளிக்கு மறிவுண்டா
மனந்த ஞானவி வேகமுண்டாம்
தோற்ற மனைத்து மநித்தியமாந்
துரிதிலடை நித்திய சீவன்
ஏற்ற விசுவா சம்மதனை
யெளிதி லுறுவிக் கும்வழியே

## நேரிசை வெண்பா

181. வழிசத் தியஞ்சீவன் மாசிலா யேசு
மொழிசத் தியங்கண் முழுதும் - பொழிசத்
தியவாவி போதந் திகழ்ந்தவர்க் கன்றோ
நயவாவி நல்லுயிர்மெய் யாம்

182 மெய்யே கெலிக்குமென்று மேதினியிற் கண்சிமிட்டிப்
பொய்யே நடித்தென்ன? போகச்சொல - வெய்யோன்
உதிக்க விருளோடி யோய்தலொப் பாமே
துதிக்க விறைகழலுட் சூடு.

## அறுசீர் விருத்தம்

183 சூடு வாய்கி றித்து சிந்தை தூயவாவி நின்றுனை
நாடு தேவ மாட்சி பூவாழ் நரரிரட்சை யுறவெனக்
கூடு பத்தர் குழுவிலின்பம் கொண்டு மென்மே லுங்களித்
தாடு வானோர் கண்டுதுள்ள சருவங் கிறித்தா தீனமே.

## வேறு

184 சருவம் கிறித்துவைச் சேவிக்கு
மாதினஞ் சடுதியில் வருவதினால்
கெருவம் அடங்கியே வாதியின்
கூட்டமும் கேவல மாகிடும்பார்

உருவம் பணிதற்கட் டோடறுந்
திருச்சபை யொன்றுபட் டுவந்துசித
பருவம் நிறைவதாற் சீவநா
யகன்பதி பரிப்பனெக் காலமுமே

## நேரிசை வெண்பா

185. எக்கால மும்மெனக் கின்பா தரவருளும்
முக்கால முந்தெரிந்தாண் மூலநலன் - இக்காலம்
தந்தான் இரண்டிரட்சை தட்டாதொன் றீவனம்மைச்
சொந்தான் உனக்கும்வந்து சொல்

186 சொன்னால் விசுவாசஞ் சோதித் துடனிரங்கி
இன்னார் இனியாரென் றெண்ணாமல் - முன்னான்
அருளுவான் ரட்சிப் பவசியந்தே ரானே
உருளுவான் வெந்நரகத் தூடு

## பின் முடுகு வெண்பா

187 ஊடாட்டம் பேய்மனித ரோடுத
வாதுசெயின்
காடாட்டம் கொள்ளாட்டுக்
காதையொக்கும் - போடாட்டம்
சித்தரொடும் பத்தரொடும்
வித்தரொடும் முத்தரொடும்
தத்தரொடும் அத்தரொடுந்
தான்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

188 தானதான தான தான தான தான ஏகனே
தானதான தான தான தான தான தந்தையாம்
தானதான தான தான தான தான மைந்தனாம்
தானதான தான தான தான தான வாவியே.

189 ஆவி யுண்மை யால்வணங்க
வாக்கி யாபித் திருக்குமெய்
ஆவி யான திரித்துவத்தை
அறிந்து போற்ற வல்லீரேல்
ஆவி யான்மங் காயமீளு
மநித்தியம் போய்யென் றும்நல்
ஆவி சீவி கோடிகூடி
ஆனந் தம்பெற் றாள்வீரே

190. பெற்ற வாழ்வு இம்மையிற் பேச வற்பம் நூற்களால்
கற்ற கல்வி சொற்பமாங் கண்ட வின்ப மணுவதாம்
உற்ற நேரம் நீர்த்துளி உண்மை மேலாம் வீட்டிலோ
அற்ற மில்லா வாழ்க்கை ஞானமாகு மின்பம் நேசமே

### நேரிசை வெண்பா

191. நேசப் பெருக்கனை நீவிட்டு ஞானமற்ற
மோசப் புருடரை மொய்க்காதே - நாசப்
படுத்து மவர்போதம் பாவக்கொடு நஞ்சாம்
மடுத்து விடாதே மறந்து

### கட்டளைக் கலித்துறை

192 மறந்து விடுபிற ருன்னேர்க் கியற்றிய வன்பிழைகள்
இறந்து விடுபவஞ் செய்வதிற் சீவியெழி னலத்தில்
துறந்து விடுதற் பொழிவடந் தேவன்பைச் சொல்வதிலே
சிறந்து விளங்கு பரலோகச் செல்விகை சேர்ந்திடுமே

### நேரிசை வெண்பா

193. செல்விப் புணர்வாலென்? சேரு முயர்துறவாம்
நல்வி டயங்க ணடப்பதற்குக் - கல்வி
விலையமுத மன்று விசுவாச நீதி
முலையமுத முண்டு முயல்.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

284. கம்மென வாசம் வீசிக்
கனநரர் திரும்பப் போதம்
கொம்மென விளங்க நிற்பாய்
குலகுரு வாவி தாவி
இம்மென இந்நற் செய்தி
எழில்பரத் தெட்டத் தூதர்
பொம்மென வெழுந்தி றைக்குப்
புதுத்துதி செலுத்து வாரே

### கட்டளைக் கலித்துறை

285 துதித்தலே யின்பமு மேற்றது மாகும் நந்தூயிறைக்கு
விதித்தலே தீபம்மறையே வெளிச்சம் விரும்பியகம்
பதித்தலே ஞானம் செயலே மகிழ்ச்சி பரமனன்பிற்
கதித்தலே மேன்மை விசுவாசம் மாசெயங் காட்டிடுமே.

286. விசுவாச நீதி பரலோக வாகனம் மேன்மையொளிர்
விசுவாச நீதிநம் பாவவி மோசனம் மிக்கநன்மெய்
விசுவாச நீதிமா நித்திய மீட்புயர் வெற்றிதரும்
விசுவாச நீதியே பேரின்ப வாழ்வுசேர் மேதினியே!

### அறுசீர் விருத்தம்

287. விசுவாசம் உழவு நன்முயற்சி
விசுவாசம் வாணிப ஊக்கம்
விசுவாசம் கல்வியின் முயல்வு
விசுவாசங் குடும்பவா தரிப்பு
விசுவாசம் கைத்தொழி லியற்றல்
விசுவாசஞ் சேவகா விருத்தி
விசுவாசம் ஈடேறும் மார்க்கம்
விசுவாசஞ் சருவசா தனமே

### கட்டளைக் கலித்துறை

288 தனமே பெரிதெனப் பாவித்துச்
சாகுந் தருணமட்டும்
மனமே யதனில் மயங்கி
யுழல்தல் மதிக்குறைவாம்
கனமே யுனக்குப் பெருக
வுண்டாகுங் கதியிலெண்ணம்
தினமே பொருத்தி யொழுகுவை
தேவனுன் செல்விகையே.

### நேரிசை வெண்பா

289. ஏவாள் குலக்கொழுந்தா யிங்குற்ற சற்குருவைப்
பாவாள் மனந்திரும்பிப் பற்றுகையில் - தேவாள்
படிப்பார் திருப்புகழைப் பத்திவிந யத்தால்
நடிப்பார் அதிமகிழ்வி னால்

### எழுசீர் விருத்தம்

290. நாலா திசையும் நிறைந்த பரனை
ஞான மின்றி யருவருப்பார்
மாலா னிறைந்து தீட்டா முருவ
வணக்கத் தாலே தேடுபவர்
கோலா கலமெல் லாம்பொய்; மனதைக்
குருடாய்ப் போட்டுத் திகைப்பர் பின்னாள்
ஆலா லம்மென் றந்த வணக்கம்
அகற்றி னோரே பதியடைவார்

### அறுசீர் விருத்தம்

291 வாதா டாதே மெய்ஞ்ஞானம்
வாரா ததனாற் சிரவணஞ்செய்
கோதாஞ் சுயநீ தியையெற்று
குலவுந் தேவ நீதிபற்று

ஆதா ரத்தை வாசிசதா
அமர்ந்து சிந்தி பிரார்த்தனைசெய்
தீதா மெதையுந் தினநன்மை
செய்து வெல்சேர் புகல்கிறித்தே.

### கட்டளைக் கலித்துறை

292 கிறித்து சமயமே மானிட ருய்யக் கிடைத்தவழி
கிறித்து சமய மறைகுரு தேவன் கிழமைபொது
கிறித்து சமயத் தவரே சிறந்த கதிவுடையோர்
கிறித்து சமயத்தில் சேருமி னாயுள் கெடாமுனமே

### வஞ்சித்துறை

293 முனமே மொழிவிதம்
கனமே கனிந்தருள்
மனமே மல்குவான்
தினமே சிந்தியே

### நேரிசை வெண்பா

294. சிந்தி யருமைச் சிலுவை திருநிழலை
சந்தி பகலந்தி தன்னிலும் - முந்தி
பெரியான் நமதுமேற் பேரன்பு கொண்டான்
உரியான் முழுப்பரிவிற் கும்

295 முழுமையும் மாதேவன் முன்வைகா ணிக்கை
கொழுமையும் நற்சுகமுங் கூடும் - செழுமையும்
சேரும் வலியும் சிறந்தமா ராட்சியமும்
நேரும் இறைக்கே நிதம்.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

296 நிதமும் துணிவாய்ப் போராடு
நிசல னியேசுன் தளகர்த்தன்
சதமும் சுகமும் அலவுலகம்
சாரேல் மாய்கை வெறுத்துலகில்
இதமும் கேடுஞ் சமமாக்கி
எங்கும் கூறு திருப்போதம்
பதமும் விழிப்பும் பிசகாமல்
பலத்துப் பொருந்து மறை நெறியே.

## எழுசீர் ஆசிரிய விருத்தம்

297 பொருந்தி யேசுமெய்ப் பாகனா லருட்டளை
பூட்டி ஐம்புலப் பாய்மா
வருந்தி யோடிக்கே டடைந்திடா தமர்த்தினான்
வாழ்வான் உயர்கதி சேர்ந்து
திருந்தி யிங்ஙனம் அன்றிவே றிதங்களில்
சேரச் செருக்குட னிற்றல்
பருந்தி ரக்கையில் வானள வக்கினிப்
பறம்பு கடக்குத லாமே

## எண்சீர் ஆசிரிய விருத்தம்

298. கடவாத மனமருளி னாலே கூடும்
கருத்தொடுங்கிச் செபஞ்செய் தோனடை வானத்தை
மடவாத மொருபயனுங் கொடுக்கா தன்பால்
மனந் திரும்பிக் கனிகொடுத்தால் மகிமை யாகும்
நடவாத வழிகாட்டு வோரோ டென்ன
நட்பு? கிறித் தேசுகுரு நளினச் செங்கால்
கெடவாத மிடுகுதர்க்கர் துறந்து பற்று
கேடில்லை சாசுவதா னந்த மாமே.

299. மேலான மெய்ஞ்ஞான மாலை தன்னை
விருப்பமொடு வேதமொத்துத் தெளியக் கற்றோர்
மாலான தறவுந்தேய்ந் தமல மான
வழிசெலுவார் தூயாவி துணையைப் பெற்று
காலான தசையாதிப் பாவஞ்செய்யக்
கதித்தோடுங் காருணிய செயல்க ளாக்க
சேலான துயிரோடு நீரோட் டத்தில்
சென்றெதிரே செல்வதுபோற் பரஞ் சேர்வாரே.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

300. பரம பிதாச்சுதன் ஆவிநம்
பரிசுத் தம்முரை வேதம்வாழி
திரம தாய்ச்சபை சுத்தர்வாழி
செழிக்கும் மிசியன்சங் கங்கள்வாழி
உரம துடன்குரு மார்கள்வாழி
உற்ற இறைவருத் தியோகர்வாழி
சிரம மெடுபுல வோர்வாழி
தேசங் குடிகளெல் லாம்வாழியே



# 14

## திரு அவதாரம்

**ஆசிரியர்: மாணிக்கவாசகம் ஆசீர்வாதம் (1865-1948)**

**அறிமுகம்: தி. தயானந்தன் பிரான்சிஸ்**

ஆண்டவரின் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளை நற்செய்தி நூல்களிலிருந்து தொகுத்தெடுத்துக் காவிய வடிவில் வழங்கும் முயற்சியில் ஈடுபட்ட சில கிறிஸ்தவக் கவிஞர்களை நாம் அறிவோம். தேம்பாவணி ஆசிரியர், யாத்திரிகப் படைப்பாளர் ஆகியோரைப் போன்றே ஜான் பால்மர், ஜே.ஜி. சுந்தரம், ஆசுகவி ஆரோக்கியசாமி, ஆழ்வார்பிள்ளை ஆகியோர் நற்செய்தி நூல்களைத் தழுவித் திருமறை வசனங்களின் திரண்ட கருத்தை கவிச் சுவையுடன் தந்துள்ளார்கள். கிறிஸ்தாயனம், சிலுவை வழி அம்மானை, சுடர்மணி, சத்திய வேத அம்மானை ஆகிய அவர்களின் நூல்களைப் போலவே இனிக்கும் தமிழில் எழுதப்பட்டுள்ள ஓர் இயேசு காவியம் திருஅவதாரம் என்பது பலருக்குத் தெரிந்திருக்க முடியாது. அருள்திரு. மாணிக்கவாசகம் ஆசீர்வாதம் அவர்கள் 2367 பாடல்களால் இந்நூலை ஆக்கித் தந்திருக்கிறார்கள். கிருஷ்ண பிள்ளையைப் போன்றே இவரும் நற்போதகம் ஏட்டில் தம்முடைய காவியத்தை 1936 இல் எழுத ஆரம்பித்து, பத்து ஆண்டுக் காலத்தில் அதை நிறைவுறச் செய்திருக்கிறார்.

'தேம்பாவணிக்கும், இரட்சண்ய யாத்திரிகத்திற்கும் பிறகு கிடைத்த முத்தான மூன்றாம் முத்து திருஅவதாரம்' என்கிறார் இந்நூலுக்கு அணிந்துரை எழுதியுள்ள திரு. ஆர்.எஸ். ஜேக்கப்.

எந்தக் கிறிஸ்தவக் கவிஞருக்கும் கைவராத திருமூலரின் திருமந்திர நடை இந்தக் கவிஞரிடம் இயல்பாகவே வந்து அமைந்திருக்கிறது. நான்கு அடிகளிலும் துவக்கச் சீராக ஒரே சொல்லை வைத்து வாசகர்களுக்குச் சலிப்பு ஏற்படாமல் கருத்துகளைச் சொல்லிச் செல்வது அவ்வளவு எளிதல்ல. இந்தப் பாடலைப் பாருங்கள்!

*"என்னோஇவ் வற்புதம்பார் ஈசனிங்கே வந்தார் புவியில்*
*என்னோஇவ் வற்புதம்பார் எம்முருவம் கொண்டா ரன்றோ!*
*என்னோஇவ் வற்புதம்பார் இந்நிலைமை யேயா னாரே*
*என்னோஇவ் வற்புதத்தை எப்படிமறப் பாயோ பாவி?"*

பாலகாண்டம், உத்தியோக காண்டம், ஜெயகாண்டம், ஆரோகண காண்டம் எனும் நான்கு பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ள இந்நூலில் அடங்கும் பல நூறுபாடல்கள் படிப்போரின் மனத்தைத் தொட்டு, அவர்கள் சிந்தனையைத் தூண்டும் திறம்படைத்தவையாய் இருக்கின்றன. திருமறைக் கருத்துகள் எவ்விதத்திலும் பிறழாவண்ணம் அவற்றைக் காப்பதோடு அழகிய எதுகை,

மோனை நயத்துடன் நிகழ்ச்சிகளை எடுத்துரைப்பதில் இவ்வாசிரியர் பெரும் வெற்றி கண்டிருக்கிறார் என்று கூற வேண்டும்.

அருள்திரு. ஆசீர்வாதம் அவர்கள் 1.7.1865 ஆம் ஆண்டில் பிறந்தார். அவர் அருட்பொழிவு பெற்றது 1899 ஆம் ஆண்டில். அவர் திருப்பணி ஆற்றிய தலங்கள் சேரன்மாதேவி, பண்ணைவிளை, திருவில்லிபுத்தூர், பாளையங்கோட்டை, நல்லூர் ஆகியவை ஆகும். ஓய்வுபெற்ற பின் ரெட்டியார் பட்டியில் பள்ளி ஒன்றை நிறுவி உக்கிரமன் கோட்டையில் அவர் ஆற்றிய பணி பெரிதாகும். திருஅவதாரத்தை 1946 ஆம் ஆண்டில் எழுதி முடித்த இவ்அருட்கவிஞர் 13.7.1948 இல் ஆண்டவருக்குள் துயிலுற்றார்.

கடந்த நூற்றாண்டில் கிறிஸ்தவ இலக்கியப் பணிக்காக அருள்திரு. சாமுவேல் பவுல் ஐயருக்கு அக்கால அரசாங்கம் இராவ்சாகிப் பட்டத்தை வழங்கியது. இந்நூற்றாண்டில் கிறிஸ்தவ இலக்கியப் பணி உள்ளிட்ட பலதிறப்பட்ட அருட்பணிகளுக்காக அப்பட்டத்தைப் பெற்றுக் கொண்டவர் அருள்திரு. மாணிக்கவாசகம் ஆசீர்வாதம் அவர்கள் என்பது குறிப்பிடத் தகுந்ததாகும். பேசுவதும், அந்தச் சொல்லின் அழகிய சொல்லாட்சி தொடர்ந்து வரும் அடிகளில் வெளிப்படுவதும் காப்பியப் பாடல்களுக்கே இயல்பான ஓட்டத்தை நினைவுறுத்துகின்றன.

ஆண்டவர், கெத்சமனே வனத்திற்குச் சென்று பாடுகள் படுவதை விளக்கும் 'சாத்தானை வென்ற பர்வம்' என்னை வெகுவாகக் கவர்ந்த பகுதி என்று சொல்வேன். அவ்வனத்தில் அடி எடுத்து வைக்கும் ஆண்டவரைப் பார்த்துக் கவிஞர் கேட்கிறார்:

*"சீர்மிகும் ஏதேன் காவில் மீறவே செய்பா வத்தால்*
*சீர்மகர் கெட்டே போகச் செய்தவல் சர்ப்பத் தோடே*
*பேர்பெறுங் கெத்சே மேனே போர்குரு சினிலுந் தானே*
*போர்பொரு தேமேற் கொள்ளப் போகிறா யோவேந் தேநீ?"*

*"மன்தினால் வார்த்தை யாலே வளர்சீ ரத்தா லுந்தன்*
*மனதுமே புண்ணாய் நோக கொடியமா பாவஞ் செய்தே*
*எனதுட சீவன் மாய இழிகதி யுற்றே னுக்காய்*
*உனதுட சீவன் தந்தே யுயர்த்தவே போகின் றாயோ?"*

நெடுங்காலமாக அச்சேறாமல் இருந்த இந்தக் கிறிஸ்து காவியத்தை ஏறத்தாழ 400 பக்கங்களில் அச்சிட்டு வெளியிட்டிருக்கும் திரு. ஆர்தர் ஆசீர்வாதம் — ஆசிரியரின் இளையமைந்தர் — நமது பாராட்டுக்குரியவர். தம்முடைய தந்தையார் இக்காலப் போதகர்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இறையியல் அறிவை இலக்கிய நயத்தோடு சேர்த்து வழங்கும் சீரிய முயற்சியில் ஈடுபட்டவர் என்பதை அவர் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகளிலிருந்து நாம் தெரிந்து கொள்ளச் செய்கிறார். திருச்சபை மக்களுக்குத் தொடர்ந்து ஆற்றிய திருப்பணியினூடே சமுதாயப் பணியிலும் ஈடுபட்ட ஆசிரியர் ஆசீர்வாதத்திற்கு அக்கால ஆங்கில அரசாங்கத்தார் 'ராவ்சாகிப்' பட்டத்தை வழங்கியதில் வியப்பேதும் இல்லை.

இந்நூலின் காண்ட அமைப்பு தமிழ்க் காப்பிய இலக்கணத்தைத் தழுவி நிற்பதோடு, இறுதிக் காண்டமாகிய ஆரோகண காண்டம் ஆண்டவரின் பெரு வெற்றியைத் தொடரும் ஏறுமுகப் பாடல்களால் அமைந்துள்ளன. இப்பகுதியைப் பாராட்டி அணிந்துரை அளித்துள்ள பேராசிரியை

செல்வி எல்.ஆர். ஜான் அம்மையார், 'இவ்வேறுமுகப் பாடல்களால் கிறிஸ்தவச் சமய வளர்ச்சியின் ஏறுமுகத்தைக் குறிப்பிட்டு, திருஅவதாரத்திற்கு முடிவு கூறாமல் ஆரோகணமாக்கி இருப்பது அறிந்து உணர்ந்து இன்புறற்குரியதாம்; கிறிஸ்தவ சமயத்திற்கு என்றுமே ஆரோகணம்தான்' என்று அழகுறக் கூறியிருக்கிறார்கள். கீழ்வரும் இரண்டு பாடல்களைப் படிக்கும்போது அவ்வுண்மை நன்கு விளங்கும்.

*"பாவியே யுனக்காய் பரனுல குதித்தார்*
*பாவியே யுனக்காய் பரனுயிர் துறந்தார்*
*பாவியே யுனக்காய் பரனுயிர்த் தெழுந்தார்*
*பாவியே யுனக்காய் பரன்பர மெழுந்தார்."*

*"பாவியே பணிவாயே பரன்திருப் பதமே*
*பாவியே யறிக்கைசெய் யுனின்பவ முணர்ந்தே*
*பாவியே யருள்வார் பரன்பவ மனிப்பே*
*பாவியே யடைவாய் பரத்தினில் மகிமை "*

கிறிஸ்தவத் தமிழ் இலக்கியங்களைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் அறிமுகப் படுத்துவதில் ஆர்வம் காட்டுவோர் அருட்கவிஞர் ஆசீர்வாதம் அளித்திருக்கும் அருமைமிகு காவியமாம் திருஅவதாரத்தை மறந்துவிட முடியாது. யாத்திரிகம், தேம்பாவணி, அமலகுரு சதகம், அருட்குறள் முதலிய நூல்களிலிருந்தும், திருஅவதாரத்தினின்றும், கிறிஸ்தவ் ஆசிரியர்களும், அறிஞர்களும், அருளுரைஞர்களும் வேண்டிய அளவுக்கு அள்ளி முகந்து பலருக்கும் வாரி வழங்கி மகிழலாம்.

### 82. நானே நல்ல மேய்ப்பன் (யோவான் 10:1-21)

106 ஆட்டைத் தேடியே வந்தவோ ராயனு ரைத்தார்
சாற்று கின்றேன் சத்திய மாயுங் களுக்கே
ஆட்டுத் தொழுமுன் னதன்வா சல்வழி செலாதே
வேற்று மார்க்கமா யேறுவோன் வேற்றாள் திருடன்

107. வாசல் மார்க்கமுட் செல்லுவோன் மறிகளின் மேய்ப்பன்
வாசற் காவலன் திறப்பனே வாசலே யதற்கே
நேச மாய்மறி யவன்தொனி கேட்குமே நிசமாய்
மோச மிலையென முழுவதும் நம்புமே யவனை.

108. ஆடு சொந்தனே பெயர்சொலி யழைப்பனே யவற்றை
ஆடு களையவன் நடத்தியே செலுவான் வெளியே
ஆடு கள்வெளி வரஅவன் நடப்பா னவைமுன்
ஆடு செல்லுமே யவன்பின் னறிந்தவன் தொனியே.

109. அந்நி யர்களின் தொனியையே யறியா ததனால்
அந்நி யன்பினால் நடவா தவனைவிட் டோடும்
முன்ன வன்பரன் மொழிந்தவிவ் வுரையின் பொருளை
இன்ன தென்றவ ரறிந்திலர் யூதரங் கிருந்தோர்.

110 ஆத லின்பரன் மறுதர மவர்களை விளித்தே
போத வேயினும் புகல்கிறே னிதுநிச நிசமே
ஆத ரம்மெனுந் திறப்பே யான்மறி களுக்கே
பேத மில்லிதே பெரியதோர் விடயம் நிசமாய்

111. எனக்கு முன்வந் தோரெலாம் திருடரா னவரே
பிணக்க மிலையே பெரிதுமே கொள்ளை யாட்களே
இணங்க விலையே யிவர்கள ழைப்பை மறிகள்
இணக்க மாயவை செவிகொடுக் கவேயிலை யிவர்க்கே.

112. உட்செல் வதற்கா யுறியதோர் வாசலென் வழியாய்
உட்செல் லுவோனே யுனதரட் சிப்படை குவனே
உள்ளும் புறம்புமே உவந்தநல் மேய்ச்சலு மடைவான்
உட்செல் லுவீரே உரியதோர் வாசலவ் வழியாய்.

113. திருடன் வருகிறான் திருடவு மழிக்கவுங் கொலவும்
வருகின் றதேயிலைப் பிறிதொரு நலமுமே விளங்க
விரும்பி வருகிறே னவைகளே சீவனை யடைய
மருவி லாதவை உன்னத பூரண மடைய

114. நல்ல மேய்ப்பனே யாரென நவில்கிறே னுமக்கே
நல்ல மேய்ப்பனோ நானலாற் பிறிதெவ னுளனோ
நல்ல மேய்ப்பனோ ஆடுகள் நலம்விரும் புவனே
நல்ல மேய்ப்பனோ நல்குவன் தனதுசீ வனையே

115. கூலி யாளெனும் மேய்ப்பனில் லான்குண மிலனோ
போலி புத்தியில் லாடுகள் சொந்தமில் லானே
காலி யாய்விட் டோடுவன் கண்டோ நாயே
மேலே வீழ்ந்துமே பீறுமே வெருட்டியா டுகளை

116. கூலி யாட்பணி செய்வதோ கூலியே பெறவே
போலி யேயவன் வேலையிற் புண்ணிய மிலையே
காலி யாகவிட் டோடுவன் கடிதிலா தலினால்
கால மென்றுமே கொள்ளுவ திலைகவல் அவனே.

117 நானல் மேய்ப்பனே நற்பிதா எனையறிந் ததுபோல்
நான்பி தாவை நலமொடு மறிந்தும் உளனே
நானே யன்னவை யறிந்திருக் கிறேன்நல மொடுமே
நானு மவைகளா லறியப் பட்டுளேன் நலமாய்

118. என்தன் மறிகளுக் காய்த்தரு கிறேனென் னுயிரே
இந்தத் தொழுவமே யுள்ளவிம் மறிகளுந் தவிர
எந்த விடத்திலும் வேறும றிகளுள வெனக்கே
அந்த மறிகளை யன்பொடு கொணர்வது மவத்யம்.

119. அவைக ளென்தொனி யன்பொடு கேட்டிணங் கியுமே
அவைக ளென்பினால் வந்திது மந்தையி லமரும்
அவையி வற்றொடு மொன்றுசேர்ந் தேயமர்ந் திடிலோ
அவையெல் லாமொரே மந்தை மேய்ப்பனும் ஒன்றே.

120 நானென் சீவனை நல்கிறேன் மறுதர மெடுக்க
ஆன தாற்பிதா அன்புகொண் டிருக்கிறா ரெனின்மேல்
ஆன திலையே யாருமே யதனை யெடுக்கவே
நானென் சீவனை நல்கிறேன் முழுமன தொடுமே.

121. அஃதைக் கொடுக்கவே யதிகா ரமுமெனக் குளதே
அஃதை யெடுக்கவு மதிகா ரமுண்டே திரும்ப
இஃதை யடைந்துளேன் என்பிதா தரஅதி காரம்
இஃதே யுரைகளா லெழும்பின பிரிவினை யவர்க்குள்.

122. இவைகள் கேட்டுமே யிசலின ரிவைகளைக் குறித்தே
இவர்க ளிற்பலர் இடறினர் பரனையே குறித்தே
இவன்பி சாசுகொண் டவனினு மொருபைத் தியனே
இவனுக் கேன்செவி கொடுக்கிறீர் எனவிசைத் தனரே.

123 இவர்கள் சொன்னதைக் கேட்டவர் சிலரெதிர் மொழியாய்
இவைபி சாசுமே கொண்டவன் வசனமோ இலையே
இவரோ அந்தகன் கண்களைத் திறந்தது மிலையோ
இவரே செய்தபோற் பிசாசுகள் திறக்குமோ என்றார்.

124. திருநாட் செல்லவே திரள்சனந் திருப்பதி விடுத்தார்
எருச லேம்நகர் தனதியல் நிலைமையி லமர
திருந கரினில் அயலுள பதிகளிற் றிரிந்தே
திருக்கு மாரனே நடத்தினர் திடமொடூ ழியமே

### 118. பரலோக ராச்சியம் எப்போவரும் (லூக்கா 17:20-37)

463. வந்திருந்தோர் பரிசயாரே வந்துகேட்டா ரோர்கேள்வி
எந்தவேளை தெய்வராச்சியம் தோன்றுமோஇங் கேவந்தே
உந்தமின்சித் தம்முவந்தே நீருரைப்பீர் என்றாரே
இந்தவார்த்தை கேட்டிசைத்தார் யேசுவோஅன் னோருக்கே

464. வந்துறுமே வானராச்சியம் ப்ரத்தியட்ச மாய்த்தோன்றா
இந்தஇங்கே அந்தஅங்கே யென்றிசைக்கக் கூடாதே
விந்தையந்த ராச்சியத்தை வேறெவணும் நோக்காதீர்
இந்தஇங்கி ருக்கிறதே உங்களுக்குள் என்றாரே

465. காவலன்சீ டர்க்குரைத்தார் மாகனிவோ டிவ்வார்த்தை
மாவலர்மா னுடமைந்தன் நாட்களிலொன் றேயொன்றை
ஆவலாய்நீர் காணவென்றே ஆசைகொள்ளும் நாட்டோன்றும்
ஆவலோடே காத்திருந்தும் அஃதையோ காணாரே.

466. என்னநாளில் வந்தெவரோ சொல்லிலிங்கே யங்கென்றே
பின்னவேத மாய்ச்சொலாதீர் பின்செலவே வேண்டாமே
மன்னுமனு மைந்தனேதாந் தோன்றுவாரே தம்நாளில்
மின்னலேயோர் திக்கெழுந்தே மின்னுமாப்போல் நேர்திக்கில்.

467 அந்தநாளெ ருங்குமுன்னர் அம்மனுட மைந்தன்தாம்
இந்தசாதித் தீயராலே எத்தனைபா டோபட்டே
இந்தசாதி யாராலா காரெனத்தள் ளப்பட்டே
நிந்தையீதெல் லாமவர்க்கே நேரவேண்டு மேயன்றோ.

468. நீதனோவை மாமுனிவன் நாணடந்த நேர்மையாய்
நாதன்மனு மைந்தனுட நாட்களில்ந டக்குந்தான்
நீதனன்னோன் பேதையுட்போ மட்டுமேயக் காலத்தோர்
பேதமின்றுண் டேசுகித்தே பெண்கொடுத்துங் கொண்டாரே.

469 மாளிகைகள் கட்டினாரே நட்டுவிற்றே கொண்டாரே
கேளிக்கையா யேயிருக்கக் கேடுநாளெ ருங்கிற்றே
நாளிகைய றியாவேளை நாடுநகர் காடெல்லாம்
ஊழிகால வெள்ளமேவந் தேயொழிந்தார் யாபேரும்.

470 நீதனாம்லோத் நாட்களில்ந டந்தநேர்மை யேபோலே
நாதன்மனு மைந்தனாண டக்குமேயவ் வண்ணந்தான்
நீதனேசோ தோமினின்றே நீங்குமட்டு மங்குள்ளோர்
பேதமின்றுண் டேசுகித்தார் பெண்கொடுத்துங் கொண்டாரே.

471 மாளிகைகள் கட்டினாரே நட்டுவிற்றார் கொண்டாரே
கேளிக்கையா யேயிருக்க கேடுநாளெ ருங்கிற்றே
நாளிலக்னிக் கந்தகமே வானிருந்தே வர்சிக்க
பாழழிவெல் லாவுயிர்க்கும் வந்துபட்ப மானாரே

472 அந்தநாட்டன் வீடுமேலே தங்கியேயி ருப்போனே
அந்தவீட்டிற் பண்டமேமெ டுக்கவுள்ளி றங்காதே
அந்தவண்ண மங்கிருந்த கன்றுமேசெல் வானாக
இந்தவண்ணங் காட்டிலுள்ளோள் ஏகுகபின் பாராதே.

473. சீவனையி ழந்தலோத்தின் பெண்டிரைச்சந் திப்பீரே
சீவனாயே யெண்ணியாஸ்தி சீவனேயி ழந்தானே
சீவனைரட் சிக்கவெண்ணில் சீவனேயி ழப்பானே
சீவனையி ழப்பவன்தன் சீவனையு யிர்ப்பானே

474 ஈர்வரோர்ப டுக்கையிலிவ் ராவிலேநித் திரைசெய்ய
ஓர்வனேற்கப் பட்டனனே யோர்வனோவி டப்பட்டான்
ஈர்வரொன்றா யேந்திரந்தி ரித்துமேயி ருப்பாரே
ஓர்வியேற்கப் பட்டனளே ஓர்வியோவிடப் பட்டாளே.

475 ஈர்வரில்வ யலில்நின்றோர் ஓர்வனேற்கப் பட்டானே
ஓர்வனோவி டப்படுவா னென்றுமக்கு றைக்கின்றேன்
ஓர்பரனே எங்கேயென் றேயுரைப்பீர் என்றாரே
கூர்மையாங் கழுகேசே ரும்சிதைஎவண் அங்கென்றார்

## ஆரோகண காண்டம்

### 183. நாற்பதாம்நாட் சம்பவம்

1 மரித்துயிர்த் தெழுந்தபின் மகிமையாய்ப் பரனே
பிரித்திருந் தவராம் பிரியசீ டருக்கே
அருளொடு தரிசன மளித்துநாற் பதுநாள்
தரித்திருந் தனரித் தரணியாந் தலமே.

2. கண்டவர் தரிசனங் கலிலெயா மலையில்
விண்டுமே சொலவொணா வியப்பொடு களிப்பாய்
அண்டின ரெருசலே மவசர மொடுமே
பண்டைய நகரினிற் றரித்திருந் தனரே.

3 நாற்பதாந் தினமே நலமொடு வரவே
மேற்புற அறையினில் மெய்விசு வசியர்
நாற்புரம் பரவியே நலமொடு மிருக்க
தாற்பர னவர்க்கே தரிசன மளித்தே

4. தீக்ஷைதந் தனனே தீக்ஷகன் ஜலத்தால்
தீக்ஷைய தோமனந் திரும்புதற் கெனவே
தீக்ஷையே பெறுவீர் திருப்பல மடைய
தீக்ஷையே பெறுவீர் திருவரு பியரால்

5. உரித்தொடு பெறுவீ ரெனவுமக் குரைத்த
திருப்பிதா வுரையே நிறைவுறத் திடமாய்
பிரிந்தெவ ணகலேல் பெறும்வரை யதனை
தரித்திரு மெருசலேந் தலத்திலென் றனரே.

6. இன்றையத் தினமோ இயேசுவே பிரிந்தே
ஒன்றியா யகலா தொருமித் தெழுந்தார்
சென்றனர் தொடர்ந்தார் பதினொரு சிஷியர்
சென்றனர் பெத்தனி சிறுபதி முகமாய்

7. ஆண்டுமே செலும்பொழு தணுகியே சிஷியர்
வேண்டியே வினவினர் விரும்பியே மகிமை
ஆண்டவா ராஜ்ஜிய மருள்வதிப் பொழுதோ
மீண்டுமின் ஜனமா மிஸரவே லருக்கே.

8 அடுத்ததில் லுமக்கே யறியவே ளைகளே
அடுத்தா தீனம் அருட்பிதா அவர்க்கே
அடுத்துறு விஷயம் அதிகமுக் கியமாம்
விடுத்திதை யதையே விழித்துநோக் குவீரே

9 பரிசுத் தாவியர் பரிந்துமேல் வருவார்
தரிப்பிப் பாருமைத் தகுவுயர் பலனால்
இருமென் சாட்சிகள் எருசலேம் யூதா
அருகுச மார்யா அகிலமே முழுதும்

10 இஃதனைச் சொலியே சிஷியரோ டியேசே
பெத்தனிப் பதியின் பின்னிருந் தெழுந்த
உத்தம ஒலிவின் உச்சியே யடைந்தார்
சத்தமில் லாதே சற்றமர்ந் தனரே

11. அத்தனோ தமதரு ளிருகர முயர்த்தி
பக்தசீ டருக்கும் பதினொரு வருக்கும்
உத்தம ஆசி யுவந்தனித் தனரே
அத்தரு வாயினி லவரைவிட் டெழுந்தார்.

12 அன்றுயர்ந் தவையாம் அவர்திருக் கரங்கள்
இன்றுமே யவருட எளியரா னவர்மேல்
வென்றியா யிகபர வெகுநல மளிக்க
என்றுமே விரிந்தவா மெழிலருட் கரங்கள்

13. இத்தரை நின்றவர் எழுந்தன ருயர
பக்தரண் ணாந்தே பார்த்துநிற் கவுமே
அத்தரு வாயிலோ ரழகிய முகிலே
அத்தனை மூடிய தவர்விழி களுக்கே

14 அமலனை மறைத்தாம் அம்முகி லொடுமே
அமலனின் தூதரா மம்பரர் குழுமி
விமலனை யெதிர்கொள வந்தனர் விரைந்தே
அமலனைச் சூழ்ந்தவர் ஆர்ப்பரித் தனரே

15. எதிரழைத் தனரெக் காளத் தொனியால்
எதிரழைத் தனரின் னிசைவீ ணையொடு
அதிபதி யவரை யாழ்தம் புரொடே
துதித்தனர் தாளஞ் சுரமண் டலத்தால்

16. விண்கோன் சுதனே விண்ணவ ரரசே
எங்கோன் பரனே எழிலுயர் யெகோவா
மண்தலத் தினிலே மனுடரைப் புரக்க
மண்தல முதித்தீர் மனுடனாய் ஜெனித்தீர்.

17 சத்துருப் பேயாற் சாபமுற் றவராம்
புத்திர ரானோர் புனிதரா கவுமே
அத்தரை யினிலே யருளொடு மவர்க்கே
மித்துரு வாகியே மிகுநலம் புரிந்தீர்

18 தீயனாம் பேயைத் தீர்க்கமா யெதிர்த்துந்
தூயவன் மையினாற் றோற்கவே பொருதீர்
மாயவன் கையினில் மாயுமா னுடரை
நேயமாய் மீட்டவர் மேசியா வெனவே.

19. மரணமே யிலராம் மகத்துவ தேவா
மரணவா யுழலும் மனுடரை மீட்க
மரணமே யடைய மனுடனு மானீர்
மரணமே யடைந்தே மரணமே வென்றீர்.

20. உயர்திரு மகனார் உனதமே யெழும்ப
உயர்த்துமுஞ் சிரங்கள் உயர்வா சலெலாம்
உயர்வீ ரனாதி கதவுகா ளுயரும்
உயருவீர் மகிமையின் அரசனுட் செலவே.

21. இவர்யார் எவரிம் மகிமையி னிறைவன்
இவர்யா ரிவர்க்கெஞ் சிரங்களே றெடுக்க
இவர்சே னைகளின் கர்த்தரெம் பரனே
இவர்தா மகிமையி னிறைவனா மெகோவா.

22. உன்னதங் களிலே யோங்கவோ சியன்னா
மண்ணில மிருந்தே மாட்சியோ டெழுந்தார்
நன்னய மொடுமே நாந்துதி செயுவோம்
உன்னத கோடா கோடிய ரொன்றாய்.

23. ஓசனா வுமக்கே உன்னதர் மைந்தா
ஓசனா வுமக்கே உன்னத வேந்தா
ஓசனா வுமக்கே ஒப்பிலா வீரா
ஓசனா ரட்சிப் பாதிப னுமக்கே.

24. மண்ணவர்க் கெனவே மாண்டுயிர்த் தெழுந்தோர்
உன்னத அமரரின் ஓசனாத் துதியோ
டுன்னத மெழுந்தே உன்னதர் வலபால்
உன்னதா சனமே வீற்றன ருவந்தே

25. மண்ணிலம் வரும்நாள் வகையொடு மெடுத்த
மண்ணிய லுளதாம் மரித்தவோர் சடலம்
விண்ணுல கினுக்கே வியர்த்தமா மெனவே
விண்ணெழுந் தினத்தில் வெறுத்திகழ்ந் தனரோ.

26 மண்ணிய லுளதாம் மகிமையில் சடலம்
விண்ணுல கினில்விண் மகிமையே யடைய
மண்ணிய லகற்றி மகிமையே யளித்தே
விண்ணினுக் குரிய மேன்மையோ டெழுப்பி

27. விண்மகி மையேகொள் விண்ணிய லணிந்தே
விண்ணவர் தொழுங்கோன் விண்ணுல கெழுந்தே
விண்ணவர் வணங்கும் விண்ணா சனத்தில்
விண்பிதா வொடுமே வீற்றமர்ந் தனரே

28. மண்ணிலத் தவரே மரணமுள் ளானோர்
மண்ணில மதிலே மரித்துவீழ்ந் தாலும்
மண்ணியல் சடலம் மறைந்தொழிந் தாலும்
விண்பதி வரும்நாள் எழும்புவர் மீண்டே.

29 மரணவென் றவராம் மரித்துயிர்த் தவரால்
மரணத் தாலே மாண்டுபோ னவரின்
மறைந்ததாஞ் சடலம் மரணகட் டறுத்தேதாம்
மரணமே யிலதாம் மகிமை யோடெழுந்தே

30. மகிமையுற் றவராம் மனுமக னொடுமே
மகிமையாந் தலத்தில் மகிழ்ந்துயு மெனவே
மகிதலத் துளராம் மனுடரெங் களுக்கே
மகிழ்ச்சிநம் பகமே மகத்துவ ரளித்தார்.

31. பாவியே யுனக்காய் பரனுல குதித்தார்
பாவியே யுனக்காய் பரனுயிர் துறந்தார்
பாவியே யுனக்காய் பரனுயித் தெழுந்தார்
பாவியே யுனக்காய் பரன்பர மெழுந்தார்.

32. பாவியே பணிவாயே பரன்திருப் பதமே
பாவியே யறிக்கைசெய் யுனின்பவ முணர்ந்தே
பாவியே யருள்வார் பரன்பவ மனிப்பே
பாவியே யடைவாய் பரத்தினில் மகிமை.



# 15

# இருமை நெறிக்குறள்

**ஆசிரியர் : ஜி.எஸ். வேதநாயகர் (1868 - 1932)**

**அறிமுகம் : மோசசு மைக்கேல் பாரடே**

என்றுமுள தென்றமிழுக்குக் கிறிஸ்தவம் வழங்கிய இலக்கியக் கொடைகள் எண்ணற்றன. அவ்வாறே தமிழ்க் கிறிஸ்தவ இலக்கியத்துக்கு நன்கொடை நல்கிய புலவர் பெருமக்களும் எண்ணற்றோர். அவருள்ளும் வேதநாயகர் எனும் பெயரால் வாழ்ந்த முத்தமிழ்ப் புலவர் மூவர் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க முன்னோடிப் புலவர்கள் ஆவர். இம்மூவருள்ளும் மாயூரம் வேதநாயகம் பிள்ளையையும், நற்செய்திக் கவியரசர் தஞ்சை வேதநாயக சாஸ்திரியாரையும் பலரும் அறிவர். மூன்றாமவராகிய மறைத்திருவாளர் ஜார்ஜ் சேர்வை வேதநாயகம் என்பாரைத் தமிழ்க் கிறிஸ்தவர்களும் அத்துணை அதிகமாக அறியாத நிலை உள்ளது. எனினும் தமிழ்க் கிறிஸ்தவர் மட்டும் அல்ல, தமிழ் கூறு நல்லுலகம் முழுதுமே நன்கு அறிந்து பாராட்டிப் போற்ற வேண்டிய இலக்கியச் செல்வங்களை வழங்கிய வள்ளலாக அப்பெருமகன் விளங்குகிறார்.

மதுரை மாவட்டத்தில் 1868 இல் அவதரித்த இவ்வேதநாயகர், 1900 முதல் 1932 வரை ஸ்காட்லாந்து திருச்சபையைச் சார்ந்து சென்னையிலும் அரக்கோணம் முதலிய பகுதிகளிலும் குருத்துவப் பணியில் ஈடுபட்டிருந்தார். நெஞ்சை உருக்கிடும் இறை இசைப் பாடல்கள் பலவற்றை இனிய தமிழில் உருவாக்கிய இவரது கீர்த்தனைகள் இன்றும் தமிழ்த் திருச்சபைகளில் (இயற்றியவர் பெயர் அறியாமலே) பாடப்பெற்று வருகின்றன. கிறிஸ்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ள கிறிஸ்தவக் கீர்த்தனைகளில் இவரது பாடல்கள் 1950 ஆம் ஆண்டு பதிப்பில் 12 பாடல்களும், 1989 பதிப்பில் 13 பாடல்களும் இடம் பெற்றிருக்கின்றன. நெஞ்சுருவுகட்கம், நித்தியானந்தக் காதல், அமலகுரு சதகம், உயர் வக்கணை நிராகரணத்து அந்தாதி ஆகிய வளமிக்க இலக்கியங்களைப் படைத்து வழங்கியுள்ள இக்கவிதைச் செல்வர் இயற்றிய மற்றுமோர் அரிய நூல் 'இருமை நெறிக்குறள்'.

இருமை நெறிக்குறள், அதன் பெயரே உணர்த்துமாப் போல இம்மைக்கும் மறுமைக்கும் உரிய வாழ்வறங்களை ஆழ்ந்த உண்மைகளை இனிய குறள் வெண்பாக்களில் வழங்கும் ஓர் பைந்தமிழ்ப் பனுவல். சுமார் 163 குறள் வெண்பாக்களால் ஆகிய இந்நூல், காப்புச் செய்யுள்களும் அவையடக்கமும் நீங்கலாக 10 அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளதை, இப்பொழுது கிடைக்கும் கையெழுத்துப் பிரதி ஒன்றின் வழி அறிகின்றோம். முதல் நான்கு அதிகாரங்கள் முறையே கடவுள் இயல், சுருதி இயல், பக்தி இயல், பாவவியல் எனவும் 5,6,7 அதிகாரங்கள் அறவியல் எனும் பொதுப் பெயரிலும் 8,9,10 அதிகாரங்கள் முறையே வீட்டியல், நரகியல், ஒழிபியல் எனவும் அழைக்கப்படுகின்றன. ஒவ்வோர் அதிகாரமும் மூன்று முதல் பத்து வரை பல

உட்தலைப்புகளைக் கொண்டதாக விளங்குகின்றன. ஒவ்வோர் உட்தலைப்பிலும் பத்துக்கு மேற்பட்ட குறட்பாக்கள் உள்ளன. நூலின் கண் அமைந்துள்ள இனிமையும் செறிவும் சான்ற குறட்பாக்கள் ஆசிரியரின் திருமறைப் புலமைக்கும் நற்செய்தி ஆர்வத்திற்கும் பல்வேறு சமய இலக்கியங்களிலும் தமிழ் இலக்கியங்களிலும் அவர் பெற்றிருந்த ஆழமான பயிற்சிக்கும், எக்கருத்தையும் நயம்பட உரைக்கும் அவரது கவிதை வன்மைக்கும் அழியாச் சான்றுகளாய் அமைந்துள்ளன.

## திருமறைப் புலமையும் ஈடுபாடும்

ஓசன்னா பாடும் உசாவற்ற பாலகரை இகழ்ந்த பெரியோர்க்கு வாசகம் சொன்ன இறைவன் தன் எளிய பாட்டையும் ஏற்றுக் கொள்ளுமாறு காப்புச் செய்யுளில் வேண்டித் தொடங்குகிறார். 'பரமதந்தை தம் சித்தத்தைத் தம் மக்களுக்கு அளித்த சாசனம்' என்று வேதத்தைப் போற்றுகின்றார். 'தூதர் வியக்கவும் ஞானி திகைக்கவும் பேதையர் கண்ட மறை' என்று அதன் விந்தைத் தன்மையை விளக்குகிறார். இப்படித் திருமறையைப் போற்றிப் புகழும் கவிஞர் திருமறை உண்மைகளை எடுத்துக் கொண்டு, அதனைக் கவிதை நயமும் கற்பனை வளமும் சிறக்கப் பாடுகின்றார். சில சான்றுப் பாடல்கள்:

*''தலைக்கல்லும் துட்டர் தவறு கல்லும் கொல்லும்*
*மலைக்கல்லு மானார் கிறிஸ்து.''*

*''சர்ப்ப விவேகம் புறவின் கபடின்மை*
*நற்பக்தர் கண்ணே யுள.''*

வேதத்தில் வெறுமையாகச் சொல்லப்பட்டுள்ள சில உண்மைகளுக்குக் கற்பனை நயத்தால் அவர் காரணம் சுட்டுவது இனிமை பயக்கிறது. சான்றாக, 'ஆண்டவருடைய கற்பனைகள் பாரமானவைகள் அல்ல' என்ற வேதவாக்கியத்தை *(1 யோவான் 5:3)*,

*''அத்தன் அருட்சட்டம் பழுவன் றவர் வாக்குத்*
*தத்தம் அடங்கிய தால்''*

என்று காரணங்காட்டி விளக்குகிறார். திருமறைச் செய்திகளை நயம்பட விளக்கியுரைக்கும் அவர் ஆற்றலுக்கு மேலும் இரு சான்றுகள்:

*''வாயில் ஒடுக்கமெனும் வானுலகம் மாபெரிதாம்*
*நோய் எண்ணா துட்புகுவர் நோற்று.''*

*''பிறப்பின் இருஜீவ னாக விலவென்னிற்*
*பிறப்பிற் பிறவாமை நன்று.''*

## திருக்குறட் பயிற்சி

'வள்ளுவர் சொன்ன முப்பால் வளங்கண்டவர் முன்' சிறியனாகிய தான் கவி சொல்லத் துணிந்ததாகவும், வள்ளுவர் சொன்னதையே சொல்லும் கிளிப்பிள்ளை தானென்றும் அடக்கத்துடன் காப்புச் செய்யுளில் பேசும் இவரது குறட்பாக்கள் சில வள்ளுவரின் குறட்பாக்கள் சிலவற்றை அப்படியே பிரதிபலிக்கின்றன. இரு சான்றுகள்:

1. '''நரைமுடியா னாய பயனென் கொல் கடவுள்
தருமுடியொன் றற்ற விடத்து.''

2. ''காதலிருவர் கருத்தொத்துக் கோடலே
கோதற வாழும் மணம்.''

திருக்குறள் நடையைத் தழுவி தாம் புதிதாகச் சொல்லுமிடங்களும் உள. சான்றாக,

''சதுர்ப் பிரசங்கம் இனி தென்பர் தம்மக்கள்
குதலைச் சொற்கேளாதவர்''

எனும் குறட்பாவைக் குறிப்பிடலாம்.

### உவமை வளம்

அழகிய உவமைகளும் உருவகங்களும் நூலில் ஆங்காங்கே விரவிக் கிடக்கின்றன. அதற்கு இரு சான்றுகள் பின்வருமாறு:

''செத்த விழி வீழ்ந்த மணலுருத்தா தேனத்துட்
செத்த மனம் நோயுணர் வின்று.''

''ஞெண்டு கொழுப்பின் பிலத்துளிராச் செய்பாவம்
என்று மிரா தற்ற முற்று.''

மேலும் 'உப்பிலா புற்கை', 'மறலி', 'நிரையம்', 'தாளாண்மை', 'உகிரொக்க', 'நல்லம் யாம்' முதலிய அரிய இலக்கிய இறையியல் சொல்லாட்சிகளைக் காண முடிகிறது.

### சமுதாய உணர்வு

இந்நூல் ஒரு கிறிஸ்தவ இலக்கியமேயெனினும், வெறும் பக்தி வாழ்வுக்குரிய செய்திகளை மட்டுமன்றி, நூற்பெயருக்கேற்ப சமுதாய வாழ்வுக்குரிய பொது அறங்களையும் வலியுறுத்திப் பேசுகின்றது. சான்றாக, திருமண வாழ்வின் நலந்தீமைகள் மற்றும் முயற்சி, ஈகை, புகழ் முதலிய செய்திகளையும் கவிஞர் விரிவாகப் பாடுகின்றார். இளமைத் திருமணம், ஜாதிப்பற்று, கிறிஸ்தவருக்குள்ளும் நிலவும் பதவிப் போட்டி, பொருளாசை ஆகியவற்றைப் பல பாடல்களில் கடுமையாகச் சாடுகிறார்.

இப்படி, பல்வேறு சிறப்புகளுடன் இலங்கும் இக்கவிதை நூலில் ஆழ்ந்த கருத்துடனும் அழகிய நயத்துடனும் அமையும் குறட்பாக்கள் பலவற்றைச் சொல்லிக் கொண்டே போகலாம். எனினும், கட்டுரையளவு கருதி கவிதை நயத்துக்கு இருசான்றுகள்:

''பாவமற்றுப் பாடுபட லுண்டு பாடற்றுப்
பாவம் புரிதல் அரிது.''

''வாசக மற்றஜெபம் வீம்பாம் செபமற்ற
வாசகம் வம்பாகு மற்று.''

கருத்தாழத்துக்குச் சில சான்றுப் பாக்கள்:

''பரிதான மேற்கும் கரங்குவித் தேற்றல்
பரிகாச மன்றி மற்றில்.''

*"நாமமைப்ப தல்லசிலுவை பரனமைத்து*
*நாம் வசிக்க லாக்கல் அது."*

*"ஆறு தினமுலகை அர்ச்சித் தொருதினமே*
*ஆரணனைப் போற்றல் கடப் "*

*இத்தகைய அரிய-அழகிய இலக்கியப் பேழையுள் நுழைந்து இலக்கிய இன்பமும் இருமைப் பயனும் பெற்று மகிழ்வோமாக!*

## சுருதியியல்

1 ஆதிநூ லொன்றிறைவ னொன்று வீடொன்று நரர்
சாதிப் பிறப்பிறப்பு மொன்று.

2. தாதை தஞ்-சித்த மகார்க்க ளித்த-சாசனமாம்
வேதம தாகிய நூல்

3 பிதாவுரைக்க-வா வி-விளக்கப் பரம (கருமரமதி)
சுதன் முத திரித்தது முன்-னூல்

4 ஆதி பகவ-னரு ளறிவு - கொட் டொண்ட
ரோதி-வரைந்தது மெய்-யோத்து.

5 சொப்பனத் தாற்-றேவ-தரிசனத்தாற் - சுத்தாவி
விற்பனத்தா - னாய நீக-மம்

6. ஆதி-சுருத - மகடகலத் - தே வாவிச்
சோதியா-னாய சுருதி.

7 புதிது - பழமையுட் - டொக்கிப் - பழமை
புதிதில் வெளிப்-பட்டது முன்-னூல்

8. முத்தி நெறி சொல்லிரு விச்சமறை யிருபா
லொற்றைச் சிறையுயர்த நீது

9 புத்திக்-க கோசர மாஞ் - சித்துடைந்தான் - மாந்தனருட்
புத்தக-ம தன்றிறை வன் - வாக்கு

10 மாந்தர்-க்-கடிந்திகழு - நூலாமால் - வேதமுயர்
வேந்த னுரை - யென்னத் - தகும்

11 உலக மனைத்து மொருங் கெதிர்த்த - லான் மண்
ணுலகநூ லன்றென்க வோத்து

12. மதியுமனக் கரியு - மொப்பலான் - வேத
வதிசிறப்-பென்ப மதித்து.

13. வேதத் தடங்கும் வியார்த்தி வியார்த்திக்கு
வேத மடங் - கானம விதி

14. வான் காட்டுஞ் செல்லதா் காட்டுமவையமைத்த
கோன் காட்டுந் தூய மறை.

15. ஆற்றினலை கண்மணியோசை காட்டுமறைக்
கூற்றுரைக்குமே கனின்முக்கூறு.

16 வானோ னளித்த - மறையின்ற - வற் காணு
மேனை வழி - பூரணமின்று.

17 நீதிய நீதிநிலை - நிண்ணயித்து - மாந்தர்க்கு
ஆதி-தரு மாரணமஃது

18 கடவுட்டகை மையுந் தொண்டர் கடமையுஞ்
சட நீத்துரைப்பது மெய் நூல்.

19. தூதர் - வியக்கவும் - ஞானி திகைக்கவும்
பேதையர் கண்ட மறை.

20 பாவர் பயிலாழம் பண்டறிஞர் நீத்தாழம்
வேலை வென் மாணவுரை

21. கற்றவர் மற்றவர் நற்றவர் கெட்டவர்க்
குற்ற சுருதி யொளி

22 எத்தகைய யாடை வருணமுளதேயத்தர்
ரொத்தறியுஞ் சுத்த சுருதி

23 மீட்சி நிறையூற்றாறு மெய்ச் சுருதியான் மாக்க
டிர்க்குந்த - காவகிலமும்

24. பாத மிடராத் தீபம் - பாட்டைப் பெருந்தாரர் ராம்
வேத மலாற்றாவயிருளாம்

25 அன்றன்றுணவிங்குடற் குறுதிவேதவுரை
அன்றன்றே யான் மாவுக்கற்று

26. வேர்க்குத்துணை நீர்போன் மெய்யடி யார்வியமு
தார்க்கத்துணை - சுருதி யாங்கு.

27. மறை வாக்ககங்காப் பினந்த மறைவாக்
ககங் காத்துயர் - வளிக்குமாறு

28 நீரானுடற் சுசியாமான் மா-வொரு-மறையி
னார் வாற்சுசியாமகத்து

29. பொய் கலந்த வாய்மை பிரிக்குமி ரசாயன நூன்
மெய் மறை யொன்றன்றி வேறில்.

30. சீவனுடலோடு - சேர்நற் கதி காட்டுன்
தூய நூலொன்றப் பதில்.

31 சத்தியமே ஞானத்துறையிட மற்றெல்லாம்
பித்தும் பிதற்றுலுமாம்

32. பத்து-நெறி யொழுகார் - விண்ணாளார் தேவனடி
பற்றிய வ்வாறொழுகற் பாற்று

33. அங்காதி பாத -மரும் பிணியர் மக்களெனுந்
துங்க மறை தோலா தென்றும்.

34 வினை யாவும் - பாவ முளதா மாற்றிக் கற்
தணை - தந்தார் - தந்தையெனு மொத்து

35. சென்னீருடை தோய்த்தார் சேணாண்டார் தொண்டு தொட்டு
முன்னூற் பறைந்த படி.

## பக்தியியல்

1. காட்சியன்று - மேலாம்-விசுவாசங் காணடைவு
மாட்சியாம் - பக்தி நெறி.

2. அறிவுக்-க கொசரமா - மொன்றை - மறைவாக்
கறிந்தொப்ப லாம் விசுவாசம்.

3 ஆகப்-புலனைத் திகத்தறிவிற் - கப்புறத்துக்
கேகபுல-னம்பிக்கை - யொன்று

4 அடியளவி-னின்றிங்-க கல் வாணங் - காணும்
படியடியார் - நம்பிக்கை - பண்பு

5. நம்பிக்கை (யென்னும்) யாய பலகணி வா-யான்மாவா
னின் பங்கண் - டாரு - மகிழ்வு.

6. விசுவாசத்-தானன்றி - நீதிமானாகு
முசித வழி-யன்றெனு மெய்-யொத்து.

7 விசுவாச-மாதிய-றன் முயற்சி-யாவு
மிசையால ஃ-தற்ற-விடத்து.

8 ஆத்துமத்தா-தார-மனு மான-மன்றயனிற்
பூர்த்தி விசு-வாச மஃது

9 கடுகளவே யேனு-மலை யதனைப்-போக்கு
மிடர் தீர்-விசுவாசத் - தேற்பு.

10. கழுகினது - நோக்குங் - கவையரசின் - னெஞ்சு
முழு விசுவாசி-க்கு - முதல்

11. பயன் காணி-னேனுங் - கடிதுழைக்குமென்று'
மயங்கா விசுவாச - மாண்பு

12. காணாக்-கடவுட் டொழு - மாணுயிர் - காணாரிதாஞ்
சேணுலகு - காணுந் - தெளிந்து.

13. அலைகட னங் கூர-மன்ன விசு-வாச
முலகிடரி-லாகு-முயிர்க்கு

## ஜெப சிந்தையுடைமை

1 கன்னியாக் - கருக்காய் நேர் - கண்கசியா - வேண்ட
வினிமை தரா தென்-றுமே

2. பாவத்-துயர்க்கண் - பரிந்தழுங் - கண்ணருவி
தேவகத்தே - பாயுந் - திறந்து.

3. அரிகடக்கும் - வல்ல - கடவுளடி - கண்ணீ
ரருவி கடந்-தே கா-தயர்ந்து.

4. பாவி விழி-நீர்தோய்ந்த-பாதம் - விரைந்து வரும்
ஆவி ஜெபத்தொண்ட - ரகத்து.

5 தாமதிப்ப-னீ தி தரக்கடவு-டாமதியா
னொந்தழும் - பாவியேற்றற்கு.

6. நற்கருமத் - தோல்வி - நரர்க்குப் பறையற்க
வச்சயனுக் - கோத-னலம்.

7 நிறைவே - ஜெபித்திங் - கறவே-நினைத்து
விரைவே யியற்ற - வினை.

8 சன்மன-சன்னச் - செபித்துஞ் - சாந்தான் - முயற்சியறி
னென்ன-ய மாகு - மிகத்து

9. வேவியிட-வல்லா-னலவகை வா-னோக் காது
மேலொரு - கூரை யிடா-னற்று.

10 ஒரு நீதி-மான் வேண்ட-னேமி நிலை-மாற்றின்
றிரணீதி - மான்கள் - ஜெபத்தென்

11 அசன ஜெப-மாசி யொன்-றல்லா த சல
னதி தியு-மாவது போர் - பேறு

12 ஊமை - மனத்தார் - கடவுள் - செவிடேன்பர்
தூய்மைச் - செபத்தார்க்க ஃதில்.

13 கல்வித்-தியான-மறிவு தருந்-தெய்வத்
தியான முளத்-தூய்மை - தரும்.

14 சுபலமே -யாவ தொன்-றில்லை ஜெபத்தி
னதர் சென்ற - தொண்டருக்-கிங்கு.

15 அத்தன் கீழ்-நோக்க-வடியார் கண்-மே னோக்கப்
பக்தி-செளிக்கும்-பசைந்து

16 குளமின்றி - நீர் நில்லா - வானாகி யெண்டு
முளமின்றி நில்லாது றைந்து.



# 16

## அமலகுரு சதகம்

### ஆசிரியர்: ஜி.எஸ். வேதநாயகர் (1868-1932)

### அறிமுகம்: யோ. ஞான சந்திர ஜாண்சன்

சிற்றிலக்கிய வளர்ச்சியில் கிறிஸ்தவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. அந்தாதி, அம்மானை, உலா, கலம்பகம், குறவஞ்சி, பிள்ளைத்தமிழ், பள்ளு, சிந்து, தூது, சதகம், கும்மி எனக் கிறிஸ்தவச் சிற்றிலக்கியங்களின் வகைகள் விரிந்து பரந்து கொண்டே செல்லுகின்றன. கிறிஸ்தவச் சிற்றிலக்கிய நூற்களைப் பதிப்பித்து வெளியிடாமையால் இவற்றின் சிறப்பினையும் பரப்பினையும் தமிழுலகம் அறிந்து கொள்ள இயலாமல் போனது எனலாம்.

தமிழிலக்கியப் பணியும் சமயப் பணியும் ஒருங்கே ஆற்றி வந்த கிறிஸ்தவத் தமிழறிஞர்களின் வரிசையில் ஜி.எஸ். வேதநாயகரும் ஒருவர். மதுரையிலிருந்து சுமார் ஏழு கல் தொலைவிலுள்ள தேத்தாம்பட்டி எனும் கிராமத்தில் பிறந்த இவர், வாஷ்பன் துரையின் உதவியால் கற்றுப் போதகரானார். இயல்பாகவே பாடும் வரம் பெற்றிருந்த இவர், இயேசு கிறிஸ்துவைப் பல கீர்த்தனைகள் வழி மகிமைப்படுத்தியுள்ளார். பள்ளி ஆசிரியராகவும் இதழாசிரியராகவும் திருத்தொண்டராகவும் மதுரையிலும் மதுரையைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் பல்லாண்டு பணிபுரிந்தார். சென்னைச் சூளைமேட்டிலுள்ள தூய அந்திரேயா ஆலயத்திலும் திருத்தொண்டாற்றினார். நெல்லை வேதநாயக சாஸ்திரியாரைப் போலவே கிறிஸ்துவின் மீது அன்பு கொண்ட ஜி.எஸ். வேதநாயகரை எளிய நடையைக் கையாண்ட மக்கள் கவிஞர் எனவும் பக்திக் கவிஞர் எனவும் கூறலாம்.

இவர் எழுதிய கீர்த்தனைகள் பலவற்றுள் ''பாவம் போக்கும் ஜீவநதியைப் பாரீர்'', ''அரசனைக் காணாமலிருப்போமா'', ''பொன்னகர் பயணம் போகும் புண்ணியர்களே'' என்பன குறிப்பிடத்தக்கன. இவர் எழுதிய நூற்களில் மாதர்கும்மி, ஆடவர்கும்மி, நித்தியானந்தக் காதல், அமலகுரு சதகம், சற்குரு சதகம், கிறிஸ்து பெருமான் சரிதைமாலை, பரலோக இராச்சியப் பாமாலை, நூதன மாலிகை, உயர்வக்கணை நிராகரணத் தந்தாதி, நெஞ்சுருவு கட்கம், ஜீவிய நன்றி ஆகிய பதினொன்றும் நூல் வடிவில் வெளிவந்துள்ளன. இருமை நெறிக்குறள், தையலர் சிந்து, நகை எழுபது, நரமிருக நொண்டிச் சிந்து, நராவதாரக் கடவுள் நாமசுப்ரதீபம் ஆகியன கையெழுத்து வடிவிலான நூற்களாகும். அமலகுரு சதகம் 1982 ஆம் ஆண்டு மறுபதிப்பாகக் கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தாராலும், சற்குரு சதகம் 1912 ஆம் ஆண்டு நூலாசிரியராலும், 2000 ஆம் ஆண்டு கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தாலும் வெளியிடப்பட்டன.

சதம் எனும் வடசொல்லின் அடியாகப் பிறந்தது சதகம் எனும் சொல் என்பர். சதம் எனும் சொல்லுக்கு நூறு என்று பொருள். தமிழில் மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகத்தில் காணப்படும் திருச்சதகமே முதல் சதகமாகத் தோன்றுகிறது. கிறிஸ்தவச் சதகங்களாக 12 நூற்கள் இதுவரையிலும் கிடைத்துள்ளன.

அமலம்-குற்றமின்மை; குரு-பரமகுருவாம் இயேசுகிறிஸ்து; குற்றமில்லாத பரமகுருவாகிய இயேசு கிறிஸ்துவை 100 பாடல்களில் பாடுவதால் இந்நூலுக்கு அமலகுரு சதகம் எனப் பெயர் சூட்டப்பட்டது. இந்நூலின் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ''அமலகுருவே'' என்று ஆசிரியர் இறைவனை விளித்துப் பாடுகின்றார். சுத்த ஜீவியம், குழந்தைக் கிறிஸ்தவர்கள், ஆச்சரிய அன்பு, உபதேச மயக்கம், தெளிதல், சகோதர அன்பு, விசுவாச வாழ்க்கை ஆகிய உட்தலைப்புகளால் பாடல்கள் பகுக்கப்பட்டுள்ளன. இக் கவிஞர் எழுதியுள்ள நூற்களில் மிகச்சிறந்தது என்று சொல்லும் அளவிற்குக் கருத்துவளம் மிகுந்த நூல் அமலகுரு சதகம் என்பது குறிப்பிடத்தக்கது.

இறைவனுடன் உரையாடுவது போன்று இந்நூலை ஆசிரியர் படைத்துள்ளார். நான் எனும் அகந்தையை அகற்றுதல், பிறர் நலனுக்காக உழைத்தல் முதலிய பல நன்மைகளை இறைவனிடம் கேட்கின்றார். பரமதந்தையின் சித்தத்தை நித்தமும் உணவாகக் கொள்வோம் என்று கூறி வாழ்க்கைச் செயல்களின் தொடக்கம், இடை, முடிவுகளில் இயேசு கிறிஸ்துவின் மாண்பினை அறிவித்து நடப்போம் என முழங்குகின்றார். ஏனையோர் பாவத்தில் இருக்கிறார்கள் என்று அவர்களை மட்டும் சொல்லாமல் தன்னையும் உட்படுத்திக் கூறும் ஆசிரியரின் மன உணர்வு பல பாடல்களின் வழி புலனாகின்றது.

கிறிஸ்தவர்களை நையாண்டிக் கிறிஸ்தவர்கள் என்றும் குழந்தைக் கிறிஸ்தவர்கள் என்றும் இரு வகையாகக் கூறுகின்றார். கிறிஸ்தவர்கள் கொலை, களவு, பொறாமை, வஞ்சகம், காமம், மோசடி முதலிய பாவங்களைத் தாமும் செய்து கொண்டே நாங்கள் உண்மையான கிறிஸ்தவர்கள் என்கின்றனர். இத்தகையவர்களை நையாண்டிக் கிறிஸ்தவர்கள் என்கின்றார். குழந்தைக் கிறிஸ்தவன் சோதனை வந்தது என்றால் காந்தத்தில் இரும்புஊசி ஒட்டிக்கொள்வது போல உடனே தீமையில் ஒட்டிக்கொள்வான். சுருக்குக் கயிற்றினுள் மாட்டிக் கொண்ட பறவையைப் போன்று தீமையுள் அகப்பட்டுக் கொண்டு துடிதுடித்து, அழுது அழுது துன்பம் அடைவான். இதை,

*''சோதனை நெருங்கையில் காந்தத்தில் ஊசிபோல்*
*துரிதமுடன் போய் மடிகுவான்*
*துடித்தழுது மனஸ்தாப முற்றும்விடு தலையின்றிச்*
*சுருக்கு உண்ட பறவை போலாவான்''*

எனப் பாடுகின்றார். கிறிஸ்தவர்களை இரண்டு வகையாகப் பகுத்த ஜி.எஸ். வேதநாயகர் இவர்களுக்குப் பல்வேறு அறிவுரைகளைத் தமது நூலில் கூறுகின்றார்.

கிறிஸ்தவர்கள் பிறர் நலனுக்காக உழைக்க வேண்டும்; நான் எனும் அகந்தையை அகற்ற வேண்டும்; இயேசு கிறிஸ்துவின் மாண்பினைப் பிறருக்கு அறிவித்து நடக்க வேண்டும் என்பது அவர்தம் அவா. கைக்கூலி வாங்குதல் ஒழியவில்லை; கலகங்கள் தொலையவில்லை; அடிதடிகள் அகலவில்லை; எனினும் விலை மதிக்க முடியாத மீட்பு நெறியைக் கண்டு கொண்டோம் என்று

மேன்மை பாராட்டுவோர் நற்செயல்கள் செய்யாவிட்டால் அவர்கள் நச்சுவேர்கள் ஆவர் எனக் கிறிஸ்தவர்களை எச்சரிக்கின்றார். தங்களை ஞானியர் என்று சொல்பவர்கள் பிறரை அஞ்ஞானியர்கள் என்று கூறுவது ஞானம் ஆகுமா?; பிறரை மூடர்கள் என்று இகழ்பவர்கள் அஞ்ஞானம் உடையவர்களாகின்றார்கள்; முக்தி வழியையும் அறியாத கிறிஸ்தவர்களின் நெறிமுறைகளையும் எண்ணப் போக்குகளையும் மாற்றி அருள்வாய் அமலகுருவே என இறைவனிடம் வேண்டுகிறார்.

கிறிஸ்தவர்கள் இயேசுகிறிஸ்துவைப் பற்றிச் சாட்சி கூறுகின்றார்கள். இயேசு கிறிஸ்துவின் பக்தர்கள் நாங்கள் என்று மேன்மை பாராட்டுகின்றனர். ஆனால் என்றும் பாவத்தில் இருக்கின்றார்கள். பிறருடைய துன்பங்களைப் போக்காமல் வாயில் மட்டும் வழிபடுபவர் மெய்ப்பக்தர்கள் ஆகமாட்டார்கள். தன்னைப் பாதுகாப்பதை நோக்கமாகக் கொண்டவர்களும் கடவுளை நம்புபவர்களும் நற்செயல்களைச் செய்யாவிட்டால் பேயைப் போன்றவர்களே ஆவர். நற்செயல் இல்லாத விசுவாசம் தீய பேயின் விசுவாசம் ஆகும் என்கின்றார். மேலும் உன்னதருடைய சித்தத்தைச் செய்யாதவர்கள் மணலின் மேல் கட்டிய வீட்டினர் ஆவர் எனும் கருத்தை,

''ஒக்ககிரி யைஇல்லா விசுவாசம் தீயலகை
உடையவிசு வாசம் என்றும்
உன்னதர் சித்தம்செய் யாதவன் மணல் இல்லாய்
ஒழிந்து போவான் என்றுமே''

எனும் பாடலால் வலியுறுத்துகின்றார். அமலகுரு சதகம் திருச்சபையை மணமகளாகவும் இயேசு கிறிஸ்துவை மணமகனாகவும் அமைத்துப் பாடிய அகத்துறைப் பாடல்களையும் தன்னுள்ளடக்கியது. ''பாவியாகிய நான் மன்னவனாகிய உமது முகத்தைப் பார்க்காமல் பிறர் முகங்களைப் பார்த்துப் பரத்தையாய்த் திரிந்தேன்; உமது பணியினைச் செய்யாமல் இச்சகங்கள் பேசி அலைந்தேன்; உமது மகிமையைக் கலைத்ததால் எரிச்சல் அடைந்து, என்னைக் கண்டித்துக் கன்னத்தில் அறைந்து நல்ல புத்திமதி தந்து எனதுபேய் இன்ப உணர்வு கசக்குமாறு மருந்துகள் தந்தீர்; என்னை மணந்து கொண்டு அன்பை வெளிப்படுத்தினீர். இவ்வாறு காதல் கொண்டு எனை ஆட்கொண்டீர் அமலகுருவே'' எனப் பாடுகின்றார்.

விவிலியக் கருத்துகளைத் தமது நூலில் பல இடங்களில் எவ்வித மாற்றமும் சுருக்கமும் இல்லாமல் முழுமையாகவும் நேரடியாகவும் அமைக்கின்றார். ''பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டு என்பதை நீங்கள் அறிய வேண்டும் என்று சொல்லித் திமிர்வாதக்காரனை நோக்கி, நீ எழுந்து உன் படுக்கையை எடுத்துக் கொண்டு உன் வீட்டுக்குப் போ என்று உனக்குச் சொல்லுகிறேன்'' (மாற்கு 2:10,11) எனும் விவிலிய வாக்குகளை அடிப்படையாகக் கொண்டு,

''பாவங்களை மன்னிக்க அதிகாரமுண்டு என்று
படியோர்க்கு ரூபிக்கவே
படுக்கை தூக்கிச் செலச் சரீரபெலன் ஈந்தனீர்''

எனும் பாடலடிகளில் அமைக்கின்றார்.

சற்குருசதகம் இயேசு கிறிஸ்துவின் பிறப்பு முதல் பரலோகத்திற்குச் சென்றது வரையிலான செய்திகளை விருத்தப்பா வடிவில் தெளிவாகவும் எளிமையாகவும் தருகின்றது. இயேசு கிறிஸ்துவின் அற்புதங்களையும் உபதேசங்களையும் மலைப்பிரசங்கம் மற்றும் உவமைகளையும் ஆசிரியர் விரிவாகக் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது.

*''ஆதிதிரு வார்த்தையா யந்தமில் ஜீவனாய்''*

என நூலைத் தொடங்குகின்றார். கானாவூர் திருமணத்தை,

*''கனியடர் கானாவூர் கடிமணப் பந்தலில்*
*கணக்காறு குடநீரினை*
*கனமதுர ரசமாக்கி மணமக்கள் துயர்நீக்கி*
*களிப்புறச் செய்தகிருபை*
*நனிபாவ மனத்தினை மதுரகுணம் நிறைந்திட*
*நல்குமுன் செயலிதன்றோ*
*நறுமில் லறச்சுகம் சுவைபெருக வுன்சமுகம்*
*நன்றென் றுணர்த்தலானீர்''*

எனப் பாடுகின்றார்.

ஜி.எஸ். வேதநாயகரின் இரண்டு சதக நூற்களும் வெவ்வேறு தன்மையன. கிறிஸ்தவச் சமூகம் உண்மையான, நேர்மையான சமூகமாக இருக்க வேண்டும் எனும் நோக்கில் அமலகுரு சதகத்தைப் படைத்துள்ளார். கிறிஸ்தவர்களின் பல குறைகளைச் சுட்டி, இக் குறைகளின்றி மனிதர்களாக வாழ்ந்தால்தான் இயேசு கிறிஸ்துவின் பிள்ளைகள் என்கிறார். கிறிஸ்தவ இலக்கியம் என்றாலே இயேசு கிறிஸ்துவின் வரலாற்றைக் கூறுவதாகத்தான் அமையும் என்ற தவறான கருத்து மக்களிடம் நிலவுகின்றது. முதல் கிறிஸ்தவ நாவலான 'மீதிஇருள்' கிறிஸ்தவ மக்களிடம் நிறைந்து கிடக்கும் தீமைகளை, இருளை எடுத்துக்கூறி இவற்றிலிருந்து விடுபட்டு உண்மைக் கிறிஸ்தவர்களாக நடக்க வேண்டும் என்று அறிவுரை கூறுகின்றது. அதைப் போன்றுதான் அமலகுரு சதகம் நூலும் கிறிஸ்தவர்களுக்கு அறிவுரை கூறும் முறையில் அமைந்துள்ளது. கிறிஸ்தவச் சமுதாயத்தில் புரையோடிக் கிடக்கும் சிக்கல்களைப் புரட்சிகரமாக இந்நூலில் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

## 1
## இறைவனின் குணம் தொண்டரிடம் மலர வேண்டுதல்

இரவிமதி கிரகங்கள் எ(ள்) துணையும் மாறா(து) உன்
இஷ்டமாய் நிகழ்கின்றன;
இயற்கைச் சராசரம் யாவும் நீ வைத்த நிலை
யேஇருந்(து) உய்கின்றன;

திரைகடல் கரைஅற்றும் மாருதம் நிலைஅற்றும்
திருஉளத்து அமைகின்றன;
திட்டப்ர மாணமாய்ப் பருவங்கள் சுழன்(று) உன்றன்
சித்தமே பணிகின்றன;

பரமண்ட லங்களின் தூதாதி தூதருன்
பரிவுபோல் தொழுகின்றனர்;
பாவிநான் ஒருவனே உன்மனம் இசைந்திடப்
பாராது பூவாழ்வினில்

தருநிலைமை குறைகூறி அறிந்ததிரு உரைமீறித்
தருமநெறி கடந்தேறியே
தாழ்வ(து) ஏன்? உன்சாயல் என்அகத்து உருவாகத்
தயவுசெய் அமலகுருவே!

2

## நல்லவழி நடந்துஉய்ய நாளும் வழிகாட்டுகின்றாய்

ஒருபொழுதும் நிற்பதறி யாயிந்த உடல்உயிர்
உலகில் பிழைக்கு மாறு
உன்னதத் திலும்தரை யிலும்திரள் சலத்தையும்
உயிர்தரும் வாயு களையும்

தருதாப ரங்களோ கனிகளோ மூலமோ
தசைபோச னங்கள்தனையும்
தக்கவாறு சுவையொடு மிக்கநறும் மணத்தொடும்
தந்துஆத ரிக்க லுற்றாய்

இருமையிலும் அழியாத ஆத்துமா பாவத்தில்
இறந்தி டாதுஉன் சாயலில்
இலங்குபரி சுத்தநிலை கொண்டுஉய்ய நீர்ஒரு
ஏதுசெய்ய வில்லை எனல்போல்

கருமத்தில் நிலைநின்று அவிசு வாசியாய்க்
காலம்நான் கழிப்ப தேனோ?
கல்வாரியில் பவம் பரிகரித்து எனைமீட்ட
கருணைபொழி அமல குருவே!

6

## பின்பற்றத்தக்க தூய வழிகளைக் காட்டியவர் இயேசு

மாணாக்கர் கைக்கொள்ள முடியாத சட்டம் அருள்
வாத்தியார் நீர் அல்லவே
மதங்கள் பலஉண்டாக்கிச் சன்மார்க்கம் போதித்தும்
வாய்ப்பற்றார் போலும் அலவே

மாணவான் விட்டுமனு வடிவாகி மக்கட்கு
மாதிரி யாய்நடந்து
மலைப்பிர சங்கமே கிறிஸ்தவர் ஒழுக்கமாய்
வழுத்திஅவர்க் குச் சக்தியாய்

சேணுலகப் பலியதால் பவம்தீர்ந்து மறுசனன
சீவனுக்கு ஆவிதந்து
தினம்வெற்றி தரஅவர்கள் இருதயத்து உருவாகும்
தேவபல னானபரனே

வீணாம் மதங்களை ஞானத்தைத் தேவரை
விட்டும்மை வணங்கவந்தும்
வினைஅறாப் பேயர்உமை அவமானம் ஆக்குகிறார்
விசனமே அமலகுருவே.

## 7
## மன்னிப்புப் பெற்றதன் அடையாளம் நற்செயல்கள்

பாவங்கள் மன்னிக்க அதிகார முண்டுஎன்று
படியோர்க்கு ரூபிக்கவே
படுக்கைதூக் கிச்செலச் சரீரபலன் ஈந்தனீர்
பாவிஎன் உடல்உறாதோ?

பாவமன் னிப்புற்ற பலபேரைப் பார்த்துஇனிப்
பாவஞ்செய் யாதே என்றீர்
பலம் அவர்க்கு ஈயாமல் இக்கட்ட ளைதரப்
பயித்தியம் உமக்கு இல்லையே

பாவியாம் ஸ்திரீக்குச் சமாதானம் தந்தீர் அது
பாவத்திற்குச் சமாதானமோ?
பரிசுத்த நீதியின் கிரியைசமா தானமாய்ப்
பகருதே சத்தியவேதம்

மாஅலகைக் கிரியைகள் செய்துகொண் டேதங்கள்
மன்னிப்புப் பெற்றோம்எனும்
மயரிகள் உமைப்பாவ வர்த்தகன் என்றுமே
மதிக்கிறார் அமலகுருவே

8

## வாழ்வெலாம் தீதுசெய்து வாழ்பவரை இயேசுவின் இரத்தம் மாற்றவில்லையே

தேவாட்டுக் குட்டியின் திருஉதிர மானது
செயல்அற்ற விலங்கு உதிரமோ?
தீயஜன்ம கன்மப் பாவமுள்ள மனிதரின்
தீட்புஆன வீண் உதிரமோ?

பாவபுண் ணியங்களின் தன்மைஆய்ந்து உணராத
பாவிகள் பிதற்றிவைத்த
பலநதியின் தீர்த்தமோ? பக்தர்அனு பவம்உள்ள
பரிகார மருந்து அல்லவோ?

ஆவியால் மூழ்கிஉள் அருந்திப் பவந்தீர்ந்து
ஆச்சரிய சக்திபெற்று
அன்றுஅன்று பரிசுத்த ஜீவனில் வளர்ந்திடும்
அனுபவம் அறியாமலே

சீவநாள் முழுமையும் பாவத்தில் மாறாமல்
திரிபவர் கிறிஸ் தவர்களோ?
திடுக்கிடத் தக்கவினை திருச்சபை நடப்பது
தியக்கமே அமலகுருவே

20

## நல்லதைச் சொல்வது, தீயதைச் செய்வது

மலைப்பிர சங்கத்தைப் பாராமல் பொழிகிறார் —
மாகாணிக் கிரியை இல்லை;
வல்லமை மிகுந்தவர் எம்கடவுள் என்கிறார் —
மனமாற்றத் திறமை இல்லை;

நிலைபெற்ற உபதேசம் கண்டிட்டோம் என்கிறார் —
நிழல்போல மாறி விடுவார்;
நேற்றுள்ள உற்சாகம் இன்றைக்குப் பறந்துவிட
நெடுஞ்சவுல் போல நிற்பார்,

தலைதூக்கி அஞ்ஞானி கட்குப்பிர சங்கிப்பார்
தாங்களனு பவத்தில் கொள்ளார்;
தட்டிக்கேட் டால்எங்கள் கிரியையைப் பாராமல்
சத்யஉரை பாரும் என்பார்.

புலம்அற்ற குருடர்கதை போல்இவர்கள் உன்மகிமை
புகல்வதால் உபயோ கமென்ன?
பூமிக்கு ஒளிகிறிஸ் தவர்என்று போதித்த
போதகா! அமல குருவே!

28

## விண்ணுலகைத் தரவே தேவன், மாந்தன் ஆனான்

தேவன்மனு வானதும் திருநாமம் பெற்றதும்
திருப்போத னைசெய்ததும்
தீயோனுக்கு இடம்அற்றுச் சுத்தத்தில் நடந்ததும்
திவ்யகிரி யைசெய்ததும்

பாவிபோல் சிலுவையில் அடிபட்டு மரித்ததும்
பலிஉதிர மாய்ப் பெய்ததும்
பாதலத்து இறங்கியே உயிரோடு எழுந்ததும்
பரமேறி வலம் இருந்ததும்

தேவாவி பெற்றுநரர் மேலே சொரிந்ததும்
தேவவரங் கள்தந்ததும்
தீஅலகைக் கைநின்று மனிதரை மீட்கவும்
தீவினைக ளைப்—போக்கவும்

மேவுபரி சுத்தத்தில் நடத்தவும் உலகத்தின்
வெளிச்சமாய் இருந்துபரனை
மேன்மைப் படுத்தவும் சேனுலகர் ஆக்கவும்
விரும்பியே அமலகுருவே

29

## மாறாத தீய கிறிஸ்தவர்கள் கதி என்ன ஆகுமோ?

கல்லான மனம்தசை ஆகவும் புதிய ஆவி
கதிக்கவும் என் ஆவியைக்
கைஅளித் தவர்கள்என் கற்பனை நடக்கவும்
கருத்தினில் வரைந்து விடுவேன்

நல்லபெரும் பாதையில் சுத்தமாய் நடப்பவர்கள்
நாசங்கள் அணுகிடாது
யாவிலும் பரிசுத்தம் காணப்படும் நீதி
நாவில்பொய் கபடுஇராது

பொல்லானை மேற்கொள்ள அதிகாரம் தந்திட்டேன்
பொடியன்ஆ யிரம்ஆகுவான்
புதுமைஎன் சுமைலகு வாய்இருக்கும் என்றும்
புதுப்பலம் அடைவிர்என்றும்

வல்லவர் பொய்யுரை யாதுஅவர் அளித்திட்ட
வாக்குகள் பொய்த்த தெனவே
மாறா திருக்கின்ற கிறிஸ்தவர்கள் கதிஎன்ன
வழுத்துவீர் அமலகுருவே.

34

## ஒளியும் இருளும் மாறிமாறிப் பெறும் கிறிஸ்தவர்கள்

பாவமன் னிப்புஎன்னும் இரட்சிப்பை மாத்திரம்
பற்றினவ னேகுழந்தை;
பரிசுத்த ஆவியின் வல்லமை பெறாததால்
பலவீன னாய் இருப்பான்.

ஆவிக்கு உரியநல் அறிவிலும் நடக்கையிலும்
அற்பஅநு பவம்உள்ளது
ஆத்துமஉற் சாகமும் சோர்பும்நம் பிக்கையும்
அவநம்பிக் கையும் மாறியே

மேவிஇன் னொருநிலை மறுநாளில் வேறுநிலை
வெளிச்சம்இருள் சுழன்றவாறாம்
வெற்றிதரு பரிசுத்த சீவஉப தேசங்கள்
விளங்காது மந்தமீறும்

கோபங்கள் பிரிவினை பெருமைதன் னயம்இச்சை
குடிகொண்டு அவனை ஆளும்
கூவிஅழுது அறிக்கையிட் டும்தவறித் தவறியே
குழம்புவான் அமலகுருவே

40

## வேடத்தில் பொய் அருளுரை

என்பாவம், பிறர்பாவம், பெரியோர்க ளின்பாவம்,
இருளார் குருக்கள்பாவம்,
இத்தனையும் கண்டுமாய் மாலப்பிர சங்கத்தால்
இடறு அடைந் தேமயங்கி,

அன்பின்பிர மாணத்தில் ஆவிப் பிறப்பினில்
ஐயமுற்று, அகம்கடினமாய்
அவப்பொழுது போக்கியே, தனிச்செயல் இழந்து,இருள்
அடைந்துகொண்டு இருந்தபாவி

பின்புஒருவர் இடமும்என் மனநிலைமை சொல்லில்என்
பிழைப்புக்கு அனர்த்தம் என்றும்
பேசாது தேவபணி வேடத்தில் வெறுமுளைப்
பிரசங்கம் செய்தபேயன்

அன்பாய்என் பாவத்தை நீர்மறைத் தீர்நான்என்
அயலாரின் பவம் தூற்றியே
அவரைச்சீர் செய்வதாய் நடித்துஎன்றன் பெருமையில்
ஆழ்ந்திட்டேன் அமலகுருவே.

41

## ‘மெய்ப் பக்தி’ என்பது என்ன?

நாவினால் படுங்காயப் பட்டுமனம் முறிந்திட்ட
நல்லவர்கள் பலரும்உண்டுஎன்
ரகசியப் பாவத்தால் இடறுண்ட தோழர்இந்
நாளிலும் சிலரிங்குளர்

கோவத்தால் அன்பற்ற பிரசங்கத் தாற்கடினம்
கொண்டுநிலைத் தவரும் உண்டுஎன்
குத்திரத் தனத்தினால் நல்லபேர் இழந்தமுத
குழந்தைக் கிறிஸ்தவர் உளர்

பாவிநான் சாவதே நன்மைஎன்று எண்ணின
பக்தர்கள் சிலரும் உண்டுஎன்
பாசாங்கை அறியாமல் என்னைப் புகழ்ந்திட்ட
பாலர்போன் றவரும்உண்டு

மேவிஎன் பாதத்தை உணர்த்தவந் தோர்தோற்று
வியப்புடன் சென்றதுண்டு
வேறுபட்டு என்பட்சம் விழுந்துகெட் டோர்உண்டு
வேதனே அமலகுருவே.

69

## ஆற்றல் படைத்தவராயிருந்தும் பொறுத்து மன்னித்தார் இயேசு

என்நயம் பேணவரும் கோபங்கள் வரின்உனது
எழில்சாந்தம் அதனை அணிவேன்;
எரிச்சல்சகி யாமைக்குக் காரணம் உறில்உனக்(கு)
இயல்பாம் அடக்கம் அறிவேன்;

பன்னிய பாவங்கள் புரியவந் தால்உன்றன்
பரிசுத்தத் தில்மறைகுவேன்;
பதறுசொல் சாபம்இட நேரிடில் உன்நாவின்
பண்பில்ஒரு பாகம்அணிவேன்;

ஒன்னாரைப் பகைத்திடப் பழிவாங்கச் சமயம்உறில்
உன்அன்பி லேமூழ்குவேன்
உடன்பிறந்து உதவிபெற்று அபசாரம் செய்தவரை
ஒறுக்காதுஉன் பொறுமைஅறிவேன்;

பன்னிரு லேகியோன் படைகொண்டு நொடியில்இப்
பாரதம் செய்யவலிமை
படைத்திருந் தும்தீமை பொறுக்கவல் லமைபூண்ட
பரமனே அமலகுருவே

70

## நீ காட்டிய அன்பு பொறுமையை நான் அணிய அருள்தா

என்நயம் என்சுகம் என்பெலன் என்பொருள்
என்றுஒருபோதும் உரையேன்;
எத்திறத் தோருக்கும் தன்னையே செலவிட்ட
இறையேஉன் தன்மையணிவேன்;

தன்நியாயம் என்மானம் அழிவதால் பிறர்வாழச்
சகிக்கஉன் பெலனை அணிவேன்;
சகலர்க்கும் நான்ஞாயம் கனம்தருவ தல்லால்என்
தனக்(கு) அவர் செய்யநோக்கேன்;

அந்நியாயம் அவமானம் அதிநட்டம் துன்பங்கள்
யாவும்என் பேறுஎன்றே
ஐயாநீர் சொன்னதால் மெய்மதுர பானம்என்(று)
அருந்திஆ னந்தம்அடைவேன்;

பொன்நகர மகிமைவிட்(டு) இந்நிலத்(து) ஏழையாய்ப்
புவிசெய்த இமிசைஎல்லாம்
பொறுத்துக்கல் வாரிமலை வழிபோன தெய்வமே
புகலரிய அமலகுருவே.

76

## தூய திரித்துவம் என் உள்ளத்து உருவாகுக

பரிசுத்த திரித்துவம் என்அகத்து உருவாகும்
பாக்கியம் ஒன்றுபெற்றால்
படியில் எவ்விடத்திலும் காலத்தில் நிலைமையில்
பத்திரம் ஆகநிற்பேன்;

அருவருப் பானசோ தோம் சனத்திடையிலும்
அசுத்தரே நிறைவளவிலும்
அகந்தைசண் டைக்காரர் வெறியர்கள் நடுவிலும்
அகோரத் துன்பங்கள்ஊடும்

நரகத்தும் உலாவினும் அக்கினியில் மூவர்போல்
நாற்றமும் அணுகாதெனில்
நற்கந்த மும்சீவ நதிகள்எனில் இருந்துஓடி
நாற்றிசையும் கந்தவளமாம்

நெருங்கிவரும் பாவிகளும் சாரூபம் அடைவார்கள்
நீசலகை கூசிஓடும்
நித்தனது மகிமையே தூபமே கம்போல்
நிகழ்ந்துஎழும் அமலகுருவே.

77

## குருட்டுக் கொள்கைகளால் தீங்கு பல செய்தேன்

நன்மைசெய் வதாய்எண்ணித் தீமைபல செய்துமே
ஞாயம்என் றேஎண்ணியே
நண்பர்க்கு அநியாயம் செய்தஎன் குருட்டாட்ட
ஞானம் பறந்துவிடுமே;

தன்வினைகள் நோக்காமல் பிறர்குறைகள் நோக்கும்என்
தனமையும் ஒழிந்துவிடுமே;
சகபாடி களில்உள்ள நன்மைகளை யேகாணும்
சத்தெனக்கு உண்டாகுமே;

தொன்மைஉல கோர்என்னால் நன்மையே அன்றிஒரு
தொந்தரவும் அடைந்திடார்கள்;
தூய்மைகண் டுஉன்னதர்க் கேமகிமை புரிவார்கள்
தூதர்சபை யும்மகிழுமே;

சன்மார்க்கம் அணுவற்ற பாவிகளை நேசித்துத்
தன்மகிமை துறந்தபரனே
சத்தியத்து ஆவிஎன் உள்ளம் நிரப்பிடத்
தயவுசெய் அமலகுருவே.

80

## என் தேர்ச்சியும் திறமையும் சிறியனவே

தற்போது எனக்குநீர் தந்தவிசு வாசத்தைச்
சன்மார்க்க நடைசீவனைத்
தரும்சித்தி ஆனஉன் ஊழியத் தைமனச்
சந்தோஷ பாக்கியத்தை

மெய்ப்போடு பார்த்துநான் கொஞ்சத்தில் மமதையாய்
மேன்மைபா ராட்டிநில்லேன்
மின்னிய தீவர்த்தி யணையுதே என்றுஅழுத
மெல்லியரை நினைத்துஅஞ்சுவேன்

அற்பம்என் தேர்ச்சிஎன்று ஆண்டவரை நோக்கிநான்
அங்கிங்கு நில்லாமலே
ஆனபின் ஆனதை மறந்துமுன் ஆனதை
ஆசித்து முன்ஓடுவேன்

நற்பரம சுதனுடைய வளர்ச்சியின் அளவுஅதனை
நாடுவதே என்சோலிஉன்
நாமமகி மைஎன்தன் ஜீவ்யமே லாசையாய்
நாட்டுவீர் அமலகுருவே

81

## உன் காலில் அறையப்பட்ட ஆணி, என்தலையில் ஊடுருவட்டும்

எனைக்கொண்டு நீர்செய்யும் நன்மைகள் யாவிலும்
ஏழைபேர் மறைந்துவிடவும்
இயேசுவை உயர்த்திஎன் தலைசற்றும் நீட்டாமல்
எளிதாய் ஒளிந்துவிடவும்

கனல்மூண்ட இரும்புபோல் உன்சாயல் இலங்கஇக்
கசடன் காணாதுஒழியவும்
காலாணி என்சிரசில் ஊடுருவிக் குருசில்உன்
காலடியில் நான்பதியவும்

தினம்உமைச் சுமந்திடும் கத்தைநான் என்றுணரும்
சீரிலே நின்றுவிடவும்
செய்கையும் சொற்களும் கனவுநினைவு எல்லாம்உன்
திருஉளத்து இருந்துவரவும்

உனிலஉறும் கொடியாக உன்சாரம் பெற்றுஎன்றும்
உன்னதக் கனிபெருகவும்
உடைத்துஎன்தன் இதயத்தை உன்சித்தப் படிவனைந்து
உருவாக்கும் அமலகுருவே

99

## எந்த நிலையிலும் மன நிறைவுடன் வாழ அருள்தா

பாவிநான் இரந்துஉண்ப தாலோசீ மானாகிப்
பலர்க்குாந்து வாழ்வதாலோ
பலவீன நிலையிலோ புயபலன் ஆகவோ
பலகுறைவு அழுகைதனிலோ

கூவிப் புலம்புவோன் ஆகவோ ஓயாமல்
குதூகலிப் பவன்ஆகவோ
குவலயத்தார்க்கு எல்லாம் பகையாளி ஆகவோ
குறைஅற்ற நேசனாகவோ

நாவுபுகழ் இனசனம் உடையவன் ஆகவோ
நாதிஅற்றவன் ஆகவோ
நாயினும் கடைஎன மதிப்புஅற்றோன் ஆகவோ
ஞானிகளின் புகழாகவோ

தேவமகி மைஒன்றை யேவிளை விப்பது
செகமீதில் எந்நிலையிலும்
திருப்திகொண்டு இருக்கவே உன்றனது பணிவுற்ற
சிந்தைதா அமலகுருவே.



# 17

## கிறிஸ்தவ அனுபவக் கீர்த்தனைகள்

**ஆசிரியர்: வே. சந்தியாகு ஐயர் (1869-1929)**

**அறிமுகம்: தி. தயானந்தன் பிரான்சிஸ்**

கிறிஸ்தவத் தமிழ்க் கீர்த்தனைப் படைப்புகளை இருபதாம் நூற்றாண்டில் வழங்கிய அருட் கவிஞர்களுள் மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த அருள்திரு. சந்தியாகு அவர்கள் சிறப்பிடம் பெறுகின்றார்கள். இன்றளவும் தமிழ்த் திருச்சபைகளில் அவருடைய பாடல்கள் பல பாடப் பெற்று வருகின்றன. அவற்றுள், 'தாசரே இத்தாரணியை அன்பாய்', 'தேவ லோகமதில்', 'இயேசுவுக்கு நமது தேசத்தை' போன்றவை குறிப்பிடத் தகுந்தவை ஆகும். இவற்றுள் 'தாசரே இத்தாரணியை' என்ற அருட்செய்தி முழக்கப் பாடல் அருள்திரு. டாக்டர் D.T. நைல்ஸ் அவர்களால் தமிழ்ப் பண்ணிலேயே ஆங்கிலத்தில் வழங்கப் பெற்று, பல ஆங்கிலப் பாடல் தொகுப்புகளில் இடம் பெற்றுள்ளது. கருத்தாழம் மிகுந்த ஆங்கிலப் பாமாலைப் பாக்களால் கவரப்பெற்ற இவ் அருட்கவிஞர் Nearer my God to the, Take my Life, Draw me Nearer, Take time to be Holy, O Happy day போன்ற பாடல்களை முறையே 'தேவனே நான் உமதண்டையில்', 'தந்தேன் என்னை இயேசுவே', 'என் உள்ளம் கவரும்', 'நித்தம் முயல் மனமே', 'அந்த நாள் பாக்கிய நாள்' என்னும் பல்லவிகளோடு தொடங்கும் பாடல்களாக அவற்றுக்கு அழகான தமிழ் வடிவம் தந்துள்ளார். ''விந்தைக் கிறிஸ்தேசு ராஜா'' என்பது "When I survey the wondrous Cross" என்னும் பாடலின் தமிழ்ப் பதிப்பு.

'கிறிஸ்தவக் கீர்த்தனைகள்' நூலில் ஐயரின் பதினைந்து பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. அவை யாவும் பக்தியுணர்வூட்டும் வகையில் எளிய இனிய சொல், தொடர் ஆக்கங்களோடு எழுதப் பெற்றுள்ளன. ஐயரின் பிறப்பு நூற்றாண்டு 1969 ஆம் ஆண்டில் வத்தலகுண்டுவில் கொண்டாடப் பெற்ற போது அவருடைய ஐம்பத்து மூன்று கீர்த்தனைப் பாடல்களைக் கொண்ட தொகுப்பு நூல் மறைத்திரு. சந்தியாகு ஐயர் அவர்களின் கிறிஸ்தவ அனுபவக் கீதங்கள் என்ற தலைப்பில் அவருடைய மைந்தர்கள் ஜான் எட்வர்டு, ஹென்றி மார்ட்டின் சந்தியாகு ஆகியோரால் வெளியிடப்பட்டது. இந்நூலுக்கு ஐயரின் பழைய மாணவராகிய அருள்திரு. ஜே.எஸ். மாசிலாமணி அவர்கள் அவரைப் பற்றி எழுதிய கட்டுரை அணிந்துரையாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

மதுரை மாவட்டத்திலுள்ள சிலுக்குவார்பட்டி என்னும் சிற்றூரில் பிறந்த சந்தியாகுவின் பாட்டனார், ஆங்கில அரசின் கீழ் போர்க்களப் பணியாற்றி இவ்வூரில் குடியேறியவர். கத்தோலிக்க ராயிருந்து மதுரை அமெரிக்கன் மிஷன் சபையில் சேர்ந்து பின்னர் அவரது

பெயரர்களுள் ஒருவராகப் பிறந்தவர் சந்தியாகு. அவருடன் பிறந்த வே. மாசிலாமணி, வே. பென்யமின் ஆகிய இருவரும் அவரைப் போன்றே போதகப் பணியை ஏற்றவர்கள்; கவிபுனையும் ஆற்றல் பெற்றவர்களாய்த் திகழ்ந்தவர்கள் என்பது குறிப்பிடத் தகுந்ததாகும்.

பசுமலையில் பள்ளி, கல்லூரிப் படிப்போடு இறையியல் பயிற்சியும் பெற்றுக் கொண்ட ஐயர் இளங்கலைப் பட்டத்தோடு அமெரிக்கன் கல்லூரியில் கணிதப் பேராசிரியராகப் பணியாற்றி 1908 ஆம் ஆண்டில் வத்தலகுண்டு சபைக்குப் போதகரானார். சிறிது காலம் பசுமலையிலும் பணியைத் தொடர்ந்து பின்னர் வத்தலகுண்டுவை மையமாகக் கொண்டு தம்முடைய திருப்பணியையும் அருட்பணி சார்ந்த ஊழியங்களையும் திறம்படச் செய்திடலானார். இக்காலக் கட்டத்தில் ஐயர் இலக்கியப் பணியிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு தம்முடைய இசைப் பாடல்களை எழுதினார். தாமே வயலின் மீட்டித் தம்முடைய பாடல்களைப் பாடும் திறம் பெற்றவராய்த் திகழ்ந்தார். ஐயரின் ''என்றன் நிர்ப்பந்தம் பாரும் என் மக்களே! இரங்க மனமில்லையோ? இந்துமா சமுத்திரம் தொடங்கி இமயமலை வரைக்கும் ஐயோ'' என்ற பாடல் இந்தியத் தாயின் ஓலமாக அமைந்துள்ளது. ஏழு அடிகளைக் கொண்ட இப்பாடலை ஐயர் தமிழகம் எங்கும் முழங்கினார். இப்பாடலை அவருடைய நண்பராகத் திகழ்ந்த பேராயர் வேதநாயகம் சாமுவேல் அசரியா பெரிதும் பாராட்டியுள்ளார். ஐயர் 1917 ஆம் ஆண்டில் முதன் இந்திய ஐக்கிய திருச்சபையின் (SIUC) தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பசுமலையிலிருந்தவாறு பணியாற்றினார். தென் இந்தியத் திருச்சபை ஐக்கியத்தை ஏற்படுத்த நடைபெற்றக் கூட்டு முயற்சிக் கூட்டங்கள் பலவற்றில் கலந்துகொண்ட பெருமை ஐயருக்கு உண்டு. சமுதாய நலத் திட்டங்களிலும், மத நல்லிணக்கம், சாதி எதிர்ப்பு ஆகியவற்றோடு பெண்கள் முன்னேற்றத்திலும் ஐயர் பெரும்பங்கு ஏற்றோராய் நகராட்சிப் பணிகளிலும் மாவட்டம் சார்ந்த ஊழியங்களிலும் ஈடுபட்டார்.

கிறிஸ்தவத் தமிழ் இலக்கியப் படைப்புகளுக்கு ஐயரின் இசைப் பாடல்கள் அணி செய்பவையாக அமைந்துள்ளன.

> *''தேவன் திருப்புகழ் சொல்லும் கருவியாய்*
> *ஆவதே என் விருப்பம் - நான்*
> *சேவகம் செய்யப் பெறாவிடினும் - அவர்*
> *சேவடி கீழிருப்பேன்''*

எனும் அடிகள் இதற்குச் சான்றாக அமையும்.

திருப்புகழ் சந்தத்தில் அவர் எழுதிய ''அருமையுற நீயிரங்கி...'' எனத் தொடங்கும் பாடல் கவிதைச் சுவையோடு கருத்து வளமும் கொண்டதாகும். அருள் திருவாளர்கள் ஷெர்வுட் எடி, எச்.ஏ. பாப்லி, ச. பரமானந்தம் ஐயர், பேராயர் அசரியா போன்றோர் ஐயருக்கு அரிய நண்பர்களாகத் திகழ்ந்தார்கள். "His lyrics covered a wide range of subjects from the intimate inner life of communion between the soul and God to the life of active service for Christ and the Motherland" என்று பாப்லி அவர்கள் சந்தியாகு ஐயருக்குப் புகழாரம் சூட்டியுள்ளார்.

ஐயர் அவர்கள் 1929 ஆம் ஆண்டில் ஆண்டவருக்குள் துயிலுற்ற போது அவர் இயற்றிய பாடல்கள் பலவற்றை அவரின் அடக்க ஆராதனையில் பாடினார்கள். அதே ஆண்டில்தான் சாது சுந்தர்சிங் அவர்களும் ஆண்டவரோடிருக்கச் சென்றார்.

*மதுரையிலிருந்து கொடைக்கானலுக்குச் செல்லும் வழியில் வத்தலகுண்டு கல்லறைத் தோட்டத்தில் நீண்டு நெடிதோங்கி நிற்கும் சிலுவையைக் கொண்ட ஐயரின் கல்லறை, ''விந்தைக் கிறிஸ்தேசு ராஜா உன்றன் சிலுவை என் மேன்மை'' என்ற அவர் பாடலை நமக்கு நினைவுறுத்துகின்றது. ஐயரின் ஒன்பது பாடல்களே இங்கு தரப்படுகின்றன. பிற பாடல்களை 'கிறிஸ்தவ அனுபவக் கீர்த்தனைகள்' மற்றும் 'கிறிஸ்தவக் கீர்த்தனைகளும் புத்தெழுச்சிப் பாடல்களும்' ஆகிய தொகுப்புகளில் காணலாம்.*

## 1. உதவு நதியாக வந்த பெருமானே

### திருப்புகழ்

1

அருமையுற நீ இறங்கி அடியனுள மீது தங்க,
அணுவளவிலாது பங்கம்—அகன்றோடும்;
அருளொளி யன்பே யுறைந்து அதிகவுயர்வாய் வளர்ந்து
அகமுழுதுமே நிறைந்து—வழிந்தோடும்.

2

திருவரசுன் சீர்குணங்கள் இனிய திருவாசகங்கள்
திவிய வரமாக வந்து—எனதாகும்;
தினமுமெழிலாயிலங்கி எனதகமுமே கனிந்து
சிறுமை செய்யும் 'நான்' மறைந்து—பறந்தோடி,

3

மருவு கிறிஸ்தேசுன் அன்பும் அமருமழகான இன்பும்,
மலர்முக சந்தோஷ பண்பும்—சுடரான
மகிமையும் நின்னோடுவந்து எனதிதயமே நிறைந்து,
வளமை வரவே விளைந்து—நிலையாக,

4

உரிமையுடனே யுவந்து மனமதியெலாங் கவர்ந்து
உனதடிமையாய்ப் பரிந்து - எனையாளாய்!
உனதசுனையாய்ச் சுரந்து அடியருளுமே விரிந்து,
உதவு நதியாக வந்த - பெருமானே!

## 2. இந்தியாவின் ஓலம்

செஞ்சுருட்டி ரூபகதாளம்

### பல்லவி

எந்தன் நிர்ப்பந்தம் பாரும் என் மக்களே!
இரங்க மனமில்லையோ?

### அனுபல்லவி

இந்து மா சமுத்ரம் தொடங்கி
இமயமலை வரைக்கும்—ஐயோ! — எந்தன்

**சரணங்கள்**

1

உந்தன் சோதரர் எண்ணிறந்த பேர்
உருக்குலைந்தனர் பாரீர்!—என்றன்
சொந்தப் பிள்ளைகள் சோரமார்க்கத்தில்
தொலைந்து கெட்டுப் போனாரே—ஐயோ!— எந்தன்

2

பஞ்சம் பசியுற்றோரைப் பார்க்கப்
பதறுதே என் உள்ளம்,—யாரும்
அஞ்சும் பாழ் கொள்ளை நோயின் வாளினால்
அறுப்புண்டவர் எத்தனை! ஐயோ!— எந்தன்

3

கண்மணிகளில் கணக்கற்ற பேர்கள்
கல்வி யாதும் அறியார்—பலர்
விண்ணொளியற்று வீண்பத்தியினில்
விழுந்து கிடக்கின்றாரே!—ஐயோ!— எந்தன்

4

சாதி என்னும் பேயும் நுழைந்து
சகலரையும் கலைத்தான்—அவன்
வாதினால் பல சாதிகள் எழ
வம்புகள் மிக வந்ததே! ஐயோ!— எந்தன்

5

அருமையாகப் பெற்ற என் பெண்மக்கள்
அந்தகாரச் சிறையில்—சிக்கிச்
சிறுமையடைந்து தவித்து நிற்பதைச்
சிந்தையில் வைப்பார் இல்லையோ?—ஐயோ! எந்தன்

6

பாவக்கடலில் எத்தனையோ பேர்
பாய்ந்து அதோ! அமிழ்ந்தார்—இப்போ
தாவி அவரைத் தூக்கி எடுக்கத்
தாகமுள்ளவர் இல்லையோ? ஐயோ! எந்தன்

## 3. வரவேணும் பரனாவியே

கரஹரப்ரியா ஆதிதாளம்

**பல்லவி**

வரவேணும் பரனாவியே,
இறங்குஞ் சுடராய் மேவியே

அனுபல்லவி

மருளாம் பாவம் மருவிய என்னை
வானாக்கினியால் தீட்சை பண்ணி— வர

சரணங்கள்

1

பலமான எப்பாவமும் பாழாக்கும் மாநோய்களும்
வலியகொடும் ரோகமும் மாம்சசிந்தை யோடுமே;
பலிபீடத்தில் என்னைப் பலியாக வைத்தேன்,
எலியாவின் ஜெபத்துக்கிரங்கிய வண்ணம்,— வர

2

என்றன் பவம்யாவையும் எரிக்கும்வகை தேடியும்
எங்கும் இந்த லோகத்தில் எத்தீயுமே காண்கிலேன்;
என்றன் செயலால் யாதொன்றும் முடியா
தின்றே வானாக்கினி வரவேணும்,— வர

3

குடிகொள் எந்தப்பாவமும் அடியோடே தொலைத்திடும்;
தடுத்தாட்கொள்ளும் தோஷமும் சாம்பலாகச் செய்திடும்;
படிமிசை காற்றுக்குப் பறந்தோடும் சாம்பல்போல்
அடியேன் யேசுவுக்கென்றும் பணிசெய்ய,— வர

4

புறம்பான எப்பாவமும் மறைவான எப்பாவமும்
சிறிதான எப்பாவமும் பெரிதான எப்பாவமும்,
அறவே முற்றிலும் வரவேணும் ஆவியே!
அக்கினிமயமாய் அமர்ந்திடும் என்மேல்— வர

## 4. தன்னை வெறுமையாக்குதல்

மலையாமி அடதாளம்

பல்லவி

ஒன்றுமில்லை நான் என்றே—உணர்ந்திடும்
உண்மை மனம் வேணும்.

சரணங்கள்

1

ஒன்றுமில்லா வெறும் பாத்திரமாய் என்னை
ஒப்புவிக்க வேணும்—யேசு
என்றனை ஆவியால் முற்றும் நிரப்புவார்;
குன்றாதென் ஊழியமே— ஒன்று

2

ஏசுவின் ஜீவனே என்றனுள்ளத்தினுள்
இடையூறின்றிப் பாய்ந்திட—என்றன்
மாசுகளான தடைகள் உடையட்டும்,
வந்தேன் அவர் பாதமே— ஒன்று

3

ஏசுவின் கைகளே என்னை நடத்தட்டும்,
யாதொ ன்றுமில்லையே நான்—அவர்
வாசலில் தூதனாய்க் காத்திருப்பேன் நிதம்
மகிழ்ந்து பணி செய்திட— ஒன்று

4

தேவன் திருப்புகழ் சொல்லும் கருவியாய்
ஆவதே என் விருப்பம்—நான்
சேவகம் செய்யப் பெறாவிடினும், அவர்
சேவடி கீழிருப்பேன்— ஒன்று

5

யாதொன்று மில்லையெனத் தாழ்த்தல் மனதுக்கு
வேதனை தந்திடினும்—எப்
போதுமே இயேசுவைப் பூலோகம் பார்த்திடப்
புழுதியில் நான் கிடப்பேன்— ஒன்று

6

கர்த்தர் தம் பிள்ளைகள் நன்மைகள் யாவுக்கும்
காரண ரானவரே—அவர்
எத்துதிக்கும் ஏற்ற பாத்திரரே புவி
எங்கும் புகழ்ந்திடுவேன்— ஒன்று

## 5. தற்பிரதிஷ்டை

நீலாம்புரி ஆதிதாளம்

1

என்றன் ஜீவனை முற்றாய் உந்தனுக் கொப்புவித்தேன்
ஏற்றுக்கொண்டருளுமே—என் மீட்பரே!
என்றன் காலம் உமக்கே ஏற்ற மகிமைக்காக
என்றும் செல்லட்டும் ஐயா—என் மீட்பரே!

2

என்றன் கை உந்தன் அன்பால் ஏவுதல் பெற்றசைய
இப்போதே தத்தம் செய்தேன்—என் மீட்பரே!
உந்தன் புகழ்ச்சிக்காக என்றன் கால் விரைவாக
ஊழியஞ்செய்திடுமே—என் மீட்பரே!

3

இன்ப கீதங்கள் பாடி, இராசாவாம் உம்மைப் போற்ற
என் நாவை ஏற்றுக்கொள்ளும்—என் மீட்பரே!
அன்பின் சுவிசேஷத்தை அனுதினம் என் உதடு
அறிவிக்கச் செய்திடுமே—என் மீட்பரே!

4

ஒன்றும் ஒளிக்காமல் நான் என்றன் செல்வத்தையெல்லாம்
உந்தனுக்கே படைத்தேன்—என் மீட்பரே!
என்றன் புத்தி, தத்துவம், யாவையும் உம்முடைய
இஷ்டமாய் ப்ரயோகியும்—என் மீட்பரே!

5

என்றன் சித்தம் முழுதும் உந்தன் சித்தத்துக்கேற்க
என்றும் அடங்கத் தந்தேன்—என் மீட்பரே!
என்றன் இருதயமே உந்தன் சிங்காசனமாய்
இருக்க அளித்திட்டேனே—என் மீட்பரே!

6

உந்தன் பாதத்தில் என்றன் அன்பின் களஞ்சியத்தை
ஊற்றினேன் ஏற்றுக்கொள்ளும்—என் மீட்பரே!
என்றும் உமக்காகவே இருக்கச் சமூலமாக
என்னையே தத்தஞ் செய்தேன்—என் மீட்பரே!

## 6

காம்போதி — திருபுடை தாளம்

### பல்லவி

சொல்லற்கரிய நேசரே—கிறிஸ்தேசு
தூய இதய வாசரே—

### அனுபல்லவி

தொல்லை, துக்கம் நமது பொல்லாப் பாவங்களெல்லாம்
தூக்கிச் சுமந்து வினை நீக்கும் மா வல்ல நேசர் — சொல்

### சரணங்கள்

1

தன்னய மில்லா நேசரே—பிறர் நயம்
தன்னய மெனப் பார்ப்பாரே;
முன்னாள் லாசருவுக்காய் மோசம் வந்தாலும் சென்றார்
மோசம் செய் பகைஞரை நேசித் துயிர் துறந்தார் — சொல்

2

எந்தக் குலத்தையும் பாரார்—தம் நேசத்துக்கு
அந்தஸ்தும் யாதும் நோக்கிடார்;
நிந்தையாய் ''ஆயக்காரர் நேசன்'' எனப் பேர் கொண்டு
சிந்தை மகிழ்ந்து தினம் சேர்ந்தார் சிநேகிதரை — சொல்

3

மாறாத சிநேகிதரே—சற்றாகிலும்
வாக்குத் தவறாத நேசரே;
சாரும் சிநேகிதரும் வேறு பட்டாலும் அவர்
மாறாத அன்பு நம்மேல் ஆறாய்ப் பெருகிடுமே — சொல்

4

உண்மையுள்ள நேசரே—முகஸ்துதி
ஒன்றுமே பேசிடாரே;
நம்மை நமக்குக் காட்டி, உண்மை உரைத்திடுவார்,
செம்மையாய் உணர்த்துவார் தீமை விலக்கிடுவார் — சொல்

5

உருக்கமுள்ள நேசரே—மட்டில்லாத
இரக்கம், கிருபையுள்ளோரே,
நெருக்கம், கவலை, பிணி, நிந்தனைக்குள்ளாகில்
நேசர் யேசுக்கிறிஸ்து நிச்சயம் காத்திடுவார் — சொல்

6

செல்வாக்குள்ள நேசரே—அவர் நேசம்
தீக்குணத்துக்கு நாசமே,
பல்வகை மேடுகள், பள்ளங்கள் சமமாகும்,
பாரில் அவரைப்போன்ற பற்றுறு நேசர் உண்டோ — சொல்

## 7. அடியேன் இருக்கிறேன்

கேதாரகௌளம் ஆதிதாளம்

பல்லவி

இதோ! அடியேனிருக்கிறேன்,—என்னை அனுப்பும்,
ஏசுவே, இப்போதே போகிறேன்

அனுபல்லவி

இதோ! போகிறேன் நாதனே—இப்புவியில் நீர் எனக்கு
எந்த இடம் காண்பித்தாலும் உந்தன் சித்தம் செய்திடுவேன், —இதோ

சரணங்கள்

1

மலைகள், பள்ளங்கள் தாண்டியோ,—மா கஷ்டமான
வனங்கள், கடல்கள் கடந்தோ,
தொலை தூரமாகச் சென்றோ, சுவிசேஷம் கூறும்படி
சொல்லும்போது நீர் ஏசுவே, துரிதமாய்ச் சென்றிடுவேன்; —இதோ

2

வறியர் அறிவீனருக்கும்,—மா துஷ்டருக்கும்,
வணங்காக் கழுத்துள்ளோருக்கும்,
அறிவி என் நாமம் என்று அடியேனை ஏவும்போது
சரியென்றிணங்கி எல்லா சனத்தையும் தேடிப் போவேன்; —இதோ

3

வயல் நிலங்கள் இப்பொழுதே—அறுப்புக்கேற்க
வளமாய் விளைந்திருக்குதே,
நயமான வேலையாட்கள் ஞாலமதில் தேடுகின்றீர்;
பயமின்றி என்னை உந்தன் பாதமதில் ஒப்புவித்தேன், —இதோ

4

உலக முடிவு மட்டுமே—சகல நாளும்
உங்களோடிருப்பேன் என்றீரே;
மலைமேலே நீர் கொடுத்த மா பெரிய கட்டளையைத்
தலைமேலே கொண்டிப்போது தரணியில் ஏகிடுவேன்; —இதோ

## 8. தாரணியை யேசுவுக்குச் சொந்தமாக்குவோம்

தீரசங்கராபரணம் ஆதிதாளம்

பல்லவி

தாசரே, இத்தாரணியை அன்பாய்
யேசுவுக்குச் சொந்தமாக்குவோம்.

அனுபல்லவி

நேசமாய் யேசுவைக் கூறுவோம், அவரைக் காண்பிப்போம்
மாவிருள் நீக்குவோம், வெளிச்சம் வீசுவோம், — தாசரே

சரணங்கள்

1

வருத்தப்பட்டுப் பாரஞ்சுமந்தோரை,
வருந்தியன்பாய் அழைத்திடுவோம்,
உரித்தாய் யேசு பாவ பாரத்தை,
நமது துக்கத்தை நமது துன்பத்தைச் சுமந்து தீர்த்தாரே — தாசரே

2

பசியுற்றோர்க்குப் பிணியாளிகட்குப்
பட்சமாக உதவி செய்வோம்;
உசித நன்மைகள் நிறைந்து, தமை மறந்து,
யேசு கனிந்து, திரிந்தனரே, — தாசரே

3

நெருக்கப்பட்டு ஒடுக்கப்பட்டோரை,
நீசரை நாம் உயர்த்திடுவோம்;
பொறுக்கவொண்ணா கஷ்டத்துக்குள்,
நிஷ்டூரத்துக்குள், படுகுழிக்குள் விழுந்தனரே, — தாசரே

4

இந்துதேச மாது சிரோமணிகள்
விந்தை யொளிக்குள் வரவழைப்போம்;
சுந்தர குணங்களடைந்து, அறிவிலுயர்ந்து,
நிர்ப்பந்தங்கள் தீர்ந்து, சிறந்திலங்கிட, — தாசரே

5

மார்க்கம் தப்பி நடப்போரை சத்ய
வழிக்குள் வந்திட சேர்த்திடுவோம்;
ஊக்கமாக ஜெபித்திடுவோம், நாமுயன்றிடுவோம்,
நாம் உழைத்திடுவோம், நாம் ஜெயித்திடுவோம். — தாசரே

## 9. இயேசுவுக்கு நமது தேசத்தைச் சொந்தமாக்க முயல்வோம்

பரசு ஆதிதாளம்

### பல்லவி

யேசுவுக்கு நமது தேசத்தைச் சொந்தமாக்கப்
பாசமாய் முயல்வோமே, தாசரே!

### அனுபல்லவி

தேசொளி ஞாலமெங்கும் வீசும் யேசுவில் விசு
வாசம் வைத்தன்பின் சுவிசேஷத்தை ஏந்தி, — யேசு

### சரணங்கள்

1

கங்காநதி துவக்கி கன்னியாகுமரி வரை
எங்குமே யேசுராசா ஆளவே,—அவர்
சிங்காரக்கொடி மேலிலங்க குடிகளெல்லாம்
மங்கா சந்தோஷ முற்று வாழவே மன்னன், — யேசு

2

வித்தை பூர்வீக நூல்கள் தத்துவ ஞானத்துக்கு
மெத்தப் பேர்போன இந்துதேசமாம்;—இதில்
சத்தியமாக வந்த நித்யர் யேசுவின் பரி
சுத்த பரம ஞானம் ஜோதியாய்த் தோன்ற, — யேசு

3

தீய மாமூல் வழக்கம் ஒய, வீண்பக்தி நீங்க,
மாயக் கோட்பாடு முற்றும் மாறவே,—யேசு
தூயன் சத்தியவேத ஞாயவிதிகள் உள்ளம்
பாய நம் நாட்டார் குணமாகவே, வல்ல, — யேசு

4

நம்மை வெறுத்து யேசுநாதனுக் கொப்புவித்து
செம்மையுடன் உழைத்து சேவிப்போம்;—அவர்க்
குண்மை பாராட்டி நமக்குள்ள யாவும் படைத்து
நம்மாலியன்றளவு முயல்வோம், என்றும், — யேசு



# 18

## இரட்சண்யக் கீர்த்தனைகள்

ஆசிரியர்: ச. பரமானந்தம் ஐயர் (1873-1960)

அறிமுகம்: தி. தயானந்தன் பிரான்சிஸ்

இருபதாம் நூற்றாண்டில் கிறிஸ்தவத் திருப்பணி, அருட்பணி ஆகியவற்றோடு இலக்கியப் பணியுமாற்றிய பெரியார்களுள் அருள்திரு. ச. பரமானந்தம் சிறப்பு மிகுந்தவராவார். இங்ஙனம் அவரைப் போன்று மும்மடிப்புள்ள பணியைத் திறம்படச் செய்தோருள் அருள்திரு. வே. சந்தியாகு, அருள்திரு. ஜி.எஸ். வேதநாயகம் ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவர்கள் ஆவார்கள்.

'அருளுரை மன்னர்' என்று போற்றப் பெறும் பரமானந்தம் ஐயர் அவர்கள் சிறந்த நூலாசிரியராகவும் திகழ்ந்தார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியாண்டுகளிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளிலும் அவர் தமிழகம் எங்கும் அறியப்பெற்ற அருளுரையாளரானார். நற்செய்தி பரப்பும் பணியில் அருள்திரு. உவாக்கர் ஐயரோடு ஈடுபட்டு பண்ணை விளையை மையமாகக் கொண்டு பல இடங்களுக்குச் சென்று எழுப்புதல் மாநாடுகளில் கலந்து கொண்டார். டாக்டர் ஷெர்வுட் எடி, சாதுசுந்தர்சிங், பேராயர் வேதநாயகம் சாமுவேல் அசரியா ஆகியோர் அவரோடு நற்செய்திப் பணியில் ஈடுபட்டோர் என்று அறிகிறோம். கிறிஸ்துவே கிறிஸ்து மார்க்கம்; கிறிஸ்துவே பிரதானம்; இரட்சிப்பின் மாறுதல் இன்றியமையாதது என்ற உண்மைகளை வலியுறுத்தி வந்த ஐயரின் தொடக்க கால அருளுரைகள் 'சுவிசேஷப் பிரசங்கங்கள்' என்னும் தலைப்போடு நூலாக வெளிவந்த போது அது தமிழகத்திலும் இலங்கையிலும் பர்மாவிலும் தமிழ்க் கிறிஸ்தவர்களிடையே பெருஞ்செல்வாக்குப் பெற்றது.

பண்ணை விளை ஊழியத்திற்குப் பிறகு பரமானந்தம் பிரசங்கியார் 1907 ஆம் ஆண்டில் அருள்திரு. ஸ்டுவர்ட் விடுத்த அழைப்பை ஏற்று, சென்னை இராயபுரம் சபையைக் கண்காணிக்கும் பணியில் ஈடுபட்டு, 1909 ஆம் ஆண்டில் அருட்பொழிவு பெற்று, சபையின் போதகராகி, நாற்பத்திரண்டு ஆண்டுகள் அப்பணியைத் தொடர்ந்து 1951 ஆம் ஆண்டில் தம்முடைய 78 ஆம் வயதில் ஓய்வு பெற்றார். இக்காலக் கட்டத்தில் ஐயரின் கிறிஸ்தவ இலக்கியப் பணி பல்லாற்றானும் பெருகியது. அவருடைய அருளுரைத் தொகுப்பு நூல்களும், தியான நூல்களும் ஒன்றன் பின் ஒன்றாக வெளிவரலாயின. அவற்றுள் 'நூறு அருளுரைகள்', 'ஏழு வார்த்தைகள்' , 'கிருபைப் பிரவாகம்', 'கிறிஸ்துவின் சிந்தை', 'இருதயத்தில் கிறிஸ்து', 'நீங்கள் அறியாதிருக்கிற ஒருவர்', ''கிறிஸ்தற்ற கிறிஸ்து மார்க்கம்' போன்றவை பல பதிப்புக்களைக் கண்டுள்ளன. ஐயர் இறுதியாக எழுதிய நூல் 'என் சுயசரிதை' ஆகும். அந்நூலில் அவருடைய பல காலக் கட்ட பணிகளும் அவற்றினூடாக அடைந்த அனுபவங்களும் அழகுற எடுத்துச் சொல்லப்படுகின்றன.

ஐயரின் மிகப் பெரிய கிறிஸ்தவக் கொடை அல்லது பங்களிப்பு எனத் தகும் நூல் அவர் எழுதிய 'கிறிஸ்துவின் ஜீவியம்' என்னும் தலைப்பினைக் கொண்ட ஆண்டவரின் வாழ்க்கை வரலாற்று நூலாகும். எழுநூற்றுக்கும் அதிகமான பக்கங்களைக் கொண்ட இந்நூலை ஐயர் 1925 ஆம் ஆண்டில் தம்முடைய போதகப் பணிகளினூடே தமது சொந்தச் செலவில் வெளியிட்டார். மேனாட்டு அறிஞர்கள் எழுதியுள்ள ஆண்டவரின் வாழ்க்கை வரலாற்று நூல்களோடு ஒப்பிடத் தகுந்த ஆய்வுச் சிறப்பும் தியான நெறி வெளிப்பாடும் இந்நூலுக்கு உண்டு. இந்நூலைத் தொடர்ந்தே அருள்திரு. சாமுவேல் பவுல் ஐயரின் 'இயேசு' என்ற நூலும் டாக்டர் சவரிராயன் ஏசுதாசனின் 'அபிஷேக நாதர்' என்ற படைப்பும் வெளிவரலாயின.

பரமானந்தம் ஐயரின் பாடல்கள் ஏறத்தாழ நாற்பதாண்டுக் காலக் கட்டத்தில் எழுதப் பெற்றவை ஆகும். அவற்றுள் 164 பாடல்களைத் தொகுத்து 'இரட்சண்யக் கீர்த்தனைகள்' என்ற தலைப்பில் ஐயர் தாமாகவே 1920 இல் வெளியிட்டு 1923, 1926 ஆம் ஆண்டுகளில் விரிவாக்கப் பதிப்புகளைக் கொணர்ந்தார். இந்நூலில் அடங்கும் பாடல்கள் அவருடைய கிறிஸ்தவக் கவிதை உள்ளத்தையும் இசைப் புலமையையும் எடுத்துக்காட்டுகின்றன. அவர் காலத்தில் பெருவழக்கில் இருந்த முருக பக்திப் பாடல்களையும், தியாகராஜரின் கீர்த்தனைகளையும் ஊன்றிக் கேட்டுப் பண்களைக் கற்று அவற்றில் தம்முடைய கிறிஸ்தவப் பாடல்கள் பலவற்றை அவர் எழுதியுள்ளார். 'முத்துக் குமரய்யனே' என்ற பண்ணில் 'சத்யக் கிருபா நிதியே' என்ற பாடலும், 'ஸ்ரீ ரகு குலன்' என்ற தியாகராயர் மெட்டில் 'சீரேசு பாலன்' எனத் தொடங்கும் பாடலும் அமைந்துள்ளன. இத்தகைய பண்ணமைப்புகளோடு தேவார, திருவாசக, திருப்புகழ் பண்களையும் சந்தங்களையும் பின்பற்றி ஐயர் பல பாடல்களை எழுதியுள்ளார். அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச் சிந்துப் பாடல்கள் எழுதப்பட்டுள்ள சந்தப்பா நடையிலும் ஐயர் பல பாடல்களை எழுதியுள்ளார்.

திருநாவுக்கரசரின்,

> *"களிறு வருவன கண்டேன்*
> *கண்டறியாதன கண்டேன்"*

என்ற அடிகளைத் தழுவி,

> *"கண்டேன் அவர் திருத்தேகம்*
> *கல்வாரி மலைதனில் கண்டேன்"*

என்று பாடும் ஐயர், அருணகிரியாரின் திருப்புகழ் நடையில்,

> *"ஆத மதிதடு மாறி விளைத்தமா*
> *பாவ மகற்றிடு*
> *ஆதி மொழிப்படி மாது மரியிடம் மனுவேலன்*
> *ஏதமற் றெழுந்த"*

என முழுங்குகிறார்.

பல்வகைப் பட்ட கண்ணிப் பாடல்களை ஐயர் பாடியளித்துள்ளார். அவற்றுள் சில கண்ணிகள் அமையும் அழகினைக் கண்டு உளம் நெகிழலாம். அவற்றை நெஞ்சுருக்கும் பாடல்கள் என்று கூறலாம். எடுத்துக்காட்டுக்குச் சில அடிகள்:

(1)

மாநிலத்தோர் பாவத்தால் வானலோக நாதனார்
மானிடரின் சாயலாய் வாதையுற வந்தனர்

(2)

எத்தனையோ லோகத்தைச் சித்திரம் போல் வைத்தவன்
எத்துணையு மின்றியே ஏங்கி நிற்பதேது காண்

(3)

நெஞ்சமே இவ்வன்பரை நேசித்தவர் பாதத்தை
தஞ்சமென நம்பினால் சந்ததம்நீ வாழ்வாயே

*'கிறிஸ்தவக் கீர்த்தனைகள்' நூலில் ஐயரின் ஒன்பது பாடல்கள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. மேலும் சில பாடல்கள் சேர்க்கப்படுதல் நலம். இவ் ஒன்பது பாடல்களோடு மேலும் பதினேழு பாடல்கள் திருப்பத்தூர் ஆசிரமப் பாமாலையில் பெரியண்ணன் ஏசுதாசன் சேர்த்துள்ளார்.*

## 1. தேவதுணை தேடல்

கௌரி மனோஹரி ஆதிதாளம்

**பல்லவி**

வரந்தரவே வா வென் குருவே!

**அனுபல்லவி**

சுரந்தவறா சுகக்யானம் கூட
பரந்துதிநீட பாசமுடன் பாட— (வர)

**சரணங்கள்**

1. அருணோதயமே! ஆதி மூல தேவா!
அருள் தந்திவ்வேளை அடியேனைக் காவா
கருணாகரா! காருண்ய யோவா!
கனிவாயிதயக் காதலுடன் பாட— (வர)

2 பாவப்பாசம் நீங்க பாதமே வணங்க
பக்தருள்ளம் பொங்க பரவஸமோங்க
சாவை வென்றவா! சாமி என் நாதா!
சரணாடிவந்தேன் தாசனானிப்போதே— (வர)

3. வேதவாக்கின் மூலா! வேதியர்கள் நூலா!
போதமாய் விளங்கும் புகழான சீலா!
ஆதனானெனை ஆட்கொண்ட வேலா!
அருமறையோனை ஆவலுடன் போற்ற— (வர)

## 4. நாள்தோறும் உமைப் பணிவேன்

சுத்தபங்களா ஆதிதாளம்

### பல்லவி

தினமே நானுனைத் தேடிப்பணிய
துணைபுரி வாய்நித்ய ஏக தெய்வமே!

### அனுபல்லவி

மனநிலை தவறி மறுகினேன் நானே
மாசிலானே அனுகூலநற் கோனே!

### சரணங்கள்

1. அருள் நாயகனே அம்பரத் தீசா!
ஆதியாய் நின்றபே ரருள்நிறை பாசா!
மருள்பவ நாசா மனுக்குல ராசா!
மகிமை யடைந்தமா மகத்துவ நேசா! — (தின)

2. செத்தே னெனக்குன் ஜீவ னளித்தாய்
தீயனென் மேல் திரு தீர்த்தம் தெளித்தாய்
முத்தேயென் நன்மைக் காக மரித்தாய்
மோதிய தீவினை யாவு மழித்தாய்.— (தின)

3 திரளென் பாவங்கள் தீர்த்திட வாராய்
தீமை மறந்துநான் சீர்பெறக்கூராய்
கரள் குணமாற்றிக் கனிந்தெனைச் சேராய்
களிப்புடன் பாடிட காதற்கண் பாராய்— (தின)

## 9. இரக்ஷா பெருமானுக்கு ஸ்துதி

எதுகுலகாம்போதி அடதாள சாப்பு

(திருப்புகழ் நடை)

1. ஆத மதிதடு மாறி விளைத்தமா
பாவ மகற்றிடு மனுகூலன்

ஆதி மொழிப்படி மாது மரியிடம்
ஏதமற்றெழிந்த மனுவேலன்

2 மேதி னியில்நரர் தீது தொலைத்திட,
நாத னருளிய திருவேதா

பேத மகற்றிவி வாத மொழித்திட
போதம் நிறைந்த சற் குருநாதா

3. வாதை மிகவடைந் தீனச் சிலுவையி
லோக பவம்சுமந் தருள்நேசா

பாதம் பணிந்துற வாடக் கிருபைகூர்
பாசம் நிறைந்துள்ள குமரேசா

4. ஜோதி பரனொடு தூதர் திரளுட
னாளும் கிருபைதந் தமலோனே

காத லாயுனைத் தேடி யனுதினம்
பாட வரமருள் பெருமானே

## 12. தம்மையே தந்த தயாளன்

சுருட்டி தாளம் சாப்பு

### பல்லவி

ஆனந்தனே அருமைரட்சகனே! அடியார்வணங்கிடும்
ஆனந்தனே அருமை ரட்சகனே!

### அனுபல்லவி

வானெங்கும் புகழ் வீசுகின்றமா மகிமைதங்கிய கருணையாளனே!
மன்னனே மாவிற் பன்னனே உனை
வந்து குனிந்து பணிந்திடல் ஞாயமே— (ஆனந்)

### சரணங்கள்

1. ஆதிமெய்த்திரு வாக்கினற்புதனே!—அருளாவிசக்தியால்
மாதிடமவ தரித்த நற்சுதனே!
மேதினி நரர் மீறினபவந் தீரவேபலி யாகவே தேவ
நீதிதயை பரிசுத்த நேசமாய் நின்றவனே துயர் வென்றவனே நித்ய— (ஆனந்)

2 அந்தமாதியி லாதமைந்தனே!—அடியாரடைந்தநிர்ப்
பந்தந் தீரவே வந்த வேந்தனே!
நிந்தையால் முகம் அந்தங்கெட்டது எந்தையே மகாவிந்தை யல்லவோ
சந்ததமிதை மறக்கக்கூடு மோசத்தியனே எங்களுத்தமனே அருள்— (ஆனந்)

3. பாவிக்காய்த் திரு மேனி நைந்ததே—தேவன்பினாயுதம்
பாவியுள்ளத்தை உருவிப்பாய்ந்ததே
ஜீவனைத்தரும்தெள்ளமிர்தமே சிந்தைக்கினியது ஜேசுநாமமே
நாவினாலே நானுரைக்கக்கூடு மோநாயகனே மகாதூயவனே சத்ய— (ஆனந்)

## 21. தேவாரம்

நாதநாமக்கிரியை திரிபுடதாளம்

1 பத்தியோ விசு வாசமோ அன்போ
பகருமெய் யடி யார்கள்மேல் நட்போ
சுத்தமு மிலா தோஷியைத் தேடிச்
சொந்தமாய் வந்த தூயசி நேகா!
முத்தியின கரை சேருதல் காணா
முழுதுமே இரு ளாழியி லாழ்ந்த
பித்தனைப் பர மேற்றிட வேண்டிப்
புவியில் தோன்றின புண்ய பிரானே!

2. ஆதிமெய்த் திரு வாக்கலங் காரா!
அமரர்சே னையை ஆளதி காரா!
கோதிலா தகு ணம்நிறை தீரா!
குவலயத் தொளியாகின வீரா!
நீதியே யற்ற நிசனா மென்னை
நிறைந்தபே ரின்ப ராஜியம் சேர்க்க
பேதியா நிலை நின்றுகு ருசில்
பிராணன்தந் தெனைப் பெற்றமா நேசா!

3. என்ன! என்னையோர் பொருட்டென வெண்ணி
என்னிடம் வர என்னநீ கண்டாய்?
மன்னவா வுன்றன் மாட்சிமை என்ன!
வாயுரைத் திட வல்லப முண்டோ?
பன்னருந் திருப் பாதத்தில் வீழ்ந்தே
பணிந்திடு மேழைப் பாவியைப் பாராய்
உன்னையே எனக் குயிரெனக் கொண்டேன்
உற்றவா பிரி யாதெனைக் காப்பாய்

## 25. என் நம்பிக்கை ஏசுவே

சுருட்டி ஆதிதாளம்

### பல்லவி

நாதா உனை நம்பினேனே—என்
நாதா உனை நம்பினேனே—யேசு

### சரணங்கள்

1. தீதான வுலகத்தில் தீயவுருவெடுத்த
பாதகனெனைத் தேடிப் பண்பாய் ரட்சிக்கவந்த
வேதா! உனை விடுவேனோ? —யேசு

2. எத்தனையோ நரர்களித்தல மீதிருக்க
பித்தனெனைப் பிடித்துப் புத்திரனாக்கினதுன்
சுத்தக் கிருபை யல்லவோ? —யேசு

3. ஏவை மகன் அடியான் ஈனன் மகா கொடிய
பாவிக்காய்ப் பாவமாகிப் பாடுசகித்த வுன்றன்
சாவை மறக்கக்கூடுமோ? —யேசு

4 உச்சிதமான ஈவும் உன்னத வரங்களும்
ரட்சையும் நிச்சயமும் பட்சமாய் நீயளிக்க
பிச்சையாய்ப் பெற்ற பாவி நான் —யேசு

5. நீயே என் சத்தியமும் நீயே ஜீவனுமானாய்
நீயே மோட்சமதற்கு நீயே வழியுமானாய்
ஆயே! எல்லாமும் நீயானாய் —யேசு

6 உன்னை ருசித்தவர்க்கு உண்டோ குறை எதுவும்
உள்ளமகிழ்ந்து என்றும் உன்றனையே துதிப்பார்
என்ன! ஆனந்தம் இது காண்! —யேசு

## 46. சாஸ்திரிகள் வணக்கம்

கமாஸ் அடதாளம்

**பல்லவி**

பாதம் பணிந்தோ மையா - பரமேசையா
பாதம் பணிந்தோ மையா

**சரணங்கள்**

1. கருணைவா ரிதிபாலா! காருண்ய மனுவேலா!
அருணோத யமேசீலா! ஆத்தும வனுகூலா! (பா)

2. சர்ப்பத்தா லுயிரற்ற நிர்ப்பந்த ரெமைமுற்ற
அற்புதமா யீடேற்ற உற்பவித் தீரேபோற்ற (பா)

3 எத்தனைகேடு தோஷம் சித்தம்வா டாதுநேசம்
வைத்ததேவனே தாசர் நித்தங்கொள் வோமேபாசம் (பா)

4. தீயமனதின் பாரம் தீர்ந்திடவே இந்நேரம்
நீயருள்பரி காரம் நின்பதமே ஆதாரம்— (பா)

## 48. எல்லா நாமத்திற்கும் மேலான நாமம்

ஆரபி **கண்ணிகள்** ஏகதாளம்

1 யேசெனு மகத்துவ நாமம் இகபரம் போற்றிடும் நாமம்
தேசிகர் புகழ்ந்தேற்றும் நாமம் தித்திக்கும் திகட்டாத நாமம்

2 பாபமகற்றிடும் நாமம் பரிசுத்தமாக்கிடும் நாமம்
சாபம் தொலைத்திடும் நாமம் சகலர்க்கு முரித்தான நாமம்

3 நோய்களை நீக்கிடும் நாமம் நொம்பலம் போக்கிடும் நாமம்
பேய்களை யோட்டிடும் நாமம் பேரதிசயமுள்ள நாமம்

4. ஜெபத்துக்கு ரகசிய நாமம் தேர்ந்தவர் கொண்டாடும் நாமம்
விபத்துக்குக் கைகண்ட நாமம் வேறு நாமம் வெறு நாமம்

## 55. "அவரைக் கண்டவன் சாட்சி கொடுக்கிறான்."

தேவகாந்தாரி தேவாரம் ரூபகதாளம்

1 அன்பர்க்கருள் புரிவோனை ஆதியாய் நின்ற சீமானை
துன்பமகற்றிடுங்கோனை தூயமனமுளத்தானை
பொன் பொலியும் பெருமானை பூரண நேசமுற்றானை
இன்பமளித்திடுந்தேனை இலங்குந் திருமேனி கண்டேன்
கண்டேனவர் திருத்தேகம் கல்வாரி மலைதனில் கண்டேன்

2 சத்தியவாசகப்போதன் சாற்றுமுரைப்பிடிவாதன்
பத்திசேர் சற்பிரசாதன் பாவமகற்றும் பொற்பாதன்
எத்திசையோர் தேடும் நாதன் இந்நிலம் வந்தமா நீதன்
முத்தியளித்திடு வேதன் மூவாதிருமேனி கண்டேன்
கண்டேனவர் திருத்தேகம் கல்வாரி மலைதனில் கண்டேன்.

3 பாவமகற்றுபகாரன் பசாசுகளுக்கபகாரன்
ஜீவனளிக்குமுதாரன் தீவினைபோக்குங் குமாரன்
சாவையழித்தமாவீரன் தாரணியோர்க் குபகாரன்
தேவ சுரரேத்துந்தீரன் சோதி திருமேனி கண்டேன்
கண்டேனவர் திருத்தேகம் கல்வாரி மலைதனில் கண்டேன்

4. ஆதியும் அந்தமுமான அல்பா ஒமேகாவுமான
நீதி இரக்கமுமான நித்திய ஜீவனுமான
ஓதிய வேதமுமான உத்தம மார்க்கமுமான
மேதினியிலுருவான மீட்பர் திருமேனி கண்டேன்
கண்டேனவர் திருத்தேகம் கல்வாரி மலைதனில் கண்டேன்

## 71. "பாவமறியாத அவர் நமக்காக பாவமானார்"

எதுகுலகாம்போதி ஏகதாளம்

**கண்ணிகள்**

1 மாநிலத்தோர் பாவத்தால் வானலோக நாதனார்
மானிடரின் சாயலாய் வாதையுற வந்தனர்

2 எத்தனையோ லோகத்தை சித்திரம்போல் வைத்தவன்
எத்துணையுமின்றியே ஏங்கி நிற்பதேதுகாண்.

3. அன்பு நிறை வள்ளலை அறிந்து கொள்ளாப் பாதகர்
பின் கட்டாகக் கட்டிமா துன்பத்துக் குள்ளாக்கினார்

4 முள்ளின் முடி சூடியே மூர்க்கமா யடித்தபின்
வள்ளலே வாழ்கவென வாழ்த்தினார்கள் நிந்தையாய்

5 கடும்பக லுஷ்டணமேற கனத்த சிலுவை சேர
கொடும்பகைவர் சூழ்ந்திட கொலைக்களத்துக் கேகினர்.

6 வையகத்தை மீட்டிட வாதை மிகப்பட்டிட
துய்யதிரு மேனியில் சோரி வெள்ளம் சிந்தினார்

7 லோகஜீவன் யாவையும் தாகந்தீர்க்கு மற்புதன்
தாகத்தால் நாவறண்டிதோ சஞ்சலமடைவதேன்?

8. பேதையரைக் காத்திட பேரின்பத்தில் சேர்த்திட
பாதகருக்காய்ப் பதில் பாவமாக்கப்பட்டனர்.

9. நெஞ்சமே இவ்வன்பரை நேசித்தவர் பாதத்தை
தஞ்சமென நம்பினால் சந்ததம் நீ வாழ்வாயே.

## 73. சிலுவைக் காட்சி

ஆனந்தபைரவி (திருப்புகழ்) ஆதிதாளம்

ஆயி ராயிரம்பேர் விடோம் விடோமென
தொளிலுற்ற பாரம் தொடோம் தொடோமென
ஆருமற்ற நேசன் அதோ அதோ வழி நடந்தாரே

வாதை யுற்ற நாவு குளிர் குளிர்ந்திட
மாதரிட்ட பானம் மளி நிறைந்திட
போதையற்று பாடு தெளிவுடன் பட துணிந்தாரே;

பார்! மரத்தின்மீது கிட கிடத்திட
பாவமற்ற தேகம் துடி துடித்திட
பாவி சுத்தியாலே படீர் படீரென அறைந்தானே.

போர் மிகுந்த வீர ராகா ஆகா வென
தாருவிட்டு கீழே வாவா வாவாவென
பாரில் வைத்த நேசம் போகா போகாதென பகர்ந்தாரே;

பூமி யெங்குமேகா ரிருள இருண்டிட
　　பாதகர்க் கந்நேரம் மருள் நிறைந்திட
　　பாருள் ளோர்க்கு தேவ அருள் நெருங்கிட வழியானார்
சோதி யற்று சோக மானார் ஆனார் தமில்
　　நேசமுற்ற தாதை போனார் போனாரிங்கே
　　சோரவிட்ட ஞானமேனோ ஏனோவென திகைத்தாரே,
ஞாலமுற்றும் நாணி நடு நடுங்கிட
　　சாலமுற்ற மேரு தமில் பிளந்திட
　　ஆலயத்திரைமே லதோ கிழிந்திட அறியீரோ?

சீரி லங்கு தேவ லோகா லோகா யெமை
　　தேடிவந்த தூய தேகா தேகாவுன்மேல்
　　சேயர் வைத்த பாசம் போகாதருள் செய்வாய் பெருமானே.

## 124. எனக்கு இரக்கம் செய்யத் தீவிரியும்

ஆனந்தபைரவி　　(திருப்புகழ் நடை)　　ஆதிதாளம்

1　தொல்லைகள் மிகவே சூழ்ந்தெனை வதைக்கச்
　சோருதே எனதேழை நெஞ்சம்
　நல்லையா உமைப்போல் யாரெனை அறிவார்
　நாடிநின் திருவடி பணிந்தேன்

2　இனஜனம் வெகுபேர் எனக்கிருந்தாலும்
　என் மனத்துயர் அறிவாரோ?
　உமைவிட யார்க்கும் உருத்தென் மேலுளதோ
　உயிர் கொடுத்தெனை மீட்ட அரசே!

3.　தள்ளிப்போவெனவே தமியனுக் குறைத்தால்
　தாங்குவார் யாருண்டு ஐயா!
　வள்ளலே உமது வாக்கு மாறிடுமோ
　வையகம் ஒழிந்து போனாலும்

4　எத்திசை பார்த்தும் ஒருபுகல் காணேன்
　ஏழை என் மனங் கலங்கிடுதே
　சத்திய நாதா! தயை நிறைபோதா!
　தாசனுக்கிரங்க வொண்ணாதா?

5　மாலையில் அழுவாய் மயங்காதே விடியற்
　காலையில் களிப்பா யென்றுரைத் தோனே!
　சாலவே உமது தயவெனக்கருளச்
　சமயமும் வரலையோ தேவா!



# 19

## சுவிசேஷப் பூங்காவனம்

ஆசிரியர்: எஸ்.எம். சாமுவேல் ஐயர் (1882- ———)

அறிமுகம்: தி. தயானந்தன் பிரான்சிஸ்

இருபதாம் நூற்றாண்டில் ஆரவாரமின்றி அமைதியாகக் கிறிஸ்தவ இலக்கியப் பணியாற்றியோர் பலர் இருந்துள்ளனர். அரும்பாடுபட்டுத் தங்கள் நூல்களைத் தாங்களாகவே வெளியிட்டு விற்க இயலாமல் இழப்புகளைச் சந்தித்தவர்களும், பல்லாண்டுக் காலமாகத் தங்கள் ஏட்டுப் பிரதிகளைக் கிறிஸ்தவ வெளியீட்டகங்களில் உறங்க வைத்து இழக்கக் கொடுத்தவர்களும், திருச்சபைத் தலைவர்களின் உந்துதல் கிடைக்கப் பெறாமையால் தங்களின் நூல்களை வெளியிடும் திட்டத்தைக் கைவிட்டு விட்டவர்களும் பலராவர். இவ்வகையில் கிறிஸ்தவத் தமிழிலக்கியத்திற்கு இழப்புகள் ஏற்பட்டிருப்பதைக் கிறிஸ்தவ அறிஞர்களும் ஆய்வாளர்களும் அறிவார்கள்.

தரம் வாய்ந்த கிறிஸ்தவக் கவிதை நூல்களையும் இசைப் பாடல்களையும் நமக்கு வழங்கியுள்ள கவிஞர்கள் பலரைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புகளும் இலக்கியப் பங்களிப்புகள் குறித்த செய்திகளும் கிடைத்தில என்பதும் வருந்தத்தக்கதாம்.

ஐம்பதாண்டுகளுக்கு முன்பு கோவைத் திருமண்டிலத்தில் அருட்பொழிவு பெற்ற ஆயராகப் பணியாற்றிய அருள்திரு. எஸ்.எம். சாமுவேல் அவர்கள் கவிபுனையும் ஆற்றல் மிகுந்தவராக விளங்கியுள்ளார் என்பதும், B.A., L.Th. பயின்றவராய்த் திருப்பணியில் ஈடுபட்டுள்ளார் என்பதும், அவர் ஆரைகுளம் வீரபாகு சுவாமியின் பெயரர் என்பதும், 1951 ஆம் ஆண்டில் 354 பக்கங்களைக் கொண்ட 'சுவிசேஷப் பூங்காவனம்' என்ற நூலை உரை விளக்கத்தோடு தாமாகவே வெளியிட்டவர் என்பதும், அந்நூல் விரைவில் விலை போகாததற்குக் காரணம் அதன் அதிகப் பக்க அளவே என்பதும், இதனைக் கருத்தில் கொண்டு ஆசிரியர் தம்முடைய 76 ஆம் அகவையில் இந்நூலின் இரண்டாம் பதிப்பைக் கண் பார்வை மங்கிவரும் நிலையில் சுருக்கப் பதிப்பாக எண்பத்தேழு பக்கங்களோடு வெளியிட்டுள்ளார் என்பதும் இந்நூலுக்கு ஆசியுரை வழங்கியுள்ள அந்நாள் கோவைத் திருமண்டலப் பேராயர் டாக்டர் ஐயாத்துரை ஏசுதாசன் (A.J.) அப்பாசாமி அவர்கள் கூற்றின் வாயிலாகத் தெரிய வருகின்றன.

ஐயர் அவர்கள் தம் நூலுக்குத் தம்மைப் பற்றியும் தம் பணியைக் குறித்தும் எத்தகு முன்னுரையும் எழுதவில்லை. ''சுவிசேஷப் பிரபல்லிய வாழ்க்கையில் கடவுளை மகிமைப்படுத்தின எல்லா மக்களுக்குமான சமர்ப்பணம்'' என்ற அர்ப்பணிப்பு மட்டுமே உள்ளது.

ஐயருடைய அதி மேன்மைமிகு அவையடக்கம், அவர் அடக்கத்தைக் கடைப்பிடித்தவர் என்பதையும் நற்செய்தி பரப்பும் பணியில் தம்மை வெகுவாக ஈடுபடுத்திக் கொண்டவர் என்பதையும் நமக்கு விளக்குகின்றது.

இரண்டாம் பதிப்பிற்கு 'நூன்முகம்' வழங்கியுள்ள அருள்திரு. சேனா ரூபஸ் ஜேக்கப் அவர்கள் ''இவர் ஆழ்ந்த அனுபவமுடையவர். இந்துக்கள் மத்தியில் ஆர்வமுடன் பணியாற்ற பல நூல்களைத் திறம்பட ஆராய்ச்சி செய்தவர். ஆகவே கிறிஸ்தவ மார்க்கத்தை யாவரும் எளிதில் விளங்கிக் கொள்ளக்கூடிய முறையில் மார்க்க ஆராய்ச்சி செய்து, இதை எளிதில் மனத்தில் படியத்தக்கதாக ஆங்காங்கே கீர்த்தனைகளையும் சேர்த்திருக்கிறார்...'' என்று கூறுகின்றார். ஆயின், இந்நூலிலடங்கும் பாக்களின் நயம் பற்றியோ கருத்தாழச் சிறப்பினைக் குறித்தோ ஏதும் சொல்லப்படவில்லை.

அரிய நூலினை அதன் யாப்பு, பண்ணமைப்புகளோடு வாசிக்கும் போது, ஐயரின் பாட்டுத் திறனையும் பக்தியுள்ளத்தையும் கண்டின்புறவியல்கின்றது.

பூங்காவன அறநெறி, பூங்காவன அந்நியோன்ய வாழ்க்கை, பூங்காவன வாசிகளின் பூரண விசுவாசம், பூங்காவன நாதரின் ஜீவிய விருத்தாந்தக் கீர்த்தனை, பூங்காவன நாதரின் உபதேச ஆராய்ச்சி மாலை, பூங்காவன நாதரின் காருண்யக் கைங்கரிய ஆராய்ச்சி ஆகிய தலைப்புகளில் நற்செய்தி மற்றும் திருச்சபை உபதேசம் சார்ந்த கருத்துக்களை ஆசிரியர் பாடல்களால் விளக்கிச் செல்கிறார். திருச்சபை ஞானோபதேசக் கீர்த்தனையோடு நூல் ஆரம்பமாகின்றது.

பல்லவி

*பாவஞ் செய்யாதே, நீ*
*பாவஞ் செய்யாதே*
*பாவ நாசர் மனம் வாடப்*
*பாவஞ் செய்யாதே.*

1

*கடவுளொன்றே சிருஷ்டி*
*கர்த்த னுமொன் றேயாம்*
*கொடும்பாவிப் பேய்கட்குக்*
*கொலுவிட வேண்டாம்.*

2

*மனுவோர் மனன பூஜை*
*மகிழும் மகா தேவன்*
*மண்விண் ரூப பூஜைவீண்*
*வாய்ப்பா டுவேண் டாமென்றார்.*

3

*கடவுளின் நாமத்தைக்*
*கனவீனம் பண்ணாமல்*
*அவர் வேதம் ஆலயம்*
*ஆய்ந்து பாராட்டிடு*

*ஆண்டவரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், உவமைகள், அற்புதங்கள் யாவும் உபதேச விளக்கங்களோடு பல பண்களில் வழங்கப்படுகின்றன.*

*"ஏசைய ரேஇரங்கும் என்ற பலர்*
*எதிர்பாரா வரமும்*
*ஆசையோடே அடைந்த அவ்வாறே*
*அடியோருக்கும் இரங்கும்"*

*என்ற பாடலோடு நூலை நிறைவு பெறச் செய்கின்றார் ஐயர். இங்குத் தேர்வு பெற்றுள்ள பாடல்களுள் 'வியாதியஸ்தர் விண்ணப்ப மாலை' என்னும் பகுதியில் அடங்கும் பாடல்கள் சிலவும் சேர்க்கப்பட்டுள்ளன.*

## கிறிஸ்தேசு தம் சீஷருக்கு கற்பித்த அனுதின மாதிரி ஜெப கீதம்

### கண்ணிகள்

1

பரமண் டலங் களிலி ருக்கும்
பரம தந்தையே நின்பெய ரார்
நரமக் கள்பரி சுத்தரா மாறு
நடந்து நல்வழி காண்பிப் போம்.

.2

இரு ளகற்றி யாள வரும்
இளம் சந்திரசூ ரியரே போல்
மரு ளகற்றி தேவ ராஜ்யம்
மலர்ந்து பெருகி டச்செய் வோம்

3

விண்ணி லென்றும் உமது சித்தம்
மின்என பிரவர்த் திக்கு மாறு
மண்ணி லுமுண் டாகத் தைரியம்
மல்கிம ருளாது முன்செல் வோம்.

4

நல்லார் பொல்லார் யாவ ருக்கும்
நலனே அளிக்கும் ஏகதந்தாய்
எல்லா ரோடு எங்க ளுக்கும்
ஈயும் அன்றன்று வேண்டும் ஆகாரம்

5

மற்ற வர்செய் குற்றம் நாங்கள்
மன்னிக்கும் அவ் விதமாயே
கொற்ற வர்நீரும் எம்பவத் தைக்
குடைந் தகற்ற வேண்டுகின்றோம்.

6

முச்சத் துருக்கள் சோத னையுள்
முழுகி டவி டாது காத்து
இச்சை யாதி தீமை நின்று
ரட்சித் தாளும்எந் நாளு மே.

7

ஈறில் லாத ராஜ ரீகம்
எல்லா வல்ல மையு டன்
மாறா நித்திய மாம கிமையும்
வானபி தாவாம் உம்மதே ஆமென்.

## விசுவாசப் பிரமாண அறிக்கைக் கீதம்

### கண்ணிகள்

1

வானம்பூமி யாவற் றையும்
வகுத்த வல்ல பரனை
ஞானாச் சரிய தந்தை யேயென
நம்பு றேனெந் நாளும்

2

கோடா கோடி மக்க ளுளோர்
கோம கவென வந்து
ஏடா குடத் தேனையும் ஆள்வது
யேசே யெனநம்பு கின்றேன்

3

கன்னி கர்ப்பம் தேவா வியால்
காயம் ஏற்றுப் பிறந்து
கண்கா ணிபி லாத்துகீழ் எமக்காய்க்
கழும ரப்பாடும் பட்டார்.

4

மரித் தடக்கம் பண்ணப் பாதலம்
மன்னி மூன்றில் எழுந்தார்
பரமண் டலம் போய்ப் பிதாவின்
பாரி சமே வீற்றார்.

5

வால றிவன் பரி தாப
மக்கட் காய் மன்றாடி
ஞால மீதே நடுத்தீர்ப் பதையும்
நன்கு நம்பு கின்றேன்

6

பரம்ப தேவ ஆவி ஆண்டு
பாவ கனாய் நின்று
பரிசுத் தரை ஒன்று சேர்க்கும்
பான்மை நம்பு கின்றேன.

7

தோஷ மாம்ப வம் போக்கி
துஞ்சும் ச டலம் எழுப்பி
சாயுஜ் யப தவி ஈயும்
சலுகை நம்புகின் றேனே

## திரித்துவ விசுவாச விண்ணப்ப மாலை

### கண்ணிகள்

1

வானம் பூமி யாவற் றையும்
வகுத் தாளும் வல்ல தந்தாய்
தான மிழந்த பாவி யேன்
தயங்கி வாடும் பிள்ளையே யாய்
தீன குரலில் 'தந்தையே'யென
சேவடி சேரும் போ தெல்லாம்
ஈன்றாள் மகவுக் கீயு மாறே
இன்ப சுகமீந்து காத்திடும்.

2

ஏக நாதன் ஆனகி றிஸ்தே
என்னை ஆளுமா றொப்பு வித்து
சாகா ஜீவன் சுவீ காரம்
தைலாபி ஷேகமும் பெற்றணிந்து
வாகான நின்நாமம் பரத்தினில்
மலர்ந்து பரிமளிக்கு மாறு
பாங்காக இகத்து மேகம ழவெனைப்
பரிசுத்தமாய் ஒழுகப் பண்ணும்.

3

ஏசுக்கி றிஸ்தவ தாரத் தொண்டில்
ஈனன் யானுமே பின் தொடர்ந்து
ஆசா பாசம் குருச றைந்து
ஆங்கார கர்வம் க்ஷேமிக்க
ஆகாச லோகில் உமது ராஜ்யம்
ஆதிக் கம்பெறு மாப்போலே
மோசப்பூ லோகில்உம் காருண்யா கிரஹமே
முனைந்து பெருகச் செய்யும் ஐயா.

4

மரித் துயிர்த்தெழுந்த அவர்
வல்லபி தாபாரி சம்வீற் று
பரிந்து மன்றாடி மக்களைத் தேற்றிப்
பாருளோர் நடுத்தீர்ப்பிடுவரால்
பரத்வ சேவையில் யானும்பங் குபெறப்
பாத்திர னாய்அரோகணித்து
நர காக்கினை தப்புமாறு
நாட்டிடும் என்னில் உம்சித்தம் ஐயா.

5

தள்ளா டுலகை யேநிரப்பி
தாசர்உள் ளம்ஆளும் அரூபியே
வள்ளலாய் நித்திய ஜீவன் ஈயும்
வற்றாக் கருணைக் கடலே போல்
பிள்ளைக ளேயானோர் ஆவி யுடல்
பிழைக்க வான்அப் பம் அருளி
தள்ளையே போல்எ மைத் தாங்கித்
தந்தைஅண் ணலெனத் தேற்றிடுவீர்

6

அறநெ றிபடு சங்க மே
ஆவியின் ஆஸ்தான மான தால்
அனை வரும்சுத் தாங்கம் பெற்று
அரிய நல்வரம் தாங்கும்படி
மற்றவர் குற்றம் யான்அடி யேன்
மன்னிக்கும் அவ் விதமாயே
கொற்றவர் நீரும் எம்பவத் தை
கோபித் தகற்ற வேண்டுகின்றேன்

7

இம்மை மறுமைப் பரிசுத்தர்
இசைந்தொழுகும் சேவையில்
உண்மைவி சுவாசம் வைத்திருக்கும்
ஊமை யேன் மனுக் கேட்டருளி
திம்மை சோதனைக் குட்படா வாறு
தீர்க்க பந்தோ பஸ்த்த ருளி
வன்மைப் போரிலும் தீயோனை ஜெயிக்கும்
வரம் தந்தருள வேண்டுகின் றேன்

## கிறிஸ்தேசுவின் ஜீவிய விருத்தாந்த கீர்த்தனை

**('தேவனே நான் உமதண்டையில்' என்ற கீர்த்தனை மெட்டு)**

**பல்லவி**

கடவுளின் அன்பைப் பாருமேன்
    கப டற் றோரே
படல மாம்பு லன்கள் கட்டியே

**அனுபல்லவி**

திடமதாக நம்பு வீரேல்
    தீர்க டையற்ற ஜென்ம மின்றி
இடை யறாது களிக்கச் செய்யும்
    இறைவன் அடி சேர்வீர் இன்றே

**சரணங்கள்**

1

வானம் பூமி மக்க ளையும் தன்
    வாக்கு வன்மை யால்
ஞானா னந்தர் நிருமித் தான பின்
    தானம் சாத்தா னால்கெட் டப்போ
தந்தை மிக்க ஜீவ வள்ளல்
    தானே தவ்வி னோர்பால் கிருபை
தக்க வாறு பொங்கி நின்றார்.

2

பத்த முள்ள பரதர் நாட்டை யும்
    பாலிக்க வென்று
நித்யா னந்தர் தம்சு தன்றாந் தார்
    நித்ய பரிசுத்த சுதன்
நீசர் வேடம் பூண்ட செய்தி
    நிஷ்களங்க தூதர் கொண்டு
நிலவச் செய்தார் மேய்ப்ப ருக்கும்.

3

பெத்த லையூர் மாட்ட கத்தி லே
    பிறந்த பாலன்
முத்தர் சாலேம் பள்ளி கண்டு மே
    வித்யா தரர் போற்ற பலி
வினி யோகித் தகன்ற வரை
    வித்த கரா யர்மூ வரும்
வீடு தேடித் தண்டம் செய்தார்

## கிறிஸ்தேசுவின் உபதேச ஆராய்ச்சி மாலை

### மத்தேயு 13:3-23. மனுஷ உள்ளம் நாலுவகை நிலம் போன்றது

### கண்ணிகள்

1

வெகு காலப் பழக்கத் தான
வெட்டாந் தரை வெட்டி
விருதாத் தர்க்கம் காலப் போக்கு
வெறுத்துத் தள்ளு வீரே! (1 தீமோத்தேயு 6:3-5)

2

அகங் காரம் மேல் இகழ்ச்சி
ஆன பார் அகற்றி
ஜெகத்து ரட்சகன் சிந்தின ரத்தத்தால்
ஜீவ விருட்சமே ஆவீர்! (வெளி 22:1-5).

3

தன் நலத்தார் பொய் வார்த்தை
தனவேட் கையாம் புதரால்
தன்னைத் தந்தா னோடுற வாடும்
சாத்தியம் கெடல்கூ டாதே.

4

போதனைக் கிணங்க மாட்டா மகனும்
போதனை ஆய்ந்த பின்னால்
போதனைக் கேற்கச் சாதித்து விட்டதைப்
புகழ்ந்து கொண்டானே தந்தை (மத்தேயு 21.28-31)

5

போதனை மறந்த ஆதம்ஏ வையரைப்
புறக் கணித்த உடையார், (ஆதியாகமம் 3:17-24)
வேதனை படுத்து பாழ்நிலம் பார்த்தால்
விடுவரோ உம்மையும் சும்மா!

6

உற்பத்தி ஊக்கம் கட்டிட ஆக்கத்தில்
உயர் எகிப்து சேர்த்து—(பின்)
கற்பனைபத்தால் ஆளோட்டு பணியாற்றக் (ஆளுகை)
கையடை ஆவரே தாமும்! (அடைக்கலம்)

7

நான்காம் சுவிசே ஷத்தால் தன்தலை
நசுங்க வில்லை யேல், (ஆதியாகமம் 3 15)
உன்காலைத் தப்பாமல் சாத்தான் நசுக்குவான்
உணரா யோதே சிகா!

# லூக்கா 10:25-37. அன்பின் தன்மை பற்றிய நல்ல சமாரியன் உவமை

## கண்ணிகள்

1

பணப்பை யோடுதன் பாதை சென்ற
தனிப் பட்டஓர் யூதன்
குணக்கே டரால் பட்டப் பகலில்
கொழித்துத் தள்ளப் பட்டான்.

2

ஆசா ரியன் போக்கி லேனோ (கலாத்தியர் 6:6)
அகதி தன்பிழை ஓர்ந்து,
மேசி யாவை மனதில் பூஜித்து
மீட்பு மார்க்கமும் கண்டான்!

3

தொண்ணூற் றொன்பது ஆடுக ளையும்
தொழுவத் திலேயே விட்டுக்
காணாமற் போன ஓர்ஆட்டைத் தேடிக்
கண்டு களித்தானே மேய்ப்பன்.

4

பணமோ கத்தால் பெற்றோர் மற்றோர்
பற்றற்றுப் போனமக் கட்கு
அணிகலப் பற்றால் உப்புத்தூண் ஆன (ஆதியாகமம் 19:26)
அம்மை கதிகாட்டு வீரே.

5

சிரமத் தோடு மிகுத்த பணத்தை
கிராமப் பாங்கில் இட்டால்,
திருடர் சோம்பரும் ஆக்க வழிகண்டு
சீரடை வரேஓர் அளவு!

6

இளைஞன் சிற்றுண்டி வனாந்த ரத்தில்
ஏசுகை பட்டப் போதே
ஏராள மானோர்க்கு ஆகார மாய்ப்பின்னும்
எடுத்தாரே பன்னிரு கூடை. (யோவான் 6.9-12)

7

கொள்ளை பொருளைத் திருடின ஆகான்
கொலை யுண்டு மாண்டான்,
குற்றுயி ராக்கிப் பறித்திட் டபணம்
கூத்தாடா தோஅரங் கத்தில்? (யோசுவா 7 19-26)

8

நீசமக் கட்காய்த் தன்னைத் தந்தானின்
நேசத்தை நோக்கும் மக்கள்
நிச்சய மாய்அவர் சேவா சமுத்திரம்
நீத்திடு வரேஎந் நாளும்!

## லூக்கா 15:10-32. நல்ல தந்தையும் கெட்ட மகனும் பற்றிய உவமை

### கண்ணிகள்

1

பிறந்த வீட்டில் பொருத்த மில்லை
பிள்ளை இஷ்டத் திற்கு
பிரிந்து போறேன் தூர தேசம்
பேரம்வேண் டாம்என்ற இளையான்.

2

குடும்பங் கெட்ட மாதர் சேர்க்கை
குடிசூ தாட்ட வெறியால்
புடைக் குரங்கு போ லாய்ப்
பொறாமைக் கும்ஆள் ஆனான்!

3

பட்டி னியின் றிப்பி ழைக்கப்
பட்ச ணமு மின்றி
குடிய னான ஜோகி யண்டை
கூலி ஆளும் ஆனான்!

4

தந்தை தெய்வ நிந்தை யாலே
வந்த இந்தக் கேட்டைத்
தந்தை யிட மேதி ரும்பிச்
சிந்தத் தீர்மா னித்தான்!

5

வேலை யாட்கள் நூறுபே ருள்ஓர்
விடு கூலி யாக்க
ஓல மிட்டானைத் தந்தை முத்தி
ஒண்ணா தென்றழு தானே!

6

துன் மார்க்க ரோடுற வாடல்
தோஷமாம் என்றீரே தந்தாய்!
உன்மத்த னோடு ஒற்று உழைக்க
ஒண்ணா தென்றான் மூத்தான்!

7

இளைய சகோ தரர்எக் காலுமே
ஏகோ வாவின் அருளை
வளமாய்ப் பெற்று வாழ்ந்திருப் பதை
மறக்க ஒண்ணாதே மூத்தார்!

8

புதல்வர்க் கேனோ பெற்றோர் தனமெனப்
புகா ரிடுபெண் மக்காள்!
புதல்வி அக்ஸாளுக்குக் காலேப்
புலமும் ஈந்தனன் அன்றோ? (நியாயாதிபதிகள் 1 15)

## வியாதியஸ்தர் விண்ணப்ப மாலை

### விருத்தங்கள்

1

பாவம கனிழந்த பாகம் அளித்து
பாட்டை அகதிபட்ட காயம் ஆற்றி
சிறுவன்நோய் சிறுமிபேய் வரக்கண் குஷ்டம்
திமிர்வாதம் பெரும்பாடு தீர்த்தொழித் தீரே!
ஆவிசு தன்பி தாவே இன்றும்
பாவிதோ ஷம்தீர்த் தரவணைப் பீரே!
ஆவி யாம்திரி யேக நாதரே!
பாவிதோ ஷம்நோய் பறக்கடிப் பீரே —ஸ்வாமி

2

பவத்தந்தை சவுல்பாட்டை பரஞ்சுட ரானநீர்
பக்தாளை பாதுகாக்க பசியகி ழையுமானீர்!
அனைவரும் அண்டத்தக்க அருணோ தயமாய்
அண்டினோர்க் குஇம் மானுவேலு மானீர்!
தாவிநீரே தரிசித்த தசக்குஷ்டர் குருடனும்
தாவியே உம்மகிமை தரிசிக்கச் செய்தீர்!
பாவியேன் உள்ளம் பரிசுத்த மானதில்
பரஞ்சோதி யாய்இன்றும் பாதைகாட்டு வீரே! —ஸ்வாமி

## மேல்கண்ட பாக்களின் தியான மாலை

### கண்ணிகள்

1

அந்தம் கெட்ட மகனை அணைத்து
அழுதவன் கண்களை முத்திசெய் தாற்றி
இழந்தத னம்சுகம் யாவுக்கு மேலாய்
இறைத்துக் களித்தீரே ஏக தந்தாய்!

2

பரிதாப யூதன் எதிர் பாராத
பரிகாரி பொக்கிஷ தாரும் ஆனீர்!
பாரில்ஒப் பற்றஉம் காருண்ய சேவையால்
பாவிக்கு மாமலை சஞ்சீவி யும்ஆனீர்!

3

ரோமச் சேனாபதி விஸ்வாசத் தால்ஆளைப்
பாராதே ஜீவனும் சுகமும் ஈந்தீர்
கானான்யத் தாய்தாழ் மையால்ம களைக்
காணாதே பேயைத்து ரத்திஓட் டினீர்!

4

பெற்றோர்க் கிரங்கி மக்கட்கு வரங்கள்
பெருக்க மாய்த்தானே ஈந்தீர் என்றாலும்
பெற்றோர்இ ழந்தமற் றோருக் கும்நீர்
உற்றமா தாபிதா சுற்றமும் ஆனீர்!

5

நானேமக் கட்கான ஜீவஒ ளியென்றீர்
ஞான ஒளியான தேவ ரீரே!
வானொளி யற்றக போதியர் கண்களை
வாளாவி டுவது உம்சித்த மன்றே!

6

சாத்ராக் உட்பட்ட தாசர்கள் மூவரை
சூளையில் தரிசித்த அவ்வித மாயே
பத்துக்குஷ் டரான கூட்டுற வாளரைப்
பாலைவ னக்கிரா மத்தில்சந் தித்தீர்!

7

குடும்பம்இ ழந்தஅப் பத்துக் குஷ்டரின்
கூப்பாடு கேட்ட அந்தச் சணமே
நடக்கச் செய்த பத்து மைலுள்
நற்சுகத் தோடு தேஜசும் ஈந்தீர்!

8

பாவத் திமிரால் பலவீனர் ஆனோரை
படுக்கை தூக்கி நடக்கவும் செய்தீர்!
பாவவி மோசனம் பூரண ஜீவனில்
பங்குண்டே மீட்கப் பட்டஎ மக்கும்.

9

மங்கை யர்பகி ரங்கமாக் கொணாப்
பங்கத்தை முன்னரே போக்க டித்து
மன்னிப்பைப் பின்னால் ஈந்தக ருணையில்
மைனர்ள மக்கும் பங்குண்டே ஸ்வாமி!

10

ஏங்கித் தவித்தய வீருமார்த் தாளுக்காய்
ஈந்தீர் இருமக்கட் கான உயிரை
வாக்குக் கடங்கா மன்பதை மீட்க
மரணத்தி கிலோட்டிப் பரதீசும் திறந்தீர்!

11

வான்மேகம் ஜலத்துள் மறுமக்க ளானோரை
மாசற்ற உம்ரத்தத் தாலும் மீட்டீர்!
வான ராஜ்யவி ரோதிக்கு எம்மை
மறைத்தணைத் துக்காரும் மாதிரி யேகா!

12

தாசர்க்காம் ஜீவஆ காயமாய் எம்முள்
தங்கும் திரியேக நாத சுவாமி
தாசர்க்க திமிக்க வரங்கள் தந்தநீர்
சாத்தா னின்தடை தகித்தோட் டிடுமே!

13

மரணத்தி னாலேயே பாவத்தைப் போக்க
மறைத்திட் டீர்ஜீவ விருட்சத் தையும்!
மரணத் திகிலில் மக்களைக் காக்க
மாற்றிவிட் டீர்சவுல் போக்கை யுமே!

14

ஆதம்ச வுலுக்கு அக்னிச் சுடராய்
யூதர்க்கோர் மேக ஸ்தம்பமா னனீர்
மாதர் குஷ்டர் வாதர்பித் தர்க்கும்
மருளோட் டும்அரு ணோதயம் ஆனீர்!

15

பேதுரு யாக்கோப் யோவான் போல்வர்
பெற்றமா தாபிதா பெத்தனி மூவர்
சீரடை மகன் சோரன்போல் வார்க்கும்
சீராளும் இம்மானு யேலரும் ஆனீர்!

16

குருவே அண்டிக் குணம் அளித்த
குருடன் வாதன் குஷ்ட ரையும்
பகிரங்க மாய்த்தானே பின்னால் ஏனோ
பணிந்து போற்றிக் களித்திடச் செய்தீர்?

17

ஆவி ஜலம்இ ரத்தத்தால் ஆன
அபிஷேகம் வானாக்னி பெற்ற நாளாய்த்
தாவி எம்முள் அருணோ தயமாய்த்
தங்கிப் பகல்இரா பாதைகாட் டலையோ!

18

என்னைவிட் டுவேறு யாரண்டைப் போறீர்
என்அண்டை மணிநேரம் விழித்தீ ரீரோ''
என்ற உம்அனு தாபநி லைப்படும்
ஏழைமக் கட்குஇ ரங்கா தீரோ?

19

ஊர்ஆழத் துரவில் ஊண்அற்ற ரேவில்
ஊர்வசி தாகத்தை ஊழியர் பசியை
உமதாக் கிக்கொண்ட ஒப்பற்ற நாதா
உமதாக்க மாட்டீரோ எம்தேவை யைஎன்றால்

20

ஏன்என்னைத் தேவரீ ரேகை விட்டீர்?
என்றஉம் மன்றாட்டை எம்கீதம் ஆக்கி,
ஏன்என்னை சவுலே இம்சிக்கி றாய்? என
ஏழைமக் கள்பதி லாள்ஆனீ ரேஆமென்!

21

அலைமோது மோசேச வுலுமே உம்மை
அடித்திட்ட ஆத்திரம் மோசம் ஆனாக்கால்,
அல்லும் பகலும்மன் றாடிஜெ யித்திட்ட
யாக்கோப் யோசேப் பக்திமே லேஎன்பேன்!

22

இருவர் ஒருமித்து என்மூலம் கேட்பதை
'ஈவரே தந்தை' 'ஈவன்நான்' என்றீர்,
ஏகப ராபரா என்மன வாசா
ஏழைமக் கள்தேவை யாவும்ஈ வீரே!

23

நசரேயன் ஆகிய ஏசுவின் ரத்தத்தில்
நாளும் நல்ஆவி எமைமுழுக் காட்டிட
நைந்தகண், செவி, நாவே, நலிகரம், கால்களே
நாசகா லன்ஓட்ட நன்றிகீ தம்பாடும்



# 20

# கிறிஸ்துவின் அருள் வேட்டல், கிறிஸ்து மொழிக் குறள்

ஆசிரியர்: திருவாரூர் வி. கலியாணசுந்தரனார் (1883-1953)

அறிமுகம்: தி. தயானந்தன் பிரான்சிஸ்

இருபதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியத்திற்கும் தமிழ் மக்களுக்கும் அருந்தொண்டாற்றியவர் தமிழ்ப் பெரியார் எனப் போற்றப் பெறும் திரு.வி.க அவர்களாவார். இளமைக் காலத்திலிருந்தே கதிரைவேற் பிள்ளை முதலிய தமிழறிஞர்களிடம் முறைப்படி தமிழ் பயின்று சமய நூல்களையும் ஆர்வத்தோடு கற்று, கிறிஸ்தவம் உள்ளிட்ட சமயங்களில் பேரார்வம் கொண்டு ஆழ்நிலை ஆய்வுகளிலும் ஒப்பியல் ஆராய்ச்சிகளிலும் ஈடுபட்ட பெருமை அவருக்கு உண்டு. ஏறத்தாழ நூறு நூல்களை அவர் எழுதி வெளியிட்டுள்ளார். உள்ளொளி, பரம்பொருள் அல்லது வாழ்க்கை வழி, முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை முதலிய பெரு நூல்களில் தம்முடைய புலமையை வெளிப்படுத்தியிருப்பதோடு பொதுமை நெறியையும் புலப்படுத்தியுள்ளார்.

தமிழ்ப் பேராசிரியராக ராயப்பேட்டை வெஸ்லியன் கல்லூரியில் பணியாற்றியதோடு சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டவராய் ‘நவசக்தி’ என்னும் இதழை நடத்தியுள்ளார். நம் நாட்டில் முதன் முதலாக முறைப்படி தொழிற்சங்கம் நிறுவிச் சென்னையில் பின்னி, சிம்சன் ஆகிய நிறுவனத் தொழிலாளர் நலம் கருதிய போராட்டங்களை நடத்தினார். தமக்கென ஒரு நடையை ஏற்படுத்திக் கொண்டு அதைச் சமய - சமுதாய - இலக்கிய மேடைகளில் முழக்கி அறிமுகப்படுத்தியவர் அவர். ‘தமிழ்த் தென்றல்’ என்ற சிறப்புப் பெயர் சூட்டப் பெற்றவர். எழுத்து நடையிலும் எளிமை, சீர்மை, செழுமை ஆகியவற்றோடு எடுப்பு, மிடுக்கு ஆகியவற்றை இலக்கியச் சுவையோடு சேர்த்தவர்.

திரு.வி.க. பல கவிதை நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் பெரும்பான்மையானவை அகவற் பாக்களாக அமைந்தன. கண்பார்வை மங்கிய காலத்தில் ஆங்கிலப் பெருங்கவிஞர் ஜான் மில்டன் போன்று மனத்தில் ஊறிச் சுரக்கும் கருத்துகளை நினைவில் பதித்துப் பின் வாயுரையாகப் பல நூல்களை மொழிந்துள்ளார்.

திரு.வி.க. வின் இதய வேட்கையுணர்வைத் திறம்பட எடுத்துரைக்கும் வரிசையில் சிவனருள் வேட்டல், திருமால் அருள் வேட்டல், பொதுமை வேட்டல் ஆகியவற்றோடு கிறிஸ்துவின் அருள் வேட்டல் என்ற நூலும் அடங்கும். கிறிஸ்து பெருமானிடம் அவருக்கிருந்த உள்ளன்பு எத்தனை ஆழமானது என்பதற்கும், அவருடைய மலைப் பொழிவிலும் பிற அறவுரைகளிலும்

எந்த அளவுக்கு ஈடுபட்டு அவருடைய அன்பினுக்கு ஆட்பட்டவர் திரு.வி.க என்பதற்கும் இந்நூல் தகுந்த சான்றாகும். 'தொழிலாளி மகனாக', 'தொழுவத்தில் பிறந்தோராக', 'தொழுநோயர்' உள்ளிட்ட பல்வகைப் பிணியாளர்க்கும் வாழ்வளித்தோராக இயேசுவைக் காண்கின்றார்.

இயேசு கிறிஸ்துவின் சிலுவை அன்பை வியந்து போற்றி உள்ளம் உருகிப் பாடியிருக்கிறார்.

*''ஆணியில் சிந்திய சென்னீரே*
*அகிலம் புரக்கும் நன்னீரே''*

*''சிலுவையில் நின்ற செழுங்கோலம்*
*சிந்தையிற் படிந்திடின் நறுஞ்சீலம்''*

போன்ற கண்ணிகள் குறிக்கற்பாலன. அதோடு கிறிஸ்துறவு நிலையிலும் ஈடுபட்டுக் கிறிஸ்தவ பக்தர்களின் மொழியிலே தம்முடைய அனுபவத்தை,

*''என்னுள்ளே நீபிறந்தாய் ஏசு பெருமானே*
*உன்னுள்ளே யானிறந்தேன் உற்று''*

*''இயேசுவே என்றதும் நெஞ்சுருகும்*
*எல்லாப் பாவமும் இரிந்தருகும்''*

*''கிறிஸ்து கிறிஸ்து என்போமே*
*கிட்டிய பாவம் பின்போமே''*

என்று பலபட எடுத்துரைக்கின்றார்.

திரு.வி.க. 1947 இல் எழுதியுள்ள 'கிறிஸ்து மொழிக் குறள்' என்ற நூலும் அவர் தமிழ் இலக்கியத்திற்குப் பொதுவாகவும் கிறிஸ்தவத் தமிழ் இலக்கியத்திற்குச் சிறப்பாகவும் அளித்துள்ள அருங்கொடை எனலாம்.

இந்நூலின் முன்னுரையில் இவ் அறிஞர் தம் உள்ளத்தை இங்ஙனம் திறந்து காட்டுகின்றார்:

*''இயேசு மொழியும் இனியதிரு வாசகமும்*
*நேச அருட் பாவுமென் நெஞ்சு''*

ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் மலைப் பொழிவில் மலர்ந்த மணிமொழிகளையும் பிற அன்புரைகளையும் 315 குறட்பாக்களில் வழங்குகின்றார் திரு.வி.க.

*''மலைஆற வைத்த மலரடிகள் நெஞ்சில்*
*சிலைஆக; என்னுள் சிறந்து''*

*''வரையேறி ஏசு மழைபொழிந்த வெள்ளம்*
*நிரையேற மூழ்குவதே நெஞ்சு''*

முதலிய பாக்களில் மலைப் பொழிவாளரின் மாண்பினைப் போற்றுகின்றார்.

ஆண்டவரின் அருள் மொழிகளை நற்செய்தி நூல்களில் தரப்பட்டுள்ளவாறே வழங்கும் திரு.வி.க.வின் சில குறட்பாக்களின் வழங்கு முறையும் நயப்பாங்கும் நம்மைக் கவர வல்லவை.

*"நீதியரை அல்லஅல்ல நீணிலத்துப் பாவிகளை*
*ஓதி அழைக்க வந்தேன் உற்று"* (196)

*"ஓராடு நூறாட்டில் ஒன்றா தொருவினால்*
*பாரானோ மேய்ப்பன் பரிந்து"* (202)

*"பெண்ணேஉன் பாவங்கள் பெற்றன மன்னிப்பை*
*எண்ணாதே பாவமினி ஏகு"* (287)

போன்ற அடிகள் அதற்குத் தகுந்த சான்றுகளாக அமையும்.

பூவிருந்தவல்லியின் அருகிலுள்ள துள்ளம் என்னும் ஊரில் 1883 ஆம் ஆண்டு பிறந்த திரு.வி.க. 1953 ஆம் ஆண்டு வரை வாழ்வாங்கு வாழ்ந்தவராவார்.

## கிறிஸ்துவின் அருள் வேட்டல்

### 1. மாசு மனிதம்

மாசு மிகுந்த மனிதஇருள் போக்கவந்த
ஏசு உனைமறவேன் என்று 1

கன்னி வழிமலர்ந்த கற்பகமே என்னுயிரே
முன்னி உனைஅணைந்தேன் முன். 2

ஆசைக் கடல்விழுங்க ஆளானேன் அப்பாஉன்
நேசம் மறித்ததுவே நின்று. 3

பிழைபொறுக்குந் தெய்வம், பெரும!நீ என்றே
குழையுளத்தால் நானடைந்தேன் கொள். 4

வன்பேய் முனைப்பழித்த வள்ளல் கிறிஸ்துவே
உன்சேயாய் வாழ்வேன் உணர்ந்து. 5

ஆணி அறைந்தவர்க்கும் அன்பான தெய்வமே
தோணிஎனக் காவாய் தொடர்ந்து. 6

சிலுவையும் ஆணியும் செந்நீரும் நெஞ்சில்
நிலவுந் தவமே நிறை 7

என்னுள்ளே நீபிறந்தாய் ஏசு பெருமானே
உன்னுள்ளே யானிறந்தேன் உற்று. 8

உன்குருதி மூழ்கினேன் உய்ந்தேன் திருக்குமரா
என்குருதி எங்கேயோ ஏது 9

வெள்ளை உடையும் மலைப்பொழிவும் என்னுள்ளக்
கள்ளம் அழிக்குங் கலை. 10

## 3. அலகிலொளி

அலகிலொளி ஐயாவே
அகிலமெலாம் உன்கருவில்;
உலகிடைநீ ஒருகன்னி
உயர்கருவில் உதித்ததென்னை?
சிலைநுதலார் உலகினிலே
செறிந்தஇழுக் கொழித்தவர்தம்
நிலைமையினை வளஞ்செய்ய
நினைந்ததுவே நெஞ்சினிலே. 1

எவ்வுயிர்க்குந் தாயான
இறையவனே இவ்வுலகில்
செவ்வியலி ஒருதாயின்
செழுங்கையில் வளர்ந்ததென்னை?
எவ்வுயிருந் தாயன்பை
எய்திவிடின் இறையுண்மை
மெய்ம்மழவில் பொலியுமென்று
விளம்புதற்கு வளர்ந்ததுவே. 2

பருவுடலை மறைத்தருளிப்
பரமவுடல் அடைந்தக்கால்
திருமகளிர் விழிக்கமுதச்
செழுங்காட்சி வழங்கியதென்?
திருமகண்மை உளமெய்தின்
தெய்வவுரு விளங்குமென்று
மருவுலகம் உணரகுரு
மகிழ்காட்சி வழங்கியதே 3

நெடுங்காலம் நஞ்சுமிழ்ந்து
நிலம்வதைத்த நீளரவர்
கொடுங்கோன்மை கொதித்த தென்னை?
குமராநீ பிறந்ததுமே
கொடுங்கோன்மை விழுத்தவந்த
குணக்கோவென் றுனைத்தெரிந்து
நடுங்கியதே கொடுங்கோன்மை
நலிந்துவரல் கண்கூடே. 4

பேய்மையிலா உலகிருந்து
பேயுலகிற் பிறப்பெடுத்துப்
பேய்புரிந்த சோதனையும்
பெற்றுவெற்றி அடைந்ததென்னை?
பேய்நிலத்தில் சோதனையுண்
டஞ்சாதே எனஅபயம்
பேய்மனத்து மக்களுக்குப்
பெரியவனே தெரிப்பதற்கே 5

மாடிமனை யிடைஏசு
மலரடியை வையாமல்
காடுமலை கடல்குடிலில்
கான்மலரை வைத்ததென்னை?
காடுமலை கடல்குடிலுங்
கடவுணெறி கூட்டியற்கை
வீடமைதி யெனவிளக்க
மேவியதே கான்மலரே 6

முடிசேர்ந்த முள்ளடுக்கும்
முகஞ்சேர்ந்த எச்சிலுமே
இடிசோரும் உரமுடையாய்!
இகலெழுப்ப விலைஎன்ன?
கடியாத பொறுமையன்புக்
கலைவளர வேண்டுமென்று
நடையாலே நாட்டுதற்கு
நல்லுளத்தில் எண்ணியதே. 7

சிலுவையிலே கிறிஸ்துஉனைச்
சேர்த்தாணி அறைந்தகொடுங்
கொலைஞரையும் பகையாது
குழைந்தருளைச் சுரந்ததென்னை?
பலியிரத்தம் முழுகிமனம்
படிந்துருகி மன்னிக்கும்
நிலவுலகம் படைப்பதற்கு
நினைந்தருளைச் சுரந்தமையே 8

ஒருகன்னம் அறைந்தவர்க்கு
மறுகன்னங் காட்டென்றும்
கருவியினால் வெட்டுபவர்
வெட்டுண்பர் கடியென்றும்
பொருநரையும் நேசியென்றும்
போதனையால் சாதனையால்
மருவவைத்த கிறிஸ்து! உன்றன்
மலரடியில் அடைக்கலமே. 9

வாளேந்திப் போர்புரிந்த
　　வாகையரும் மாண்டுவிட்டார்
வாளேந்தாக் கிறிஸ்துவேநீ
　　மரித்தெழுந்தாய் வீரவள்ளால்!
வாளேந்தும் வழியுழன்றேன்
　　வழிகண்டேன் மரித்தெழுவேன்
வாளேந்தா நெறிவளர்க்க
　　மலரடியில் அடைக்கலமே. 10

புரிசடை முடியும், பூந்துளி நுதலும்,
　　புவியுயிர்க் கிரங்கிய விழியும்
வரையினில் நின்று மறைபொழி வாயும்,
　　வளர்திருத் தாடியும், குருதி
சொரிசெழு மார்பும், சுடுமுளைக் காயம்
　　துலங்குகை கால்களும், சிலுவை
மருவிய வடிவும், மனமலர் ஜெபத்தை
　　வழங்கிய வள்ளல்! நீ வாழி.

## 7. ஏசு கிறிஸ்து

ஏசு கிறிஸ்து பெருமானே
எந்த உயிர்க்கும் அருள்வோனே. 1

கிறிஸ்து கிறிஸ்து என்போமே
கிட்டிய பாவம் பின்போமே. 2

கன்னி வயிற்றில் உதித்தோனே
கருணையை உலகில் விதைத்தோனே 3

உருவம் இல்லா ஆண்டவனே
ஒளியாய் என்புடல் பூண்டவனே 4

அன்பை அளிக்க வந்தோனே
ஆருயிர் உலகுயத் தந்தோனே. 5

குலைந்தது குலைந்தது கொடுங்கோன்மை
குமரா எழுந்ததுன் செங்கோன்மை 6

தீராப் பிணிகளைத் தீர்த்தோனே
தெவ்வரை அன்பாய்ப் பார்த்தோனே 7

குழந்தை உள்ளம் உணர்ந்தோனே
கோதில் வீடென் றுரைத்தோனே. 8

தெய்வக் குமர குருபரனே
சீவரைந் தாங்குஞ் செங்கரனே. 9

ஏசுவே என்றதும் நெஞ்சுருகும்
எல்லாப் பாவமும் இரிந்தருகும். 10

கண்ணே மணியே கற்பகமே
கான்முளை யாகிய அற்புதமே. 11

பெண்ணுக் குரிமை ஆக்கியவா
பெருநோய் தொழுநோய் போக்கியவா 12

ஆணியில் சிந்திய செந்நீரே
அகிலம் புரக்கும் நன்னீரே. 13

கிறிஸ்துவின் இரத்தம் பெருமருந்து
கேடில் இன்பம் தருவிருந்து 14

திருமலை பொழிந்தது சொன்மறையே
சிலுவை வழிந்தது செயன்முறையே. 15

சிலுவையில் நின்ற செழுங்கோலம்
சிந்தையில் படிந்திடின் நறுஞ்சீலம் 16

சிலுவை நுட்பம் உளத்தினிலே
சேர்ந்தால் விடுதலை அளித்திடுமே. 17

அமைதி அளிக்கும் அரசாட்சி
ஐயன் குமரன் அருளாட்சி. 18

மரித்தும் எழுந்த சத்தியமே
மரணம் இன்மையின் தத்துவமே. 19

வாழ்க கிறிஸ்து, போதனைகள்
வாழ்க சிலுவை, சாதனைகள் 20

## கிறிஸ்து மொழிக் குறள்

### தோற்றுவாய்

அன்பு

அன்பே இறைவனும் அன்பேநல் லாவியும்
அன்பே மகனுமொன் றன்பு 1

அன்பே குமரனும் அன்பே அவன்மொழியும்
அன்பே அவன்வழியும் ஆறு. 2

அன்பரசு கண்டருள அவ்வுலகம் விட்டிங்கே
அன்பு மகன்வந்தான் அன்று 3

கொலைஅரசு வீழ்க குமரனரு ளன்புக்
கலைஅரசு வாழ்க கதி 4

## 1. மலைமொழி

பேறு

ஆவி எளிமை அடைந்தவர் வாழிபரம்
மேவரசன் னாருடைமை மேல். 1

துயரால் அழுது துடிப்பவர் வாழி
அயராத ஆறுதல் ஆம் 2

பொறுமை உறைவோர் புகழ்வாழி அன்னார்
பெறுவர் புவிஉரிமைப் பேறு. 3

தூய்மைக்குச் சூழ்பசி வேட்கையர் வாழிஅவர்
வாய்த்தவர் உள்ளநிறை மாண்பு. 4

இரக்க முடையவர் இன்புற வாழி
இரக்கம் அடைவர் இனிது. 5

அகத்திலழுக் கில்லா அறவோர்கள் வாழி
இகத்திலுங் காண்பர் இறை. 6

நிறைசமா தானம் நிகழ்த்துவோர் வாழி
இறைமக்கள் ஆவர் இனிது. 7

நீதிக்குத் துன்பில் நெருக்குண்போர் வாழிபரஞ்
சோதி அரசவர் சொத்து. 8

என்பொருட்டுப் பொய்நிந்தை ஏசல் பழிசுமத்தித்
துன்புறுத்த, வாழ்வடைந்தீர் சூழ்ந்து. 9

அப்போ தகமகிழ்ந்தே ஆர்ப்பரிமின் ஏராள
வைப்பேறி மல்கிடும் வான் 10

அன்பு

நேசி அயலவனை நேர்ந்த பகைவனைக்
கூசிவெறு என்பதுமுன் கூற்று. 59

என்மொழியைக் கேளுங்கள் எங்கு முளஇறைவன்
அன்பென் றறிகவே ஆய்ந்து. 60

மாற்றாரை நேசியுங்கள் வாழ்த்துங்கள் சூளரைப்
போற்றார்க்கும் ஆற்றுங்கள் போற்று 61

மிக்க அபாண்டம் விளம்பி வதைப்போர்க்கும்
தச்சசெபஞ் செய்யுங்கள் சார்ந்து. 62

அப்பொழுதே மேலுலக அப்பனுக் குண்மைச்சேய்
இப்புவியில் ஆவிர் இயைந்து 63

நல்லார்க்கும் பொல்லார்க்கும் ஞாயி றெழஇறைவன்
எல்லார்க்குஞ் செய்கின்றான் இன்பு 64

நடுநிலையர் மற்றவர் நன்றுபெற மாரி
விடுகின்றான் தேவன் விழைந்து 65

நேயரையே நேசித்தால் நேர்பயன் என்னையோ
ஆயரும் செய்வ தது. 66

உடன்பிறப்பை மட்டும் உளம்வழுத்தின் என்னாம்
அடல்பெருக்கும் ஆயர்கோள் அஃது. 67

அப்பன் முழுஅன்பே அவ்வன்பே போலுமதும்
ஒப்பில தாதல் ஒழுங்கு 68

### கண்மூடி வழக்கம்

ஓய்நாளில் நோயை ஒழித்தல் தவறென்றீர்
ஓய்நாள் குமரற் குரித்து. 226

ஆழ்ந்த குழியில்தன் ஆடோடி ஓய்வுநாள்
வீழ்ந்தால் எடானோ விரைந்து. 227

ஆட்டிலும் மைந்தன் அதிமேலன் நோன்போய்வு
நாட்களிலும் நல்லசெயல் நன்று 228

ஓய்நாளில் காளை உதைகழுதை நீர்பருகின்
காய்வீர்கொல்? என்னே! கருத்து. 229

உஞ்சீடர் கைகழுவா துண்கின்றார் தீட்டன்றோ
துஞ்சு மரபென்றீர் தூர்ந்து. 230

புறவேடங் கொண்டீர் புறக்கணித்தீர் அப்பன்
அறமேவு கற்பனை ஆறு 231

பெற்றோரைப் பேணும் பெருமையைக் கைவிட்டீர்
கற்றீர் புறத்தீட்டுக் காப்பு! 232

புகுவது வாயுள் பொருத்தாது தீட்டை
உகுவதில் வாய்தீட் டுளது. 233

வாயுள் புகுதல் வயிற்றுள் செரித்துவெளி
ஆயிடல் நீர்அறிவீர் ஆய்ந்து 234

வாயின் வழிவருதல் வாழிடம் உள்ளமே
பாயும்பல் தீட்டுப் பரவு. 235

காரெண்ணம் கொல்லல்பொய் கற்பழிவு கள்ளநிந்தை
சேருள்ளம் தீட்டுச் செறிவு. 236

கள்ளர் மொழிகள் கரும்புளித்த மாவொக்கும்
கொள்ளற்க எச்சரிக்கை! கோது 237

வேதரிடம் எச்சரிக்கை! வேடம் புறவேடம்
தீது பெருமாயைத் தீட்டு. 238

மோசேயின் பீடத்தில் மோசரவர் வீற்றிருப்பர்
வாசகம் நன்றுநடை மாறு 239

மாச்சுமை ஏற்றுவர் மக்களின் தோளிலவர்
நாச்சுமை அன்றிவிரல் இல். 240

நாடாவை நீட்டுவதை நல்லங்கி தீட்டுவதை
வீடாக் கருதுகின்றார் வீண். 241

நீளங்கி பூண்டு நெடுவீதி போவருலா
தோளர் வணக்கேற்பர் சூது. 242

ஆலயத்தில் முன்னமர்வர் ஆர்விருந்தில் முன்னமர்வர்
ஓலமுண்டை வீடடைவர் ஓர்ந்து 243

பார்வைக்கு நீண்டசெபம் பண்ணுவர் தீர்ப்பினில்
சார்வர் கொடுந்தண்டத் தாக்கு 244

தன்னை உயர்த்துவோன் தாழ்வனே, தாழ்த்துவோன்
தன்னை உயர்த்துவோன் தான். 245

வெந்தயம் சீரகம் வேர்துளசி பத்திலொன்று
முந்தச் செலுத்துகின்றீர் மொய்த்து 246

கள்ளரே! விட்டீர் கருணையை நீதியை
உள்ள உறுதியை ஊறு. 247

உண்ணுங் கலனை உலுக்கிப் புறத்தூய்மை
பண்ணுகின்றீர் உன்னுமுட் பற்று. 248

கொள்கை அழுக்குக் குடிகொண் டுழல்கின்றீர்
உள்ளங் கழுவீரோ ஒத்து. 249

வெள்ளை அடித்த வெறுங்கல் லறைபோன்றீர்
உள்ளென்ன? என்புபிண ஓடு. 250

வெளிக்குப் புலனாம் வெறுநீதி, உள்ளம்
களிக்கும் வழுக்கழுக்குக் கள். 251

தூயரைக் கொன்றார், துணைநின்றார், நும்முன்னோர்
ஆயபழிக் கென்செய்வீர்! ஆசு 252

புறத்தைப் படைத்த புனிதன் அகத்தை
வெறுத்து விடுத்தானோ வேர்த்து! 253

உற்றன எல்லாம் உளங்கொண் டறஞ்செய்மின்
முற்றுமே தூய்மை முகிழ்ப்பு 254

மக்கள்முன் நீதியாய் வாழ்கின்றீர்! உம்முளத்தை
மிக்கறி வான்இறைவன் வேர். 255

மதிப்புறல் மக்கள்முன், வானப்பன் முன்னர்
அதிக அருவருப்பே ஆம். 256



# 21

## இரட்சகராகிய இயேசு நாதர்

**ஆசிரியர் : தே. அ. ஞானாபரணம் பண்டிதர் (1885 - 1955)**

**அறிமுகம் : யோ. ஞான சந்திர ஜாண்சன்**

இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றை அனைவரும் எளிதாகப் படித்துப் பயனுறும் வகையில் எழுதப்பட்ட நூல்களுள் 'இரட்சகராகிய இயேசு நாதர்' எனும் குறுங்காப்பியமும் ஒன்றாகும். இந்நூல் எளிமை, நயங்கள், வருணனைகள், தெளிந்த நீரோடை போன்ற கவிதை நடை ஆகிய பல்வேறு சிறப்பம்சங்கள் உடையது. மாணவர்கள் எளிதில் புரிந்து கொள்வதற்காகத் தேவையான இடங்களில் படங்கள் கொடுக்கப்பட்டிருப்பது இந்நூலின் மற்றுமொரு சிறப்பம்சமாகும்.

தே. அ. ஞானாபரணம் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள சேனம்விளை எனும் ஊரில் 1885 ஆம் ஆண்டு பிறந்தார். இவரது தந்தையார் தேவவரம் அருமைநாயகம் ஆவார். இளம் வயதிலேயே ஞானாபரணம் நாகர்கோவிலிலுள்ள பள்ளிக்கூடத்தில் கல்விபயின்றார். பின்னர் வித்துவான் தேர்வில் வெற்றி பெற்றார். படிப்பு முடிந்த பின்னர், தான் படித்த பள்ளியில், ஆசிரியராக நியமிக்கப்பட்டார். பின்னர் பெண்கள் பள்ளியிலும் நாகர்கோவிலிலுள்ள கிறிஸ்தவக் கல்லூரியிலும் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றினார்.

பின்னர் பாளையங்கோட்டையிலுள்ள சாராள் தக்கர் கல்லூரியில் தமிழ் ஆசிரியராகப் பணி புரிந்து வந்தார். இச்சூழலில் நீரிழிவு நோயினால் மிகவும் துன்பப்பட்டார். எனவே தமது ஆசிரியப் பணியிலிருந்து 36 ஆவது வயதில் விலகிவிட்டு நாகர்கோவிலில் ஞானாயி தெருவிலுள்ள ஞானவிலாசம் காம்பவுண்டில் தங்கியிருந்து நூல்களை எழுதி வந்தார். இலண்டன் மிஷன், லுத்தரன் மிஷன், இரட்சணிய சேனை ஆகிய பிரிவுகளிலுள்ள மிஷனெரிமார்களுக்குத் தமிழ் கற்றுக் கொடுத்தும் வந்தார். வடக்கன்குளம் வரை சென்று மிஷனெரிமார்களுக்குத் தமிழ் கற்றுக் கொடுப்பது இவரது வழக்கமாகும். நாகர்கோவிலிலுள்ள ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரியில் முதல்வராக இருந்த மார்ஸ்டன் துரைக்கும், நெய்யூர் மருத்துவமனையிலுள்ள மிஷனெரிமார்களுக்கும் இவர் தமிழ் கற்றுக் கொடுத்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

வேதாகமத்தைத் திருத்தியமைப்பதற்காக வேதாகமச் சங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட குழுவில் அங்கத்தினராக ஞானாபரணம் செயல்பட்டார். கிறிஸ்தவக் கீர்த்தனை நூலின் புதிய திருந்திய பதிப்பை உருவாக்கக் கிறிஸ்தவ இலக்கியச் சங்கம் 1947 இல் ஒரு குழுவை நியமித்தது. அக்குழுவின் தலைவர் எச்.ஏ. பாப்லி ஆவார். அக்குழுவில் எல்லாத் தமிழ்ச் சபைகளிலிருந்தும்

பலர் தெரிந்து கொள்ளப்பட்டனர். அவர்களில் தே.அ. ஞானாபரணமும் ஒருவர். கன்னியாகுமரிப் பேராயத்திலுள்ள பல்வேறு குழுக்களில் உறுப்பினராக இருந்தார். தென்சேகரத்துக் கவுன்சிலில் 25 ஆண்டுகள் உறுப்பினராக இருந்து பல ஆலோசனைகளைக் கூறிவந்தார்.

### படைப்புகள்

கீர்த்தனைகள் பல எழுதி அவற்றை ''இரட்சணியப் பாமாலை'' எனும் நூலாக வெளியிட்டார். இவர் நூற்றுக்கும் மேற்பட்ட திருமணப் பாடல்களையும், குடிவெறியின் கெடுதி, அமிழ்தினும் இனிய தமிழ்மொழி, குணபதி - தனபதி எனும் உரைநடை நூல்களையும் எழுதியுள்ளார். மேலும் 'ஆகாத மகன் அப்சலோமின் வரலாறு' எனும் நாடக நூலைப் படைத்துள்ளார். இந்நூலிலிருந்து சான்றாக ஒரு பாடல்:

*''கொண்டையடி கொண்டை*
*அப்சலோமின் கொண்டை*
*தொங்குது பார் கொண்டை*
*கருவாலி மரத்தண்டை''*

### இரட்சகராகிய இயேசுநாதர்

இயேசு கிறிஸ்துவின் வரலாற்றை விளக்கும் ''இரட்சகராகிய இயேசுநாதர்'' எனும் நூலை மூன்று பாகங்களாக எழுதி ஞானாபரணம் வெளியிட்டார். முதல் பாகமான இளமைப் பருவமும், இரண்டாம் பாகமான சேவைப்பருவமும் இரண்டாம் பதிப்பாக 1950 இலும், மூன்றாம் பாகமான சிலுவைப் பருவம் இரண்டாம் பதிப்பாக 1951 இலும் வெளியானது. ''எளிய செய்யுள் நடை தமிழர் மனதை நன்கு கவரும் என்பதை எண்ணித் தெள்ளத் தெளிந்த விருத்தப்பாவில் இயேசுநாதரின் சரித்திரத்தை அமைத்துள்ளேன்'' என இந்நூலின் முன்னுரையில் ஆசிரியர் குறிப்பிடுகிறார். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை இந்நூலின் கையெழுத்துப் பிரதி முழுவதையும் மிக்க ஆர்வத்துடன் படித்து பல திருத்தங்கள் செய்துள்ளார். இந்நூலைப் பாராட்டிக் கவிமணி பாடிய வெண்பா பின்வருமாறு :

*''பாவ இருளகற்றும் பானுவாய் வந்துதித்த*
*தேவகுமாரன் திருக்கதையை - ஆவலொடு*
*ஞானாபரணம் நவின்றான் அழகாகத்*
*தேனார் தமிழில் தெரிந்து''*

1949 ஆம் ஆண்டு வெளிவந்த 'சத்தியசாட்சி' எனும் மாத இதழ் இந்நூல் குறித்துப் பின்வருமாறு குறிப்பிடுகிறது:

''இயேசு பெருமானின் சரித்திரத்தைப் பண்டிதரும் பாமரரும் போற்றும் வகையில் எளிய செய்யுள் நடையில் இயற்றித் தமிழ் இலக்கியத்திற்கும் இந்தியத் தமிழ்க் கிறிஸ்தவர்களுக்கும் அருந்தொண்டாற்றியுள்ளார் பண்டிதர் தே.அ. ஞானாபரணம் அவர்கள். செய்யுட்களில் சில சொல்லோவியமாய் விளங்குகின்றன. மனப்பாடஞ் செய்து பாடுவதற்கு எளிமையும் இனிமையுமாய் இருக்கின்றன.''

'இரட்சகராகிய இயேசுநாதர்' எனும் இந்நூல் குருபூஜையுடன் ஆரம்பமாகிறது. முதல் பாகமாகிய இளமைப் பருவம், பெத்லகேம் படலம், நாசரேத்துப் படலம், யோர்தான் நதிப்படலம் எனும் மூன்று படலங்களையும், இரண்டாம் பாகமாகிய சேவைப் பருவம் கலிலேயாப் படலம், யூதேயாப் படலம், சமாரியாப் படலம், உபதேசப் படலம் எனும் நான்கு படலங்களையும், மூன்றாம் பாகமாகிய சிலுவைப் பருவம் பெத்தானியாப் படலம், கெத்சமனே படலம், எருசலேம் படலம், கொல்கதாப் படலம், உயிர்த்தெழுதல் படலம் எனும் ஐந்து படலங்களையும் உடையது. இந்நூலில் மொத்தம் 415 பாடல்கள் உள்ளன.

நூலின் முதல் பகுதியில் கடவுள் வாழ்த்து என்பதற்குப் பதிலாக குருபூஜை எனத் தலைப்பிட்டு இயேசு நாதரை வணங்குகிறார். கம்பர், வீரமாமுனிவர், உமறுப்புலவர் ஆகியோர் இலக்கியங்களைப் படைக்கும்போது அதிலுள்ள நிகழ்வுகள் தமிழகத்தில் நடந்தவை போன்ற உணர்வினைத் தருகின்றனர். அவற்றைப்போன்று, பாலஸ்தீன நாட்டில் நடந்த நிகழ்வுகளைக் கூறும்போது தமிழகத்தில் நடந்தவை போன்ற உணர்வினை ஆசிரியர் கொணர்வது, அவரது இலக்கியப் படைப்பின் சிறப்பினை எடுத்துக்காட்டுகிறது.

யோசேப்பு, மரியாள், பன்னிரண்டு வயது நிரம்பிய இயேசு கிறிஸ்து ஆகியோர் நாசரேத்திலிருந்து எருசலேம் நகருக்குச் செல்கின்றனர். அவ்வழியின் இயல்புகளைத் தமிழக கிராமங்களுக்கு இடையே காணப்படும் வழியின் இயல்புகளாக ஆசிரியர் படைத்திருப்பது மிக அருமை. சான்று பின்வருமாறு:

*''கோபுரங் குளங்களாறு குன்றுகள் மேடுபள்ளம்*
*நேர்பட வளர்விருட்சம் நிறைந்த பூஞ்சோலைக்காடு*
*ஊர்தொறும் ஆடுமாடு உற்றநல் வயல் நிலங்கள்*
*சோர்பினை அகற்றுங்காட்சிப் பொருளென நேர்ந்ததங்கே''*

*''பயிர் நிலந்தன்னைப் பார்க்க, பச்சையாய்த் திகழ்ந்தது தோன்றும்;*
*அயர் வினையகற்றியோட்டும் அழகுறும் பறவைக் கூட்டம்;*
*உயர்மலை விலங்கு தூரத்தோடுவதுவப்பை யூட்டும்;*
*குயில்மயில் குறுக்கிட்டோடிக் குதூகலந்தனை விளைக்கும்''*

**வருணனை**

காப்பியங்களில் வருணனை காப்பிய வளர்ச்சிக்கும் காப்பியத் தன்மைக்கும் உறுதுணையாக அமைகின்றது. இவ்வருணனை காப்பியத்திற்கு ஊட்டம் அளிக்கும் வகையில் அமைந்து சிறக்கின்றது. கிறிஸ்தவக் காப்பியங்களில் நாட்டு, நகர வருணனைகள் குறிப்பிடத்தக்கன. பெத்லகேம் ஊரின் வளமையை,

*''காடெலாம் கழனி யங்கே! கரையெலாம் பயிர்கள் அங்கே!*
*நாடெலாம் உழவர் அங்கே! நடையெலாம் தழைகள் அங்கே!*
*மேடெலாம் மரங்கள் அங்கே! விளையெலாம் பழங்கள் அங்கே!*
*வீடெலாம் கறவை அங்கே! வெளியெலாம் பறவை அங்கே!''*

எனும் பாடல் மூலம் வருணனை செய்துள்ளது கவிஞரின் கற்பனையாற்றலுக்குச் சான்றாக அமைகிறது.

இயேசு நாதரின் வாழ்க்கை வரலாற்றை எளியமுறையில் மக்களுக்குக் கொடுப்பதே ஞானா பரணம் பண்டிதரின் இலக்கியக் கொள்கையாகும். இக்குறுங்காப்பியம் விருத்தப்பாவினால் எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. இந்நூலிலுள்ள பாடல்கள் படிப்பதற்கு இனிமையாகவும், மனப்பாடம் செய்வதற்கு எளிமையாகவும் உள்ளன. சில இடங்களில் 'சமுசயம்' எனும் வட்டார வழக்குச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். இதன் பொருள் சந்தேகம் என்பதாகும்.

சுருங்கச் சொல்லி புரியவைப்பது இவரிடம் இயல்பாகவே அமைந்துள்ளது. இயேசுநாதர் செய்த அற்புதங்களை நான்கு அடிகளில் மிக எளிமையாகப் பின்வருமாறு விளக்குகிறார்.

*"குருடர்கள் பார்க்கச் செய்தார், குஷ்டநோய் பறக்கச் செய்தார்;*
*செவிடர்கள் கேட்கச் செய்தார்; செத்தவர் பிழைக்கச் செய்தார்;*
*கபடரை அகலச் செய்தார்; கறைபவம் விலகச் செய்தார்;*
*இருடனை ஓடச் செய்தார்; இலகொளி கூடச் செய்தார்"*

இதைப்போன்று இயேசு நாதர் கற்பித்துக் கொடுத்த பரமண்டல ஜெபத்தையும் இரண்டு பாடல்களில் படைத்திருப்பது மிக அருமை. கிறிஸ்தவ இலக்கியங்களில் பரமண்டல ஜெபத்தைப் பாடலாகத் தந்திருப்பது மிகவும் அரிதாகும். மோனை, எதுகை யாப்புச் சிறப்புக்களை உடைய பாடல்கள் ஏராளம் உள்ளன.

இயேசு நாதரின் வாழ்வை இனிய, எ்ளிய நடையில் எளிதாகப் புரிந்து கொள்ளும் முறையில் படைத்துத் தந்துள்ள மக்கள் கவிஞர் ஞானாபரணம் பண்டிதர் 1955 ஆம் ஆண்டு காலமானார்.

## அதிகாரம் 2

### நாசரேத்துப் படலம்

44. எகிப்தினில் உறைந்த அந்த இஸ்ரவேல் குலத்தார் தம்மைப்
பகைத்த ஏரோது பொல்லாப் பாதகன் இறந்த நாளே
அகத்தினில் மகிழ்ச்சிபெற்றிவ்வழகு மைந்தனையும் கொண்டே
மிகத்திடனாகச் சென்றார் விளங்குமந் நாசரேத்தூர்.

45. நாசரேத் தென்னும் அவ்வூர் நனியழகமைந்த ஓரூர்;
தேசுயர் செபுலோன் என்னும் திகழ்மலைச் சாரல் அவ்வூர்,
மாசிறப்பமைந்த அந்த மலையின் மேல்ஏறி நின்றால்
காசினி அனைத்துமே நாம் காணலாம் கணத்திலேதான்.

46. வடதிசை கலிலேயாவின் வளம்பொலி மலை துலங்கும்
குடதிசை பெருங்கடல் ஓர் கோடெனும்படி விளங்கும்
திடமுறும்குன்றுஒன்று தென்திசை தனில் இலங்கும்
தொடுகுண திசையில் தாகோர் சுந்தரமலை மினுங்கும்

47. ஏருழும் உழவர் ஓசை எங்குமே நனி முழங்கும்.
பாருறும் பறவை எல்லாம் பாடி நன்றாய் முழங்கும்
ஊரடை சோலை வண்டும் ஓய்விலாதே முழங்கும்
நேர்மலை அருவி எங்கும் நிறைந்துகல்லென முழங்கும்.

48 குலைகுலையாய்த் திராட்சைக் கொடிகளில் பழங்கள் தொங்கும்;
மலை எனக் குவித்திருக்கும் மாதுளம் பழத்தை எங்கும்,
இலைகனி சுமந்தே அத்தி எனும் மரம் நனிவருந்தும்;
தலமதைப் பழவூர் என்று சாற்றினும் மிகப் பொருந்தும்

49. வீடுகள் விளங்கும் விண்ணின் மீதெழுந்துயர்ந்திலங்கி,
காடுகள் விளங்கும் புஷ்பக்காவென மலர் துலங்கி;
மேடுகள் விளங்கும் கானின் விருட்சங்கள் பலவும் ஓங்கி;
தோடுகள் விளங்கும் ஆழ்ந்த துரவெனத் தண்ணீர் தேங்கி

50. இயற்கையாம் அன்னை போற்றி எழுப்பிய அந்த ஊரில்
இயற்கையின் இறைவனான இயேசு நாதரும் வளர்ந்தார்;
இயற்கை தன் வனப்பை அள்ளி இறைவன்முன் குவித்துவைக்க
இயற்கையை நோக்கி நோக்கி இருதயந்தனில் மகிழ்ந்தார்.

51. பாரின் சீரியல்பை யெல்லாம் படித்தறிந்தா ரவ்வூரில்
யாரிலும் அறிவுபெற்றே இயற்கையாய்த் தேறினாரே!
பேருறும் உபதேசத்தில் பிறகவர் அழகாய்க் கோர்த்த
சீருயர் உவமையாவும் சேர்த்த தவ்விடத்தி லென்பார்

52 தன்னிகரில்லாத் தெய்வ தனயனை வளர்க்க நேர்ந்த
அன்னையார் மரியம்மாளும் அவள் கணவன் யோசேப்பும்
தன்னலங்கருதா அன்பர் தனிப்பெரும் உயர்வு பெற்றோர்
அன்னவராலும் தேர்ச்சி அடைந்தனர் இயேசுநாதர்

53. வேதபோதனைகளெல்லாம் விளக்கமாயூட்டி வந்தார்;
சூதுமாய் மாலமில்லாச் சுடரொளி காட்டி வந்தார்;
நீதியின் பாதை செல்லும் நிறை குணம் போற்றி வந்தார்
ஆதரவளித்து நாளும் அழகுறத் தேற்றி வந்தார்

54. எழுத்தறிவென்னும் கல்வி இளைஞராம் இவர்க்கு யூதர்
வழுத்திய ஆலயத்தில் வாய்த்தது நேர்த்தியாக;
அழுத்தினர் ரபிமார் வேத ஆகமப் படிப்பை நன்றாய்;
பழுத்தநல் ஹீப்ருபாஷை படித்ததில் நிபுணரானார்.

55 கைத்தொழில் மகத்துவத்தைக் கண்டறிந்தவர்கள் யூதர்;
எத்திறத்தோரும் கற்பார் யாதுமோர் தொழில் விருப்பாய்;
உத்தமவேலை சூதுயாதுமில் தச்சுவேலை
பத்தியாய்ச்செயலாம் என்றே பழகினன் அதில் யோசேப்பும்

56 உயர்தரமுற மரத்தை உருப்படுத்திடுவான் தச்சன்;
விலைநிலைஉயர்ந்தப்போது மேற்கதி மரமும்மேவும்;
இயல்பிலே உதவாதோரை எழிலுருப்படுத்தும்வேலை
செயவந்த இயேசுநாதர் சீர்தொழில் இதில் பயின்றார்.

57. பன்னிரண்டாவதாண்டில் பாலகன் "எருசலேமாம்
பொன்னகர் போவேன் பூமி புகழ்விழா காண்பேன்" என்றார்
என்ன ஓர் பக்தி! அம்மா! என்ன ஓர் புத்தி! அம்மா!
என்ன ஓர் நோக்கம் அம்மா! என்ன ஓர் ஊக்கம் அம்மா!

58. நாசரேத் தூரினின்றும் நாழிகை நூறு தூரம்
ஈசன்வாழ் இடமென்றெண்ணும் எருசலேம் நகருக்குண்டாம்
மாசிலா மைந்தனுக்கவ்வழியெலாம் காட்சி காட்டி
ஆசையோ டன்னை தந்தை அவரொடு நடந்து சென்றார்

59 கோபுரங் குளங்களாறு குன்றுகள் மேடுபள்ளம்
நேர்பட வளர்விருட்சம் நிறைந்த பூஞ்சோலைக்காடு
ஊர்தொறும் ஆடுமாடு உற்றநல் வயல் நிலங்கள்
சோர்பினை அகற்றுங்காட்சிப் பொருளென நேர்ந்ததங்கே.

60. பயிர் நிலந்தன்னைப் பார்க்க, பச்சையாய்த் திகழ்ந்து தோன்றும்;
அயர்வினையகற்றியோட்டும் அழகுறும் பறவைக் கூட்டம்;
உயர்மலை விலங்கு தூரத்தோடுவதுவப்பை யூட்டும்;
குயில்மயில் குறுக்கிட்டோடிக் குதூகலந்தனை விளைக்கும்

61. பாலொடு தெளிதேன்பாயும் பலஸ்தினா தேசமென்ன
நூலுரை நாட்டிலுண்டோ நோவயர்வெனும்பாயம்?
காலை நல்வேளையெல்லாம் கடுவழி நடந்துதாண்டி,
மாலைசேர் ஊரில் தங்கி மகிழ்ந்திளைப்பாறிச் சென்றார்.

62. அடிமைகளாய் எகிப்தில் அதிக நாள் அமர்ந்தார் யூதர்;
விடுதலை அடைந்தார் பின்பு விண்ணவன் கிருபையாலே;
திடமுற அதனை உன்னித் திருவிழா வருஷந்தோறும்
குடிகள் கொண்டாடி வந்தார் கூடி அந்நகரில் ஒன்றாய்.

63. பகருதற்கரிதே பஸ்கா பண்டிகை யதன்மெய் மாட்சி!
திகழ் ஜனக்கூட்டம் என்ன! தெருக்களின் தோற்றமென்ன!
மகிழ்வுறும் முழக்கமென்ன! மக்களின் வணக்கமென்ன!
புகழ்சிறப் பனைத்தும் கூறப் போதுமோ நா வொன்றம்மா!

64 எருசலேம் நகரம்போல எழில் நகர் எங்கும் உண்டோ!
தரிசனைக்குகந்த திவ்ய தலைநகர் அதுவே அன்றோ!
அரசர்கள் அமைத்து வைத்த ஆலயம் அழகு மாதின்
சிரசென விளங்கி வானில் திகழ்ந்ததே இலங்கி நேரில்.

65 மலைகளின் நடுவே நிற்கும் மகத்துவ நகரக்காட்சி
உலகினர் எவரும் போற்றும் ஒப்புயர்வில்லாக் காட்சி!
விலகுவதில்லை தெய்வ விழியதிலிருந்தோர் நாளும்;
இலகு பூவுலக சொர்க்கம் எருசலேம் என்பார் ஊரார்.

66 பட்டணம் பார்க்கப் பார்க்கப் பாலகன் இயேசுநாதர்
அட்டதிக் கனைத்தும் ஒன்றாய் அமைந்ததிங் கதிசயந்தான்!
கட்டினர் கடவுட்காகக் கருதியே இதனை அந்நாள்!
இட்டமே எனக்கும் இந்த எருசலேம் எனும் வீடென்றார்.

67. ஆலயமதிலுக்குள்ளே அனைவரும் புகுந்தாரங்கே
காலையில் மாலையில்போய்க் கடவுளை ஆராதித்தார்;
ஞாலமிதனிலே இந்த நாட்கள் போல் ஆத்துமாவில்
மேலும் நாம் மகிழ்வதெந்நாள் விமலனே என்றிருந்தார்.

68 பண்டிகைக்காட்சிகண்டோம்; பயனுறக்கலந்து கொண்டோம்
பண்டையநிலையறிந்தோம்; பலவித அறிவடைந்தோம்;
உண்டிளைப் பாறிநின்றோம்; உற்சவத்திறுதிகண்டோம்;
இன்றினி நமதூர் செல்வோம்; என்றனை வருஞ்சென்றாரே.

69. வேதபாரகர் தம்மோடு வேத சொரூபி யேசு
நாதரோ அமர்ந்து வேத நற்பொருள் வினவலுற்றார்
போதனை அளிக்கும் கேள்விப் புதுமையைக் கண்டெல்லோரும்
ஜோதியே! எனப்பாராட்டித் துதித்தவர் தமைமதித்தார்.

70. தந்தைதயாரைப் பிரிந்தார்; தங்கியாலயத்துறைந்தார்;
சிந்தனை செய்துதெய்வ சேவடி துதித்தமர்ந்தார்;
சுந்தரம் விளங்கி ஞான ஜோதியாய் ஜொலித்திருந்தார்;
விந்தையாய் அவதரித்த விமலன் நம் இயேசுநாதர்.

71. அந்தஊரகன்ற பெற்றோர் அழகுசேய்காணாதேங்கி
மைந்தனைக்காணோமென்றார்; மனந்தளர்கின்றதென்றார்;
எந்தஊர்சென்றாரென்றார்; யார்வசம் நின்றாரென்றார்;
எந்தையே இரங்குமென்றார்; எங்கினிச் செல்வோமென்றார்.

72. இனஜனத்திடைபோய்ப்பார்த்தார்; இடைவழியூர் போய்ப்பார்த்தார்
மனைமனையாய்ப் போய்ப்பார்த்தார்; வழிமடங்களில் போய்ப்பார்த்தார்
கனிமரத் தடிபோய்ப்பார்த்தார்; கடைகள் கூடிடம்போய்ப்பார்த்தார்
புனிதரைக்காணவில்லை; புலம்பினார் கண்ணீர் சிந்தி

73. யாரைநீர் தேடுகின்றீர்? எவ்விடத்திருந்துவந்தீர்?
பேரொளிப்பிழம்பேயென்னும் பிள்ளையொன்றிங்கேயுண்டே!
வாரும்நீர் எங்களோடே மண்டபம் இதனுள்வாரும்!
பாருமென்றுள்ளூரார் ஓர் பக்கம் போய்க் காண்பித்தாரே!

74 கண்டனர் தமது மைந்தன் கருத்துடன் ரபிமார் என்னும்
தொண்டரோ டமர்ந்து வாதம் தொடர்ந்து செய்திருக்கும்போதே
விண்டொளி இருண்டகண்கள் மீண்டும் புல்லொளி பெற்றாற்போல்
கொண்டனர் பேரானந்தம் கூறும் அத்தந்தைதாயார்

75 ''கண்மணி! உன்னைத்தேடிக் கலங்கினோமே நாள்மூன்றாய்!
பொன்மணி! எங்களுள்ளம் புண்படலாயிற்'' றென்றே
பெண்மணி மரியாள் கூறப் பேரழகமைந்திலங்கும்
விண்மணி யானமைந்தர் விளக்கினார் தமதுநோக்கம்

76. ''தேடிநீர் வருந்தினீரோ! சிறுவன்யான் பரமதந்தை
வீடதிலுறைந்திருக்க வேண்டுமென்றறியீரோ நீர்?
வாடியதேன் என் தாயே வாரும் நாம்போவோம்'' என்றார்
கூடியெல்லோருமாகக் குழைந்துதம் ஊர்க்குச் சென்றார்.

77. நாசரேத்தூரில் யேசு நாதர் தம் பெற்றாரோடு
வாசஞ்செய்திருந்தார் பின்பு வயது முப்பது வரைக்கும்;
ஆசையாய்ச் செய்துவந்தார் அழகிய தச்சுவேலை
நேசனாம் தந்தையோடே நித்தமும் ஊக்கமாக.

78. வந்தனஞ்செய்தெல்லோர்க்கும் வணக்கமே செலுத்திவந்தார்;
எந்தஊர் அகதிகட்கும் இரங்கி நல்லுதவிசெய்தார்,
சொந்த ஓர் நலத்தைப் பாரார், துஷ்டரோடிணங்கிச் சேரார்;
தந்தைதாய்ச்சொல்லைத்தட்டார்; தவறெதும் நிகழவொட்டார்.

79. ஆகமதியானஞ்செய்தார்; அதின்பொருள் தனையுணர்ந்தார்;
தாகமாய் ஆலயம்போய்த் தந்தையை நமஸ்கரித்தார்;
தேகமெய்ப்புலனடக்கி ஜெபத்திலே தரித்திருந்தார்;
வாகுயர் பரமதந்தை வழியினின்றகலாரம்மா!

80 மக்களெல்லோருமிந்த மாசிலாமைந்தன்பேரில்
மிக்கவும் அன்புகூர்ந்தார்; விழியெனமதித்துவந்தார்;
விக்கினம் நேராவண்ணம் மேன்மைசேர் மைந்தனாரின்
பக்கம்விட்ட கலாதந்தப் பரமபிதாவுங் காத்தார்

81 பாரிலுள்ளோரே! பாரும் பாலகன் அவர்க்கிருந்த
சீருயர் தெய்வ அன்பை! சேர்புவிநரர் மேலன்பை!
காரியமிதுவே வேத கற்பனை! கடவுள் வார்த்தை!
நேரிலே அறிந்து நீரும் நெறியிதைப் பின்பற்றீரோ?

## அதிகாரம் - 4

### உபதேசப் படலம்

59. மக்களின் ஆத்மவாழ்வில் மகத்துவ கிறிஸ்துநாதர்
மிக்கபேராவல்கொண்டே விளம்பினார் உபதேசங்கள்,
திக்கெலாம் திகழும் அன்பர், தேவகுமாரன் தந்த
பொக்கிஷம் என அவற்றைப் போற்றுகின்றனர் எந்நாளும்.

60 "பாக்கியவான்கள் தாழ்மை பணிவெனும் சிந்தையுள்ளோர்;
பாக்கியவான்கள் இந்தப் பாரினில் இரக்கமுள்ளோர்;
பாக்கியவான்கள் உள்ளம் பளிங்கெனத்தூய்மையுள்ளோர்;
பாக்கியவான்கள் உண்மை பகர்ந்திடும் சாந்தமுள்ளோர்.

61. ஒப்புரவாக்கும் தன்மையுள்ளவர் பாக்யவான்கள்;
பற்பல துயரப்பாடு படுபவர் பாக்யவான்கள்;
துப்புரவான நீதிச்சுடருளோர் பாக்யவான்கள்;
மெய்ப்பொருள் நீதிக்காக மிதிகொள்வோர் பாக்யவான்கள்;

62 பலவித நிந்தை நீங்கள் பகரும் என்பெயர்நிமித்தம்
நிலமிதில் படுவீராயின் நிறைகளிப்படைவீர் திண்ணம்;
ஒளியெனத்திகழ்வீர்; என்றும் உப்பென இருப்பீர்கண்டீர்
உலகினை மகிழச்செய்வீர், உறுமிருள் தொலையச் செய்வீர்"

63. என்றெழில் சிறந்த வான இராச்சியக் குடிகட்குள்ள
குன்றெனவுயர்ந்த நல்ல குணங்களை எடுத்துக்காட்டி,
நின்றவர்க்கமையப்போகும் நிறைநலம்பலவும் கூறித்
தென்றல் போல் குளிருமன்பு திகழ் உபதேசம் செய்தார்

64 "கொலையெனும்பாவம்தீதே! கொலையினும் கோபம் தீதே!
சொலியொரு மூடனென்றோர் சோதரன் தனைக்கோபிப்போன்
எரிநரகாக்கினைக்கே ஏற்றவன் நியாயத்தீர்ப்புக்(கு)
உரியவன் அதனால் அன்பாம் ஒப்புரவேநன்" றென்றார்.

65. "தீயதுவிபசாரம்கேள்! தீயதேயதிலும் கண்ணின்
தீயபொல்லாதபார்வை! தீயதே இச்சை ஆசை!
நேயனே விழியால்தீமை நேர்ந்திடில் பிடுங்கித் தள்ளு;
போயடைவாய்நீ மோட்சம்! புனிதனாயிருப்பாய்" என்றார்.

66. "பொய்யுரை மோசம்! மோசம்! பொய்யிலும் இழிவுமாயப்
பொய்சொலி ஆணை போட்டுப் பொய்பட உறுதிகூறல்
உய்வுற வேண்டின்நேரே உள்ளதை உள்ளதென்றும்
மெய்யுற இல்லையென்றால் இல்லையென்றேசொல்" என்றார்.

67. தீமையோடெதிர்ப்பதென்றும் தீதென அறியவேண்டும்
கூவியோர் கனத்தடித்தால் கொடுமறு கன்னமும்நீ;
மேவுமோர் உடையைக் கேட்டால் மேலுடைதனையும் ஈவாய்!
தாவெனக்கடன் கேட்டோர்க்கும் தந்துதவென உரைத்தார்.

68. ''சத்துரு எனினும் நேசி; சற்றுமே பகைகொள்ளாமல்;
உத்தமம்! அதனாலன்றோ உயர்பரன் மைந்தன்ஆவாய்!
தத்துவம் மழையின் நல்ல தன்மைதான் என்ன சொல்லு;
எத்திறத்தோர்க்கும் நன்மை இதம் செய்வதலவோ'' என்றார்.

69. ''தருமம் நீசெய்யும்போது தாரை ஏன்ஊதவேண்டும்?
உரைவலக்கரத்தின் செய்கை உனதிடக்கரத்திற்கோதி
விரிவுரைசெய்ய வேண்டாம்; விமலனாம்பரமதந்தை
அருளுவார் அந்தரங்கத்தளவிலா நன்மை'' என்றார்.

70. ''உயர்பிதா தம்மை நோக்கி உரைத்து நீஜெபிக்கும்போதூர்
அயலுளார்கேட்க எண்ணி அலறுவதாகுமோ பார்!
தயவுளதந்தை உன்றன் தன்மையை அறிந்து நன்மை
பயனுறும் படிஅருள்வார்; பாக்கியம் அதுவே'' என்றார்.

71. ''பரத்துறை எமதுதந்தாய்! பரிசுத்தப்படுவதாக!
உரைத்திடும் உமதுநாமம்; ஓங்குக! உமதுராஜ்யம்;
நிலத்திலும் உமதுசித்தம் நிகழுக! பரத்தில்போல;
அளித்திடும் எமக்கு நித்தம் அவசியப்படும் ஆகாரம்

72 எம்கடன் காரர்க்கென்றும் யாம்கடன் பொறுப்பதேபோல்
வெம்பவக்கடன் பொறுப்பீர் மேவு சோதனைக்குள்ளாகா(து)
இங்கெமை இரட்சிப்பீர் நீர், இராச்சியம், வலமை, மேன்மை,
தங்கியே அமைவதாக! தமக்கென என்றென்றைக்கும்''

73 என்றநல் ஜெபத்தைச் செய்வீர் எனச்சொலித்தந்தார் அன்பாய்;
நின்றதில் விளங்குஞானம் நிறைமகத்துவத்தை யார்தாம்
ஒன்றுற உரைக்கவல்லார்? ''உத்தமம் உத்தமந்தான்''
என்று நின்றெவரும் போற்றி இறைவனை வணங்குகின்றார்.

74. ''உண்ணுதற்கில்லை யென்றும் உடுப்பதற்கில்லை யென்றும்
எண்ணி நீகவலைகொள்ளும் இயல்பினைத் தள்ளுவாய்நீ!
விண்ணிலே பறக்கும் பட்சி விதைக்குமோ? அறுக்குமோ? கேள்
அண்ணல் நல்இரையதற்கும் அளித்திடாதகற்றுவாரோ?''

75. ''காட்டினில்பூக்கும் பூண்டு கவலைதான் அடைவதுண்டோ
ஊட்டிநேர்வளர்க்கின்றாரே! உற்ற நம்பரமதந்தை;
மாட்டினனோ பேர் பெற்ற மன்னன் சாலோமன்தானும்
நாட்டுமதன்பூவைப்போல் நல்லவோர் ஆடை'' என்றார்.

76. ''மற்றவன் கண்ணிற்குள்ளே மறைதுரும்பினையும் காண்பாய்!
உற்றஉன் கண்ணிலேயோ உத்திரம் உள்ளதோராய்!
குற்றம் நீ அகற்றி மற்றோர் குறைகளை நீக்கச்சென்றால்
சற்றுமே கபடம் வேண்டாம்; சத்தியம்வேண்டு'' மென்றார்.

77. ''தேடுவோர் கண்டடைவார்; திறந்திடும் தட்டுவோர்க்கே;
நாடுவோர் பெற்றுக்கொள்வார்; நல்ல நம்பரமதந்தை
வாடுதன் மக்களைத்தான் வறியராய் விடுவாரோ? ஓர்
கேடுமே செய்யாரே? நீ கேட்டதைத் தருவார்'' என்றார்.

78. ''மற்றுளோர் உனக்கென்செய்ய மனிதனே விரும்புவாயோ
சற்றுமே தவறாமல்நீ சரிவர அவர்க்கும் செய்வாய்;
உற்றவூர்ப் பிரமாணங்கள் உயர்தீர்க்க தரிசனங்கள்
முற்றுமே உரைப்பதவ்வோர் முதற்பிரமாணம்'' என்றார்.

79. ''பொக்கிஷம் தேடிஇந்தப் பூமியில் சேர்க்கவேண்டாம்;
துக்கமுண்டாகும்; கேடு தொடருமே அதனால் என்றும்;
பக்குவமாக அந்தப் பரத்திலே சேர்த்துவைத்தால்
அக்குறைவில்லை உள்ளம் அதில்தரித்திருக்கும்'' என்றார்.

80. ''பயப்படவேண்டும் நித்ய பரமபிதாவுக்கென்றும்
வயப்படை வீரருக்கேன் வணங்கி நீ நடுங்கவேண்டும்!
பழிப்புறும் நரகில் தள்ளப் படைத்தவர்க்காகும்; நித்ய
துயர்ப்படுத்திட இப்பாரில் துரைஎவர்க்கியலும்'' என்றார்.

81. ''என்னுபதேசங்கேட்டே எனது சொற்படி செய்வோர்கள்
மன்னு கற்பாறை மேலே மாளிகை அமைத்தோர் ஆவார்;
இன்னலுக்குள்ளேயாவார் என்னுரை கேளாதோரோ!
என்னுறும் மணல்மேல்கட்டி எழுப்புவோர் வீட்டிற்'' கென்றார்.

82. வாழ்புவியே! உன்ஆத்ம வாழ்வினுக்கா தாரம்கேள்!
நீள்புவிபடைத்தோன் மைந்தன் நிகழ்த்திய உபதேசங்கள்
தாள்பணிந்தவற்றை நித்தம் தளர்வுறாதனுசரித்தே
சேர்பரலோக ராஜ்ய சிறப்பினை அனுபவிப்பாய்!

## அதிகாரம் 5

### உயிர்த்தெழுதல் படலம்

117. ஞாலமெலாம் விரும்பும் ஞாயிறு நாள்உதிக்கும்
வேளையில் எதிர்பாராமல் மேதினி அதிர்ந்ததெங்கும்
மேலுமோர் தேவதூதன் விண்ணிருந்திறங்கிவந்தான்
காலையில் இயேசுநாதர் கல்லறைக் கருகில் நின்றான்.

118 மேவுமத் தேவதூதன் விளங்கிடும் கோலம் கண்ட
சேவகர் காவலாளர் செத்தவர் போலயர்ந்தார்;
காவினில் நேர்ந்த சாவைக் காலினால் மிதித்தடக்கித்
தேவகுமாரன் வீரசிங்கமென் றுயிர்த்தெழுந்தார்.

119. மாதர்கள் கந்தவர்க்கம் மகிமையாய் உதவும் வண்ணம்
நாதர் கல்லறையைத்தேடி நடந்துவந்தார்கள் ஓடி
தூதனோ ''இயேசுநாதர் சொன்னவா றுயிர்த்தெழுந்தார்
மாதரே எனமொழிந்தான்'' மங்கையர் வியப்படைந்தார்.

120. சீஷருக்கறிவிப்போமிச் செய்தியை என்று மாதர்
ஆசையாய் விரைந்துபோக ஆண்டவர் எதிரேதோன்றி
''நேசமுள்ளோரே'' என்றார் நிகரிலா மகிழ்ச்சியோடே
காசினி மீட்பரான கர்த்தரை வணங்கிநின்றார்

120. உத்தம சீஷன் யோவான் ஓடினான் சீமே..னோடே
கர்த்தர் சரீரம் இல்லை கல்லறைக்குள்ளே என்னும்
சத்தியம் அறிந்தபின்பு சமுசயம் யாதுமின்றிப்
புத்துயிர் பெற்றோராகப் போயினர் தமதூர்க்கேகி.

122. மரியமாள் என்ற அந்த மகதலேன் ஊராள் நேர்ந்த
வரிசையெலாம் அறிந்து வாய்திறந் தழுதுநின்றாள்
தரிசனம் இயேசுநாதர் தந்தனர் அவளுக்கப்போ(து)
உரியநல் மகிழ்ச்சியுற்றாள் ஒப்பிலாக் கிருபைபெற்றாள்

123. அவர் உயிர்த்தெழுந்த செய்தி அறிந்ததும் குருமார் மூப்பர்
எவர்களோ உடலைச் சீடர் இரவு வந்தெடுத்துச் சென்றார்
தவறிலையென்று சொல்வீர் தருகிறோம் பணம் தாராளம்
கவனியும்! எனப்பகர்ந்து காவலாளருக்குச் சொன்னார்.

124 போதகர் உயிர்த்தெழுந்தார் போயுடன் பார்ப்பீர் என்ன
மாது நல்மரியாள் கூற மறுத்தனர் அதை அச்சீடர்
நாதரே! என்று சொல்லி நடந்திரு சீஷர் போகும்
பாதையில் அவர் நேர் தோன்றிப்பாரும் நான் நானே என்றார்.

125 பதினொரு சீஷரும் சம்பாஷணை செய்துவந்து
அதிசயம் என மகிழ்ச்சியடையும் அத்தருணம் ''நான், நீர்
துதிசுதன்; உயிர்த்தெழுந்தேன்; தொண்டரே வாரும் என்முன்;
குதூகலம் கொள்வோம்'' என்று கூறி மகிழ்ந்து நின்றார்

126. அறைதனைப் பூட்டியுள்ளே அனைவரும் தோமாவும் சேர்ந்
திறைவனைக் குறித்துப்பேசி இருதயம் மகிழும் வேளை
குறைவிலாதுறுதி கொள்வாய் குருவிடம் நீ தோமாவே!
திறமிது என்று சொல்லித் திருச்சுதன் காட்சிதந்தார்

127. சீஷரில் ஏழுபேர் ஓர்தினம் படகொன்றில் ஏறி
ஆசையாய் மீன்பிடித்தோர் அளவுறச்சேர்க்கும்போது
''தாசரே! நான்தான்'' என்று தரிசனமவர்க்குத் தந்தார்.
போசனஞ்செய்திருக்கும்போது பேதுருவை நோக்கி,

128. நீயெனிலன்புகூர்ந்து நேசிப்பதுண்மைதானோ
நேயனே என்று கேட்க நிசம் நிசம் என்றான் சீமோன்;
போயெனதாட்டை மேய்ப்பாய் போயென மூன்றுநேரம்
வாயுறச் சொல்லிச் சேவை வாகுற ஒப்புவித்தார்.

129 ஜெயசுவிசேஷம் கூறிச் சீஷரைச் சேர்த்தெல்லோர்க்கும்
உயர்பரன் திருநாமத்தில் உதவுவீர் ஞானஸ்நானம்
துயரடையாதீர் என்று சொலிக் கலிலேயாக்குன்றில்
அயர்விலாதெழுந்த சீஷர்க்களித்தனர் தரிசனந்தான்.

180. வரந்தனையளித்துத் தேற்றி வழங்கினார் ஆசீர்வாதம்
சிரந்தனில் கையமர்த்திச் சீடர்க்குப்பெத்தான் யாவில்
விரைந்தொரு மேகத்தேறி விண்ணுலகடைந்தார் நேரில்
பொருந்து தம் தந்தை சித்தம் பூர்த்திசெய் இயேசுநாதர்.

181. மகத்துவ கிறிஸ்துநாதர் மகிதல மீட்பர் வாழ்க!
வகுத்தவர் உரைத்த மார்க்கம் வளர்பிறை எனவே வாழ்க!
அகத்ததை வைத்துநித்தம் அன்புகூர் பக்தர் வாழ்க
தொகுத்ததைப் பாடிச் சேவை தொடர்ந்துசெய் ஞானம் வாழ்க



# 22

## சத்தியானந்தப் பாடல்

**ஆசிரியர் : ஒய்.எம். சாலமோன் (—— - 1965)**

**அறிமுகம் : தி. தயானந்தன் பிரான்சிஸ்**

சென்னை நகரம் இன்று மட்டுமல்ல, நெடுங்காலமாகவே கவிஞர்களுக்கு நிழல் தந்து ஆதரிக்கும் நன்மர நகரமாக இருந்து வந்திருக்கிறது. வள்ளலார் இராமலிங்க அடிகளார் சென்னையில் தம் இளமைக் காலத்தைக் கழித்திருக்கிறார். அவருடைய முதல் பாடல்கள் சென்னை வட்டாரத்தில் அவர் வாழ்ந்தபோது இயற்றப் பெற்றவை என்று தெரிந்து கொள்கிறோம். அவருக்கு முன்பு பட்டினத்து அடிகள் சென்னையின் எல்லைப் பகுதியில் அமைந்துள்ள திருவொற்றியூரில் வழிபட்டவர் என்றும் அறிகிறோம்.

எச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை, பரமானந்தம் ஐயர், ஜி.எஸ். வேதநாயகம் ஐயர் ஆகியோரும் சென்னையில் வாழ்ந்திருக்கிறார்கள். இவர்களைப் போன்றே சென்னையில் திருப்பணி ஊழியராய் நெடுங்காலம் பணியாற்றிப் பாடல் இயற்றுவதிலும், அவற்றுக்கு இசை கூட்டி வழங்குவதிலும் பெரிதும் ஆற்றல் பெற்றவராய் விளங்கியவர் ஒய்.எம். சாலமோன் என்னும் அருள்திருவாளர் என்பது மூத்தத் தலைமுறையைச் சேர்ந்த தமிழ்க் கிறிஸ்தவர்கள் பலருக்குத் தெரிந்திருக்க முடியும். பரமானந்தம் ஐயரின் சமகாலத்தவராய்ச் சென்னையில் போதகப் பணி புரிந்த இக்கவிஞர் அவரைப் பல முறை சந்தித்திருக்கவேண்டும். அவர் பாடல்களிலும் ஜி.எஸ். வேதநாயகர் பாடல்களிலும் ஈடுபாடு கொண்டவராய் இருந்திருக்கவேண்டும். அவர் காலத்திற்குச் சற்று முன்பு சென்னையில் வாழ்ந்த வின்பிரட் போதகர் பாடல்களும் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

பாப்டிஸ்ட் சபையைச் சேர்ந்த இக்கவிஞர் 1925 முதல் 1947 வரையில் திருப்பணியாற்றி 1965 இல் தம் வாழ்க்கையை முடித்துக் கொண்டார். அருங்கிளிக் கண்ணி, இறையருள் பாமாலை, வானத்தங்கப் பாட்டு, திருச்சபைக் கும்மி, சத்தியானந்தப் பாடல் ஆகிய பாடல் நூல்களையும், மகா பாபேல், தேவாதிதேவன், ஆத்துமாவும் அருள்திரு வாழ்வும், ஞானஸ்நான உண்மை, அவர் முற்றிலும் அழகுள்ளவர் ஆகிய உரைநடை நூல்களையும் அவர் இயற்றியதாகத் தெரிகிறது. இந்துவாக இருந்து கிறிஸ்துவை ஏற்றுக் கொண்ட இக்கவிஞர் அரசாங்கப் பணியை உதறித் தள்ளி விட்டு அருட்பணியாற்றத் திருச்சபைக்கு வந்தவர். முதன் முதலாக வேதம் என்ற வட சொல்லுக்குத் திருமறை என்ற அழகிய தமிழ்ப் பெயரைத் திருச்சபைக்கு வழங்கிய கிறிஸ்தவப் போதகர் இவர்தாம் என்று பேராசிரியர் பொன்னு சத்தியசாட்சி கூறுகின்றார். இதற்குக் காரணம்

1938 இல் இவர் துவக்கிய மாத இதழின் திருமறை தீபம் என்ற பெயர் தான். தாம் சிறுவனாக இருந்தபோது தமக்கு வெண்பா எழுதச் சொல்லிக் கொடுத்தவர் இக் கவிஞர்தாம் என்றும், அவர் மாபெரும் எழுத்தாளர், பாடகர், போதகர் என்றும், சத்தியானந்தப் பாடல் நூலுக்குத் தாம் அளித்துள்ள முன்னுரையில் சத்தியசாட்சி கூறுகின்றார்.

முப்பத்திரண்டு பாடல்களை உள்ளடக்கி நிற்கும் இந்த நூலில் பல்வகைப்பட்ட பண்களில் கவிஞர் இயற்றிய இசைப் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. பக்திப் பாடல்களுக்கே உரித்தான சொல்லாட்சியும், கருத்துக் குழைவும், நெஞ்சை நெகிழ்விக்கும் நடையும் சாலமோன் அவர்களின் பாடல்கள் பலவற்றில் தங்கள் சாயலை ஆழப் பதித்துள்ளன. கீழ்வரும் அடிகளைப் படித்துப் பாருங்கள் :

*'ஒப்பிலா மெய்ப் பொருளே!*
*உன்னதக் கடவுளே!*
*எப்படி உம்மைப் போற்றுவேன் - என்நாவினால்*
*மெய்ஞ்ஞான மணியே மோன வொளியே!*
*வானோர் பணியே! நானோ யெளியன்!'*

*'அப்பனைப் போ லதட்டி*
*அன்னையைப் போ லணைத்து*
*எப்படியேனு மேசையா - கிறிஸ்தேசையா'*

*'எப்படியேனு மேசையா*
*உனை நாடிட கவிபாடிட வினை*
*ஓடிட கதிகூடிட அருள்.'*

தாவீதும் பிற எபிரேயக் கவிஞர்களும் நன்றியுணர்வும், மகிழ்ச்சியும் உள்ளத்தில் பொங்கித் ததும்பிய வேகத்தில் பாடியதைப்போல இவரும் 'எப்படி உம்மைப் போற்றுவேன் என் நாவினால் எப்படி உம்மைப் போற்றுவேன்' என்று பாடுகின்றார். அதேபோன்று 'எப்படியேனும் ஏசையா எப்படியேனும் எனக்கு அருள்பாலித்திடும்' என்று பக்திக் கவிஞர்கள் மொழியிலே அவர் பாடுவதும் நம் கவனத்தை ஈர்க்காமல் இருக்கமுடியாது.

சொல்லாட்சி என்பது எல்லாக் கவிஞர்களுக்கும் எளிதில் கைகூடி வரும் ஒன்று அல்ல. தங்கு தடையின்றி எளிய இனிய கவிச்சொற்களை ஓடவிடுவதில் இந்தக் கவிஞர் பலரை மிஞ்சி விடுகிறார். எத்தனையோ பாடல்களை எடுத்துக் காட்டுக்குத் தரலாம். என்றாலும் ஒருசிலவற்றை மட்டும் இங்கே இனம் காட்டித் தருகிறேன்.

*'அத்தா அமல குரு நாதா - உல*
*கத்தா ரெவர்க்கும் வல்ல போதா*
*நித்தா யெனக்குன் னருள் தாதா - பரி*
*சுத்தா கடைகாப்பதும் - நீ தான்'*

*'ஆதா மேவை செய் பவந்தீர - பழைய*
*வேதா கமங்கள் நிறைவேற*
*பூதலந்தன்னி லுதித்தீரே - அதி*
*நூதன மா மறையைக் கூற'*

*'ஏதமில்லாத தேவ மைந்தா - இந்த*
*பூதல மேல் நரனாய் வந்தாய்*
*பாதகரெம் பவம் சுமந்தாய் - கொடும்*
*வேதனை களினால் நிறைந்தாய்'*

*'அம்புவியிற் கனிவாய்*
*ஆகினீர் நீர் மனுவாய்*
*தம்பிரானா யிருந்த*
*தன்மை மேன்மையை மறந்தீர்'*

*'பொல்லார் பகைக்கபுத்தி*
*இல்லார் நகைக்கசுற்றி*
*எல்லா நன்மை யியற்றி*
*எந்தை நீர் கொண்டீரே வெற்றி'*

இந்தக் கவிஞரின் சொல்லாட்சியில் தோன்றிய இனிய தொடர் வரிசைகளில் நான் என்னை மறந்திருக்கின்றேன். அத்தகையவற்றைக் கண்ணிகளாகப் பல பாடல்களில் அவர் தொடுத்திருக்கின்றார். ஒரு பாடலில்,

*'நீச முழந்தாள்களை*
*நின்னடி நேராய் நிறுத்தி*
*பேசுவதைக் கேளும் எம்மை*
*பெற்றவனே யேசு சுவாமி'*

என்று தம் உள்ளத்தைத் திறந்து காட்டுகிறார். 'நீச முழந்தாள்' என்னும் தொடரும், தம் முழந்தாள்களை இறைவனின் பாதங்களுக்கு நேராக மடக்கி நிறுத்தியிருப்பதாகக் கூறும் பாங்கும் சுய சித்தம் என்பதை அடக்கிப் பணிவுடன் இறைவனை அண்டிப் பேச விரும்பிடும் பக்தி மனத்தைக் காட்டுகின்றன.

சாஸ்திரியாரைப் போன்றே 'ஆடு பாம்பே' என்று சிந்து நடையில் அவர் எழுதியிருக்கும் பாடலில் வரும் பத்துப் பாடல்களும் கருத்துச் செறிந்தவையாகும்.

*'கூலிக்கு மாரடிக்கும் கூட்டத்தை விட்டு - வேஷ*
*குருக்களுரைக்கும் உபதேசத்தை விட்டு*
*கேலிக்கு ஆளாகத் திரிவதை விட்டு - ஓடி*
*கிறிஸ்தேசு சுவாமி பாதத்தண்டை நின்று நீ - ஆடு பாம்பே ...*

என்று திருச்சபையை விளிக்கும் அடி இக்காலத்துக்கும் எவ்வளவு நன்றாகப் பொருந்துகிறது! இவர் எழுதியுள்ள பாடல்களுள் என்னை வெகுவாகக் கவர்ந்த பாடல்,

*'உலக முழுதும் மிக ஏசி - உன்னை*
*ஒடுக்கும் நாட்களில் பிரகாசி'*

என்ற பல்லவியோடு தொடங்கி மூன்று அடிகளைக் கொண்டதாய் அமைந்திருக்கும் பாடல்தான். இறுதி அடி இவ்வாறு அமைகிறது :

*'துட்டர்கள் முனிந்துமென் மேலும் - மகா*
*அட்டகா சங்கள் செய்திட்டாலும் - வழி*
*விட்டக லாதேயென் னாளும் - துணை*
*கர்த்தரின் தடி! அவர் கோலும்'*

*அண்மையில் இவருடைய சத்தியானந்தப் பாடல் வேதாகம மாணவர் பதிப்பகத்தாரால் டாக்டர் ஞானசிகாமணி அவர்களைக் கொண்டு பதிப்பிக்கப்பட்டு வெளியிடப்பட்ட வேளையில் இக்கவிஞரின் தனி சிறப்பியல்புகளை அறிஞர் பெருமக்கள் அழகுறப் பாராட்டினார்கள். அவருடைய பாடல்கள் தமிழ் பாப்டிஸ்ட் சபையில் மட்டுமே இன்று செல்வாக்குப் பெற்றிருக்கின்றன. அவற்றைப் பிற சபைகளில் அறிமுகப்படுத்துவதில் முதற்கட்ட பணியை டாக்டர் ஞான சிகாமணி செய்திருக்கின்றார். இனி பிற அறிஞர்களும், இசை வல்லுநர்களும் அவர் பாடல்களைப் பல்வகை நிகழ்ச்சிகளில் புதிய வகையில் பரவலாக அறிமுகப்படுத்த முன்வர வேண்டும்.*

## 4

**கமாஸ்** **ரூபகம்**

**பல்லவி**

ககன வாசனா! பொன்னின்
கழலுக் கோசன்னா! ஓசன்னா!

**அனுபல்லவி**

சுகவிலாசனா! உயர் சுகுண பூஷணா!
சுந்தரப் பரமண்டலத்தில் தூக்கு தோசன்னா! ஓசன்னா! - கக

**சரணங்கள்**

1. அகண்டவிண்டலம் மண்டலம் யாவையும்
அளித்த நாதனே!
அங்கு மிங்கு மெங்குந் தங்கிப் புலப்படா
அதிவிநோதனே!
அருமறை பன்னா - நின்ற
அருள் நிறை கண்ணா!
அன்றும் இன்றும் என்றுமுமக் காக ஓசன்னா! ஓசன்னா! - ககன

2. இகத்தி லடியரகத்தினிற் குடி
இருக்கு மீசனே!
இதிசெய் கொடிய வினைகளைப் பொடி
இடுமகே சனே!
மகத்துவ மன்னா! மரு
ளருத்தருள் விண்ணா!
மங்கா தசங் கீதம் தங்கும் மகிமை ஓசன்னா! ஓசன்னா! - ககன

## 7

இந்துஸ்தான் பைரவி ரூபகம்

### பல்லவி

உம்பர் தொழும் பரா பரா
உவந்தாட் கொள் நிரா தரா

### சரணங்கள்

1 அம்புவியிற் கனிவாய்
ஆகினீர் நீர் மனுவாய்
தம்பிரானா யிருந்த
தன்மை மேன்மையை மறந்தீர் - உம்

2. கந்தை திவ்ய பட்டுடை
கன மாளிகை கொட்டகை
மந்தை மேய்ப்பருன் படை
மாவிப ரீத மென்தடை - உம்

3. மகிமை யொரு புறமாம்
மாதாழ் வின்னோர் புறமாம்
தகைமை யிதென்ன உன்றன்
தாழ்மை யென்ன தற்பரனே - உம்

4 காமாதி மா கடலில்
போ மானிடரிடையில்
பூமா விடாது நீர்நல்
போதஞ் சாதனை புரிந்தீர் - உம்

5. பொல்லார் பகைக்க புத்தி
இல்லார் நகைக்க சுற்றி
எல்லா நன்மை யிற்றி
எந்தை நீர் கொண்டீரே வெற்றி - உம்

6 தூயா உம்மாவி யுடல்
மாயப் ரபஞ்சக் கடல்
சாயா திருக்க வடல்
தானி தான மாய் புரிந்தீர் - உம்

7 மன்னா மடையர் மிக
இன்னா செய்தே யிகழ
ஒன்னார்க் குதவுதாக
முற்ற தென்ன முன்னவனே - உம்

8. பொன்னாடி ழிந்து வந்து
பன்னாது யரடைந்து
மண்ணாடர் கட்குவந்து
மாதவனுயிரைத் தந்தீர் - உம்

## 8

காம்போதி ஆதிதாளம்

### பல்லவி

அருமாமறை புகலுமீசா எங்கள் குருவே
வருக ஏசு ராசா

### அனுபல்லவி

திருவே தேடுவர் மனவாசா - ஜீவ
தருவே யகலாமெய்யு லாசா

### சரணங்கள்

1. பார்செய்யும் பலசதியாலே - புத்தி
கூர்மையும் குணமும் மென்மேலே
நீர் மேல் தெப்பம் நீர்ப்பாசி போலே - சற்றும்
வேர் கொள்ளலையே மனுவேலே – அரு

2 எத்தனை கற்றுங் கண்டுங் கேட்டும் - அவை
யத்தனையும் விட்டு வீணாட்டம்
வைத்துழல் வதென் மனவாட்டம் - எனக்
கெத்தனை யுண்டு வீண் போராட்டம் – அரு

3. பற்றற்று நிற்கவகைக் கூரும் - எனக்
குற்றதுணை நீரே கண்பாரும்
முற்றமும் பின்னே சூழ்ந்து வாரும் - முடி
வற்ற வாழ்விற் கொண்டு போய்ச் சேரும் – அரு

## 9

பூரிகல்யாணி ஆதிதாளம்

### பல்லவி

நம்பிடு கர்த்தரை எந்த நாளிலும் மனமே

### அனுபல்லவி

அம்புவியிலவரை யன்றி
ஆவதென்ன போவ தென்ன? நம்பி

### சரணங்கள்

1. உன் வழியைக் கர்த்தருக்கே
ஒப்புவித்திரு
என்னகரும மென்றாலும்
நன்மையாய் முடித்திடுவார் – நம்பி

2. அவரே உன் விசாரணை யாள்
ஆகையால் மனமே
கவலையெல்லா மவர்மேல் வைக்க
கருத்து கொள் நீ மறுத்திடாதே – நம்பி

3. பாரத்தை யவர்மேல் வை நீ
பாதுகாத் திடுவார்
ஒரொரு வார்த்தை யாலல்லோ
உண்டு செய்தா ரண்டம் யாவும் — நம்பி

4. நல்லவர் நன்மை சொரூபி
நம்பினவரை
தள்ளிட தயாளனன்பே
தன்மயமாய் கொண்ட தந்தை — நம்பி

## 10

இந்துஸ்தான் காபி ரூபகம்

### பல்லவி

பாவியெனைக் கண் பாரையனே! என்
பக்கத்துணை நீதான் மெய்யனே

### சரணங்கள்

1. அன்னையு மென்ற னப்பனும் நீ
அன்பனு மென் பிரியனும் நீ
முன்னையு மென்றன் பின்னையு நீ
மொழி யிடது வலதிலும் நீ - பாவி

2. ஆக்கவும் நீ யாளாக்கவும் நீ
மீட்கவல்லவனும் மீட்பனும் நீ
காக்கவும் நீ கடை தீர்க்கவும் நீ
நீக்கவும் நீ கதி சேர்க்கவும் நீ - பாவி

3. கன்மலையும் என்கோட்டையும் நீ
கழற்கேடகம் பிடிகையும் நீ
என் பெலனும் துருகமும் நீ
எல்லாவற்றினு மெல்லாம் நீயல்லோ – பாவி

4. அடைக்கா வண்ணம் திறப்பவன் நீ
திறவா வண்ணமடைப் பானு நீ
அடிப்பானு நீ யணைப்பானு நீ
இடிப்பானும் கட்டிமுடிப்பானும் நீ - பாவி

5 அல்பாவும் நீ ஒமேகாவும் நீ
ஆதிமத்யாந்த மில்லாதவ நீ
உள்ளவர் நீ இருந்தவர் நீ
இனிவரப் போகிற எந்தையும் நீ - பாவி

## 11

முகாரி ஆதிதாளம்

### பல்லவி

படியு மதினிறைவும் பாவிக்காகாது நின் பொன்
னடியே எனக்கு வேண்டும் அய்யாவே

### அனுபல்லவி

விடியற் காலையில் பூத்து மாலையிலுலர்ந்து போம்
கடிமலர் போலவல்லோ அடியன் என் நாட்களெல்லாம்

### சரணங்கள்

1. மண்ணை மனையை மாடாடோடு புகழை நாடி
என்ன பாடுகள் பட்டேன் அய்யாவே!
என்னைப் படைத்து எனக்கெல்லா மளித்த பரன்
உன்னை நாடாதபாவி என் போல ஒரு துரோகி - படி

2 பொன்னை பொருளையுடை தன்னை நினைத்து என்ன
என்ன பாடுகள் பட்டேன் அய்யாவே
என்னை நினைத்துப் புவிக்கென்னுருவாக வந்த
உன்னை நினைந்துருகேன் அய்யோவென் பாவம் பாவம் - படி

3 கண்ணை உன்மேலே வைத்துக் காப்பேனென்று உரைத்த
நின்னை நின தருளை நினையாமல்
விண்ணை இழந்து வீணர் விழுகும் எரி நரகந்
தன்னில் விழுக மனம் நண்ணேனே - படி

## 16

மாஞ்ஜி ஆதிதாளம்

### பல்லவி

அய்யா அருமை மேசையா! நான்
உய்யும் வகை யுரை செய்யாய் - என்னையா

### அனுபல்லவி

பொய்யோவென துளம் மெய்யோவென் தினம்
அய்யமற அணுவையும் உணர்ந்தவென - அய்யா

### சரணங்கள்

1 உடலோ விறுத்துது நடுவே! முன்
ஓட பேய்து றத்துது கெடவே
இடம்வலம் மனைமக்கள் இருக்கிறார் - பின்னே
விடேனென்குதே யிகம் செய்வது என்னே - அய்யா

2 என்னாலென் செயமுடியும்! பிடி
மண்ணாகு வனிது தெரியும்
விண்ணாவழி விலகிடிலெனை யடியும் - உன்
பொன்னார் பதமருகெனை வைத்துப்படியும் - அய்யா

3. கள்ள அய்ம்புலன்களையும்! உன்றன்
நல்ல சித்தத்திற் கிசைய நீர் வளையும்
எள்ளளவாயினு மென் சித்தமுடிய
வள்ளலேவிட்டு விடாதேநான் தடியன் - அய்யா

## 21

பியாகுஸில்லா ஆதிதாளம்

### பல்லவி

உலக முழுதும் மிக ஏசி - உன்னை
ஒடுக்கும் நாட்களில் பிரகாசி

### சரணங்கள்

1. கலகங் கலக்கம் கஷ்ட மாச்சு - உள்ள
பலதும் எந்தனை விட்டுப் போச்சு - என்று
விலகி விடில் வலையை வீசி - உன்னை
அலக்கழிப்பானந்தப் பிசாசி - உலக

2. காண்பவை உண்மையோ? போலி - இதை
வீண் என்பவனே புத்தி சாலி - புவி
தான் சதமென சொலி கேலி - புரி
வான் கொடியவ னந்தக் கூளி - உலக

3. துட்டர்கள் முனிந்துமென் மேலும் - மகா
அட்டகா சங்கள்செய்திட்டாலும் - வழி
விட்டக லாதேயென் னாளும் - துணை
கர்த்தரின் தடியவர் கோலும்- உலக

## 22

இந்துஸ்தான் பைரவி ஆதிதாளம்

### பல்லவி

அருள் வேதம் அதன் மகிமை பெரிது

### அனுபல்லவி

இருளகற்றும் விளக்கு இப்புவியுளோர் தமக்கு - அரு

### சரணங்கள்

1. சருவஞானக் கடவுள் தந்த திருவார்த்தை
தத்துவமீதென வெளிப்படுத்தி யதார்த்த
குருவைக்கண் டுய்யமதி கொடுக்கும் நேரார்த்தம்
கொள்ளுவர் சிலவற்றிற்கு சொல்லுவர் ஞானார்த்தம்
கோதிலாத - குணநற்சாத
காதியீத - லிதன்குணமா மதீத - அரு

2 உள்ளிந் திரியங்களை உருவியே செல்லும்
உத்தம மனஸ்தாபம்படச் சொல்லும்
மெள்ளக் கரணங்களை யடக்கியாட் கொள்ளும்
மேலான ஞானத்தையே யதுவிள்ளும்
மிகுந்த தூய்மை - யகத்திலாக
தகர்க்கும் லோக - மகத்துவத்தை மெய்யாக - அரு

3. படியினில் முடிமன்னர் பகைத்தெதிர்த் தாலும்
பரபக்கத்தார் பலரிடித் தழித்தாலும்
நொடியினிற் செழித்தெழுந் தோங்கிமென் மேலும்
நேரில்லா சிங்கம்போல் நின்று எந்நாளும்
நீட்டும் பாதையைக் - காட்டும் பேதையை
கூட்டும் போதனை - யூட்டிப் புரக்குமெய் - அரு

## 24

சாவேரி ஆதிதாளம்

### பல்லவி

அய்யனே நிதம் பரவல்செய வருள்புரி
அண்டி வந்தே னுனையெம் மானே

### அனுபல்லவி

அய்யனே! மெய்யனே! துய்யனே! - அய்ய

### சரணங்கள்

1 பொய்யான் வாழ்வைநம்பிப்
போனேன்மிக வொடுங்கிப்
புத்தியைக்கை விட்டிம்மட்டு மலைந்தேனே
புலையேனே - உந்தன்
புனிதத் திருவடி யடைந்தே னினிப்படி
மிடிதவிர்த்தரு எம்மானே - அய்ய

2 நில்லாது தேகமெனும்
நினைவைப் பேணாது மனம்
நினைத்தப் பொல்லா வழியிலேகி
படுதுரோகி - ஒரு
நிலையற் றிருதய நிலைகெட் டினிவரும்
நித்ய தண்டனைக் குள்ளானேன் - அய்ய

3 பொல்லாத வர்கள் நட்பும்
போர் பொய் புரட்டு வஞ்சம்
புரியாத தீவினைகளினியேது
சொல் லொண்ணாது - மனம்
பொருத்திம் மடையனைத் திருத்தி யருள்தர
கருத்தும் கவலையுள்ளானே - அய்ய

## 25

இந்துஸ்தான்காபி ஆதிதாளம்

### பல்லவி

என்னகுறை என் நெஞ்சமே
யேசுகிறிஸ் தையன் என்று மிருக்கையில்

### சரணங்கள்

1 ஒன்று மில்லாமையி னின்றுயிம் மண்டலம்
விண்டலம் யாவையு முண்டு செய்த
அண்டபிரா னெதைதான் செய்யார்
அவிச வாசிகட் கொன்றையும் செய்யார்மெய் -என்

2. கடலைப் பிளந்தார் நடந்தா ரிசரேல்
மடமடென வறண்ட நிலத்திலே
தொடர்ந்தப் பாரோ னிவனிட ராணுவம்
மடிந்தார் படர்ந்த கடலின் நீரிலே - என்

3 மாறாவின் நீரை இனிப்பாக மாற்றிவிண்
மன்னாவைத் தந்தவர் மாறாதவர்
தேறாத நெஞ்சேநீ தேறிடு தேவனைத்
தேடு வடைக்கலம் கூடு குறைவில்லை - என்

4 அன்னைகை விட்டாலும் விட்டிடுவா ளுந்தன்
ஆண்டவர் கைவிடா ரன்புள்ளவர்
என்ன! வலதிட மேகிடாதே யென்றும்
ஏகிடு நீ நடு பாதையிலேகிடு - என்

5. தன்னை தந்துன்னைத் தடுத்தாண்ட ஆண்டவர்
தாமினி யுன்றனுக்காக நின்று
என்ன செய்யார்? நன்மை யாவுஞ்செய்வார்
ஏகிடுமுன் னெதிர்த்துநில் பிசாசுடன் என்



# 23

## சத்திய வேத அம்மானை

**ஆசிரியர் : ஜே.எஸ். ஆழ்வார் பிள்ளை (1891-1968)**

**அறிமுகம் : செ. ஜேசுதாசன்**

*கிறிஸ்தவத் தமிழ் இலக்கியத்தை வளப்படுத்திய இலங்கைத் தமிழர் வரிசையில் ஜே.எஸ். ஆழ்வார்பிள்ளை குறிப்பிடத்தகுந்தவர். இவர் 1891 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 7 ஆம் நாள் யாழ்ப்பாணத்திற்கு அருகிலுள்ள கட்டைவேலி எனும் கிராமத்திலுள்ள சைவ வேளாளர் குடும்பத்தில் பிறந்தார். இவரது தந்தையார் சின்னத்தம்பி. இவர் தனது ஐந்தாம் வயதில் கட்டைவேலி கிறிஸ்தவ பாடசாலையில் கல்வி கற்க ஆரம்பித்தார். தனது 13 ஆம் வயதில் ஓர் வரகவியாக மாறி அநேக கவிகளை இயற்றத் தொடங்கினார். 1904 ஆம் ஆண்டு கட்டைவேலி ஆலயத்தில் ஞானஸ்நானம் பெற்று ஜேம்ஸ் எனும் பெயருடன் ஜே.எஸ். ஆழ்வார்பிள்ளை என அழைக்கப்படலானார். 1912 ஆம் ஆண்டு ஆசிரியப் பயிற்சியை முடித்து ஆசிரியராகப் பணியாற்றினார்.*

*கிறிஸ்தவப் பக்தரான இவர், தம் ஆண்டவராகிய கிறிஸ்து பெருமான் பேரில் கவிகள் பல பாடியுள்ளார். இவரது எழுத்துத் திறமை இயல், இசை, நாடகம் ஆகிய மூன்று துறைகளிலும் செயற்பட்டிருக்கிறது என்று அறிகிறோம். எனினும் நாடக நூல் ஒன்றுமே இப்பொழுது கிடைக்கவில்லை. நாடகங்களாக திருஅவதாரம், கெட்டகுமாரன், பக்தயோபு, மச்சமுனிவர், அன்பின் தியாகம், பிரளய முனிவர், பக்த கருணாகரன், கண்டி அரசன் ஆகிய நாடகங்களை எழுதியும் மேடையில் ஏற்றியும் பெரும் பணி செய்தார். செய்யுள் இயற்றுவதென்பது சிறு பிராய முதலே இவருக்குக் கைவந்த கலை; தண்ணீர் பட்ட பாடுதான். உரைநடையில் எழுதினாலும் செய்யுளுக்குரிய மோனையில்லாமல் இவரால் எழுத முடியாது. ''அனலிடை மெழுகென அகச்சிலை உருக்கி'' என்று நசரேயக் கோவைக்குத் தானெழுதிய முகவுரையை ஆரம்பிக்கிறார். இது ஒரு அகவலடி என்பதையும் கவனிக்க வேண்டும். செய்யுள் வகைகளில் வெண்பா கடுமையான கட்டுப்பாடுகளை உடையது. கட்டளைக் கலித்துறையும் கட்டுப்பாட்டில் ஏறக்குறைய அதைப் போன்றதுதான். இவ்விரண்டையும் அவர் விட்டு வைக்கவில்லை.*

*சாதிபேத ஒழிப்பு தொடர்பாக அவர் எழுதிய நூல்கள் பல. அத்துடன் அமரத்துவம் அடைந்த அன்பர்கள் பேரில் ஏறக்குறைய நூறு பாடல்களுக்கு மேலாக அவர் பாடியுள்ளார்.*

*பிள்ளையவர்களின் இயல், இசைப் பாடல்களை வாசிக்கும் போது, முதலில் நாம் காண்பது அவருக்கு மரபின் மேலிருந்த பிடியைத்தான். செய்யுள் உருவத்திலும் பக்தியாகிய உள்ளடக்கத்திலும் அவர் இடைக்காலப் பிரபந்தங்களையும் பக்திப் பாடல்களையும் பெரிதும் பின்பற்றியிருக்கிறார்.*

*"நாவினாலுனது நாமம் நவற்றிட வைத்தாய் போற்றி*
*பாவினாலுனைத் துதிக்கப் பக்குவமளித்தாய் போற்றி*
*ஆவியின் வரப்ரசாத மளித்தெனை வழிநடத்திச்*
*சாவிலும் துதிக்க வைப்பாய் தற்பரா போற்றி போற்றி"*

என ஆழ்வார் பிள்ளை பாடிய பாடலால் அவர் பெற்ற இசை அனுபவத்தினூடே அவரது பாடல்கள் உருப்பெற்றன என்பதைக் காணலாம்.

பிரபந்த வகையில் உள்ள நசரைச் சிலேடை வெண்பா, நசரேயச் சித்திரகவிகள் ஆகிய நூல்களில் சொல்லணிகளைத்தான் அதிகமாகக் காணமுடியும். ஆனால் பிற நூல்களில் வரும் அகவற்பாக்கள் எளிய சொற்களும், நறுக்கு நறுக்கென்று தெறித்தோடும் உணர்ச்சிக் குமிழியிடும் நடையும் உடையவை. எளியவர்களுக்கு சுவிசேஷம் எடுத்துக் கூறும் சொற்பொழிவுகள் இவை.

பிரபந்தங்களில் சத்திய வேத அம்மானையைத் தனியாகக் குறிப்பிட வேண்டும். பிரபந்த இலக்கியங்களுக்குப் பொதுவாக ஒரு பண்டிதப்போக்கு, விறைப்பு உண்டு. ஆனால் அம்மானைக்கு அது கிடையாது. பாமர மக்களுக்குரிய இலக்கியம் இது. கிராமங்களில் ஒருவர் இருந்து பாட, மக்கள் சுற்றியிருந்து கேட்டு அனுபவிக்கும் கதைப்பாடல் (ballad) இது. பாட்டின் நடை எளிது. ஓசை ஒழுக்கும் இழைந்து இழைந்து செல்லும் நீரோடை போன்றது. படைப்பு வரலாறு முதல், பவுலும் திருச்சபை வரலாறும் வரையுள்ள செய்திகளைக் கதை போலச் சுவையாகச் சொல்லுவது இந்நூல். கதையைப் பாடும்போது அம்மானை என்ற சொல் பல்லவி போலத் திரும்பத்திரும்ப வந்து சுருதி போலக் காதில் ரீங்கரித்துக் கொண்டேயிருக்கும். இயேசு கிறிஸ்துவின் இரட்சணிய சரிதத்தைக் கிராமங்களிலுள்ள மக்களுக்கு அதிலும் ஏழை மக்களுக்குக் கூற இதைவிட ஏற்றதான ஓர் இலக்கிய வடிவம் இருக்கிறதா என்று கேட்கத் தோன்றுகிறது. இவ்வடிவத்துக்கு, பாரதியார் குயில் பாட்டில் செய்திருப்பது போல், வெள்ளோசை மெருகேற்றிச் சிறப்புடையதாக்கியிருக்கிறார் ஆழ்வார் பிள்ளை. சத்திய வேத அம்மானை 1961-க்குப் பிறகு அதனை அடுத்து வெளிவந்ததென்று தெரிகிறது.

பிள்ளையவர்களின் இசைப்பாக்கள் 'கிறிஸ்தவப் பஞ்சாமிர்தம்' என்ற அவர் நூலில் அடங்கியுள்ளன. தனது முதுமைப் பருவத்தில், கிறிஸ்தவ அநுபவ முதிர்ச்சியடைந்த நிலையில் எழுதி வெளியிட்ட இசைப் பாக்களின் தொகுதியானதால், கிறிஸ்தவப் பஞ்சாமிர்தம் தான் அவர் படைப்புகளில் சிறந்தது என்று கூறலாம். வாழைப்பழம், தேன், சர்க்கரை, நெய், திராட்சை ஆகிய ஐந்து வகையான இன்சுவைப் பண்டங்களால் தயாரித்து இந்துக்கள் தங்கள் தெய்வங்களுக்குப் படைக்கும் நைவேத்தியத்தைப் பஞ்சாமிர்தம் என்பார்கள். கிறிஸ்தவப் பஞ்சாமிர்தமோ தேவாரம், திருவாசகம், திருப்பல்லாண்டு (நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்-பெரியாழ்வார்), திருவிசைப்பா, திருப்புகழ் ஆகிய ஐந்து சைவ-வைணவப் பக்திப் பாடல்களைத் தழுவி எழுதப்பட்ட கிறிஸ்து வழிபாட்டுப் பாடற் படையல். வயது முதிர்ந்த காலத்தில் (1957) ஆழ்வார்பிள்ளை தொகுத்து வெளியிட்ட இந்த இசைப்பாடல் தொகுப்பு அவருடைய கிறிஸ்தவ அனுபவ முதிர்ச்சியை வெளியிடுகிறது. கிறிஸ்துவின் காட்சி, அனுபவ காட்சி, கிறிஸ்துவின் துதி ஆகிய விஷயங்களை உள்ளடக்கி, கிறிஸ்துவின் கரை காண முடியாத அன்பில் குழைகின்றார் பிள்ளை. நம்மையும் குழைய வைத்து விடுகின்றார்.

இவர் எழுதிய உரைநடை நூல்கள் தமிழன் குரல், தமிழ்த் தாயின் ஓலம், கலிகாலக்கோலம், உலகம் பலவிதம் ஆகியவையாகும். 1981 இல் நடந்த உலகக் கிறிஸ்தவத் தமிழ்ப் பேரவை

*இவருக்குத் தமிழ் மாமணிப் பட்டம் வழங்கிச் சிறப்பித்திருப்பது நமக்கெல்லாம் பெருமை சேர்க்கிறது.*

*ஆழ்வார் பிள்ளை தமது 77ஆம் வயதில் 1968ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 17ஆம் நாள் காலமானார்.*

### காப்பு (வெண்பா)

சத்திய வேதத்தின் சரிதைதனை அம்மானைப்
பத்தியரு பந்தன்னிற் பாடுதற்கு கர்த்தன்
சிலுவை யடிபட்ட செங்கமலப் பாதச்
சலுகையதே யென்றுஞ் சரண்!

## நூல்

## 1. சிருஷ்டிப்பு

அக்கையரே! தங்கையரே! அண்ணன்மார் தம்பியரே!
தக்க பெரியோரே! தாய்மா ருறவினரே!
எத்தனையோ மார்க்கங்கள் எங்கும் பரந்திருக்க,
சத்தியவே தம்நமக்குத் தாரணியில் வந்தவிதம்
ஏலுமட்டு மிங்கே எடுத்துரைப்பே னம்மானை!
ஆதியந்த மின்றி அநாதியா யுள்ளவரும்
சோதிபரி சுத்தரெனத் தூதர் தொழுபவரும்
என்று மிருந்தவரும் என்று மிருப்பவரும்
எங்கு மிருப்பவரும் எல்லா மறிந்தவரும்
நீதி நியாயம் நிறைந்தவரும் மாபெரிய
வேதியர்க்கு நல்ல விளக்காய்த் திகழ்பவரும்
இரக்க முருக்கம் இயம்பரிய நற்கிருபை
சாந்தந் தயவுடனே சாத்துவிக முள்ளவரும்
ஆன பரமபிதா ஆதியிலே பூமியையும்
வானத்தை யும்படைத்த வகையுரைப்பே னம்மானை!
ஒன்றுமின்றிப் பூமி ஒழுங்கீன மாயிருக்க,
ஆழத்தின் மேலே அதிக இருளிருக்க,
சலத்தின்மேல் தேவாவி சலனித்துக் கொண்டிருக்க,
மேலான தேவன் வெளிச்சத்தை யுண்டுபண்ணி
வெளிச்ச மிருளிரண்டும் வெவ்வேறா கப்பிரித்தார்.
இரவும் பகலுமென இரண்டும் முடிந்தபின்பு
மாலையும் காலையுமாய் வந்ததுவே ஓராம்நாள்!
வானம் இரண்டாம்நாள் வகுத்ததின்மேற் பூமிகடல்
தாவரங்கள் புல்பூண்டு சகலமுமே யுண்டுபண்ண
மூன்றாம்நா ளாகி முடிந்ததுவே அம்மானை!
வான விரிவதிலே மகத்தா மிருசுடர்கள்
சூரிய சந்திரராம் சொற்களா லுண்டுபண்ணி
வல்ல திரித்துவனார் வைத்தாரே நாலாம்நாள்!

நீர்வாழ் பிராணிகளும் நிலத்தூர் பிராணிகளும்
பட்சி யினம்பலவும் பாங்காக உண்டுபண்ணி
ஐந்தாம்நாள் வைத்தார் அதிசயமே யம்மானை!
நாற்கால் விலங்குகளை நாட்டிலும் கர்ட்டிலுமாய்
உண்டுபண்ணித தம்முடைய உருவமுஞ் சாயலுமாய்
மானிடனை உண்டாக்கி மாநிலத்தை ஆள்கவென்று
ஆண்பெண் ணிரண்டாக ஆறாம்நாள் வைத்தனரே!
தம்மை யறிந்திடவும் தம்மைநே சித்திடவும்
தம்மைச் சேவித்திடவும் தம்மோடே யென்றும்
பேரின்பந் தன்னைப் பெரிதாகத் துய்த்திடவும்
உண்டுபண்ணி மானிடரை ஓய்ந்தாரே ஏழாம்நாள்!
மானிடனைப் பூமியதின் மண்ணா லுருவாக்கி
சீவ சுவாசத்தைத் திறமா யவனுடைய
நாசியிலே ஊதிவிட்டார் நன்றாக வேயவனும்
சீவாத்து மாவானான் சிறப்பாக வேயவனை
ஏதேன் தோட்டத்தில் இருத்திவைத்தா ரம்மானை!
பொன்னுங்கோ மேதகமும் பொலிந்த நதியான
பைசோனும், கீகோனும் பகரும் இதெக்கேலும்
ஐபிராத் என்னும் அரிய பெருநதியும்
எல்லையாய்க் கொண்டிருந்த ஏதேனில் ஆண்டவனார்
பார்க்க அழகும் பசிக்கு நறுஞ்சுவையும்
கொண்ட கனிவிருட்சம் குவியலாய் உண்டுபண்ணி,
தீமைநன்மை இன்னதெனத் தெரிவிக்கு மோர்சீவ
விருட்ச மதையும் விரும்பியே தோட்டமதின்
மத்தியிலே உண்டாக்கி வைத்தாரே யம்மானை!
தோட்டமதைக் காவல்செய்து சொகுசாகப் பண்படுத்த
மானிடனாம் ஆதாமை மகிழ்ந்தாங்கே வைத்தாரே!
வேண்டுங் கனிகளெல்லாம் விரும்பியே தின்றிடலாம்
மத்தியி லுள்ள மரத்தின் கனிமேலே
ஆவலது கொள்ளாமல் அதனையோ தீண்டாமல்
பறித்துப் புசியாமல் பணிவா யிருங்களென்றார்
கட்டளையை மீறிக் கனியதனை உண்டாக்கால்
சாவுவரும் சாவ தானமென்றா ரம்மானை!
ஆதாம் தனித்தவனாய் அவனியிலே வாழ்ந்திடுதல்
போதா தெனநினைத்துப் புத்திபண்ணித் தோட்டமதில்
அவனுக் கயர்ந்தநித்ரை அங்கொருநா ளுண்டாக்கி
விலாவி னெலும்பெடுத்து விசித்திரக் கோலமுடன்
ஏவாளை உண்டுபண்ணி ஏற்ற துணைவியென
வைத்தா ரவனுடனே வம்புதும்பு தாமறியா
நிர்வா ணிகளாக நிம்மதியா யங்கிருந்தார்!
ஆண்டவனார் தோட்டமதில் அடிக்கடி வந்துலவி
தந்தையைப்போல் மக்களொடு சல்லாப மாயிருந்தார்
பாவ மறியாமல் பழிபகைக ளில்லாமல்

உருட்டுப் புரட்டுடனே திருட்டென்ப தில்லாமல்
தீமைநன்மை இன்னதென்று தெரியாமற் சுத்தர்களாய்
ஏதேன்பூங் காவினிலே ஆதாமு மேவாளும்
நல்வாழ்வு தன்னை நடத்திவந்தா ரம்மானை!

## 2. சாத்தானின் வஞ்சனை

பாவமதைச் செய்து பரமண் டலத்தினின்று
தள்ளுண்ட தூதர்களின் தலைவனா குஞ்சாத்தான்
ஆதாமு மேவாளும் ஏதேன் பரதீஸில்
அத்தன் சமுகமதில் அல்லும் பகலுமொன்றாய்ச்
சூதுவா தில்லாத சுத்தர்களாய் வாழ்வதையும்
பேரின்பந் துய்த்துப் பெருமையாய் வாழ்வதையும்
சாகாமல் நித்தியமும் சஞ்சரிக்கப் போவதையும்
கண்டு மனம்புழுங்கிக் காய்மகாரங் கொண்டு
கடவுள் விதித்திருந்த கட்டளையை மீறிடவும்
மீறிக் கடவுள்தன்னை விட்டுப் பிரிந்திடவும்
பாவமதைச் செய்திடவும் சாபமதை ஏற்றிடவும்
சீர்கெட் டலைந்திடவும் செய்ய மனந்துணிந்து
தந்திரத்தி லேபெரிய சர்ப்பமாய்த் தோட்டமதில்
வந்து வடிவெடுத்து மரத்தடியி லேபடுத்து
ஆதாமில் லாத அருந்தருணம் பார்த்திருந்து
வஞ்சனையாய் ஏமாற்றி மயக்கியே ஏவாளை,
கண்ணைப் பறிக்கும் கனியைப் பறித்தெடுத்து
உண்ணும் படிவற் புறுத்திநின்றா னம்மானை!

## 5. ஆதாமின் சந்ததி

தோட்ட மதனைவிட்டுத் துரத்துண்ட ஆதாமும்
ஏவாளும் மாமிசத்தின் இச்சையதா லொன்றாகிக்
காயீனைப் பெற்றெடுத்தார் கமக்கார னாமவனே!
அடுத்த மகனாக ஆபேலைப் பெற்றெடுக்க
ஆடுகளின் மேய்ப்பன் ஆகினா னங்கவனே!
காயீனும் ஆபேலும் காணிக்கை கொண்டுவந்து
தேவ சமுகத்தில் செலுத்திநின்ற வேளையிலே
ஆபேலின் காணிக்கை அங்கீகா ரம்பெறவும்
காயீனின் காணிக்கை கழித்து விடப்படவும்
கண்டஅந்தக் காயீன் கடுமெரிச்ச லுண்டாகி
தம்பியென்றும் பாராமல் வெம்பும் பொறாமையினால்
ஆத்திரங் கொண்டங்கே ஆபேலைக் கொன்றுவிட்டான்
பின்னுமந்தக் காயீனும் பெற்றாரும் பிள்ளைகளைப்
பெற்றெடுக்கச் சந்ததிதான் பெருகினதே அம்மானை!

## 70. இயேசுவின் மலைப்பிரசங்கம்

கூட்டம் பெருந்திரளாய்க் கூடினதைக் கண்டொருநாள்
மலையொன்றின் மேலேறி மகிழ்ந்தங் கிருந்துதங்கப்
பிரசங்க மாரி பெருகப் பொழிந்தனரே!
தாழ்மைக் குணந்தரித்துச் சஞ்சரிப்போ ரக்குணத்தால்
வாழ்வாரே உன்னதத்தின் ஆளுகை பெற்றெனவும்;
துயரப் படுபவர்கள் சொல்லொணாப் பாக்கியர்கள்
அயரா திருப்பினவர்க் காறுதலே யுண்டென்றும்,
என்றைக்குஞ் சாந்தமுட னிருந்துவாழ் வோர்தமக்கு
சொந்தமா கப்பூமி சுதந்திர மாகுமென்றும்;
நீதிக்கா கப்பசியும் நிறைதாக முங்கொள்வோர்
தீதின்றி நல்ல திருப்தி யடைவரென்றும்;
இரக்க உருக்கமுள்ளோர் இவ்வுலகி லேதேவ
இரக்க மதனைப் பெருக்கப் பெறுவரென்றும்;
சுத்த இருதயத்தோ டித்தரையில் வாழ்பவர்கள்
கர்த்தாதி கர்த்தரைத்தம் கண்ணினாற் காண்பரென்றும்;
சித்த சமாதானம் செய்வோர்கள் தேவனது
புத்திரர்க ளென்று போற்றப் படுவரென்றும்;
பாடுபட்டு நீதிக்காய்ப் பரிதபித்து நிற்பவர்கள்
பரலோக ராச்சியத்தில் பங்கு பெறுவரென்றும்;
எந்தவசை நிந்தை,துன்பம் இந்தஉல கந்தனிலே
வந்தாலுஞ் சந்தோஷ மாய்வாழ வேண்டுமென்றும்;
இப்பூமி யிற்கறியின் உப்புப்போ லக்கரைந்து
எப்போது மேபிறருக் கிருந்திட வேண்டுமென்றும்;
மலையின்மே லேயிருக்கும் மணிவிளக்கைப் போல்நிதமும்
உலகத்தா ருக்குநல்ல ஒளியாக வேண்டுமென்றும்;
குற்றமின்றிப் பிறரைக் கோபித் தவமதித்தே
அற்பர்கள் மூடரென அழைத்திடலா காதென்றும்;
குற்றங்க ளைப்பொறுத்து மற்றவர்க ளோடுசமா
தானமாய் வாழ்வதுவே சாலச் சிறந்ததென்றும்;
கோபம் பகைகளுமே கொடியகொலைக் கொப்பாகும்
தாபம் பழிகள்சண்டை தள்ளிவிட வேண்டுமென்றும்;
கண்ணும் மனமுமெந்தப் பெண்ணினையே பார்த்தாலும்
எண்ணில் விபசாரம் என்னலா மேயென்றும்;
உன்றன் வலதுகண்ணால் உனக்கிடற லுண்டானால்
அந்தக் கண்ணைப்பிடுங்கு! ஆனந்த வீடடைவாய்,
உன்றன் வலதுகையால் உனக்கிடற லுண்டானால்
அந்தக்கை யைத்தறிநீ ஆனந்த வீடடைவாய்,
உன்மனைவி வேசியென உண்மையிலே கண்டாக்கால்
தள்ளுதற்சீட் டுக்கொடுத்து, தள்ளிவிட வேண்டுமென்றும்,
அப்படி யில்லாமல் அவளைநீ தள்ளிவிட்டால்
விபசாரி யாகிஅவள் வீணாகிப் போவளென்றும்;

அப்படி யாகிவிட்டால் அந்தப் பழியுனது
தலைமேற் சுமந்துவிடும் சாக்கிரதை யாயிரென்றும்;
உள்ளதை உள்ளதென்றும் இல்லதை இல்லையென்றும்
சொல்வதன்றிச் சத்தியமோ, துண்டாய்ச்செய் யற்க்ளன்றும்
தீமைக்குத் தீமைதன்னைச் செய்யாமல் நன்மைசெய்து
இதமாகச் சீவகிரீ டம்பெற வேண்டுமென்றும்;
சத்துருக்கள் செய்தீமை சகித்துப் பொறுமையுடன்
அவர்கள் தமைப்பேணி ஆதரிக்க வேண்டுமென்றும்;
ஆகாத சத்துருவை ஆசீர் வதித்தவனுக்
காகச் செபிப்பதுவே அதிக கடமையென்றும்;
உன்றன் பரமபிதா ஒருசற் குணரவர்போல்
நீயுமொரு சற்குணனாய் நிலவவே வேண்டுமென்றும்
சனங்களின்கண் காணஎன்று தருமமதை நீசெய்தால்
மறுமைப் பயனதனால் வாரா துனக்கென்றும்;
வலதுகை செய்தருமம் மறுகை அறியாமல்
மாயமில்லாத் தருமம் வழங்கிட வேண்டுமென்றும்;
கண்டபடி மாயக் காரரைப்போற் சந்திகளில்
தொண்டை கத்திச்செபித்து சோலிபண் ணற்களன்றும்
நீண்ட செபங்கள்செய்து வேண்டுவதெல் லாம்வீணே!
ஆண்டவர் முன்னமைதி யாய்ச்செபிக்க வேண்டுமென்றும்
உபவாசஞ் செய்கையிலே உங்கள்தலைக் கெண்ணெய்யிட்டு
நல்லாய் முகத்தினையே நயந்துகழு வுங்களென்றும்;
மாய்மாலக் காரரைப்போல் வாட்ட முகத்துடனே
மற்றவரை ஏமாற்றி மருட்டாதிருங்க ளென்றும்;
உபவாசத் தோடே உங்கள் விரதமெல்லாம்
உள்ளத் தனுசரித்தே உறுதிசெய் யுங்களென்றும்;
பூமிதனிற் சேர்த்துவைக்கும் பொக்கிஷங்கள் யாவையுமே
பூச்சிதுருக் கெடுக்கும் பொல்லாத் திருடர்களும்
கன்னங்கள் வைத்துக் களவெடுப் பார்களென்றும்;
உங்களது தேட்டமெல்லாம் ஒன்றாகச் சேர்த்தெடுத்து
பவுத்திர மாகப் பரத்தினில்வை யுங்களென்றும்;
எங்கெங்கே பொக்கிஷத்தை ஈட்டிவைக் கின்றீரோ
உங்க ளிருதயமும் அங்கே யிருக்கு மென்றும்
ஏழைகளென் றுங்களிடம் இரக்க வருபவர்க்கு
இல்லையென்னா தேதும் ஈந்துநட வுங்களென்றும்,
வைத்துக்கொண் டில்லையென மனதறியச் சொல்லாமல்
கஷ்டத்தின் மூலம் கடன்கேட் பவர்களுக்கு
உங்கள்முகங் கோணாமல் உதவிபுரி யுங்களென்றும்;
இரண்டெச மானருக்குத் தொண்டுசெய்ய ஏலாதே!
ஆகையால் தேவனுக்கும் ஆகாப் பிசாசனுக்கும்
இருவருக்குந் தொணடுசெய்யா திருக்கவே வேண்டுமென்றும்
என்னஉண் போம்குடிப்போம் எதையுடுப்போ மென்றுசொல்லி

எண்ணிக் கவலையடைந் திருக்கவேண் டாமென்றும்;
பட்சிவகை யைக்கடவுள் பார்த்துப் பராமரித்து
உணவூட்டு கின்றதனை உலகிலே கண்டிருந்தும்
மனக்கவலை கொண்டு வருந்தவேண் டாமென்றும்;
கவலைப் படுவதனால் எவருக்கு மோதேகம்
உள்ள அளவுடனே ஒருமுழமே னுங்கூட
வாரா தொருபோதும் வரவே வராதென்றும்;
தேவனது ராச்சியமும் தேவனது நீதியதும்
தேடி முதலில், தினமு மிருங்களென்றும்;
அப்படி யாயின் அளவுக்கு மிஞ்சியெல்லா
ஆனந்த பாக்கியமும் அடைந்திடு வீர்களென்றும்;
நாளைக்கென் செய்வமென்று நலிந்து கவலைகொள்ளேல்
அந்தந்த நாளைக்கு அதன்பாடு போதுமென்றும்;
மற்றோர் தமைக்குற்ற வாளிக ளென்னாதீர்
உங்கள்தீர்ப் பின்படியே உங்களை யுங்கடவுள்
தீயகுற்ற வாளிகளாய்த் தீர்த்து விடுவரென்றும்;
ஆருக் களந்தீர்கள் அதேயளவா லுங்களுக்கும்
அளக்கப் படுமென்று அறிந்துநட வுங்களென்றும்;
உங்கள் பெரும்பிழையை யோசித்துப் பாராமல்
பிறருடைய அற்ப பிழைகள் தமைப்பெரிதாய்
தூக்கி அவர்கள்தம்மைத் தூற்றா திருங்களென்றும்;
உங்களை நீங்கள் உணர்ந்து திருந்திநல்ல
யோக்கியர்க ளாக உலகி லிருங்களென்றும்;
பரிசுத்த மானவற்றைப் பவுத்திரமாய் வைப்பதன்றி,
கொண்டுபோய் நாய்களுக்குக் கொடுக்கா திருங்களென்றும்
உங்களிடத் துள்ள உயர்ந்தவிலை முத்துகளை
பன்றிகள்முன் போடாமல் பார்த்துக்கொள் ளுங்களென்றும்
கேளுங்கள் அப்பொழுது கிடைக்குமென்றும்; தேடுங்கள்
கண்டடை வீர்களென்றும், கதவினரு கில்நின்று
தட்டுங்கள் அப்பொழுது தானே திறக்குமென்றும்;
அப்பங்கேட் டுங்கள்மகன் அழுதா லவனுக்கு,
கல்லதனை அப்பமென்று மெல்லக் கொடுப்பீரோ!
மீன்தேவை யென்றுமகன் விரும்பி அழுதாக்கால்
பாம்பதனை மீனென்று பரிவாய்க் கொடுப்பீரோ!
அப்பமும் மீனுமன்றோ ஆசையுடன் கொடுப்பீர்
பொல்லா மனுஷரிவை எல்லாந்தம் மக்களுக்கு
ஈவதென்றாற்பரம தேவனவர் உங்களுக்கு
பலவித நன்மைகளும் பாங்கா யளிப்பரென்றும்;
அவ்வா றளித்திடுதல் அதிகநிச முண்மையென்றும்
மற்றவர்கள் யாதுசெய்ய மனமுங்க ளுக்கிருக்கோ
அதையே அவர்களுக்கும் அன்பாகச் செய்திடுங்கள்
பெரிய நியாயப் பிரமாணந் தன்னுடனே

சாற்றியுள்ள தீர்க்க தரிசனமு மீதென்றும்
கேட்டுக்குப் போம்வாசல் கிட்ட இருக்கிறது
பாதை அகலம் படுகுழியில் வீழ்ந்திடுவீர்
பொல்லாத பாதையதிற் போகா திருங்களென்றும்
நித்திய சீவவழி மெத்த நெருக்கமது
அதிக இடுக்கமுமாம் ஆகையினா லிவ்வழியே
போகமனம் வாராது போய்ப்பழகி னாலதிகம்
வாய்ப்பாகும்! அந்த வழியத னைத்தெரிந்து
எந்தநா ளும்நடந்தீ டேறப்பா ருங்களென்றும்;
ஆட்டின்தோ லைப்போர்த்தே அதுவுமிது வுஞ்சொல்லிப்
பாசாங்கு பண்ணிப் பலபேர் வருவார்கள்
கள்ளர்களே அவர்கள் உள்ளத்திற் பொல்லாத
ஓநாய் களைப்போல உங்களைப் பீறிடுவார்
அவர்கள் கனிகளினால் அவர்களை நன்கறிந்து
எச்சரிக்கை யாக என்று மிருங்களென்றும்;
நல்ல மரங்களெல்லாம் நல்லகனி யேகொடுக்கும்
கெட்ட மரங்களெல்லாம் கெட்ட கனிகொடுக்கும்
நல்ல கனிகொடுக்கா எல்லா மரங்களுமோ
வெட்டுண்டு தீயில் எரிக்கப் படுமென்றும்,
பரலோகந் தன்னிலுள்ள பரமபிதா வின்சித்தம்
எதுவோ அதன்படியே எவன்செய் திடுவானோ
அவனே பரலோகம் அடைய முடியுமென்றும்;
இந்த உபதேசம் எவன்கேட் டொழுகுவனோ
அவனேநற் புத்தியுள்ளோன் அவன்கன் மலைமேலே
அஸ்திபா ரம்போட்டே அசையாத வீடதனைக்
கட்டினவ னைப்போலக் கெட்டுப்போ காதபடி
மோட்ச கதியதனை முற்றா யடைவனென்றும்;
இப்படி யெல்லாம் இதமா யுபதேசம்
செய்ததினாற் பலபேர் சினந்தெழுந்தா ரம்மானை!

## 72. இயேசு செய்த அற்புதங்கள்

அவர்களது கைக்கோ அகப்படா மற்பெருமான்
விலகிப் பலஇடமும் மென்மேலுஞ் சென்றுசென்று
சீஷர் புடைசூழச் செய்தாரே அற்புதங்கள்!
அவ்வற் புதங்கள்தமை ஆகுமட்டு மிங்கடியேன்
செவ்வையாய்க் கூறிடுவேன் தேவபிதா வருளால்!
அசுத்தாவி யோடுசெப ஆலயத்தி லேயிருந்த
அவனி னசுத்தாவி அகற்றித் துரத்தினரே!
பேதுருவின் மாமிதன்னைப் பிடித்தபொல் லாதசுரம்
தீதேதுஞ் செய்யாமல் தீர்த்துச் சுகமளித்தார்!
வீசி இராமுழுதும் மீனோ படாதவலை
யேசையனார் சொல்ல மூசியிழுத் திடவும்

இழுக்கஏ லாதபடி ஏராளம் பட்டதுவே!
சித்தமா னாலென்னைச் சுத்தப் படுத்திவிடத்
திறமையுமக் குண்டென்று செப்பியே கெஞ்சிநின்ற
குஷ்டம் பிடித்திருந்த குஷ்டரோ கத்தினனை
நன்றாய்ச் சுகமாக்கி நயந்தனுப்பி வைத்தாரே!
பொல்லாத் திமிர்வாதக் கார னெழுந்து துள்ளி
எல்லாருங் கண்டிடவே நல்லாய் நடந்துசெல்ல
வைத்தார் கிறிஸ்துவெனும் மகிமைக் குமாரனவர்!
வலக்கை யதுசூம்பி வந்தால யத்திருந்த
அவன்கை மறுகைபோல் ஆக்கிவிட்டார் யேசுபிரான்!
நூற்றுக் கதிபதியின் ஏற்றவே லைக்காரன்
மாற்ற முடியாத மரணத் தறுவாயில்
நோய்வாய்ப்பட் டுக்கிடக்க, கோவா யுலகில்வந்த
இயேசு பிரானவனுக் கீந்தாரே நல்லசுகம்
செத்தபின்பு பாடையிலே வைத்துச் சுடலைக்கு
கொண்டு தெருநீளம் சென்றநா யீன்விதவை
மகனுக் குயிர்கொடுத்து மகிழ்வா யனுப்பினரே!
ஏழுபிசா சொன்றாக இறுகப் பிடித்திருந்த
மகதலே னாமரியாள் வாழும் படியவற்றை
வல்லவராம் யேசு வாட்டித் துரத்தினரே!
கொடும்புயலி னாற்குமுறிக் கொந்தளித்து நின்றகடல்
அடங்கி யமர அதட்டிவிட்டார் யேசுபிரான்
சங்கிலி யும்விலங்கும் தகர்த்துடைத்து வீறுகொண்டே
எங்குந் திரிந்த லேகியோ னாம்பேயை
வெருட்டித் துரத்திவிட்டார் மேன்மையுள்ள யேசுபிரான்
ஆலயத் தின்தலைவன் ஆன யவீருவது
செத்துக் கிடந்த சிறுமகளை யேசுபிரான்
உயிரோ டெழுப்பி உதவினா ரற்புதமே!
பன்னிரண் டாண்டுகளாய்ப் பலகஷ்டப் பட்டிருந்து
பெரும்பாட்டு நோயாற் பெரிதும் வருந்தியதோர்
பெண்மணியாள் யேசு பிரானுடைய வஸ்திரத்தைத்
தூரநின்று தொட்டுச் சுகம்பெற்றா ளம்மானை!

## 97. சிலுவை சுமத்தலும் சிலுவைப் பாதையும்

கள்வர் கொலைகாரர் கலகஞ்செய் வோர்கள் தம்மை
அறைந்து கொலைசெய்ய அக்காலம் ரோமர்கள்தாம்
அமைத்த மரச்சிலுவை யதனைக் கிறிஸ்துபிரான்
சுமக்கும் படியாகச் சுமத்திவிட் டார்தலைமேல்!
பாரச் சிலுவையதைப் பரமகுரு தன் தலைமேல்
சுமந்துகொண்டு செல்லுகையில் சுமைதாங்க மாட்டாமல்
கல்லுமுள்ளுந் தைத்ததினால், காலிரண்டுங் கொப்பளிக்க;
இருதோள் களும்நெரிந்தே எரியப், பசிதாகம்

முட்டிளைப் புக்களைப்பு முழுவதுமே யுண்டாக;
தள்ளாடிக் காலிரண்டும் தடதடக்க, வாரடியால்
அங்கு வடிந்தரத்தம் ஆறாய் வழிந்தோட
பள்ளந் திடரேறிப் பதைத்துச் சிலுவையுடன்
முகங்குப் புறவிழுந்து மோசடிகள் பட்டாரே!
இடுப்பொடிய வாதையுடன் ஈனச் சிலுவைகொண்டு.
நடைகெட்டு வீழ்ந்தெழுந்து நடந்தப்பாற் செல்லுகையில்
பெருமூச் செறிய அரியதிரு மேனியிலே
வேர்வை வடிந்தோட ஆர்வமுட னப்போது
மாதாவாங் கன்னிமரி வந்து கண்டா ளம்மானை!

## 98. சீரேனே ஊரானாகிய சீமோன் சிலுவை சுமந்தது

அதுமுடியப் பாதகர்கள் அங்கவரைத் தள்ளிநுள்ளி
அநியாய மாக அடித்திழுத்துச் செல்லுகையில்
தெருவழியே வந்தவனும் சீரேனேயா மூரவனும்
ஆகிய சீமோனை அழைத்துச் சிலுவையதைச்
சுமக்கும் படியவனின் தோளிலே வைத்தனரே!
சிலுவை யதைமாற்றிச் சீமோனின் தோள்மேலே
வைத்தபின்னும் வேர்வையது வடிந்ததுவே யம்மானை!

## 99. வரோனிக்கம்மாள் வேர்வை துடைத்தது

போர்ச்சே வகர்தமையும் பொருட்படுத்தா தங்குசென்று
கைலேஞ்சி கொண்டு கர்த்த ரதுமுகத்தை
வரோனிக்க அம்மாள் வடிவாய்த் துடைத்தனளே!
அந்தக்கை லேஞ்சியிலே அப்பனது முகத்தின்
உருவப் படமதுதான் ஊன்றிப் பதிந்ததுவே!

## 102. கள்வருடனே, இயேசுவைச் சிலுவையிலறைதல்; நிந்தித்தல்

தாக மெடுக்குதென்று தவித்தங்கே கேட்டதற்கு
கசப்புக் கலந்துள்ள காடி கொடுத்தனரே!
கொடுத்து முடியக் கொடிய சிலுவையதில்
கைகளி லிரண்டாணி, கால்கள்பிணைத் தோராணி
வைத்தடித்தே யிறுக்கி வலுவா யறைந்தாரே!
போக்கிரிக ளானஇரு பொல்லாத கள்வர்களை
அவரினிரு பக்கத்தும் அறைந்தனரே யம்மானை!
இவரேதான் யூதருக்கு இராசா எனமூன்று
பாஷை களிலுமொரு பலகையின் மேலெழுதி
அவர்சிரசின் மேலாக அங்குதொங்க விட்டனரே!
அவ்வழியாய்ச் சென்றவர்கள் அனைவோரும் பார்த்துநின்று
தலையைத் துலுக்கி, தப்பப்பார் என்றார்கள்
தேவ குமாரனென்றால் சிலுவை யதைவிடுத்து
இறங்கிவா என்றுசொல்லி ஏளனஞ் செய்தார்கள்!

இஸ்ரவே லின்ராசா இவனானால் இப்பொழுதே
இறங்கி வரட்டும் இவனைவிசு வாசிப்போம்
என்றுசொல்லி வேறுசிலர் இகழ்ச்சிபண்ணி நின்றார்கள்!
பக்கத் தறையுண்ட பக்காத் திருடனுமே
நேசக் குருபரனை நிந்தித்தா னம்மானை!

## 103. சிலுவைத் தலத்தின் அற்புதங்களும், இயேசு சீவனை விடுதலும்

அப்படி யாயிருக்க அகில உலகமுமே
மூன்று மணிநேரம் முழுதுமிருட் பிழம்பாய்
இருந்திட்ட பின்பு யேசுபரன் வாய்திறந்து
ஏலோயீ! ஏலோயீ! லாமா! சபக்தானீ!
என்று மிகுந்தசத்தம் இட்டுமே கூப்பிட்டார்!
அத்தருண மங்குநின்ற ஆட்களி லேயொருவன்
கடற்காளா னைக்கொணர்ந்து காடியிலே தோய்த்துக்
கோலொன்றில் மாட்டிக் குடிக்கக் கொடுத்திட்டான்
சிலுவைதனிற் றொங்கிச் சீவன் விடுவதன்முன்
ஏழு திருவார்த்தை யேசுபிரான் வாயினின்றும்
பிறந்த ததன்பின், பிதாவே! என் னாவிதனை
உமது திருக்கரத்தில் ஒப்படைக் கின்றேன்யான்
என்றுசொல்லிச் சீவனதை ஏக விடுத்தாரே!
அப்பொழுது தேவா லயத்தின் திரைச்சீலை
மேலிருந்து கீழ்வரைக்கும் விறுவி றெனஇரண்டாய்க்
கிழிந்தது; கன்மலைகள் பிளந்தன; பூமியுமோ
அதிர்ந்தது; கல்லறைகள் திறந்தன; கர்த்தருக்குள்
நித்திரை யானபரி சுத்த ரநேகரங்கே
உயிரோ டெழுந்துசென்றே உலாவி நகரமெங்கும்
பலபேருக் குக்காணப் பட்டன ரம்மானை!
இப்படி யாகஅங்கே இவ்வற் புதங்களெல்லாம்
நடந்ததனைக் கண்டு நகரத்து மக்களொடு
நூற்றுக் கதிபதியும் நூதனப் பட்டுநின்று
"உண்மையாய்த் தேவ னுடைய குமாரனிவர்"
என்றறிக்கை பண்ணி ஏத்தினா ரம்மானை!
இவர்க ளுடனங்கே எண்ணுக் கடங்காத
சனங்களும் பெண்களுமாய்ச் சம்பவித்த காட்சியதைப்
பார்த்தலறி யோலமிட்டுப் பரிதபித்தா ரம்மானை!

## 104. இயேசுவை ஈட்டியால் விலாவில் குத்தினது

அதிகா ரிகளங்கே ஆண்டவரின் தேகமதைக்
காவல் புரிவதற்குக் கடுங்காவல் வைத்தார்கள்
உடலில் உயிரதுதான் ஒளித்திருக்கு மோஎன்று
சந்தேகங் கொண்டு தறுகண்ண ரொன்றுபட்டு
முற்றாய்க் கணுக்காலை முறிக்க நினைத்தார்கள்!

அதுமாத் திரந்தானா! ஐயகோ பாதகர்கள்
ஈட்டியாற் குத்தி இழுத்தார் விலாவினிலே!
குத்தின அக்கணமே குபீரென்று பாய்ந்தரத்தம்
ஆறாய்ப் பெருக்கெடுத்தே அங்கு வழிந்தோடி
வெள்ளக் கடலாய் வியாபித்த தம்மானை!

## 110. இயேசு உயிர்த்தெழுதல், தேவதூதன் ஸ்திரீகளைத் தேற்றுதல்

பூமியொடு வானமுமே போயொழிந் திட்டாலும்
சந்திர சூரியர்கள் தங்கள்நிலை மாறிடினும்
விண்மீன்கள் யாவும் விழுந்துவிட நேரிடினும்
வாக்குத் தவறாத மகிமையுள்ள ஆண்டவனார்
மாமிசத்தில் வந்த மகத்துவத்தின் தேவபிதா
ஆயிரஞ் சாட்சிகள்முன் அரிய திருநாவால்
உரைத்தது போல உயிரோ டெழும்பாரோ!
எழும்பினா லல்லாமல் இரட்சணியத் தின்கிரியை
நிறைவேறா தென்று நினையா திருப்பாரோ!
வாரத்தி னோராம்நாள் வந்தது வேவிடிந்து
அப்பொழுது பூமியெங்கும் அதிரும் படியாக
வானத் திருந்திறங்கி வந்தங் கொருதூதன்
கல்லறை வாசலதின் கல்லைப் புரட்டியப்பால்
தள்ளிவிட்டுப் பின்னரதில் தானேஉட் கார்ந்திருந்தான்
மின்னலைப்போல் ரூபமதும் வெண்மைநிற வஸ்திரமும்
உடையஅத் தூதுவனை யூதப்போர்ச் சேவகர்கள்
கண்டு பயந்து கடுகித் திடுக்கிட்டு
செத்தவர்கள் போலங்கே திகைத்துக் கிடந்தனரே!
மகதலே னாளும் மற்ற மரியாளும்
அங்கே பயந்துநிற்க அதைத்தூ துவன்கண்டு
''அஞ்சவேண் டாம்! சிலுவை யதனி லறையுண்ட
இயேசுவையே நீங்கள் இங்கிப்போ தேடுகின்றீர்
அதைநா னறிவேன் அவரிப்போ திங்கில்லை
உங்களுக்குச் சொன்னதுபோல் உயிர்த்தே எழும்பிவிட்டார்
இங்கே யவரைவைத்த இடத்தைவந்து பாருங்கள்
சீக்கிர மாகப்போய்ச் சீஷருக்குச் சொல்லுங்கள்
உயிரோ டெழுந்த அவர் உங்களுக்கு முன்னாக
நடந்து கலிலேயா நாட்டினுக்குப் போகின்றார்
அங்கவரைக் காண்பீரென்'' றவர்களுக்குக் கூறினனே!



# 24

# சிலுவை வழி அம்மானை

**ஆசிரியர் : ஜே.ஜி. சுந்தரம்**

**அறிமுகம் : வளன் அரசு**

*தூத்துக்குடி மாவட்டத்தைச் சார்ந்த நாசரேத்தில் தோன்றி, தூத்துக்குடி கால்டுவெல் உயர் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றிய பெரும்புலவர் ஜே.ஜி. சுந்தரம் உரையாலும் பாவாலும் உயரிய தொண்டாற்றியுள்ளார். இத்தாலிய நாட்டுத் தமிழ் ஏந்தலாகிய வீரமாமுனிவரின் தேம்பாவணியில் ஈடுபாடு கொண்ட சுந்தரனார் தமிழ்த் தொண்டர் வீரமாமுனிவர் பற்றி எட்டுக் கட்டுரைகள் கொண்ட அழகிய நூலை எழுதியுள்ளார். 19-11-1944 அன்று தூத்துக்குடி தமிழாசிரியர் கழகம் வீரமாமுனிவர் விழா நடத்திய போது தேம்பாவணியின் சிறப்புக் குறித்து ஆற்றிய விரிவுரையினையே தேம்பாவணி ஆராய்ச்சி நூலாக அருளியுள்ளார். கிறிஸ்தவ அம்மானை நூல்களுள் முதல் நூலாக மிளிர்வது வீரமாமுனிவரின் கித்தேரியம்மாள் அம்மானை. உலகத் தமிழ்த் தூதராகத் திகழ்ந்த சேவியர் தனிநாயகம் அடிகளாரின் நல்லுறவையும் தொடர்பையும் பெற்ற சுந்தரனார் ''சிலுவை வழி அம்மானை'' என்னும் நூலில் இறைமகன் இயேசு பெருமானின் சிலுவைப் பாடுகளையும் உயிர்த்தெழுதல் வரை உள்ள நிகழ்ச்சிகளையும் வெண்டளை யாப்பில் உள்ளம் உருக்கும் வகையில் ஆற்றொழுக்கான நடையில் பண்ணுடன் பாடியுள்ளார்.*

### சிலுவையின் சிறப்பு

*தேம்பாவணிக் காப்பிய ஆசிரியர் வீரமாமுனிவர் சிலுவையை,*

> *''ஏரணியே என் அன்பே என் அன்பிற்கு இரத மிதே,*
> *சீரணியே, உயர்வீட்டைத் திறக்கும் கோல் இதே இன்பத்*
> *தாரணியே, எங்கணும் நான் ஆண்டு ஓச்சும் செங்கோலே,*
> *பேரணியே, எனது உயிரின் பேருயிரே வாழியவே''* *(30:119)*

*எனப் புகழ்ந்து பாடியுள்ளார். சிலுவைப் பாடுகளைக் குறித்து என்றி ஆல்பிரடு கிருஷ்ணபிள்ளை இரட்சணிய யாத்திரிகத்தில் உளமுருகப் பாடியுள்ளார். இறைமகன் இயேசுவின் சிலுவைப் பாடுகள் அருளின் ஒளியாகவும் அன்பின் ஊற்றாகவும் கருத்துவளம் நல்குவதாகவும் விழுமிய எழுத்தோவியங்கள் வழங்கத் தூண்டுவதாகவும் அமைந்துள்ளன. பாவலர் மோட்சக்கண் படைத்த சிலுவைத் திருமொழிப் பதிகம் முதல், பேராசிரியர் இயேசுராசாவின் கல்வாரிக் காவியம் வரை நூல்கள் பல வெளிவந்துள்ளன; ஒளி தந்துள்ளன.*

### அம்மானை நூல்கள்

பெண்மைப் பாடலாகிய அம்மானை இலக்கியங்கள் கிறிஸ்தவச் சமயச் சார்புடன் ஏறத்தாழ நாற்பது நூல்கள் கிடைத்துள்ளன. சிலப்பதிகாரத்தில் அம்மானை வரிப்பாடலாகவும், திருவாசகத்தில் திருவம்மானையாகவும், கலம்பகம் போன்ற சிற்றிலக்கியங்களில் ஓர் உறுப்பாகவும் வளர்ந்த அம்மானை பிற்காலத்தில் நாட்டுப்புறக் காப்பியமாக வீரமாமுனிவரால் உருவாக்கப்பட்டது. அம்மானை இலக்கிய வகையுள் சிலுவை வழி அம்மானை சிறப்பிடம் பெறுகிறது. பெரும்புலவர் சுந்தரனார், இறைமகன் இயேசு பெருமான் 'கெத்செமனி'யாம் ஒலிவமலர்த் தோட்டத்தில் மன்றாடிய வேளையில், இரத்தவேர்வை சிந்தியதை,

> *''அள்ளி எடுக்குமாறு ஆயாசத்தால் வடிந்த*
> *ஒள்ளிய வேர்வை உதிரமாய் வீர்ந்ததுவே''*

எனக் கூறுகிறார். இயேசுவின் வேதனையினை உயிரோவியமாகப் படம் பிடித்துக் காட்டும் நூலாசிரியரின் விவிலியப் புலமை வளம் வியந்து பாராட்டத்தக்கது.

### செந்தழல் நெருப்பும் பாவத் தீயும்

தலைமைக் குருக்களாகிய அன்னாசு, கைப்பாசு ஆகியோரின் அரண்மனை முற்றத்தில் அங்குள்ள ஊழியர் சிலர் குளிர்காய்ந்து கொண்டிருந்தனர் என்பதைத் தற்குறிப்பேற்ற அணியுடன் விரித்து,

> *''சீதக் கொடுமையினால் செந்தழல் மூட்டியங்கே*
> *பாதகர் தீக்காய்ந்தார், பாவத்தீக் காட்பட்டார்''*

எனப் பாடுகிறார் வித்தகப் புலவர் சுந்தரனார். அங்குக் குளிர் காய்ந்தோர் 'பாதகர்' எனவும் 'பாவ நெருப்புக்கு ஆளானவர்' எனவும் சுட்டிக்காட்டுகிறார். எப்படியாவது தம் தலைவர் இயேசு பெருமானை மீட்க வேண்டும் என்னும் முனைப்புடன் யோவானுடன் விரைந்து வந்த பீற்றராம் பேதுரு தம் உள்ளத்தில் துயர நெருப்புடன் அக்கூட்டத்திற்குள் சென்றாராம். அவரது நெஞ்சகத்தும் சுற்றுப்புறத்தும் தீப்பற்றி எரிந்ததாம் என்பதனை,

> *''சூடுண்ட பூனையினும் சூர்மதி யற்ற சீடன்*
> *சூடுபெறச் சென்றான், சுடுதீயர் மத்தியில் தான்''*

எனப் பாடுகிறார். அக்கூட்டத்தாரைச் 'சுடுதீயர்' என்னும் சொல்லால் சுட்டும்போது, 'தீயவர்' எனவும் 'தீ மூட்டியோர்' எனவும் இருபொருள் பெற வைக்கிறார். 'அடுதீ அல்லது சுடுதீ அறியார்' என்னும் புறநானூற்று அடியும் 'தீயவை தீயினும் அஞ்சப்படும்' என்னும் திருக்குறள் அடியும் நம் நினைவுக்கு வரச் செய்கிறார்.

### சிலுவைப் பாடுகளின் சித்திரம்

சிலுவை சுமந்து செல்லும் இயேசு பெருமான் சித்தராகவே குறிக்கப்படுகிறார். கொலைக் கருவியாம் சிலுவை அப்போது முதல் எப்போதும் வணங்குதற்குரிய பெரும்பொருள் ஆயிற்று. இறைவன் சிலுவையில் தொங்கும் காட்சியினை இதயத்தைக் கசக்கிப் பிழியும் வகையில்,

> *''நயமார்ந்த மீட்பைக் கயவர் நாம் காண*
> *துயரம் தலைக்கேறத் தொங்குகின்றார் அம்மானை''*

*எனச் சித்திரித்துள்ளார். உலகம் உய்வதற்காகத் தம் உயிரையே ஈந்திடும் ஏந்தலாம் இயேசு சிந்திய குருதியால் கல்வாரி எங்கும் இரத்தக் கறை படிந்ததை,*

> *"தூயன் குருதியால் தோய்ந்தது கல்வாரி,*
> *ஆய வகையால் அவனியெல்லாம் மீட்புறவே"*

*எனப் பாடுகிறார். தேம்பாவணியில் தோய்ந்த உள்ளம் கொண்ட சுந்தரனார் திருமறையில் ஈடுபாடு மிகக் கொண்டு புலமை நலம் கனிய எளிதாகவும் தெளிவாகவும் திருமறைக் கருத்துகளைப் புரிந்து கொள்ளும் வகையில் புலப்படுத்தியுள்ளார்.*

## 1. கெத்செமனே தோட்டம்

### கண்ணிகள்

1 தேவதீர் மானத்தின் தேவாட்டுக் குட்டியான,
தேவசுதன் பஸ்காத் திருவிருந்தை ஆசரித்தார்.

2. மெய்யடியார், சீடர்கள் மீட்பின் நலம்பெறவே,
செய்வதற்காம் பஸ்காவைச் செய்முறையில் காட்டுதற்கே

3 ஆயத்தநாள் முன்னாளில், அந்திவேளை, மேலறையில்,
நேயருடன் பஸ்கா நிகழ்ச்சிகளில் பங்கெடுத்தார்.

4. முன்னோர்செய் பஸ்காவை முன்பாதி ஆசரித்துப்
பின்னையதை நற்கருணைப் பேர்விருந்தாய் மாற்றினர்காண்.

5 கஸ்தியுறத் தாம்நின்ற காரணத்தால் ஈறாகப்,
பஸ்காவை ஈடு செய்வார், பஸ்காவை ஆசரித்தார்.

6. பாவசாபம் தீர்க்கும்நல் பஸ்காப் பலியாகும்
தேவமைந்தன் அவ்விருந்தைச் சீடருடன் தான்முடித்தார்.

7. தேகத்துடன் ரத்தம் சிலுவைதனில் சிந்துமுன்னே,
ஏகன் அடையாளம் ஈந்தருள்வார் பந்தியிலே,

8. சொன்ன அடையாளம், சுட்டியதை மெய்ப்பிக்கும்
முன்சொன்ன வேளை முடுகிவருங் காட்சிகண்டார்.

9. தேகத்தோடு ரத்தத்தைச் சேர்த்துச் சிலுவையிலே
ஏகபரன் அர்ப்பணிக்க ஏங்கிநின்றார் ஆர்வமுடன்.

10. பிரியா விடையாய்ப் பிரசங்கம் செய்தார்,
கரிசனை யுள்ளசீடர் காதாரக் கேட்டிருந்தார்.

11 நான்காம் சுவிசேடன் நான்கதி காரங்களில்
பாங்காய்ப் பகர்ந்துள்ளார் பக்கத்தில் கேட்டிருந்தே.

12. சொல்லால் விடையளித்துச் சோகமுற்ற உள்ளத்தில்
வில்லாரும் வன்குருசின் வெம்போர் நினைவுற்றார்.

13. நூற்றுப்பதி னான்குமுதல் நூற்றுப்பதி னெட்டுவரை
தோத்ரசங் கீதஞ்சொல்லச், சூரியனும் அஸ்தமித்தான்.

14. ஆகத், துரிதமுடன் அவ்விடம் விட்டெழுந்தார்.
வேகமுடன் தான்நடந்தார், வேறோர் இடம்நோக்கி.

15. தெற்குவாசல் தாண்டியபின், தென்றல் தவழ்ஒலிவ
வெற்பினை நோக்கி, விரைந்தே நடக்கலுற்றார்

16. வார்புனல் கீதரோன் வாய்க்காலுக் கப்பாலே,
சார்ந்த ஒலிவமரத் தண்டலைதான் ஒன்றுண்டு.

17. ஆங்கே வழக்கமாக ஆண்டவனார் செல்வதுண்டு.
பாங்குடைய சோலையிலே தேங்கும் தனிமையுண்டு.

18. ஒலிவமரத் தோப்புடன் ஓங்குமலைச் சார்பில்,
பொலியுங்கெத் செமனே பூங்காவை நாடினரே.

19. ஓங்குமோர் ஆலையுடன் ஒன்றித்து நின்றதது
வீங்குபுகழ் பெற்றதம்மா! வேதன்முதற் பாடுகளால்

20 ஓராலை தன்னோடும் ஒன்றித்த சோலையுள்ளே
ஓராலை தான்மிதிக்க, ஒன்றியாச் சென்றனரோ?

21 தோட்டத்தில் பூத்தவினை தோட்டத்தில் தீர்வதற்கும்;
தோட்டம்நிகர் வீட்டைத் தொண்டர்க்குச் சேர்த்திடவும்;

22. பாதகத் தீவினைகள் பாரைவிட் டோடுதற்கும்,
வேதனைப் பாத்திரத்தின் வெம்மை குறைந்திடவும்,

23. தோட்டத்தை நாடினரோ! சூழ்ந்துவரும் சீடருடன்
நாட்டமுடன் சென்றிடுவோம் நாமுமங்கே அம்மானை.

24 சீடன்யூ தாஸ்நீங்கச், சீரார் பதினொருவர்
கூட நடந்தனர், கோரும் இடங்குறித்தே.

25. சென்றஅப் பாதையெங்கும் செல்வம் பொழிந்ததுவே,
தென்றல் அலைவீசி, சேயனை வாழ்த்திற்றே

26. உன்னதத் தோங்கும் ஒலிவமரக் காற்றினிசை
உன்னதன் நெஞ்சத்தில் உற்சாகம் மூட்டிற்று.

27. விண்ணில் மிதந்துவரும் வெண்மதியம் அன்புடனே
தண்ணொளி வீசியது, வெண்சுதையும் பூசியது.

28. பார்க்கும் இடமெல்லாம் பச்சைக் கொடிசெடிகள்
ஈர்க்கும் இயற்கைஎழில், இன்பம் இறைத்தனவே.

29. செல்லும் வழிநெடுகச் சிந்தையைத் தூண்டிவிடும்
நல்லுப தேசங்கள் நாதன் நவின்றாரே.

30. பின்வரும் துன்பங்களை முன்கூட்டிச் சொல்லிவைத்தார்
துன்னும் பலம்பெறவே தூயாவி வாக்களித்தார்.

31. இம்மானு வேலாய் இருக்கும் நிலைமாறி,
அம்பர லோகமேகும் அவ்வேளை வந்ததென்றார்.

32. ''இன்றிரவே நீங்கள் இடறலும் காண்பீர்கள்;
என்னிமித்தம் உங்கட்கே இன்னல்கள் உண்டாமே.

33 ஆயன் தொலைவதானால், அன்னவன் மந்தையெல்லாம்
சேயதிசை நான்கும் சிதறித்தான் போமன்றோ!

34. தீர்க்கன் சகரியா செப்புமிது தப்பாது;
ஏற்குமிது மெய்யெனினும், இன்னுயிரும் மீளநின்றே.

35. அப்பால் கலிலேயா ஆயனுந்தான் செல்வாரே!
தப்பாத செய்தியிது, சம்பவிக்கக் காண்பீர்கள்.''

36 ஈதுரைக்கக் கேட்டவுடன், ஏங்கித் துடித்துநின்ற
பேதுருவும் ஆண்டவர்பால் பேசலுற்றான் இவ்வாறே:

37. ''ஆரார் இடறல் அடைந்தாலும் நானடையேன்.
பேராத நம்பிக்கை பேர்த்தெறிய மாட்டேனே.''

38. ''இன்றிரவில் சேவல் இரண்டுமுறை கூவுமுன்னே
மும்முறை நீயென்னை முன்னறியேன் என்றுரைப்பாய்.''

39. நற்கருணைப் பந்தியிலே நாதன் உரைத்தஇதைப்
பிற்பட்டும் கூறினரோ? பேதுருவும் பேதுற்றான்.

40. கிட்டிவந்து, நீர்வடிகால் கீதரோன் பாலத்தை
எட்டிப் பிடித்தேறி, ஏகினார் ஏகபரன்

41. அவ்வேளை ஏசுநாதன் அம்பரனை நோக்கினார்,
''இவ்வேளை வந்ததென்ன! ஏறெடுத்துப் பாரீரோ?

42. வேலை முடித்தேன் வெகுமகிமை உண்டுமக்கே!
ஆலை மிதித்திடவும் ஆனபலம் தாரீரோ?

43. பற்றுடைய சீடர் பழுதுபடா நம்பிக்கையில்
முற்றும்முன் னேறவருள் முன்னவனே! செய்யுமெ''ன்றார்

44. கெட்டிநடை கூட்டியதால், கெத்செமனே தோட்டம்கைக்
கெட்டி இருப்பதனை எம்பெருமான் பார்த்தறிந்தார்.

45 காட்டிக் கொடுப்போனும் கண்டறிந்த தோட்டமிதில்
நாட்டம் இருந்ததேனோ? நாதனுக்கு இப்போழ்தும்தான்.

46 தோட்டத்து வாசலண்டை தூயபரன் வந்தபின்னர்,
நாட்டமுள்ள சீடர்களை நன்றாய் முகம்பார்த்து,

47 ''மரணவேது ஆயதுக்கம் மன்னியதென் ஆன்மா,
திரணநேரம் தானும்நீர் சேர்ந்துசெபம் செய்வீரே

48 இப்பாலே நான்போய் இறைவனை வேண்டுகின்றேன்.
அப்பாலே கல்மேல் அமர்ந்திருப்பீர் நீங்க''ளென்றார்.

49. ஞானமுள்ள பேதுரு, நல்லன்பு கூர்யோவான்
மோனமுள்ள யாக்கோபு, மூவருடன் உட்புகுந்தார்.

50. கல்லெறி தூரம் கடந்தவர் தம்முழங்கால்
மெல்லத் தரையினில் வீழத், தலைகுனிந்தார்.

51. ''அப்பா பிதாவே! அனைத்தும் நுமக்கெளிதே!
இப்பாத்ரம் என்னைவிட் டேகாதோ? என்செய்தேன்!

52. ஆயினும் நின்சித்தம் ஆகட்டும் ஆகட்டும்!
சேயன்என் சித்தம் சிதறியே போகட்டும்.''

53. என்றார்; வரப்போகும் இன்னல் பொறுப்பதற்குக்
குன்றாத வன்மைதரக் கோமானை வேண்டிநின்றார்.

54. சின்னேரம் ஆனபின்னர் சீடரிடம் மீண்டுவர,
அந்நேரம் நித்திரையில் அன்னோர் அயர்ந்திருந்தார்.

55. பேதுருவைக் கண்டார்; ''பெருந்தூக்கம் கொள்வதற்கும்
ஈதுதான் நேரமோ? ஏலாதோ? உந்தனுக்கும்

56 சோதனை மேவாமல் சோர்வை அறவொழித்து
நாதனை வேண்டியே நன்றாய் விழித்திருங்கள்.

57. உண்மையில் ஆவியிலே உற்சாகம் உள்ளவர்நீர்,
பண்பில்லாத் தேகப் பலவீனம் கொண்டீரோ''!

58. என்றுசொல்லி, மீண்டுமவர் ஏகினர் சோலையுள்ளே,
மன்றாடி வேண்டினர் மாளாத துக்கமுடன்;

59. ''பாத்திரம் ஈதும் பருகத்தான் வேண்டுமோ?
பார்த்திபனே! நின்சித்தம் பார்த்தே நடப்பேன்நான்''

60. முன்புசொன்ன மன்றாட்டை முற்றும் முறையோடு,
பின்பும் செபித்தார் பெருங்களைப் பாலயர்ந்தார்.

61. திரும்பினார் சீடரண்டை, செவ்வனே தூக்கம்
விரும்பிய அன்னவரை விட்டகன்று, சென்றார்தாம்.

62. மூன்றாம் முறையாக, மோனமுடன் அச்செபத்தில்
ஊன்றினார், உள்ளத்தை ஊற்றி உருகினரே!

63. வேர்த்துநீர் கொட்டியது, விஞ்சும் துயர்க்கடலுள்
ஈர்க்கத்தான் பட்டாரோ? ஏங்கி நிலைகுலைந்தார்.

64. அள்ளி யெடுக்குமாறு, ஆயாசத்தால் வடிந்த
ஒள்ளிய வேர்வை உதிரமாய் வீழ்ந்ததுவே

65 பின்னரும் முன்செபத்தைப் பேதமின்றி உச்சரித்தே,
இன்னலின் மத்தியிலும் ஏகனையே நோக்கிநின்றார்.

66. வல்லசுதன் பட்டதுயர் வானபரன் கண்நோக்கி,
வல்லே துணைசெய்வான், வான்தூதைப் போக்குவித்தார்.

67. வேதனைப் பாடுகளின் வேர்வையின்னும் ஓயவில்லை.
தூதன் துணைசெய்யத், தூயனிடம் பேர்ந்தெழுந்தார்.

68. தூக்கப் படுகுழியில் சோர்வாரைக் கண்டவர்தம்
ஊக்கம் குறித்தே, உரையாடல் செய்வாராய்.

69. ''அல்லல் நடுவதிலே ஆர்துணையும் தேவையில்லை,
தொல்லையுமக் கில்லையினி, தூங்குவீர் நன்றாக,

70. போதும், இதுபோதும், பூதலத்தோர் பாவத்தால்
தீதுடையார் கையில்நான் சிக்குங்கால் கிட்டிற்றே

71. மாற்றார் கரங்கள் மனிதகு மாரனைத்தான்
கூற்றினுக் கீயவெண்ணும் கோள்காலம் வந்ததுவே!

72. காட்டிக் கொடுப்போனும் கண்டறிந்து, கிட்டிவந்தான்
மீட்டுமிங்கே வேலையில்லை, மெல்ல எழுந்துநாம்

73. போவம்'' எனவே, பொருந்துமிமைப் போழ்தினிலே
தீவச் சுடருடனே தீயன்யூ தாஸ்வந்தான்.

74 சேவகர் சூழ்ந்துவரச், செந்தீபப் பந்தமுடன்
மேவலர் கூடவந்தான் மேட்டிமை யூதாசும்.

75. தன்மதச் சத்துருவைத் தன்னளவில் தண்டிக்கும்
தன்மை, சனகரீம் சங்கத்திற் குண்டம்மா!

76. சங்கத்திற் கென்றே, தனியாகச் சேவகரும்
அங்கிருப்பார், அன்னவர்தாம் அண்ணலைப் பற்றவந்தார்.

77. மற்றும் மதவெறியர், மாறுகொண்ட எண்ணத்தார்,
பெற்றி யறியாத பேதையருங் கூடவந்தார்.

78 கட்டிப் பிடிக்கக், கயிறுகள் சங்கிலிகள்
எட்டியே குத்தவல்ல ஈட்டிஆதி ஆயுதங்கள்.

79 ஏந்தும் படைவகுப்பின் ஏகத் தலைவனாகச்
சீந்தும் விஷநாகன் தீயன்யூ தாஸ்இருந்தான்.

80. போர்வீரர் கூட்டம் பொழில்வாயில் சேர்ந்தவுடன்,
கூர்கெட்ட யூதாசும் கூடியுரை யாடலானான்.

81 ''முத்தத்தால் யானெவரை முன்னின்று காட்டுவனோ
அத்தன் அவரைநீர் அண்டிப் பிடித்திடுவீர்.''

82. என்றுமுன் சொன்னகுறி ஏதிலர்க்கு ஞாபகம்
துன்னுவண்ணம் சொன்னவன், சுற்றுமுற்றும் பார்த்தானே.

83 அத்தருணம் ஆண்டவனார் அவ்விடமே வந்துநின்றார்
எத்தன் திகைப்புற்றான், எல்லோரும் அச்சமுற்றார்.

84 ''யாரைநீர் தேடுகின்றீர்? யாருமக்குத் தேவை''யென்க,
''யாரை? நசரேயன் ஏசுவையே தேடி''யென்றார்.

85 'நானோ அவரேதான்' நாதனிது கூறுமுன்னே,
ஏனோர் அனைவோரும் இட்டிடறி, வீழ்ந்தார்கள்.

86. 'தேடுவது யாரை'யெனச், செப்பினர் ஏசுபின்னும்,
நாடுவதும் உம்மையென, நல்கும் விடையற்றார்

87 ''நாசரேத் தூரின் நசரேயன், ஏசுவையே
பாசமுடன் பற்ற''வென்றான், பாதகன் ஓராளே.

88 ''முன்னரே சொன்னபடி, முன்நிற்கும் நானேதான்,
அன்னவர்'' என்று தம்மை ஆகார்கை ஒப்புவித்தார்.

89. சாவுவரை தம்மைத்தாம் தாழ்த்தவந்த சாமியேசு,
மேவும்நல் எண்ணமுடன் மேவார்கை ஒப்புவித்தார்.

90. தேகத்துடன் ஆன்மா சிலுவையில் மாளுதற்கே
ஏகபரன் தம்மை இகலோர்கை ஒப்புவித்தார்.

91. ஒப்பில்லா மீட்பை உலகந்தான் கண்டடைய,
ஒப்பில்லான் தம்மைத்தாம் ஒப்புவித்தார், அம்மானை.

92. தம்மையே சார்ந்தார்க்குச் சாருகின்ற தீங்கையெல்லாம்
இம்மையில் போக்கவல்லார், ஏதிலரைப் பார்த்துரைப்பார்.

93. ''தேடுவது என்னையெனில், சேர்ந்தஎன் சீடர்களை
வீடுவது செய்வீர், வெளியேறிப் போகட்டும்.''

94. கர்த்தன் உரைத்தஇந்தக் காரமான சொற்கேட்டு,
புத்தி தடுமாறிப், போர்வீரர் நிற்கையிலே,

95. பாழ்புத்தி கொண்டோன் பதட்டமின்றி முன்போந்து,
'வாழ்க'வெனச் சொல்லியே, வள்ளலை முத்தமிட்டான்.

96 ''முத்தத்தி னாலேயோ முன்வந்து காட்டிவிட்டாய்!
பத்திமிகு முத்தம் பயன்பட்ட வாறிதுவோ!?

97. ஏனோநீ இந்த இழிசெயற்கோ இங்கிருப்பாய்!?
நானோஉன் நண்பன்நீ, நட்பிழந்ததென்?'' என்றார்.

98. இன்னவேளை தன்னில் எதிரிகள்முன் கிட்டிவரப்
பின்னால் இருந்தோர் பிடித்தார் பெரியோனை,

99. அப்போஸ் தலர்கள், அருகிலே நின்றவர்கள்,
அப்பால் அடுத்துவரும் ஆபத்தை நோக்கினரால்,

100. வம்புக்கு வைத்திருந்த வாளிரண்டை ஏந்தியே
''தும்புசெய் மானிடரைத் தொக்கறத் தீர்ப்போமோ?''

101. செப்புமிது கேட்குமுன், சீமோன்தன் வாளெடுத்து,
மப்புடைய மல்கூஸ் வலக்காதை வெட்டிவிட்டான்.

102. 'இந்தமட்டும் போது'மென்றார், எம்பெருமான், மல்கூசின்
அந்தப்பக்கம் தொட்டாரே, அக்காதும் காதாச்சே,

103 புத்தியுற்ற பேதுருவைப் போதகர் கண்டிப்பார்,
"உத்தியுடன் வாளை உறைதன்னுள் போடுவையே

104. வாளை யெடுப்போர்தாம், வாளால் மடிகுவர்தாம்,
வேளையும் வந்ததென்றால், வேதனையும் உண்டன்றோ!

105. தந்தையை யான்வேண்டின், தாமே விலக்காரோ!
இந்தநற் பாத்திரந்தான் இப்போதென் பானமாமே."

106. என்றுரைத்த பின்னர், இயேசுநாதர் ஆங்கிருந்த
நன்றியற்றார் தம்மைநோக்கி, "நாளும்நான் உம்நடுவில்

107. ஆற்றினேன் சொற்பொழிவு ஆலயத்தில், அப்போதோ
வேற்றுமை காட்டவில்லை, வேளையும் வந்தபோதோ,

108. ஒள்ளியவாள், ஈட்டி ஓங்கிப் பிடித்தமொரு
கள்ளனைப் பற்றுமாபோல், கங்குலில் வந்தீர்கள்.

109. இதுவும்நீர் செய்வீர்; இதன்மேலும் அப்பால்
எதுவும்நீர் செய்வீர், இருண்டவன் ஆட்சியின்கீழ்

110. இனிதுநிறை வேறட்டும், எல்லாந்தான்" என்றார்.
நனிதிகில் கொண்டசீடர் நாற்றிசையும் ஓடிவிட்டார்.

111. துப்பட்டி போர்த்தசீடன் தோன்றாத் துணைநின்றான்.
துப்புவெளி யானவுடன், தூசையும் விட்டகன்றான்.

112. சொந்தத்தார் கைவிடவே, சூழ்ந்துநின்ற பாதகர்கள்
சிந்தைகொண்ட தீச்செயலில் தீவிரமாய் ஈடுபட்டார்,

113. எட்டிப் பிடித்தார்கள், எல்லோரும் கிட்டவந்து,
கட்டிக்கொண்டு போனார்கள், கர்த்தனை, அம்மானை.

## 11. சிலுவைக் காட்சி

### கண்ணிகள்

1. அன்பின் உருவம் அறையுண்டு தொங்குகின்ற
துன்பமிகு காட்சி தொடர்ந்துநாம் நோக்குவமே!

2. அன்பை அளக்கும் அளவுகோல் ஆகின்ற
துன்பச் சிலுவைத் துயர்மிக்க காட்சிகாணீர்.

3. துள்ளித் துடிக்கும் துயர்செறிந்த காட்சியிதை
அள்ளிப் பருக அடைவோம்நல் மீட்பினையே.

4 மரத்திலே தொங்கி, மரிக்கின்ற சாபம்
மரத்தால் விளைசாபம் மாற்றுமெனத் தொங்குவர்பார்

5 பாவவழி செல்வோர்பரிசுத்த பாதைகாண,
தேவபிதா தேர்ந்தெடுத்த தீர்க்கநெறி ஈதாகும்.

6. நீதமுள்ள தெய்வம்தம் நேர்மை குறையாதே
ஓதரிய துன்பம் ஒரேமைந்தர்க் கீந்தாரே!

7. அன்பின் அருள்வாரி, ஆன்ற பரிசுத்தர்
துன்பப் படுங்காட்சி தோன்றுதே! அம்மானை.

8. ஆணி அடித்தோன் அலுவல் முடிந்த பின்னர்,
ஏணி இறங்கியது, ஏசுதாம் தொங்குகின்றார்.

9. அன்பின் சிலுவையாம் ஆலை மிதிப்பதற்கே,
அன்பின் உருவெடுத்தார், அந்தரத்தே ஒன்றியானார்.

10. வான்புவி யாவும் வலிதினில் தள்ளியபோல்,
ஆன்குடியில் உற்பவித்தார், அந்தரத்தே தொங்குகின்றார்!

11 காதடைத்தும், கண்ணிருண்டும், காலிரண்டு ஓய்வுற்றும்,
ஓதும் அறவுரையின், உத்தமனார் வாய்வறண்டும்,

12 அங்குமிங்கும் சாயும் அழகார் தலைதவிர,
அங்கங்கள் யாவும் அசைவற்று, நிற்பனபார்!

13. நீட்டிவிரி கைகள் குறுஞ்சட்டம் நெட்டிற்கும்
காட்டுவன நல்லபயம், காசினி மக்களுக்கு.

14. நீக்கமற நின்றனவே, நீள்கால் நெடுமரத்தில்,
தீர்க்கப் புகலிடமாய்ச் சேர்வார்க் கிருந்தனவே.

15 கொட்டுங் குருதி, குறுஞ்சட்ட வாயிலாக
ஒட்டிய கைகளின் ஓரமாய் ஓடுதுபார்!

16. நீட்டிய கால்கள் நிமிர்ந்தெழு ரத்தவெள்ளம்,
மாட்டும் நெடுஞ்சட்ட வாயிலாக, ஓடுதுபார்!

17 தூயன் குருதியால் தோய்ந்தது கல்வாரி,
ஆய வகையால், அவனியெல்லால் மீட்புறவே.

18. முற்றுற மூவாண்டு மூண்டுழைத்த கால்கரங்கள்,
சற்றும் அசைவின்றித் தம்நிலை மாறினவே!

19 பேசவும் இல்லை, கூடப் பேசுவாரும் இல்லையால்,
ஈசனார் பட்டதுயர் யார்தாம் எடுத்துரைப்பார்?

20. உள்ளத்(து) உறுதியுடன், தெள்ளத் தெளிந்தமனம்,
கொள்ள அருள்வெள்ளம், கொஞ்சமும் கம்மியில்லை.

21. எள்ளுவார் எள்ளான், இகலோர்க் கினியனாம்
வள்ளல் சிலுவையில் வாரிவரம் ஈயநின்றார்.

22. ஆழக் குழிதோண்டி, நீளச் சிலுவைநட்டு,
மாளவே ஆணிகளை ஆழமாய் மாட்டினார்மேல்,

23. சூழநிலை நின்றவர்மேல், கோழை குருக்கள்மேல்,
வீழநின்ற ஆக்கினைவேர் வெட்டிவீழ்த்த எண்ணிவிட்டார்.

24. சுற்றுமுற்றும் பார்க்கின்றார், சூழநின்ற சேவகர்கள்
உற்ற துகில்மேல் உறவுகொண்டாடுகின்றார்.

25. பாரம்பரைச் சொத்தெனப், பங்கும் எடுக்கின்றார்
ஆர வயிற்றிற்கே அன்னம் கிடையாதார்

26 அற்பலா பத்திற்கும் அண்ணாந்து நிற்குமவர்,
பொற்புறு பூரண பொன்னங்கி தள்ளுவரோ?

27. எல்லாம் இறைசெயல்தான், எல்லோர்க்கும் ரட்சிப்பின்,
நல்லபலன் கிட்டுதற்கு நாதன் அருள்கூர்ந்தார்.

28. தேவதீர் மானத்தைச் செவ்விதின் ஆதரித்தோர்,
தேவகட்சி யாரென்றே, தேவசுதன் எண்ணுகின்றார்.

29. ''ஐயோ இவர்தம் அரும்பசிக் காற்றாராய்,
வெய்யவர் இட்டபணி வெட்டெனச் செய்கின்றார்.

30. ஒரு உளத்தார் அல்லார், திருவுளச் சீட்டால்
இருவுளம் விட்டார், இறைவன்மேல் சாக்கிட்டு,

31. தீர்க்கனார், தாவீது செப்பிய வார்த்தைகளைத்
தீர்க்கமுறச் செய்யுமிவர் தீயரோ? ஆகாரே!

32 பாவம்! குருக்கள், பாழும் பிழைப்புள்ளி,
தேவதீர் மானத்தைச் சீராய் நிறைவுறுத்தார்.

33. அய்யோ! பொதுமக்கள் ஐயன்மார் போகுநெறி
மெய்யே எனச்செல்வார், மேலவன் ஆணையென,

34. யூகமில்லா யூதர்கள் யோகமும் அற்றனரால்,
ஊகமிலாச் செய்கை உலகையே மீட்டதன்றோ?

35. மேசியா என்றென்னை மிக்க அறிந்திருப்பின்,
நேசியா நிற்பாரோ? நீசசெயல் செய்வாரோ?

36 எல்லாம் பொறுக்கவென, எத்தனை சொற்பொழிவு
பல்லோருக்கும் சொன்ன படிநடக்க வாய்ப்பிதுவே''

37. என்றெண்ணிப் பார்த்தே, இனிய பிதாவினிடம்
பின்வரும் பொன்மொழி பேசுவார் அம்மானை!

38. ''பிதாவே இவர்தம் பிழைபொறுப்பீர் இன்னோர்
சுதாவாகச் செய்வதெல்லாம் சுத்த மடத்தனமே.''

39 ஈரேழ் உலகெங்கும் இச்சத்தம் கேட்டதுவே!
நீரேசூழ் ஞாலத்தின் நீள்பிழையெல் லாம்பொறுத்தார்

40. ஏசுவையே சாகடித்த எல்லோர்தம் பாவங்களும்
பேசுமிந்தப் பேச்சோடு போர்த் தெறியப் பட்டனவே

41. வாரி வரமளிக்கும் வள்ளல்தம் வாய்மொழியால்
பாரினர் யாவருக்கும் பாவமன்னிப் பாகுதம்மா.

42. பூதலத்தோர் பாவங்கள் போக்கவந்த வள்ளலவர்
ஓதரிய மன்னிப்பைத் தாமே உறுதி செய்வார்.

43. பேதமை கொண்டோர் பிழைபொறுக்கத் தந்தையரை
வேதனை மத்தியிலும் வேண்டினரே அம்மானை.

44. பட்டணத்து மக்கள் பகவானைப் பார்க்கவந்தார்.
மட்டில்லா யூத மக்கள் மன்னவனைக் காணவந்தார்.

45. ஆசாரி, பூசாரி, ஆரணம் ஓதுபவர்,
ஈசாக்கின் தேவனிடம் ஈற்றுவிடை கூறவந்தார்.

46. வேதியரும், வீணர்களும், வேடிக்கை வேட்டவரும்,
ஞாதியரும், நல்லோரும், நற்பரனைத் தேடிவந்தார்

47. ஏலாப் பரிசேயர், எண்ணா சதுசேயர்,
சாலாத சங்கத்தார், சர்வேசன் பால்வந்தார்.

48 ஏதிலர் கூட்டமங்கே ஏராளம் தான்மற்றை
ஞாதியர், நண்பர், நனிகுறைவே நாதனிடம்

49. போகும் மனிதனிடம் பொன்னேபோல் பேசுவதும்,
சாகும் மனிதனிடம் தண்ணளி காட்டுவதும்,

50. குற்றம் குறைவிருந்தும், கூற்றன் வருநேரம்
முற்றுமே எண்ணா, முடிவையே நோக்குவதும்,

51. நன்மகன் சாகுங்கால், நாவாரப் போற்றுவதும்,
நன்கே உபசரித்து, நல்விடை கொள்ளுவதும்,

52. வையகத்தே மக்கள் வழக்கமாக் கொண்டுள்ளார்,
ஐயனுக்கோ இன்னவை அற்பமும் காட்டிலரே.

53. நாடாள்வான் முன்னிலையில் நன்கடங்கி, நின்றவர்கள்,
ஏடாகூ டஞ்செய்ய, ஏகமாய் ஈண்டெண்ணி.

54. கட்டவிழ்ந்த கர்த்தபம்போல், கத்தவும் ஆயினார்
முட்டுதட்ட மோதுவார், மூர்க்கர்தாம் என்செய்யார்.

55 கேலிப்படலமொன்று கேடாய் நடத்தவெண்ணி,
வேலிபோல் சூழ்ந்தனர், வேடிக்கை செய்யலானார்.

56 மூண்ட பகைமுடித்தும் மூதறிவு சாலாதார்
வேண்டா வெறுப்புத்தான் மீண்டும் வெளியிடுவார்.

57. அற்றுத் தலைவீழ ஆட்டினார், ஈரிதழும்
முற்றும் பிதுக்கினார், மூத்தாள் முகமுடையார்

58 சாட்சி பகர்ந்தவர்தாம், சாற்றிய தன்மையால்தான்
சூழ்ச்சி பலித்ததெனத், துள்ளும் மனத்தினராய்,

59. அங்குமிங்கும் சென்று,பரன் அண்டையில்முன் நின்றிடுவார்,
துங்கமுடை யானைநோக்கிச், சொல்லுவார் நிந்தைமொழி.

60. "ஆண்டான் அகத்தை அறவே இடித்துவிட்டும்,
மூன்றாம் தினத்திற்குள் முற்றுங்கட்டித் தீர்ப்பவனே!"

61 "வாவா இறங்கி வரவேண்டும், இப்பொழுதே.
தேவா இறங்கும், சிலுவைதனை விட்டென்றார்."

62 "தெய்வ மனிதன், திருச்சுதன், நீயாயின்,
உய்விப்பாய் உன்னைத்தான், உத்தமனே ஓடிவாராய்!"

63 என்றும், ஒருசாரார்ஈசனைக் கேலிசெய்வார்,
நன்றென்றே எண்ணினர், நற்றெய்வம் மௌனமுடன்,

64. வேதத்தை ஓதுவாராம் வேதியர்கள் ஆதியோர்,
நாதன் அருளிய நன்மைகளை எண்ணுகின்ற

65. சில்லோர் இருப்பதைத் தேர்ந்தறிந் தன்னவர்தம்
நல்லெண்ணம் மாற்றவென்று, நாதனை நோக்கினராய்,

66. ''ஏனையரை ரட்சித்தான், இந்நிலத்தில் தன்னைமட்டும்
ஈனக் குருசினின்றும் ரட்சிக்கான் என்?'' என்றார்!

67. சூட்டிய பட்டம் துலங்குவது நோக்கினவர்,
கோட்டி பிடித்தாற்போல், கும்மாளம் இட்டவராய்,

68. ''யூதகுல வேந்தனே! யூதர் குலவரசே!
வேதனை வாய்ந்தமரம் மீதிருந்தும் வந்துவிட்டால்,

69. ஏசுக் கிறிஸ்தென்றும், யூதரை மீட்கவந்த
ஈசுரவேல் வேந்தென்றும், இன்றறிவோம்'' என்றுரைத்தார்.

70. எல்லோருக்கும் வல்லான் இறைவனையும் சேர்த்துமவர்,
பொல்லாப் பரிகாசப் புன்மொழிகள் கூறவந்து,

71. ''ஈசன்பால் நம்பிக்கை இன்னோனுக் குண்டென்னின்,
நாசங்கள் போக்குமந்த நல்லதெய்வம் எங்கேயோ?

72. தேவன்தன் அன்பும், திருமைந்தன் மீதிருந்தால்,
ஆவலுடன் காப்பாற்ற, அன்னோன் வரட்டும்'' என்றார்.

73. சேவகர் தம்பணி தீர்ந்தபினும் ஆணையினால்,
தேவன் திருவடிக்கீழ் காவல் புரிந்திருந்தார்.

74. காத்திருக்கும் சேவகர் காடிரச பானமதை
ஊத்திக் குடித்திருந்தார், ஊரார்செய் கேலியிலே,

75. பங்கெடுக்கும் உற்சாகம் பட்டவுடன், ஓர்சிலர்தாம்
அங்கோர் கலமாரக் கட்பானம் அள்ளிவந்தார்.

76. ஆண்டவருக் கீந்தார், அளவிறந்த கேலிசெய்து,
மீண்டனர் தம்மிருக்கை மென்மேலும் தள்ளாடி.

77. கேலி நடபடிக்கை கீழ்முளை கண்டதுதான்
மேலிடமும் தான்பரவும், மிக்கதோர் ஆர்ப்புடனே.

78 கிண்டல்சொல் கூச்சல் கிளர்ந்தெழு வேகத்தில்,
மண்டுகின்ற வேதனையால் மாள்கும் இடக்கள்வன்

79. பங்கெடுப்பான் எண்ணினன், பக்கத்தே வீற்றிருந்த
துங்கனையே கேலிசெய்யத் தூக்கினான் நாக்கினையே.

80. ''என்னையும் உன்னையும்நீ ஈடேற்ற ஏலாயே!
மன்னன் கிறிஸ்துவோநீ'' என்றான், மடத்திருடன்

81. மற்றைய கள்வனிதை மாந்தி, மனம் வருந்தி,
சற்றேனும் யூகமின்றித், தற்குறியான் சொல்லியதை

82 கண்டித்துப் பேசுவான், ''கள்வா, நமக்கேற்ற
தண்டனையே நாம்பெற்றோம், தக்கிலாச் செய்கையினால்

83. மற்றிவரோ மாசற்றார், மாசுற்ற பூமியில்நாம்
பெற்றபெருந் தண்டனையே பெம்மானும் பெற்றுவிட்டார்

84. முற்றும் அறியாயர், மூர்க்கர்தம் சூழ்ச்சியினால்,
குற்றமிலார் நம்போல், கொடுந்தண்டம் கொண்டுள்ளார்.

85. ஆக்கினை ஒன்றெனினும், ஆசிலார் இன்னவரைத்
தூக்குமர மேடையிலும் தூஷிப்பாய், துர்மதியால்?

86. தெய்வபயம் கொஞ்சமும் சிந்தைதனில் இல்லாமே,
வெய்யசொல் கூறினயே! வேண்டாமே'' என்றுரைத்தான்.

87. வக்காலத்துச் சொற்கள் வலமிருந்து வந்துவிழ,
திக்கற்றோர் போலும் சிலுவையில் தொங்குமவர்,

88. வன்குருசில் தன்பால் வலப்பக்கம் தொங்குகின்ற
அன்பின்நற் கள்வன்பற்றி ஆசைநெஞ்சில் ஊற்றெடுக்க,

89. கண்கள் மலர்ந்தன, கண்ணிரண்டால் காண்பதற்கு,
உன்மனம் ஏங்கியதே, உள்ளத்துள் வைப்பதற்கே

90 செவ்வாய் துடித்தது, சீரியசொல் லாடுதற்கே
அவ்வாய் உடல்முற்றும் ஆனந்தம் பொங்கிற்று

91. பொல்லார் இறைத்தசொல் புண்போல் படுசெவியில்,
நல்லோன் இயம்பியன, நல்லமிர்தாய் வீழ்ந்தனவே

92 இம்மட்டில் ஆண்டவர் இன்பம் சுகித்திருப்ப,
நம்பன் வசப்பட்டான் நற்றிருடன் முற்றிலுமே.

93 ஆண்டவன்மேல் நெஞ்சமும் அன்பால் நெகிழ்ந்துருக,
மீண்டவன் ஆமாறு மேதக எண்ணமுற்றான்.

94. "கோபமில்லார் நற்குணத்தின் குன்றாவார், கோவேந்தர்
சாபமே கொண்டாலும், சாகவோ தொங்கின்றார்?!

95. ஆக்கம் உடையார் அருள்நோக்கும் உண்டிவர்பால்,
பாக்கியம் தந்தருளும் பான்மையும் மிக்குடையார்.

96. பாவம் பொறுப்பாரோ? பாவியேன் செய்பவத்தின்
சாவமும் மாற்றவல்ல தண்ணளி வீசுகின்றார்.

97. அன்பினர், பேரரசர் ஆனந்தக் கோனுமிவர்,
பின்வரும் வாழ்க்கைநற் பேறுமெனக் கீயவல்லார்.

98. நாளுமிவர் மீட்பரேதான்! நாடாட்சி பூண்டவர்தாம்,
நாளில்லா வீடெனக்கும் நல்குமருட் பேறுடையார்,

99. ஐயன் நினைத்துவிட்டால், ஆகுவன எல்லாந்தான்,
நையும்உளம் கொண்டவர்தாம், நாயகனுக்கேற்றவராம்.

100. சோரி அருள்மாரி சொட்டுமிவ் வேளையிலே,
காரியம் கைகூடக் காத்திருக்க வேண்டாமே!

101. நாளிதுவே! ரட்சண்ய நாளிதுவே! நானுமின்றே
ஆள்இடம் தேடியர சாளவுந்தான் ஆசிப்பேன்."

102. என்றெண்ணி ஏக்கமுற்றான், ஏசுபரன் தாள்நோக்கி,
வன்மனம் நைந்துருக, வாய்திறந்து பேசலுற்றான்.

103 "ஆண்டவாஉன் ராஜ்யம் அமையுடன் நீவருங்கால்,
ஆண்டடிமை கொள்வாய் அடியேனை" என்றுரைத்தான்

104. எத்துணை தீர்க்கமொழி! எத்துணை நல்நோக்கம்!
எத்துணை தேற்றம்! எவர்க்குண்டே? அம்மானை

105. பின்னும் வலக்கள்வன் பேசுமொழி கேட்டவர்க்கு,
முன்பிறந்த ஆனந்தம் முந்நூறு பங்காச்சே!

106 கள்ளனை உள்ளுங்கால், கண்களில் ஆனந்த
வெள்ளம் பறிந்தோட, விண்ணாடர் எண்ணுகின்றார்.

107. "மண்ணோர் நினைக்கின்ற மாளும்நிலை எய்துகின்றேன்,
விண்ணோர்க்கும் இல்லா விசுவாசம் உண்டாச்சே!

108. மேதினியில் வாழ்நாள்நான், வேறே எவர்மாட்டும்,
ஓதி உணர்தற்கும் ஒண்ணாத நம்பிக்கை.

109. இவ்வாறு யான்காணேன்! இன்னோனே உத்தமனாம்!
இவ்வகை நம்பிக்கை எட்டுமோ ஏனையர்க்கே!?

110. இன்னல் விஷம்தந்தார், இச்சஞ்சீவியும் அளித்தார்!
கன்னல் இழைத்தவர்கள், கற்பகமும் தந்தாரே!

111. புண்ணாக நோமுடற்குப் பொன்மருந்தும் இட்டமையால்,
எண்ணிய வேதனைகள் இல்லாமல் ஆக்கிவிட்டான்.

112 துன்பமெய்தி, நன்மை, தொடர்ந்தாற்றும் பண்பிலன் போல்,
நின்றஇந் நேரத்தில் நீடியநல் நம்பிக்கை

113. உற்றனன்என் மேலென்றால், உன்னுதற்கோர் ஆச்சரியம்
பற்றும், என் உள்ளத்தைப் பற்றுகின்றான், பற்றுடையான்.

114. நன்மைநலம் கண்டடைந்து, நம்பிய பேர்களிலும்,
பன்மடங்கு பண்புடையன், பாத்தியப் பட்டவனும்,

115. உள்ளம் குளிர்ந்ததுவே, உண்மைதான் ஓங்குமம்மா!
கள்வனேதான் இவ்வாள்! கவர்ந்தனன்என் உள்ளந்தான்.

116 இப்போதும் நம்புமிவன் ஏனையரோ டொப்பிலனால்,
எப்போதும் என்னருகில் ஈடிலானை வைப்பன்'' என்றே,

117. புன்னகை பூத்தொளிரப், புண்ணியனார் கள்வனையே
தன்னிரு கண்ணாரத் தாபமுடன் பார்த்தருளி,

118. ''இன்றேநீ என்பால் இனிய பரதீசில்
நன்றே இருப்பாய்'' எனநவின்றார், அம்மானை

119. ஏவம் துடைத்தார் இன்னல்கள் போக்கினர், செய்
பாவம் பொறுத்தார், பரதீசும் ஈந்தாரோ?

120. யாவர்க்கிவ் வாறுசெய்தார்? இன்னோன் ஒருவனுக்கே!
தேவாதி தேவனருள் செய்தார்காண்! அம்மானை.

121 கள்வன் இதயத்தைக் கர்த்தர் கவர்ந்தாரோ?
கள்வன்தான் கர்த்தர் இதயத்தைக் கவ்வினனோ?

122. கள்வன் விசுவாசம் கர்த்தனை முன்கவர,
வள்ளல் அவன்நம்பும் வன்மைகண்டு, பின்கவர்ந்தார்

123. எண்ணம்வைக்கக் கேட்டான், இருக்கையினை வாங்கிவிட்டான்
திண்ணமுள்ள நம்பிக்கை சேரநின்றால், சேராதென்?

124. வண்மையேசு தந்தை வலப்பக்கம் உட்கார,
வன்கள்வன் வள்ளல் வலப்பக்கம் மேவுவன்தான்

125. கள்வன்போல் உள்ளவரும் காசினியில் காண்பரிதே!
கள்வன்போல் பேறுபெற்றார் காசினியில் யாருளரே!?

126 கனம்பெற்ற பங்காளிக் கள்வன்பேர் டிஸ்மஸ்
எனப்பகர்வார் கத்தோலிக் கின்சபையார் இன்றைக்கும்.

127. சின்னஞ் சிறுவயதில் சீருடைய நாதன்பேர்
இன்னவன் கூர்ந்தறிய ஏதுவுமொன் றுண்டென்பார்.

128. இந்நிகழ்ச்சி பின்னர், இதமிலார் கூட்டங்கள்
சன்னம்போல் குன்றியது சக்கந்தம் நின்றதுவே!

129. நண்பகல் வேளையின்பின், நானிலத் தோர்நடுங்க,
மண்டுமோர் அந்தகாரம் வான்முகடு மூடிற்று.

130. காரிருள் மூட்டம் கடிதின் பரவிவந்து,
வாரிபோல் நின்றதிரள் மக்களை ஓட்டிற்று.

131. சூரியன் தன்முகத்துச் சொக்கை இழந்ததுவே!
வீரியம் குன்றியவன் வெற்பிடை சென்றனனோ?

132. அந்தரத்தில் தொங்குவார், ஆரஞர் தாங்காமல்,
அந்தர ஜோதியும் அந்தரங்க மாயினனோ?

133. நீதியின் சூரியனை நேர்முகமாய்க் காணவெட்கி,
ஜோதியின் சூரியனும் தோன்றாதே நின்றனனோ?

134 அந்நேரம் சத்துருக்கள் ஆரிருள்கண் டஞ்சினரால்,
அந்நகர மாக்கள் அகன்றுபடல் ஆயினர்தாம்.

135. உற்றார், உறவோர்கள், உள்ளன்பு பெற்றோர்கள்,
மற்றிவர் தாம்நீங்க, மற்றோர் மறைந்துபட்டார்.

136 ஆண்டான் சிலுவை அடிக்கண் சிறுகூட்டம்,
காண்பார் கசிந்துருகக் கல்லாய்ச் சமைந்துநின்றார்.

137 ஈன்ற அன்னை ஆங்கே இதயம் உருகநின்றாள்.
சான்றோன் சிமியோன் சாற்றிய சஞ்சலத்தாள்.

138. அன்னையாம் மேரியின் அன்பார் சகோதரி,
மன்னும் கிலேயொப்பா, மாண்பின் மனைவிநின்றாள்.

139. மன்பெரு பாவி மகதலேனாள் தானும் நின்றாள்;
இன்னுமொரு சீடன்தான் யோவானும் கூடநின்றான்.

140. பேரன்பின் தொண்டர்கள் பின்னுமெவர் நின்றனரோ?
சீரன்பின் சில்லோர் சிலுவையடி நிற்பதுகாண்!

141. கண்ணார நோக்கினர், கர்த்தர்மேல் அன்புடையார்
புண்ணுற்ற கண்கள் புதுப்புனல் கொட்டநின்றார்.

142. அழுவார் விழுவார், அலமந்தார், உள்ளம்
புழுங்கும், புலம்பும்; பொருமுமால், என்செய்வார்?

143. அன்னைமரி பட்டதுயர் ஆழத்தை ஆரறிவார்?
மன்னும் மகனன், மற்றோர் அறிகுவரோ?

144. வன்குருசின் முன்பகம், வாய்விட் டழுவார்மேல்
நன்மன நாதன் நயனங்கள் பட்டனவே.

145. சுற்றும் முற்றும் பார்த்தனர், சூழ்ந்திருந்த அன்பர்களை
முற்றும் இனமறிந்தார், மூவா முழுமுதலோன்.

146. நிம்மதி யுற்றபரன் நெஞ்சினில் கேட்டசத்தம்
தம்முடைய அன்னையின் தாபக்குரல் என்றுணர்ந்தார்

147. அன்னை மரியின் அருகிலே நின்றயோவான்
தன்னையும் கண்டனர், தன்மனம் நைந்துருக.

148. இஸ்ரவேல் வேந்தனார் ஈன்றெடுத்த தாயை நோக்கி,
"இஸ்திரீயே அந்தோ! இனியவுன் மைந்த"னென்றார்.

149. ஈதோர் உரைக்குப்பின், யோவானைப் பார்த்தருளி,
'ஈதோஉன் தாயெ'ன்றார், எம்பெருமான்; அம்மானை.

150. அந்நேரம் யோவானும் ஆண்டவர் சொற்படியே
தன்நேர் இலாதாளைத் தன்னகத்தே சேர்த்தனன்தான்.

151. அன்புநின்ற கண்ணேதான், அன்னைதனை ஒப்புவித்தார்,
தன்மீதே அன்புடையார் தம்மைதமக் கொப்பென்பார்

152. தாயென்றால், அச்சொல்லே தாங்கரிய துக்கத்தை
ஆயிடைதூண்டு மென்றே அம்மொழி கூறலையோ?

153. ஏற்றதோர் மானிடத்தின் ஈறாக நின்றதொடர்
சாற்றுமிச் சொல்லுடனே தானற்றுப் போயினதே!

154 சித்திர வாதையால் சாகும் சிலுவையிலே
அத்தன்தன் வேதனையின் அந்தத்தை எட்டினரால்,

155. இரத்தத்தின் ஓட்டமின்றி, ஈர்க்கும் நரம்பின்
உரங்கெட் டுழன்றும் உலைவெய்தல் ஆயினர்காண்

156. கால்கரங்கள் வீங்கியும், கண்களில் பஞ்சடர்ந்தும்
மேல்முழுதும் காய்ந்துருக, மிக்கதோர் தாகமுற்றார்.

157. ஊன்றுகால் இல்லாமல், உன்னிப் பிடிப்பதற்கும்
ஏன்றுகரம் இல்லாமல், ஏகமாய்த் தள்ளுண்டார்.

158. தேகக்கட் டெல்லாமே சீர்குலைந்து, தேம்பலுற,
ஏகமாய் வேகமுடன் ஏறிற்று வேதனையும்.

159. தேகம் சரிந்துவிழத் திட்டமாய் நிற்றலின்றி,
ஆகம் தலைசுற்ற, அந்தரத்தில் ஆடுகின்றார்.

160. வேதனை வன்மையினால் வெப்பம் தலைக்கேற,
சீதள ஜன்னியும்தான் தேகத்தை வாட்டியது.

161. வாதம், சிலேத்துமம் வன்மையுறும் பித்தமென்னும்
நாதமிடும் நாடிமூன்றும் நன்னிலை விட்டனவே!

162. இத்தகைய தன்மையிலும் ஈசனுடன் ஒன்றுபட்ட
அத்தன்மை நீங்காமே, ஆறுதல் பெற்றிருந்தார்.

163. காசினியோர் பாவமெலாம் கர்த்தன்மேல் வந்துவிழ,
ஆசிலார்தம் வேதனைகள் ஆத்துமத்தைத் தாக்கினபார்.

164. தேக வியோகமே தென்படும் நேரத்தில்
ஏகனுக்கு ஆத்துமத்தும் இக்கட்டு நேர்வதாச்சு.

165 பாவத்தின் சாபமாய்ப் பாதகன் போல்குருசில்
தேவசுதன் எல்லோர்க்கும் சேரநின்ற சாபமேற்றார்.

166. நீதியுள்ள தேவதந்தை நேர்மையில் குன்றாராய்,
ஏதிலன்போல் ஆயினரோ? ஏதமேதான் அற்றவரால்

167. பாவவுரு கொள்மகனைப் பார்க்கவும் அஞ்சினரோ!
சாவவுரு சேர்மகனைச் சார்ந்திருக்கத் தாங்கலையோ?

168 ஈசன்தன் நீதி, இகத்தோர்நாம் கொள்ளநின்ற
மாகமறு, மற்றும்சேர் வன்தண்டம் யாவையுமே,

169. பிள்ளைமேல் சும்மைசெயப் பிள்ளை நாம் குற்றம்செய்து,
கொள்ளநின்ற தண்டமெல்லாம் கொள்ளநின்ற நேரத்தில்,

170. தள்ளிவிடப் பட்டாரே தந்தையின் சந்நிதியும்
மெள்ள மறைந்ததுவே, மேதினி மீட்பருக்கே!

171 வானவன் சந்நிதியை மண்ணவர் தாமடைய
ஆன நிவாரணமாய், ஐயனதைத் தாம்இழந்தார்.

172. தாங்கரிய நேரத்தில் தற்பரனைக் காணோமே,
ஏங்கித்தான் இம்மொழியை ஈசன் உரைத்தாரோ?

173. விண்ணவன் சந்நிதி மீண்டும் துலங்கியபின்
மண்ணுலகம் மீட்கவந்தார் மாற்றமிது கூறினரோ?

174. கூறினதும் குற்றமன்றே! கொண்ட கொடுமையுந்தான்
ஆறி, யடங்கியதும் அப்பனையே கேட்கலுற்றார்.

175 ஆங்கே நடந்த அரியதோர் மர்மந்தான்
ஈங்கிந்த வார்த்தைகளால், ஈசன் வெளியிட்டார்,

176. இம்மொழி வாயிலாக, ஈனர் நமக்கவர்தாம்
எம்மட்டில் பாடுபட்டார் என்பதுவும் தோன்றுதம்மா!

177. ஏதுதான் இந்தமொழி? ஏதிலர் கேலிசெய்யும்
ஈதுதான் நம்மனோர்க்கு ஈடேற்றம் தந்தமொழி.

178. பிரிவினை இல்லார், பிரிந்திருத்தல் ஆற்றார்,
உரிமையுடன் தந்தைபால் உற்றதையிவ் வாறுசொன்னார்,

179. "என்தேவா! என்தேவா! ஏனென்னைக் கைவிட்டீர்?"
என்றாரே, நான்காம் சொல் எம்பெருமான் அம்மானை.

180. இருபத்தி ரண்டாம் இனியசங் கீதம்,
திருமுதல் வாக்யமிதைச் செப்பினார் தாவீதும்

181 நான்காம் திருமொழி, நாதன் அரேமியத்தில்
பாங்காய் உரைத்தார் எனப் பகர்வார் மாற்கென்பார்

182 "ஏலோயி ஏலோயி லாமா சபக்தானி"
ஓலோலம் இட்டஇச்சொல் ஒன்றுபோல் கேட்டார்கள்.

183. வானிலுறும் சூரியன் வந்துவந்து கொண்டிருக்க,
நானிலம் மொய்த்தாண்ட நள்ளிருளும் நீங்கநீங்க,

184. நெஞ்சிற் பயமின்மை நீங்கியபொல் லாமக்கள்
நஞ்சிலுவை நாயகனை நோக்கி, நகைத்தார்கள்.

185. ஆத்தும வேதனையும், ஆகத்தின் வேதனையும்
சேர்த்துவதை செய்வேளை செப்பிய இச்சொல்லைக்,

186 கேட்டார் ஒருசிலர் கேடுதரும் அர்த்தத்தை
மேட்டிமைப் புத்தியினால் வீணேதான் கொண்டவராய்,

187. "எலியாவைக் கூவுகிறான் இன்னவனைக் காப்பான்
வலிய வருவானோ வானத்தவன்?" என்றுரைத்தார்.

188. ஆக அடுத்தாற்போல், அன்பின் சிலுவையிலே
'தாகமுளேன்' என்று சொன்னார் தற்பரனார், அம்மானை.

189. ஐங்காய ஊற்றிற்கு அனைவோரும் வந்துசேர்ந்து
தீங்கை அகற்றுவிக்கத் தேவனறை கூவுகின்றார்.

190. ஏசாயா தீர்க்கன் இயம்பும் ஐம் பத்தைந்தின்
தேசார்ந்த வாக்குப்போல் செப்பினார் ஏசுநாதர்.

191. பாவம் பரிகரிப்பார், பாவிநீ ஓடிப்போய்த்
தேவசுதன் கொள்தாகம் தீர்த்தும்நீ சீர்மைபெறு

192. ஆன்மநோய் தீரா அரும்பிணி யாளரையும்
ஆண்டவன்பால் சேர்த்தும்அவர்தாகம் தீர்த்திடுவாய்.

193 ஆன்மாக்கள் ஈடேறும் அத்தாகம் கொண்டவர்தாம்,
ஊன்உடல் தாகமுற்றும், உச்சரிப்பார் இவ்வுரைதான்.

194. பக்கத்தே நின்றவனும், பானந்தோய் பஞ்சொன்றை,
அக்கணத்தே தண்டொன்றால், அச்சுதன்பால் நீட்டினன் காண்

195. ஆண்டவன் அப்பஞ்சை ஆரச் சுவைத்தபின்னர்.
மீண்டுமோர் பார்வையினால் மேதினியை உற்றுநோக்கி,

196 மிக்க திருப்தியுடன், மேலாந்தம் ஊழியங்கள்
அக்குத்தொக் கின்றி,. அனைத்தும் முடிந்தமைதான்,

197. கடிதின் அறிந்தே, கருணையால் ஓர்சொல்,
'முடிந்ததுவே' என்றார் முடிவில்லான், அம்மானை.

198. வெற்றிசங்கு ஊதினார், வேந்தன்தன் தூதனைத்தும்
முற்றும் முடித்தனர், மூதுலகை மீட்டுவிட்டார்.

199 எல்லாம் முடிந்ததென்ற, இச்சொல்லால் மண்ணவர்க்கு
நல்லான் விடைநல்கி நற்றந்தை தாம் நோக்கி,

200. ''அப்பா பிதாவேஉன் அன்பின்கை என்ஆவி
ஒப்புவித்தேன்'' என்றனரே, உன்னதனார், அம்மானை.

201. ஈற்றுமொழி இவ்வாறே ஏசுவுங் கூறியபின்,
சற்றே தலைசாய்த்துத், தம்முயிரைத் தாம்விட்டார்.

202. தாமே உயிர்கொண்டார், தாமே உயிர்நீத்து,
தாமேதம் ஆவியையும் தற்பரன்பால் ஒப்படைத்தார்.

203. தந்தை மடிதன்னில் தாமிருந்த தன்மையினார்,
அந்தஇடம் மீண்டேகும் ஆத்திரத்தில் ஒப்படைத்தார்

204. தாமே கொடுக்கவும், தாமே எடுத்திடவும்,
ஆமே அதிகாரம் அப்பாவால் பெற்றமையால்,

205. அப்பாவின் கையகத்தே அன்பின்நல் லாவிதனை
இப்பால் இருந்தேதான் அப்பாலும் போகச்செய்தார்.

206. மரித்தார் கிறிஸ்தேசு மாநிலமீ டேற,
மரித்தார் கிறிஸ்து மரியாமை நாம்பெறவே

207. மரியாள் சுதனாக மாநிலத்தில் வந்தோர்,
மரித்தாரே மீட்பராய், மானிடர்க்காய், அம்மானை.

208. மரித்தார் கிறிஸ்தேசு, மானிடர்க்காய், மண்ணில்
உரித்தானார், ஒப்பில் ஒரு மீட்பர் உந்தனுக்கே

209. சிலுவையின் காட்சி சிறக்க முடித்துவிட்டு,
கொலுவிருக்கச் சென்றாரே! கோமகனார், அம்மானை.



# 25

# படிவாக்கியக் கவிதைகள், பிரார்த்தனை அந்தாதி

**ஆசிரியர் : தே. மனுவேல் (1894 - 1984)**

**அறிமுகம் : தி. தயானந்தன் பிரான்சிஸ்**

''ஆழ்கடலில் கீழெவர்க்கும் அறிய முடியாமல் அமிழ்ந்துறையும் மணிகளுக்கோர் அளவில்லை அம்மா'' என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஓர் ஆங்கிலக் கவிதையை மொழி பெயர்த்துள்ளார். கடற்கரையில் காட்சி தரும் கிளிஞ்சல் ஓடுகளைப் போலல்லாமல் கடலின் ஆழத்தில் எவரும் அறியவியலாமல் மறைந்து வாழும் முத்துக்கள் அளவிறந்தவை என்னும் அப்பாடற் கருத்துக்குச் சான்றாக அமைந்த கவிஞர்கள் இருந்துள்ளனர். தாங்கள் வாழ்ந்த காலத்தில் தங்கள் புலமையைப் பறைசாற்றிப் படைப்புகளின் பெருமையைப் புனைந்துரையாமல் அவற்றுள் பலவற்றை அச்சிற் கொணரவும் விரும்பாமல் - இயலாமல் - வாழ்ந்து மறைந்த கிறிஸ்தவக் கவிஞர்கள் சிலர் இருந்துள்ளனர். அத்தகையோருள் ஒருவர்தாம் மதுரையில் யூனியன் கிறிஸ்தவ உயர்நிலைப் பள்ளியில் நெடுங்காலம் பணியாற்றித் தலைமையாசிரியராகவும் திகழ்ந்து அவ்வூரிலேயே தம் வாழ்நாட்களைக் கழித்து முடித்தவரான திரு. தே. மனுவேல் அவர்கள்.

'காவடிச் சிந்து' என்னும் அரிய இசைப் பாடல் நூலை எழுதிய சந்தக் கவிஞர் சென்னிமலை அண்ணாமலை ரெட்டியாரின் வழிவந்தவர் மனுவேல். இளமையிலேயே கிறிஸ்தவராகிப் பாளையங்கோட்டையில் பள்ளி, கல்லூரிப் படிப்பை முடித்து மதுரையில் ஆசிரியப் பணியை ஏற்ற காலத்திருந்தே தமிழில் கவிபுனையும் ஆற்றல் பெற்றிருந்தார். எழுதியவற்றைப் பலருக்குக் காட்டாமல், அச்சேற்றவும் விரும்பாமல், பல நூறு பாடல்களை அவர் பத்திரப்படுத்தி வந்தார். ஏறத்தாழ எண்பது வயதினராக இருந்தபோது தம்முடைய 'பிரார்த்தனை அந்தாதி'யை தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபை இதழாகிய அருணோதயத்தில் வெளியிட்டார். அவருடைய கவித்திறன் பலரை வியப்பிலாழ்த்திற்று. பின்னர் நூலாக வெளிவந்த அவ் அந்தாதி நூலின் அருமைமிகு பாடல் இங்ஙனம் அமைந்துள்ளது :

*''உள்ளம் உடைந்தழுது - உன்றன்*
*ஒள்வலப் பக்கம் நின்ற*
*கள்ளன் கலிதீர்த்தாய் - பெருங்*
*காருண்ய மூர்த்தி என்னைத்*
*தள்ளாதே கடைக்கண் - பார்த்துத்*
*தஞ்சங் கொடுத் துனது*
*பிள்ளையெனும் பதவி - தந்துன்*
*பெயர் சொல்ல வைப்பாய்!''*

திரு. தே. மனுவேலரின் வாழ்க்கைக் குறிப்பிலிருந்து ஒரு செய்தி. அவர் பாளையில் பள்ளி மாணவனாக இருந்தபோது மேனாட்டிலிருந்து வருகை தந்த ஆர்ச்சிபால்டு என்பாரின் நற்செய்திக் கூட்டம் நடந்தது. காணிக்கை எடுக்கப்பட்டபோது இளைஞர் மனுவேலிடம் படைப்பதற்குப் பணம் ஏதும் இல்லை. எனவே ஒரு தாளில்,

*''தீதுநிறை பூவுலகில் தியங்கியலை யுண்டவெனைத்*
*திருக்கண் ணோக்கி*
*வாதுமலி சத்துருவாம் வல்லலகை வன்பிடிநின்று*
*ஈர்த்து மீட்டுன்*
*தாதுதிரு பத்மபதம் தளைப்போற்ற அருள்செய்த*
*பெருந்தமைக்கே*
*யாதுபதில் செய்யவல்லேன்? நினதடிமை எனப்புகுந்தேன்*
*நாதா நானின்றே''*

என்ற பாடலை எழுதிக் காணிக்கைப் பெட்டியிலிட்டார். அப்போது அவருக்கு வயது பதின்மூன்று.

பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் 1894 ஆம் ஆண்டில் பிறந்த இக்கவிஞர் 1984 ஆம் ஆண்டு வரை வாழ்ந்து மதுரை இரட்சண்ய ஆலயத்தில் தம்முடைய 'படிவாக்கியக் கவிதைகள்' என்னும் சிறு நூலைத் தாமே அரங்கேற்றி வெளியிட்டார்.

மிடுக்கான நடையில் தெரிப்பான சொற்களால் அமைந்த சிந்துப் பாடல்களையும் கீர்த்தனைப் பாடல்களையும் அவர் புனைந்துள்ளார். அவற்றுள் சிலவும் அவர் திருமறை வசனங்களின் கவிதைப் பதிப்பாக யாத்த ''படிவாக்கியக் கவிதை' நூலிலிருந்து மற்றும் சில கவிதைகளும் இங்குத் தேர்வுப் பாக்களாக வழங்கப்படுகின்றன.

## படிவாக்கியக் கவிதைகள்

1. வருவார் விரைவில் இறைவன் அவர்க்குச்
சரியாக்கிடுமின் வழியை - எரியும்
அவாந்தரக் காடும் அவர்முன் னிலையில்
தவவன மாகிடும் தான்.

ஏசாயா 40 : 3
மல்கியா 3 . 1

2. உறுதியாம் வாக்கினில் தாமதம் இல்லை
பொறுமை யுளர் நீ டெவரும் - இறுதல்
விரும்பிலர் யாவரும் வீடுபெற் றுய்ய
விருப்பம் வருவார் விரைந்து.

2 பேதுரு 3 . 9
அறிவிப்பு 22 : 20

3. அரசோச்சு கின்றார் இறைவன் இதோவென்
றறிவிக்கும் தூதனின் கால்கள் - சிறப்பாய்ச்
சொலிக்கின்ற சீயோன் மலைகளின் மீது
ஒளிரும் அழகே அழகு.

ஏசாயா 52 : 7

4. ஏற்ற முறுக இறையால் வருபவர்
மற்றிவர்க் காகவே காத்துளோம் - ஏற்ற
இவர்மீட்பி னாற்களி கூருவோம் நாமே
இவரே நமது பரன். சங்கீதம் 118 . 26
ஏசாயா 25 : 9

5. பிறந்தார் நமக்கென் றொருபே ரரசர்
தரப்பட் டாரொரு குலக்கொழுந் தெமக்கு
அரசமுத் திரையவர் தோள்மே லுளது
அவர் திரு நாமம் அதிசய மானவர்,
அமைதி தந்திடும் அண்ணல், ஆண்டை,
சிந்தனை யாளர், வல்ல பராபரன்,
நித்திய தந்தை, நிரந்தர மன்னன்
மாந்த ரனைவரும் வழுத்துவ ரவரை ஏசாயா 9 . 6
சங்கீதம் 100 : 1

6. இறை சொல் லேயோர் ஊனுரு வெடுத்து
கிருபை மெய்மை நிரம்பி வதிந்தது
நிறைந்த மாண்பைக் கண்டோ மவரில்
இறையி னொரேபே றானவர்க் கேற்றதாய். யோவான் 1 : 14

7. ஊனுரு வாக உதித்தா ரிறைவன்
உளத்தில் நீதிப் பிழம்பே யாயினர்
தூதர்க ளுக்கவர் தரிசனந் தந்தார்
மாந்தர்க் குள்ளே மதிப்புரை பெற்றார்
உலகத் தில்விசு வசிக்கப் பட்டார்
மகிமைக் குள்ளே ஏறெடுப் பானார்
உலகின் எல்லை யனைத்தும் நமது
இறைவனின் மீட்பைத் தெளிவாய்க் காணும். 1 தீமோத்தேயு 3 : 16
ஏசாயா 52 : 10

8. காத்தே யிருந்துமது மீட்புக்காய்க் கண்ணிரண்டும்
பூத்தேபோ யிற்றும் அடியனை - உத்தம உம்
போதனை தந்து புனிதக் கிருபையின்
பாதையிற் சேர்த்திடும் பார்த்து. சங்கீதம் 119 : 123 - 125

9. நேற்றும் இன்றும் என்றும் மாறாது
நிற்கும் ஏசுவின் நாமமென் றென்றும்
பெற்று ஆசி அவரால் வாழ்வின்
ஊற்றென் றவரைப் புகழ்வீ ரென்றும். எபிரேயர் 13 . 8
சங்கீதம் 72 : 17

10 துளிரொன் றெழும்பிடும் ஈசாயின் வேரிற்
கிளம்பும் கிளையொன் றவனே - விழாமலே
தூயரான் மாக்களைக் காப்ப ரிறையென்றும்
தீயோர் கரங்களி னின்று

ஏசாயா 11 : 1
சங்கீதம் 97 : 10

11 மகிழுமின் இறைவனின் மக்க ளுடனே
புகழுமின் இறைவனை மானிட வர்க்கமே
அனைத்து உயிர்களே துதியுமி னவரை.

ரோமர் 15 : 10-11

12 இறையச்சம் வன்மை அறிவீயும் ஆவி
நிறையும் நிலைத்தவர் மீது.

ஏசாயா 11 · 2

13 இறைவனுக் கஞ்சியவர் பாதையிற் செல்வோன்
நிறைவான பேறு பெறுவான் -குறைவிலா
வாழ்வு வழங்கிடு வாரவ னுக்கே
தளர்வென்று மேயவற் கின்று.

சங்கீதம் 128 . 1
யாத்திராகமம் 20 : 14

14 சாந்த குணத்தவர் பாக்கிய ராகுவர்
பாந்த மவர்க்கே படியா மதனால்
மனமகிழ்ந் திருப்பர் மாண்புறு சாந்தியில்
தீனரு மேழைக ளாயினோர் யாவரும்
இன்புற் றிருப்பர் இஸ்ரா யேலின்
அன்ப ரிறைவனின் ஆசியி னோடு.

சங்கீதம் 37 : 11
ஏசாயா 29 : 19

15 தூய உளமும் நன்மனச் சாட்சியாம்
மாய மற்ற நம்பிக்கை யில்எழும்
நேயமே நீதி நியாயத் திலக்கு
ஈயச் சித்த மாயுளர் தந்தை
தூய அரசின் ஆளுகை யுனக்கு.

1 தீமோத்தேயு 1 : 5
லூக்கா 12 : 32

16 ஆர்ப்பரிப் போம்நாம் ஆடிப்பாடி
இறைவனைப் போற்றுவோம் எம்பெல னவரே
முறிக்கார் நெறிந்த நாணலை யவரே
திரிமங் கினுமதை அணைக்காரென்றும்
தெரிவிப் பாரவ ருண்மையை நமக்கே.

சங்கீதம் 81 : 2
ஏசாயா 42 : 3

17 தரிசன மாகுமும் சமுகம் நீதியில்
தருமும் வதனம் நிம்மதி விழிப்பில்
வருங்கால் கிறிஸ்து நமது வாழ்வாய்
வருவோம் அவருடன் நாமும் மாண்பாய். சங்கீதம் 17 : 15
கொலோசேயர் 3 · 4

18 இயற்றுமின் மிக்கப் பணிவுடனேயும்
பயத்துட னேயுமும் மீட்பின் பணியை
ஏற்ற செயலையும் இதமாம் மனதையும்
ஏற்படச் செய்வ திறைவனே யும்மில்
நேசித்தோ மனாதி நேயத்தா லுன்னை
பாசத்தா லுன்னைப் பற்றிமீட் டிடுவோம் என்கிறா ரிறைவன்.
பிலிப்பியர் 2 : 12, 13
எரேமியா 31 · 3

19. பரிதியும் பரிசையு மாம்பரன் நமக்கு
கிருபையும் மகிமையும் கிடைக்கு மவரால்
திரும்பாது வீணாய்த் திட்டமாம் நம்சொல்
விரும்பிய பணியைச் செய்தே முடிக்கும் என்கிறார் பரமன். சங்கீதம் 84 : 12
ஏசாயா 55 : 11

20. கிறிஸ்துவுக் குள்ளாய்த் திருமுழுக்கேற்றோர்
எத்தனை பேரோ அத்தனை பேரும்
கிறிஸ்துவினையே தரித்தோம் உடையாய்
என்றும் பேறு பெற்றவர் நாமே
இறைவனைத் தெய்வமாய்க் கொண்டுள மக்கள்
அனைவரும் அவர் சொந்த மாய்விட்ட வர்க்கம்
நிறையாசி பெற்று நிம்மதியுடனே
நீடூழி வாழ்வர் நேயரின் காப்பில் கலாத்தியர் 3 . 27
சங்கீதம் 33 . 12

21. எமதிரட்சிப்பின் இறைவா இரங்கும்
உமது நாம மகிமையினிமித்தம்
எமக்கொத்தாசை தந்தெமைக் காத்து
எமது பாவ மனைத்தையும் நீக்கி
எமக்கும தருளை யீவீராக சங்கீதம் 79 . 9

22. அடைக்கலம் கோட்டை துருக்கமுமாம் என் இறைவன்
வேடுவனின் கண்ணி விலக்கியே - கேடெனக்கு
வாராத வண்ணம் வகை செய்வார் திண்ணமே
சேரா தெனை யென்றும் தீங்கு. சங்கீதம் 91 : 2-3

23. கொடுத்துளீர் வாக்கெனக்கு நன்மையே செய்ய
விடேனெனைவிட் டேகவுமை நன்மை பெறாமல்
பெருகிற்றென் ஆன்ம வியாகுலங்க ளென்மேல்
நெருக்கங்க ளத்தனையம் நீக்கிடுவீ ரின்று.
ஆதியாகமம் 32 : 9, 26
சங்கீதம் 25 : 17

24 விரோதிகட் கெதிரென்னை நீதியில் நடத்தி
சீராக்கு மென்வழியை என்பகைவர் முன்னே
சிதறடித் தென்பகையை என் கண்ணின் முன்னால்
விதிர்த்தோடச் செய்திடும் விரோதிகளை யெல்லாம்.
சங்கீதம் 5 . 9
எண்ணாகமம் 10 · 35

25. ஆண்டவா யாரண்டை செல்வ முமை விட்டு
உண்டேயும் மிடத்திலே உயிருள்ள வாக்கு
ஊக்கப் படுத்துமெமை உம்கிருபையாலே.
யோவான் 6 : 68
சங்கீதம் 90 . 14

26. இரங்கிடுவீர் உம்கிருபை யின்படி யெனக்கு
மீறுதல்கள் நீங்கவெனை வெண்மையே யாக்கி
இரக்கங்க ளின்படி யெனை முற்றும் கழுவி
அக்கிரம முற்றுமற ஆக்கிடுவீர் சுத்தி
சங்கீதம் 51 . 23

27. உரிமையுள் ளவரடி யுண்டதே வாடவர்
நிறைஞானம் வல்லமை நிரந்தர துதிக்கு
இரட்சியும் இறைவா எம் இன்னல்களை நீக்கி
இரக்கமாய் எம்வேண்டல் ஏற்றருளு மீசா.
அறிவிப்பு 5 : 12
சங்கீதம் 20 : 9

28. ஆசிசெய் கிண்ணமும் அப்பமும் காட்டிடும்
ஏசுக் கிறிஸ்துவின் இரத்தமுடம் போடுநான்
பாசமாய் ஒட்டுறவு பற்றுதற்குதவிட
ஆசையாய்க் காத்துளேன் ஆதரியரசே.
1 கொரிந்தியர் 10 : 16
ஆதியாகமம் 40 : 14

29. பலியானா ரேசு நம் பாவங்கட்காக
உயிர்த்தனர் நமை மாற்றி உத்தமராக்க
வெற்றி நாம் அவர் மூலம் பெற்றிடச் செய்த
இறைவனை யென்றுமே தோத்திரித்திடுவோம்.
ரோமர் 4 · 2
1 கொரிந்தியர் 15 : 57

30. கவலேல் இதோ யூதாக் கோத்திரச் சிங்கம்
தாவீதின் வேருமா னவர் வெற்றி கொண்டார்
மக்களை மூடியுள வல்லிருள் விலக்கி
மரணத்தை விழுங்கியே வாகை சூடினரே.
அறிவிப்பு 5 · 5
ஏசாயா 25 : 7,8

31 பார்ப்பே னுங்களை மீண்டும் நானே
மகிழ்வால் உங்கள துள்ளம் நிரம்பும்
உயிருள் ளவர்நான் என்றும், அதுபோல்
உயிருள் ளவர்நீ விருமே திண்ணம். யோவான் 19 : 22
யோவான் 14 . 19

32. இறைவனென் ஆயர் இலைதாழ் வெனக்கு
இரைதேடித் தந்து இன்பநீர் காட்டி
மறிகளைச் சேர்த்து மடியிற் சுமந்து
கறவலாடுகளைக் காத்திடுவர் நன்கு. சங்கீதம் 23 . 1
சங்கீதம் 40 : 11

33. சிறிதள வுன்னைச் சிதற விட்டோம்
இரக்கத்தோடே ஏற்போம் மாறி
நிறைவாம் கருணை நிற்குமுன் மீதென்
றிறைவனாம் மீட்பர் உரைக்கிறா ரின்று. ஏசாயா 54 . 78

34. இரங்கும் இறைவா கருணைப் படியே
இரக்கப் படியெம் மீறுதல் யாவும்
தீரும் படியெமைச் சுத்தப் படுத்திடும். சங்கீதம் 51 : 3

35 தந்திடுவோம் சீவ தண்ணீர் தாக முள்ளோர்க்கு
சாந்தியீவோ முமது சந்தானத்திற்கு. ஏசாயா 44 · 3

36. கிருபையாய் வேண்டல் செயத்தகும் ஆவியைச்
சொரிந்திடு வோமுங்கள் பேரிலே - சீராய்ப்
பரனைப் பணிபவர் ஆவியினோடும்
உரிமையோ டும்பணிதல் நன்று. யோவான் 4 : 23

37 வலபா லமர இடமளித்தா ரீசனே
வல்லவ ரேசுக் கிறிஸ்துவுக்கு - சொல்லரும்
பாட்டின் மேற் பாட்டாகப் பாடும் பரனுக்கு
மீட்பின் பெருமை குறித்து சங்கீதம் 110 . 11
சங்கீதம் 4 : 7

38. சாந்த குணமுள்ளோர் பேறுபெற் றோர்களே
பாந்த மவர்க்கிப் புவியாகும் - சொந்த
வலுவினா லன்றுநம் ஆவியா லாகும்
எனவுரைக் கின்றா ரிறை மத்தேயு 5 : 5
சகரியா 4 : 6

39. ஊற்றிடுவோ மாவியை இஸரேலின் மீதே
உரைப்பரிறை வாக்குமது மக்களும் மகளிரும்
இறைவனின் நாமத்தை இசைப்பவர்களெல்லாம்
இரட்சிப் படைவ ரென்றுரைக்கிறா ரீசன் — அப்போஸ்தலர் 2 : 17

40. நெருநல் இன்றும் என்றுமுள
சருவ வல்ல பரனான
இறைவன் தூய தூய ரெனப்
பரவப்படுக என்றென்றும். — அறிவிப்பு 4 : 8

41. உலகைப் பற்று வோனுளத்தில்
இலவாம் தந்தை யிடம் நேசம்
உலகும் அனைத்தும் ஒழிந்திடுமே
நிற்பன் நிலையாய் என்றென்றும்
இறைவன் சித்தம் இயற்றுபவன். — 1 யோவான் 2 : 15, 17

42. இருளி னின்றுதம் அதிசயமாம்
தெருளொளி பால் நமை வரச்செய்த
கருணைத் திறனை அறிவிப்போம்
மன்பதை மீதில் அவர் கொண்ட
அன்பு நிலைக்கும் என்றென்றும். — 1 பேதுரு 2 · 9; உபாகமம் 33 . 3

43 உளத்தா லெளிய ருயர்ந்தோர் பரம
வளத்தின் நா டன்னார்க் குரித்து
கெட்டோரை மீட்கக் கிறிஸ்தே சுலகுவந்த
திட்டமா முண்மை திசையெட்டு மெட்டும். — மத்தேயு 5 . 3; 1 தீமோத்தேயு 1 : 15

44. அளிப்பா ரிறைவன் அவரவர் காட்டும்
உழைப்புக்கு முண்மைக்கு மேற்ற - பலனை
கருணை யுளத்தவர் பேறுபெற் றோரே
அருளே யனையவர் பங்கு — 1 சாமுவேல் 26 : 23; மத்தேயு 5 : 7

45. நல்லவ ரிறைவன் நற்குணத் தவர்க்கு
வல்லகோட் டையவர் வன்மையற்றோர்க்கு
பற்றுடை யோரைப் பரமன் அறிந்துளார்
பற்றிக்கொண்டோர் பெரும் பேறுபெற்றோரே. — நாகூம் 1 · 7; சங்கீதம் 40 : 4

46. தூய நீராட்டியுமைத் தூய்மையாக்கிடுவோம்
நவமான உள்ளமும் நல்லாவி யுந்தந்து
நமதாஞ்ஞை யின்படி நடந்திடவும் நீவிர்
நம் நியமங்களை நடத்திடவும் செய்வோம். எசேக்கியேல் 36 . 25 - 27

47. இறைபணி யாற்றுவோ ராற்றார்க் கிடையே
இருக்கும் பிளவினை என்றும் காண்பீர்
சிறியவ ருண்டு செழிப்புற் றிருப்பர்
சிறப்புற்றோங்கும் சீரிய ருள்ளம். மல்கியா 3 : 10
சங்கீதம் 21 : 26

48. ஒளிக்குள் ளேயவ ரிருப்பது போன்று
ஒளியில் நாமும் நடந்தோ மாகில்
ஊக்கமாம் ஒற்றுமை நிலவும் நம்மில்
இறைமகனாம் கிறிஸ் தேசுவின் குருதி
அறவே நம்பவ மனைத்தும் அகற்றும் யோவான் 1 : 7

49. நலம் நிறை ஞானம் இறைவர்க் கஞ்சுதல்
பொலதை விட்டு விலகுத லுணர்வு
நலம்செய் வோர்புக ழெங்கும் நிலைக்கும். யோபு 28 : 28
சங்கீதம் 111 : 10

50. இறைவன் கண்டிப் பிரக்கமும் பார்வழி
பிறழ்ந்தோ னிடம்கொளும் கண்டிப் பினையும்
உனக்குக் காட்டும் உரிமையு முணர்வாய்
நிலைபெற் றிருந்தால் நீ அத் தயவில்
நிலையாய் நிற்கும் அத்தய வுனக்கு
திரும்பிடு உந்தன் தீவழி விட்டு
பெருத்துள தவர்தயை பிழை பொறுத் திடவே. ரோமர் 11 : 22
ஏசாயா 55 : 7

51. சுயபுண்ணி யந்தரா துறக்கமென் றைக்கும்
தீயனைத் தூயனாய்த் திருத்தும் இறைவனின்
இன்னருட் கருணையை ஏற்பதே நீதி
எவன் தீதை யீசன் எண்ணா தொழிப்பரோ
அவனே பெரும்பே றடைந்தோ னாவன். ரோமர் 4 : 5-8
சங்கீதம் 32 : 2

52. உத்தம கிறிஸ்துவின் உறுசெய லவரைப்
பற்றுவோ ரையெலாம் காக்கப் பலத்தது
வந்தெமை மீட்பார் மந்தர்கள் செவிகளும்
அந்தகர் கண்களும் அன்றே திறக்குமே ரோமர் 1 : 16
ஏசாயா 35 : 4-5

53. நமையன்றி யில்லை நண்பர்வே றுனக்கு
நம்பொருட் டேயுன் நசிவெலாம் நீக்கி
நாமே யுனக்கா ரோக்கியந் தந்துன்
புண் களனைத்தையும் போக்கிடு வோமென்
றுரைக் கிறாரிறைவன்

ஏசாயா 43 11-25
எரேமியா 30 . 17

54. இறைவன் கேட்கிறார் மகனே உன்
இதயம் எனக்குத் தாவெனவே
சிறியோம் கூப்பிடு தலுக்கெல்லாம்
செவி சாய்த்தாரே நம்மிறைவன்
நெருக்கங் களிலெல் லாமிருந்து
நீக்கி மீட்டார் நம்மையே
ஒருமித் தேநா மொன்றாக
உயர்த்து வோமவர் நாமத்தை.

நீதிமொழிகள் 23 · 26
சங்கீதம் 24 : 4-7

55. செல்வீ ரிறைவன் வழியினிலே
அவரைத் தெய்வ மெனக் கொண்டால்
வெல்பவ னெவனோ அவனுக் கிறைவன்
நல்குவர் ஜீவ நறுங்கனியை.

1 இராசாக்கள் 18 : 21
அறிவிப்பு 2 : 7

56 இளைஞர் இளைத்து விடாய்க் கின்றார்
இடறி விழுகிறார் வாலிபரும்
இறைவனுக் காகக் காத்திருப்போர்
எழுவர் புதிதாய்ப் பெலன் பெற்று
எழுவர் பிழைத்து நம்மவர்கள்
என்றுரைக் கின்றார் நம் மிறைவன்.

ஏசாயா 40 : 30, 31
29 19

57. ஒரு மனப் பட்ட இதயமும்
உள்ளத் திற்புத்தாவியும்
தருவோ மவர்கட் கவர்கள் நமக்
கருகாம் மக்கள் நாமவர்கட்
குரித்தா மிறையா யிருப்ப மெனக்
கொடுத்தா ரிதையோர் நிலை வாக்காய்.

எரேமியா 11 . 19, 20

58. தூய்மையும் நீதியு மறிவும் மீட்பும்
ஆயினர் கிறிஸ்து நமக்கா யிறையால்
இஸரேல் வித்தா மனைவரு மவர்க்குள்
எழுவார் தூய ராயவராலே.

1கொரிந்தியர் 1 . 30
ஏசாயா 45 : 25

59. வந்தீர் சீவ சத்துள்ள
வானொரு சலையாம் இறைநகர்க்கு
நொந்தேன் நோயா லென்றெவனும்
நுவலுவ தில்லை அந்நகரில்
அந்த நகர்வாழ் மக்களது
அனைத்துக் குறையும் தீர்த்துவிடும்
எந்தை இறைவன் குடைநிழலில்
என்றும் சுகித்து வாழ்வாரே

எபிரேயர் 12 . 22
ஏசாயா 33 : 24

60. அளிக்கிறா ரிறைவன் நமக்கறிவு
அவர்வாக் காலுணர் வுண்டாகும்
அழிம்பு அனைத்தை யும் நீக்கி
அளிப்பார் நீதி யுடைநமக்கு.

லூக்கா 2 : 6
சகரியா 3 : 4

61. போரா டினும்முடி பெறமாட்டான்
நேராய்ப் போரா டா னெவனும்
தேடின வர்க்கிறை தென்பட்டுத்
தேவை யளித்துக் காக்கின்றார்.

2 தீமோத்தேயு 2 : 5
சங்கீதம் 145 : 19

62. இறைவன் உம்குறை தீர்த்தல்போல்
பிறர்பிழை நீவிர் மன்னிப்பீர்
இறையச் சத்தினை உளத்தேற்றி
இதமே செய்வா ருமக்கென்றும்.

எபேசியர் 4 : 32

63. தீயோர் சிந்தை சிதறிப்போம்
வாயின் சொல்லும் வீணாய்ப்போம்
இறைவன் நமது பக்கத்தில்
என்றும் துணையாய் நிற்கின்றார்.

ஏசாயா 8 : 10

64. அருமை தூயவ ரின்முடிவு
இறைவர்க் கென்றே பிழைக்கின்றோம்
அவருக் காகக் காத்துள்ளோம்
அவரது மீட்பால் மகிழ்கின்றோம்

சங்கீதம் 116 : 15
லூக்கா 20 : 18
ஏசாயா 55 : 9

65. உயிர்பெற் றெழுந்திட் டார்கிறிஸ்து
துயின்றோர்க் குள்முதற் பலனானார்
வருகின் றதுமிகத் தீவிரமாய்
இறை வன் நீதிப் பெருநாளே
வருமுன் தீங்கு தூயோர்கள்
விரைவில் எடுத்துக் கொளப்பட்டுப்
பெறுவர் சாந்தி இறைவனுளே
பரமன் வாக்கே இதுவாகும். 1 கொரிந்தியர் 15 : 20
செப்பனியா 1 : 12
ஏசாயா 57 : 1

66. வருவா ரிறைவன் மக்களெலாம்
பேராச் சரியப் படும்விதமாய்
தூயரில் மகிமை பெறும்வண்ணம்
நிதானத் துடனே மன்பதைக்கு
தீதி கிடைக்கும் நிச்சயமே. 1 தெசலோனிக்கேயர் 1 : 9
சங்கீதம் 96 : 13

67. விழித்திரு மெச்சரிப் புடனே தீவிர்
காலமெப் போது வருமென் றறியீர்
வருக வென்றனர் மணப்பெண் ஆவி
வருக வென்பான் கேட்போ னெவனும்
வருவார் விரைவில் இறைவன் தாமே. மாற்கு 16 . 23
அறிவிப்பு 22 : 17, 20

## பிரார்த்தனை அந்தாதி

### பல்லவி

உள்ளம் உருகுதய்யா - குமரா
உன்னடி எண்ணிடவே
அள்ளி அணைத்திடவே - என்னுள்
ஆவல் பெருகுதய்யா

1. சேணுறு வானுலகில் - தூதர்
சேனைகள் போற்றி நின்ற
பானொளி தன்னில் மிக்க - உந்தன்
பாதங்கள் தம்மை எண்ணி - உள்ளம்

2. காற்றுங் கடலு மொன்றாய் - கோரத்
தாண்டவ மாடுகையில்
கற்றரை போல்கடல் மேல் - சென்ற
வெற்றிப் பாதம் நினைந்து - உள்ளம்

3. மக்கள் துயர் துடைக்க - முனைந்(து)
எக்கணமும் தயங்கா(து)
அக்கறை யோடலைந்த - உந்தன்
செக்கச் சிவந்த அடிக்காய் - உள்ளம்



# 26

## இயேசு நாதர் சரிதை

**ஆசிரியர் : சுத்தானந்த பாரதியார் (1897 - 1989)**

**அறிமுகம் : யோ. ஞான சந்திர ஜாண்சன்**

தமிழுலகிற்கு நலம் புரிவதையே தமது வாழ்வின் நோக்கமாகக் கொண்டு உழைத்து வந்த அறிஞர்கள் பலரில் சுவாமி சுத்தானந்த பாரதியாரும் ஒருவர். இவர் சிவகங்கையில் 1897 ஆம் ஆண்டு மே மாதம் பதினொன்றாம் நாள் பிறந்தார். இவரது பாடல்களின் உடன் பிறப்புக்கள் இனிமை, எளிமை, உண்மை என்னும் மூன்று குணங்களும் ஆகும். தேசபக்தியும் தமிழன்பும் இவரது பாடல்களில் நிரம்பி வழியும்.

இவர் பாடாத பொருளில்லை; தொடாத துறையில்லை. தமிழ்ப் பணிபுரிதலே பெருந்தவமெனக் கருதித் தமிழில் பைந்தமிழ்ச் சோலை, இன்பமாலை, அருட்செல்வம், கவிக்கனவுகள், புதுயுகப்பாட்டு, கீர்த்தனாஞ்சலி, யோகசித்தி, அருட்சுடர் வள்ளலார், திருக்குறளின்பம், சிலம்புச் செல்வம், வளையாபதி அகவல், கவிக்குயில் பாரதியார், பாரதகீதம், பொதுநெறி, தமிழுணர்ச்சி, கம்பக் கவியின்பம் முதலிய நூற்றுக்கும் அதிகமான நூல்களை எழுதியுள்ளார். தமிழ், தமிழர், தமிழகம் எனும் இம்மூன்றும் உலகில் ஒப்பற்ற பெருமை பெற்று விளங்க வேண்டும் என்பதே இவரது அவா.

10,000 விருத்தங்கள் கொண்ட 'பாரத சக்தி' என்னும் மகாகாவியம் 1015 பக்கங்களைக் கொண்டது. இந்நூலுக்குத் தமிழ்ப் பல்கலைக்கழகம் மாமன்னன் இராசராசன் படைப்பிலக்கியப் பெரும் பரிசாக இலட்சத்து ஒரு ரூபாயினை 1984 இல் கொடுத்துப் பாராட்டியது. இவரது சிறப்புக் கருதி இவரைச் சுவாமி, யோகி, மகரிஷி என்றும் அழைப்பர்.

உலகம் முழுவதும் சென்று ஞானிகளையும், சிந்தனையாளர்களையும் கண்டார். ஞானசித்தர், சாய்பாபா, மெஹர் பாபா, இரமண மகரிஷி, மகான் அரவிந்தர் முதலியோருடன் சேர்ந்து வாழ்ந்தவர். சுத்தானந்தர் அச்சகமும் நூலகமும் அமைத்த இவர் ஒரு பன்மொழிப் புலமையாளர். ஒருமைப்பாடும் தமிழ் அருமையும் மிக்க பெரியார். நூற்றுக்கு மேல் நூல்கள் எழுதியிருப்பினும் தமிழர் இதயத்தில் தனி இடம் பெறவில்லை.

சுவாமி சுத்தானந்த பாரதியார் இயேசு கிறிஸ்துவின் வரலாற்றை 'இயேசு நாதர் சரிதை' என்னும் தலைப்பில் குறுங்காப்பியமாகப் படைத்துள்ளார். இயேசு கிறிஸ்துவின் வரலாற்றை அறிந்தவரும் காவிய அமைப்பில் படிப்பதென்பது இன்பம் தருவது. மனித சமூகத்தின் வளர்ச்சியும், உலக சமாதானமும் தான் காவியம் இயற்றுவதற்கான நோக்கம் என்று தன் முன்னுரையில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

மக்கள் அறிந்த கிறிஸ்து இயேசுவின் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறி, நற்செய்திகளை விதையாக மக்களின் மனதில் பதிப்பதே இவருடைய நோக்கம். இலக்கணம் குறையாகக் காணப்பட்டாலும் ஆன்மீக நோக்கில் வளர்ந்து வரும் இவ்விஞ்ஞான யுகத்திற்குச் சுருக்கமாக நற்செய்தியைப் பரப்ப விரும்பும் ஆசிரியரது நோக்கம் பாராட்டற்குரியது.

இந்நூலிலுள்ள பாடல்களின் மொத்த எண்ணிக்கை 150. காப்பு, வணக்கம், ஏசுநாதர் பெருமை, மரியாள் மாண்பு, ஏசுநாதர் பிறப்பு, முனிவர் மூவர், கொடிய ஏரோது....... உள்ளிட்ட இருபத்தி ஐந்து தலைப்புகளாக இச்சிறு காவியத்தைப் பகுத்துள்ளார்.

சுவாமி சுத்தானந்த பாரதியார் தமிழ் இலக்கியத்தில் தோய்ந்தவர். அவருக்கெனத் தனித்த மொழிநடை வாய்க்கப் பெற்ற பொழுதும் நூலின் சில பகுதிகளில் கம்பனின் தாக்கத்தை உணர முடிகிறது.

*"அணிக்கணி செய்யுஞ் செவ்வி, அகத்திலும் புறத்துந் தூயள்,*
*கணிக்கருங் கற்பின்மிக்காள், கருணையி னன்னை; தெய்வப்*
*பணிக்கணி யாகவந்திப் பாரினைக் காத்தோன், அன்னாள்*
*மணிவயிற் றுதித்தானென்னில் மாண்பிதிற் பிறிது முண்டோ?"*

என்ற பாடல் கம்பனின் சீதையை நினைவுபடுத்தி விடுகிறது. பாமரர்களுக்கும் நற்செய்தியைப் பரப்பும் நோக்குடன் காவியத்தை இயற்றினாலும் இவருடைய கடின நடையால் அந்த நோக்கம் வெற்றி பெறவில்லை. ஆனால் சில இடங்களில் இவருடைய மொழிநடை எளிமையாகவும் அமைந்திருக்கிறது. ஆண்டவரைப் பற்றி நல்லோரும் வஞ்சகரும் பேசும்பொழுது,

*"மனிதனோவென மாசுறு பற்பலர்,*
*புனிதனென்றனர் புண்ணிய நெஞ்சினர்;*
*சனியனென்றனர் பாரகர் தாமதர்;*
*இனியனென்றனர் எண்ணுறு மன்பரே"*

எனக் குறிப்பிடுகின்றார். அறத்தின் நாயகர் இயேசு கிறிஸ்து என்பதை,

*"பூவியிற் புரைகள் போக்கப் புண்ணியம் புரிந்த நாதன்*
*தேவியற் குணத்தால், வெய்ய தீமையே தொழிலாய்ச் செய்த*
*பாவியற் தமக்கு மன்பன்; பரிவதே பிலிற்றுங் கண்ணான்*
*ஆவியைப் பலி கொடுத்தோன் அறத்திறஞ் சிறக்கவம்மா!"*

என்று பாடுகின்றார். அவ்வாறே இறைமைந்தனை ஈன்ற அன்னையாம் மரியாளைக் குறிப்பிடும்பொழுதும்,

*"பன்னரும் பாக்கியத்தாள் பரிவுடைத் திருவின் மிக்காள்,*
*அன்னையாம் மரியாள் அன்பின் ஆழியா முளத்தாள், செய்ய*
*கன்னியர் திலக மானாள்; கடவுளங் குணத்தாள் அந்த*
*அன்னத்தின் அகட்டி லன்றோ ஆண்டவன் கருவளர்ந்தான்"*

என்று நான்கு அடிகளில் கவிநயத்துடன் அவர் சிறப்பைக் குறிக்கிறார். சிலுவை நிகழ்ச்சியைக் குறிப்பிடும் பொழுது பாவிகளின் அகந்தை வீங்கியதாகப் புதுமையான சொற்றொடர் ஒன்றை அமைக்கிறார்.

*"துப்பினர் திருமுகம்; தூயமேனியில்*
*தப்பினர் பிரம்பினால் தளரக் கைகளே*
*அப்பமாய் வீங்கிய தையன் மேனியே*
*அப்படு பாவிகள் அகந்தை வீங்கிற்றே"*

எனப் பாடலை அமைக்கின்றார். துன்ப நிகழ்ச்சியை மனக்கண்ணின் முன்பாகக் காட்சிப் படுத்துவதில் கவிஞர் வெற்றியடைந்துள்ளார் எனலாம். சொற்களால் இவர் வடிக்கும் காட்சி மனதிலும் பதிந்து துயரத்தை மிகுவிக்கின்றது.

*"திருக்கரங்களில் ஆணிகள்! செவ்விய*
*திருப்பதங்களில்; சென்னியி லாணியே!*
*இருப்பு நெஞ்சு மிரங்கிடும் பாரகர்*
*வெறுப்பு நெஞ்சிரங் காதது விந்தையே!"*

என்று பாடலை ஏகாரத்தில் முடிக்கும்பொழுது அவலச்சுவையே மிஞ்சுகிறது.

## ஏசுநாதர் பெருமை

விண்ணவன், பொறுமைக்கெல்லை விண்டவன்; அன்பினாளு
மண்ணவன்; மாந்தருய்ய வன்பணி செய்த இன்சொற்
றண்ணவன், தருமமுய்யத் தந்தவன் றனையே; ஞானக்
கண்ணவன் வேதம்; மாந்தர் கருத்தவன் அமரவாழ்வே!

பூவியிற் புரைகள் போக்கப் புண்ணியம் புரிந்த நாதன்
தேவியற் குணத்தால், வெய்ய தீமையே தொழிலாய்ச் செய்த
பாவியர் தமக்கு மன்பன்; பரிவதே பிலிற்றுங் கண்ணான்;
ஆவியைப் பலிகொடுத்தோன் அறத்திறஞ் சிறக்கவம்மா!

அருந்தவத் தான் மசக்தி யாணுருப் பூண்டதன்னான்;
பெருந்தவத் தொளியால் ஞானம் பிறங்குறும் ஆசியாவின்
இருந்தவக் கதிரோன்; கீழேயெழுந்து மேற்றிசையுமெங்கும்
பொருந்திய சான்றோனெங்கள் பூசனைக்குரிய நாதன்!

காமமுங் கொலையுங் கள்ளுங் கரவுடை வஞ்சர் தம்மின்
நாமமுங் கலக மின்னல் நாமெனுஞ் செருக்குந் தீய
தாமவை யெவையுமல்கித் தரணியில் நிரயமாகத்
தோமுறு யுதநாடு தொத்துழன் றிருந்ததம்மா!

அன்பினை யுருவாய்க்காட்டி அமைதியிற் பழுத்தசெஞ்சொல்
மன்பதைக் கறத்தையூட்ட, மற்றதன் வழியே வந்த
துன்பதைத் துணையாய்க் கொண்டே தொல்புவிவாழத்தெய்வ
வன்பணிக் காவியீந்த மாதவன் சரிதை கேளீர்

## மரியாளின் மாண்பு

அணிக்கணி செய்யுஞ் செல்வி, அகத்திலும் புறத்துந் தூயள்
கணிக்கருங் கற்பின்மிக்காள், கருணையி னன்னை; தெய்வப்
பனிக்கணி யாகவந்திப் பாரினைக் காத்தோன்; அன்னாள்
மணிவயிற் றுதித்தானென்னில் மாண்பிதிற் பிறிதுமுண்டோ?

கோசலை வாழி! வீரக் குரிசிலையீன்றாள்; அந்த
வாசவற் பயந்த வன்னை வழிவழி சிறக்க வாழி!
பூசனை யுடனே வாழீ புத்தனை யளித்த மின்னாள்!
ஏசுவைப் பெற்றாள் வாழீ! இவர்கொலோ வுலகினீன்றார்.

பன்னரும் பாக்கியத்தாள், பரிவுடைத் திருவின் மிக்காள்.
அன்னையாம் மரியாள் அன்பின் ஆழியா முளத்தாள், செய்ய
கன்னியர் திலக மானாள்; கடவுளங் குணத்தாள் அந்த
அன்னத்தின் அகட்டி லன்றோ ஆண்டவன் கருவளர்ந்தான்

## யோசேப்பு மரியாளை மணத்தல்

கருவுடைச் செவ்விதன்னைக் கடிமணம் புரிந்த நல்லோன்
உருவு கொண் டொளிரு மற்றோர் உருவிலி போன்ற தோற்றம்
மருவிய யோசேப் பென்னும் மரத்தொழிற் புலவ னன்னான்,
அருநறுங் குணத்தில் மிக்கான் அப்ரகாம் மரபிற் பூத்தோன்.

மயங்கினன் கருவை யெண்ணி; வந்தொரு தேவதூதன்
தயங்கிடல்! தூயல் மேரி; தரித்தனள் கடவுள் சேயை
வயங்கிடு மதற்கே ஏசு கிருத்தென வழங்கு கென்றே
நயங்கிளர்ந் தொருகனாவில் நவின்றிட ஐயந் தீர்ந்தான்.

## யோவான்

'வருந்துமின் பிழை! வழியினைத் துலக்குமின்! அறிவைப்
பொருந்துமின்! புனலாடுமின்! புனிதமேயாமின்!
பெருந்திறத்தொடு வருகுனன் பின்னரே! பூமி
வருந்து தீமைகளொழிந்திட வருந்திடு மைந்தன்!'

என்றுரைத் தறிவெனும் புன லாட்டி யிவ்வுலகை
யன்றழைத்த யோவானெனு மருட்பணி யமரன்,
இன்று வந்தனன்; யோர்தன்மா நதியினில் எதிர்ந்தான்
குன்றுமீதொளி யெனக்குணந் துலங்கிடுங் குரிசில்.

'அறிவெனும் புனலாட்டுக!' வென்றருகிருந்த
அறிவெனுங் கடலமர்ந்திடுமையனை யறிந்தே
பெறவிழைந்திடும் புண்ணிய மின்றொடும் பெற்றேன்
அறிமிருந்திடும் ஆண்டவன் மைந்தனே' என்றான்.

ஞானத்தீம் புன லாடினன் நாயகன்; ஆங்கு
வானவர்குழு வாழ்த்திடக் கடவுளின் மைந்தன்
தானெனத் தெரிந்தான்; வினையறிந்தனன்; சால
மானவர் பணிக் குயரினை வழங்கிய வரதன்.

எண்ணினான் புவிவருந்திடு மின்னலைத் தீர்க்கும்
எண்ணமல்லதை யெண்ணிலன் தந்தையை நினைந்தே
'புண்ணியா வுன திச்சையே புரிந்துன தடிக்கே
நண்ணுமாறெனக் கருளுவா'யென நவிலுவனே!

## மலைமீது உபதேசமும் விவிலிய விளக்கும்

பிணிகளைத் தீர்த்தான்; நெஞ்சப் பிசாசுக ளோட்டி, நல்ல
பணிகளின் றுணையி னாலே பாரெலா மறியப் பெற்றான்;
குணமலையானோன் ஓர்நாள் கூட்டமாய்த் தொடரச்சீடர்,
அணுகியோர் குன்றி னுச்சி அமுதவாய் திறந்திட்டானே!

இன்று மெந்நாளும் பூவிற் கிலங்கிடு விளக்குபோன்ற
தன்றவன் ஆர்த்த தோடு மப்புறமுகுத்த செஞ்சொற்
கென்றவ வணக்கமீந்தே யியம்புவன் விவிலியம்மென்
றென்றுமிவ்வுலகமேத்து மெழிலுடை மறையின் சாரம்!

## விவிலிய விளக்கு

உலகின் உயிகாள்! உயர்பொருள் உள்ளே
இலங்குங் கோயில்காள்! ஈசன் மைந்தர்காள்!'
எங்கணும் பரவும் இறைவன் அரசே
உங்களுக் கெய்துக! ஓங்குக இன்பம்!

என்றும் ஆன்மா இலகிடும் உண்மை
பொன்றும் போகமும் பொய்யுட லின்பம்
பேரின் பத்தையே பெற்றிட முயல்வீர்
பாரில் உடையூண் படைத்தவன் ஈவான்.

இருளை விலக்கித் தெருள்வழி சேர்மின்!
அருளும் அன்பும் அமைதியும் எய்துமின்!
திருத்தி யும்மைப் பொறுத்தே பிறரைக்
கருத்தை யுயர்த்திக் கவின்பெற வாழுமின்!

நம்பி யெவர்க்கும் நயந்தே யுதவுமின்!
வம்பும் போரும் வழக்குந் தவிர்மின்!
மற்றவர் தம்மை மதித்தே யன்பாய்
உற்றவர் போல வுலகிற் பழகுமின்!

பிறருமை யெப்படிப் பேண விருப்பத்
திறமே பிறரிடம் செம்மையா யிருமின்!
உறுதியும், அன்பும், உயர்ந்த பரிவும்,
இறைவன் இன்புடன் ஏற்கும் பரிசில்.

ஐந்தை யடக்கி யகத்தை விலக்கிச்
சிந்தையுஞ் செயலோடு செவ்விய தாக்கித்
தன்னயந் தவிர்த்தே யின்னலை விடுத்து
மன்னித் தன்பொடு மாண்புடன் வாழுமின்!

மலைக்குடில் போலும் வயல்விதை போலும்
நிலைக்கும் உறுதியில் நின்றே தழைமீன்!
அன்புளோன் முத்திற் கனைத்து மீவான்
விண்பெற வெல்லாம் விருப்புளோன் விடுவன்.

ஓதிச் சுருக்கமாய் 'உண்டிலை' என்றே
யாதின் மீதுமே ஆணையிட் டுரையேல்.
நாரியர் முயக்கை நலிப்பீர் மனத்தும்
பூரியர் உறவைப் பொய்யென நீக்குமின்!

பகைவருக் கன்பே பரிந்து காட்டுமின்!
மிகவுமைத் திருடின் மிகமிகத் தருமின்!
நண்பருக் கேயோர் நலஞ்செயல் வாணிபம்
துன்ப முழல்வோர் துணையே யாகுமின்!

வலதுகை யீதல் இடதறியாது,
உளத்தில் தூயராய் ஊங்கறஞ் செய்மின்!
மறைவில் உதவினும் மாண்பே புலனாம்
இரவிலுஞ் சர்க்கரை ஈயும் இனிப்பே

வாழிய சாந்தர் வையம் புரப்பார்!
வாழி முயல்வோர் வான்பய னெய்துவர்!
இரங்குவோர் வாழி இரக்கம் எய்துவர்!
வருந்திடுஞ் செய்யவர் வான்பெற் றிலகுவர்!

வாழியுள் தூயர் வரதனைக் காண்பார்!
வாழிசா துக்கள் கடவுள் மைந்தர்!
மனிதரின் கோளும் வசையும் அஞ்சேல்!
மனதழுக் குற்றுமை மற்றோர் ஏசுழி.

களமின்! பொறுமின்! காட்சியாம் விண்ணில்
ஒளிபெறும் பரிசே யுமக்கே யுளதோ!
அனபுடன் றந்தையென் றையனை யேத்தி,
''உன்மயம் உலகெலாம்! உன்கருத் தாகுக!

எம் ஊண் அளிக்கும் இறைவனே! பகைவர்
தம்மை மன்னிப்புபோல் எம்மை மன்னிப்பாய்!
பிறர்க்கு யாம் காட்டும் பீடுறும் பரிவை
எமக்குநீ காட்டவே இச்சை வகிப்பாய்!

ஆசையும் நோயும் அணுகா துளத்தில்
தேசுற வுன்றுணை திடமான மீவாய்.
தேவனே! தூயனே! எங்குந் திகழ்வோய்!
ஆவதும் அழிவதும் ஆள்வதும் உன்னால்!

உன்னதே யுலகு! உயர்படைப் பாட்சியும்
உன்ன தாற்றலில் ஓர் சிறி தாமே!
என்றுமுன் சக்தி வாழிய!'' என்றே
நன்றி செலுத்தி நலமுட னுய்மின்!

## வேறு

கரும்பை மொய்த்திடு மெறும்பெனக் கருத்தொடு, நெஞ்சத்
தரும் பசிக் கமுதாகிய ஐயனின் மொழியை
விரும்பிக் கொண்டனர் அன்பர்கள் விரிவுல குய்ய
வரும்புவாக்குடை யாற்றலை யளக்கவு மாமோ?

## ஏசுநாதரின் தேசுறு மொழிகள்

'என்றென தாவியும் ஈசன் ஆணையை
நன்றுறச் செய்திட நாடி வந்ததோ,
அன்றென தனைத்தையும் அவன்கை யீந்தனன்
இன்றிவர் பிடித்ததும் இறைவ னெண்ணமே.

பாரகர் செய்திடும் பல் லிடும்பைகள்
சீரிய தேகியைச் சிதைக்க வல்லவோ?
சோருடல் போயிடின் சோதி சேர்ந்திடும்
ஆருயி ருடலுடை ஆண்டவன் பதம்.

எந்தையின் கட்டளை யியற்ற வென்கறை
சிந்துதல் தன்னிலும் சீர்மை யாதுகொல்?
வந்ததென் வாய்மையும் வலிவு காட்டியே
சந்தத மாகிடுந் தருண மின்றரோ!

சாவினிற் பயமில்லை சட்டை மாற்றமே
சோவினில் துயரில்லை தூய ருக்கரோ
பூவெலா மீயினும், பொன்றி டாததாம்
ஆவியை விற்றலு மாண்மை யாகுமோ?'

இன்னல்செய் பகைவரே யிற்று சற்றினில்
மண்ணொடு தூசியாய் மங்கி மாய்வரே;
புன்னகை புரிந்ததைப் பொறுத்த போதகன்
மன்னுவன் றெவென மண்ணும் விண்ணுமே

ஆதலால் வலிவுள வஹிம்ஸையின் னறம்
ஈதலால் அறஞ்செய இனியதில்லையால்,
தீதனை விடுத்தறஞ் செய்குவீரெனப்
போதனை செய்துமே புனித னேகினன்

## அன்பர் போற்றல்

மரணத்தை வென்றவனே!
மன்னவனே! அன்புருவே!
தரணியுய்யப் பிறந்தவனே!
தாவீ தரசன் குலக் கொழுந்தே

கருணையுட னவதரித்தாய்!
காத்திடவே மெய்யறத்தை
அரணெமக்குன் திருவருளே
அறிவெல்லா மமர்ந்தவனே!

## வேறு

கோதறுங் குணமே யென்கோ! குவலயத் தொளியே யென்கோ!
போதமெய்ப் பொருளேயென்கோ! புண்ணிய குருவே யென்கோ!
யூதரின் அரசே யென்கோ! உயர்பெருந் தவமே! யாவி
பூதலமுய்ய வீந்த புனிதனே பொறையே யென்கோ!

நலத்தினைப் பழகிக்காட்டி நன்னெறித் தவத்தி லோங்கி
நலத்தினை மாந்தருய்ய நவின்றினை யன்பினாலே;
நலத்தினை யறியா மாக்கள் நவிலருங் கொடுமை செய்ய
நலத்தினை யறியக்காட்ட நல்கினை பலியா யுன்னை.

உன் பெயராலே யிந்த வுலகினி லுயிர்ப்போம்! நாங்கள்
உன் பெயராலே யுண்போம், உன்னருள் சிறக்க வாழ்வோம்,
உன் பெயராலே யெங்கும் உத்தமத் தொண்டு செய்வோம்,
உன் பனித் திறத்திற்கெங்கள் உழைப்பெலாம் ஈந்து வாழ்வோம்.

## வேறு

என்று பற்பல மாற்ற மியம்பினர்,
அன்பர் பற்பலர் ஆண்டவன் கட்டளைத்
தொண்டு பற்பல தொல்லுல கெங்கிலும்
விண்ட வாய்மை விளங்கிடச் செய்தனர்

## வேறு

மாண்புறு வாய்மைக்காக மனதுடலாவி யீந்தோன்
ஊன்நினை வகற்றிக் காம வுணர்வறும் வன்னியாகத்
தேன்மொழி வாய்மை காட்டித் திகழுவன் அமரனாக!
காண்கிலர் கொடிய புல்லர்; கருணையோன் என்று முள்ளான்

சிறுமனத் தழுக்கினாலே செல்வத்தின் செருக்கினாலே
பொறுமையே பூணு நல்லோர்க் கிடர்பல புரியும் புல்லர்
சிறை, கொலை, மானபங்கம் செய்குவர்; சிரிப்போடாங்கே
யிறந்தவர் சக்தி யின்னும் இருபது கோடி யாமே!

உலகமே சிலுவை; ஆன்மா உயர்பெரும் ஏசுநாதன்;
கொலை மனப் பாரகர்தாம் குவலய மாயை மைந்தர்;
கலகஞ்செய் சாத்தானுக்குக் கருத்தினை விற்றோர் செய்த
அளவிலாக் கொடுமை தாங்கி அமரவாழ் வெய்தினானே.



# 27

# சிலுவை நாதர் திருச்சரிதம்

ஆசிரியர் : எஸ். மோட்சக்கண் (1899 - 1982)

அறிமுகம் : சாமுவேல் தாசன்

இறைமைந்தர் இயேசுபெருமானின் வாழ்க்கை, தூய்மை மிக்கது; மாந்தரைத் திருத்தி அமைக்கும் பான்மை வாய்ந்தது. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இவ்வையகத்தில் வந்து முப்பத்தி மூன்றரை ஆண்டுகள் மட்டுமே வாழ்ந்து விண்ணுலகு சென்ற அண்ணல் இயேசுவின் அரியவாழ்வு எண்ணற்ற மானிடர்க்கு ஆன்ம விடுதலை வழங்கி இன்றும் அற்புதம் புரிந்து வருகின்றது.

இந்த மாபெரும் வாழ்க்கையை 'சிலுவை நாதர் திருச்சரிதம்' எனும் பெயரில் இனிய, எளிய, நயம்மிக்க கவிதைகளாக வடித்துத் தந்துள்ளார் ஆசிரியர், கவிஞர், திரு. எஸ். மோட்சக்கண் அவர்கள். எஸ்.எம்.கண் என்னும் பெயரில் அறியப்பட்ட எஸ். மோட்சக்கண் அவர்கள் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள மேலச்சந்தையடி ஊரைச் சார்ந்தவர். பள்ளி ஆசிரியராகப் பணியைத் தொடங்கிய இவர் திருப்பணியாளராகவும் தொண்டாற்றினார். மயிலாடியில் ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் ரிங்கல்தௌபே வேதமாணிக்கம் நினைவுப் பேராயக் கன்வென்ஷனின் செயலராகவும், மேலச் சந்தையடி சபையின் செயலராகவும் பல ஆண்டுகள் தொண்டாற்றினார். வயலின் வாசிப்பதில் வல்லவர். கதாகாலட்சேபம், ஆலய ஆராதனை, எழுப்புதல் கூட்டம் ஆகியவற்றில் வயலின் மூலம் செய்தி கொடுப்பது இவரது வழக்கம். கர்நாடகச் சங்கீதங்களைச் சபை மக்களுக்குப் பயிற்றுவித்தார். யோனா, நாகமான், எலியா ஆகியோரின் வரலாறுகளையும், கிறிஸ்து பிறப்பினையும் கதாகாலட்சேபமாக இயற்றி வழங்கி மக்களின் செல்வாக்கைப் பெற்றார். கீர்த்தனை இயற்றும் வரமும் பாடும் வரமும், இசை ஞானமும் ஒருங்கே பெற்ற மோட்சக்கண் ஏராளமான பாடல்களை இயற்றியுள்ளார்.

'சிலுவைத் திருமொழிப் பதிகம்', 'வேத விடுகதா மஞ்சரி', 'கிறிஸ்து அவதாரக் கும்மி,' 'யோனா கதாகாலட்சேபம்', 'குலம் காத்த கோதை' (இது அச்சிடப்படவில்லை) முதலிய அரிய நூல்களை எழுதி கிறிஸ்தவ உலகில் நன்கு அறிமுகமான இக்கவிஞரின் நெஞ்சத்தடாகத்தில் மலர்ந்துள்ள மற்றொரு கவிதைமலர் 'சிலுவை நாதர் திருச்சரிதம்' என்னும் இச்சிறு காப்பியம்.

## புலமை மரபு

தமிழகம், புலமைச் சான்றோர் பலரை உலகுக்கு வழங்கிப் பெருமை கொண்டது. நினைப்புக்கு எட்டாத நெடுங்காலத்திலேயே தோன்றி இடையறாது தொடர்ந்து வருவது தமிழ்க்

கவிஞர் பரம்பரை. அப்பரம்பரையில் தோன்றியவர் திரு. எஸ். மோட்சக்கண் என்பதை அவரது கவிதைகள் காட்டுகின்றன. மறைந்து வரும் பண்டைத் தமிழ் இலக்கிய மரபைக் கட்டிக் காக்கும் திறன் அவரது கவிதைகளுக்கு இருக்கின்றது என்பதை எளிதில் உணர முடிகின்றது. இந்தத் திருச்சரிதத்தின் கவிதைகள் சிலவற்றில் தேவாரத்தின் சாயலும், பலவற்றில் கவிகுல ஞாயிறு கம்பனின் பாமணமும் பரிமளிக்கின்றன. தமிழ் மரபு வடிவக் கவிதைகளில், கிறிஸ்தவம் புதுமை பெற்றுப் பொலிவதை இந்நூலில் காணலாம். இதன் சிறப்புக்கள் சிலவற்றை இனிக் காண்போம்.

## தொடை நயம்

எதுகையும் மோனையும் இன்னபிற தொடை விகற்பங்களும் கவிதைக்கு எழிலூட்டும் உறுப்புக்களாகும். இந்த நூலில் அவை இயல்பாய் அமைந்து இனிமையும் எழிலும் ஊட்டுகின்றன. சான்றாக ஒன்று மட்டும் காண்போம்:

*"மல்கும் காரிருளில் உழல்மாந்தர்க் கிவர் ஒளியாம்*
*நல்கும் ஆரணத்தின் நலம்நாடிய சீர்மொழியாம்*
*அல்கும் ஆத்துமத்திற் கருமாக்கம் தரும்வழியாம்*
*ஒல்கும் மீட்பருளும் உயர்ஊற்றெனும் பேரளியாம்"*

## நடை நலம்

ஆற்றொழுக்குப் போன்ற அரிய மொழிநடை அமையப்பெற்ற இதன் செய்யுட்கள் சில இடங்களில், குன்றின்மீதிருந்து குதித்துப் பாயும் அருவிபோன்றும் வேறு சில இடங்களில் கலகலவென இளநகை குலுங்கிடச் செல்லும் சிற்றோடை போன்றும், பலவிடங்களில் பொங்கிப் புரண்டு புதுமிடுக்குடன் செல்லும் காட்டாறு போன்றும் பாய்ந்து ஒழுகிச் செல்கின்றது. கவிவேந்தன் கம்பனின் வீறுபெற்ற நடையை நம் நெஞ்சில் தோற்றுவிக்கும் பாடல் ஒன்று காண்போம்:

*"நீடுமொருதலை ஓடுநிகருறு மேடுமருவினர் கடிதாக*
*வீடுதருமுயர் வேதன்உலகினர்க் கீடுசெயமுறை வெளியாக*
*நாடுபவப்பலி ஆடுநவையுறக் காடுபுகவிடும் நலம்போல*
*பாடுஎனு மருங் காடு படர்ந்தனர் பாவமழித்திடப் பரிவாலே"*

வல்லெழுத்துக்களின் அழுத்தத்தால் வன்மையுற்று ஒலிக்கும் இச்செய்யுள் கிறிஸ்து பெருமானின் சிலுவைப் பாடுகளை நம் நெஞ்சில் பதிக்கின்றது.

## அணிச் சிறப்பு

கவிதையின் வனப்பு அதில் இடம் பெற்றுள்ள உவமை, உருவக அணிகளால் அமையும். இக்காப்பியத்தில் கவிஞர் கையாண்டுள்ள உவமைகள் - உருவகங்கள் - நம் உள்ளத்தைக் கவர்கின்றன.

இறைமைந்தர் இயேசு, இவ்வுலகோர்க்குக் கூறும் நற்செய்தி பொன்மலர் நறுமணம் பெற்றமைக்கு நிகர் என்கின்றார்.

*'பொற்புறக் கூறும் பொலி சுவிசேஷம்*
*பொன்மலரோடு மகிழ் மலர் நேராம்'*

என்பது கவிதை.

யூதாஸ் என்னும் சீடன் இயேசு நாதரைப் பகைவர்க்குக் காட்டிடும் வேளையில் ஈந்த முத்தத்தை 'நெருப்பு' என்கிறார்.

*'எத்தன், ரபி என்றே தருமுத்தம் அழலாமே'*

கிறிஸ்து பெருமான் சிலுவை சுமந்து கல்வாரி நோக்கிச் செல்கின்றார். எருசலேம் நகரத்து மகளிர் நீர்சோரும் கண்களுடன் அழுது புலம்பி அவரைத் தொடர்கின்றனர். இந்தத் துயரக்காட்சியினை எழிலோவியமாக்கித்தரும் கவிதை பின்வருமாறு :

*''நேயமெனுஞ்சுனை ஊறுசலமதின் நீர்மைசுவைத்ததின் உணர்வாலே*
*தூயனுரைமது நாடி நுகரளி தோயும் சுகுணருள் நெறியாலே*
*மாயமறநகர் மாதர் விழிப்புனல் மாலை முடித்தவர் பிறசாலே*
*தாயகலத்தொடர் சேயின் துயர்மிகத் தாமலறியழு துழல்வாரே''*

இயேசு நாதரின் நிறை அன்பினைச் சுனை நீருக்கும், அவரது அருள் மொழிகளைத் தேனுக்கும், அதனைச் செவிமடுக்கும் மாந்தரை வண்டுகளுக்கும், மாதரின் விழிப்புனலை மாலைக்கும், இயேசுவைத் தொடரும் மகளிரைத் தாய்க்குப் பின்செல்லும் சேய்களுக்கும் ஒப்பிட்டுக் கூறியுள்ளமை, என்றும் நெஞ்சைவிட்டு நீங்காத இலக்கியச் சித்திரமாகும்.

இத்தகைய பொருத்தமான உவமைகள் ஆங்காங்கே இடம் பெற்றுக் கவிதைக்கு உயிரூட்டுகின்றன.

### இலக்கிய உத்திகள்

கவிதை பாடுவதற்கு எடுத்துக்கொண்ட பொருள் எதுவாயினும், அதைப் படைத்து அளிக்கும் முறையே நூலின் வெற்றி தோல்விக்குக் காரணமாகின்றது. இந்த அமைப்பு முறையை 'இலக்கிய உத்தி' என ஆய்வாளர் இயம்புவர்; அவற்றைப் பலவாறாக வகைப்படுத்திக் காட்டுவர்.

நமது புலவர், தம் காப்பியத்தின் கருவாக எடுத்துக்கொண்ட பொருள் புனிதர் இயேசுவின் புண்ணிய வரலாறு. விவிலிய நூலில் நான்கு வேறு ஆசிரியர்களால் நயமுற எடுத்துக் கூறப்பட்ட இவ்வரலாற்றை, வகுத்தும் தொகுத்தும் எழில்படப் புனைந்து காட்டியுள்ளார்.

ஆதியோடு அந்தமாக அனைத்துச் செய்திகளையும் கூறாது, தேவையான பகுதிகளை மட்டும் விளக்கி உரைத்துவிட்டுப் பிறவற்றைக் குறிப்பாக உணர்த்திச் செல்கின்றார்.

இயேசுநாதர் நிகழ்த்திக்காட்டிய அற்புதங்கள் முப்பத்தி மூன்றினையும் இரண்டே செய்யுட்களில் தொகுத்துச் சுட்டி, மனப்பாடம் செய்யும் மாணவர்க்குத் தொண்டு செய்துள்ளார்.

இவை போன்றே, இயேசுநாதர் மொழிந்துள்ள அறுபத்தி மூன்று உவமைகளையும் ஒரே செய்யுளில் தொகுத்துச் சுட்டிப் பின்னர் தொடர்ந்து வரும் செய்யுட்களில் அவற்றை வகுத்துக் காட்டுகின்றார்.

*"அற்புத னோது பொற்புவமைகள்*
*அறுபதுடன் மூன்றென அறிவீரே*
*விற்பன ஈர்பத்தைந்து மத்தேயு*
*விளம்பிட மாற்கேழறைந்திட லானார்*
*சற்குணவைத்தியன் இருபதோடைந்து*
*தகவுறும் யோவான் பகர்ந்தனனாறு*
*பொற்புறக் கூறும் பொலிசுவிசேஷம்*
*பொன்மலரொடு மகிழ்மலர் நேராம்"*

இவ்வாறு வருகின்ற அமைப்புக்கள் திருமறைக் கல்வி பயில்கின்றவர்க்கு மனப்பாடம் செய்யத்தக்கவையாகும்.

## உள்ளத் தெளிவு

'உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்' எனக் குறிப்பிட்டு, உயர் கவிஞரின் இயல்பினைப் புலப்படுத்துகின்றான் பாரதி. இந்த அடிப்படையில் சிலுவை நாதர் திருச்சரிதத்தை ஆழ்ந்து நோக்கினால், ஆசிரியரின் உள்ளத்து உண்மை ஒளி, அவர்தம் வாக்கினில் பளிச்சிடுவதைக் காணலாம். மாந்தரைப் பற்றிக் கவிஞர் குறிப்பிடுகையில்,

*'பொய் யாக்கையை மெய்யெனும் பித்தர்'*

என வரைந்துள்ளார். மாந்தர் இயல்பு பற்றிய கவிஞரின் மதிப்பீடு இது.

கிறிஸ்தவ சமய உலகில் குழப்பத்திற்கும் குதர்க்க வாதத்திற்கும் இடமாகியுள்ள ஒன்று திருமுழுக்கு (ஞானஸ்நானம்) ஆகும். திருமுழுக்கினை எவ்வாறு பெறுதல் வேண்டும் என்பது பற்றி முரண்பட்ட பல கருத்துக்களைக் கூறிக்கொண்டு கிறிஸ்தவர் இன்று பிரிந்து வாழ்கின்றனர். இந்தக் குழப்பத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பதுபோல், தெளிவான தமது கருத்தை ஆசிரியர் ஒரு செய்யுளில் கூறியுள்ளார். கவிதை இதுதான்:

*"பூர்வ அனுசாரந்தான் அது; புனிதமாக்கும் சால்பினது*
*நேர்வர் நீதிநிறை வேற்றிடுமா நியமமாக; தாட்சியிலாச்*
*சீர்மை மேவும் ஆசீர்வாதம் சேரக் கைக்கொண்டாரிதனை*
*ஆர்வர் மூழ்கல், தெளித்தாலே ஆங்குறும் காலநிலைக்கேற்ப"*

இந்தச் செய்யுளுக்கு ஆசிரியரே உரை எழுதியுள்ளார். அது பின்வருமாறு :

திருமுழுக்கு , இது ஒரு பழைய ஆசாரம்; சுத்திகரிக்கும் தன்மையதாம்; நீதி நிறைவேற்றும் கடமையாய் இதனை மக்கள் கைக்கொண்டனர். இதனால் சிறப்பான ஆசீர்வாதம் ஏற்படும் என்பது எதிர்பார்ப்பு. தண்ணீரில் மூழ்கியும், தண்ணீரைத் தெளித்தும் கால நிலைக்கேற்ப அனுசரித்தனர்.

இன்றைய கிறிஸ்தவ உலகில் குழம்பித் தவிப்பவர்கள் மனங்கொள்ளத்தக்க மாண்பமைந்த விளக்கம் இது. கவிதையின் ஈற்றடியாகிய - 'ஆர்வர், மூழ்கல் தெளித்தலாலே ஆங்குறும் காலநிலைக்கேற்ப' என்னும் தொடர் ஆசிரியரின் சிந்தனைத் தெளிவிற்கும் சீரிய புலமைக்கும் சிறந்த எடுத்துக்காட்டாகும். இனியேனும், இதுபற்றி மாந்தர் குழம்பாமலிருப்பார்களாக.

இதனைப் போலவே, 'இறையரசு' 'ஆன்மா' ஆகிய அரிய பொருள் பற்றிய பின்னிணைப்புச் செய்யுட்களும், கிறிஸ்தவ உள்ளங்களுக்கு விழிப்பையும் தெளிவையும் ஊட்டும் என்பதில் ஐயம் இல்லை.

## நிறைகளின் நடுவே ...!

சிறந்த ஓர் இலக்கியத்திற்கு உரிய அனைத்துப் பண்புகளையும் கொண்டிலங்கும் இச்சிறு காப்பியத்தில் சுட்டிக் காட்டிட வேண்டிய சிறு குறையும் ஒன்று உளது.

ஆசிரியர் வடசொற்கள் பலவற்றைத் தயங்காது வழங்கியுள்ளார்.

சூட்சம், தீட்சை, எஜமான், சுவிசேஷம், புஷ்பம், பட்சி, அஸ்தமனம், ஸ்நானம், நிஜம், சூட்சுமம், தோஷி, சூட்சித்து எனும் இத்தகைய சொற்கள் காப்பியத்தில் கலந்து வரும் வட சொற்களாகும்.

கம்பரும் பிற புலவரும், பாரதியும் கூட தம் கவிதையில் எண்ணற்ற வடசொற்களைக் கலந்துள்ளனர். இதனைக் குறை எனக் கருதுவோரும், மறுப்போரும் இலக்கிய உலகில் அன்றும் இன்றும் உண்டு.

நமது புலவர் வடமொழிச் சொற்களைக் கையாண்டுள்ளமைக்குக் காரணம் உண்டு. இவற்றுள் பல தமிழ் விவிலிய நூலில் பயின்று வரும் சொற்களாகும். கிறிஸ்தவ உலகிற்கு மிகப் பழக்கமான சொற்கள் இவை. எனினும் இக்காப்பியத்தினைப் படிக்கும் பிற சமயத்தவர், அதிலும் மொழித் தூய்மையை விரும்புவோர், ஒருக்கால் இச்சொற்களால் இடர்ப்படலாம்.

நாம் வாழ்கின்ற காலம் மொழித்தூய்மையை மிகப்போற்றும் காலமாகும். எனவே, இக்காலத்தில் வெளிவரும் இலக்கியம் தூய்மையான மொழி நடையில் அமைய வேண்டும் என்று எதிர்பார்ப்பது நியாயமானதே.

எனினும், மதியிடைக்காலும் மறுப்போல் மட்டுமே இக்குறை அமைந்துள்ளது. மதியின் மறுவுக்கு அதன் தூய தண்ணொளியை மங்கச் செய்திடும் திறன் இல்லை அல்லவா? அதுபோல் இக்காப்பியத்தின் சிறப்புக்கு இவ்வட சொற்கள் தடையாக அமைந்திடாது என்பது எமது நம்பிக்கை.

> "குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
> மிகைநாடி மிக்க கொளல்"

என்பது வள்ளுவர் வரைந்துள்ள சட்டம். இதன்படி நோக்கினால், ஒவ்வொரு குற்றத்தையும் புறந்தள்ளிவிடும் குணங்கள் எத்தனையோ இந்நூலில் நிறைந்துள்ளன.

வளர்ந்து வரும் தமிழ் இலக்கியச் சோலையில் மலர்ந்துள்ள ஒரு புதுமலர் சிலுவை நாதர் திருச்சரிதம், தமிழ் இலக்கிய உலகிற்கு கிறிஸ்தவம் வழங்கிய ஒரு கருவூலம்.

# சிலுவை நாதர் திருச்சரிதம்

## காப்பு

## விருத்தம்

அன்பினை ரூபமாக்கி தேகியாக்கி
மன்னுரு மாணத் தாங்கி மாமறைப் பாதை காட்டி
இன்னுயிரீந்து பெற்றே ராசனாய் ஞாலமீட்கும்
உன்னத தேவ தேவன் ஓதரும் பாதம் காப்பு.

1. அன்பா முன்னதனே! அருளானந்த மார் சுதனோய்
வன்பார் ரட்சை செய்ய மனமா மகிழ் கொண்டனரே
முன்பால் நன்னயமாய் மொழி மூதுணர்வின் முனிவர்
பொன்போல் பன்னுமுரை நலம் போற்ற நினைத்தனரே

2. விண்ணாட் டிங்கிதங்கள் பரமேன்மையதாம் சுகங்கள்
உண்ணாட்டங் கொளாதே உலகோர் தமின் மாநலங்கள்
கண்ணோட்டங் கொள்வே மரி காதல் மிகுமகவாய்
மண் மீட்பிங்கெழிலாய் வரமாண்புடனே எழுந்தார்.

3 மல்கும் காரிருளில் உழல் மாந்தர்க் கிவர் ஒளியாம்
நல்கும் ஆரணத்தின் நலம் நாடிய சீர் மொழியாம்
அல்கும் ஆத்துமத்திற்கரும் ஆக்கம் தரும் வழியாம்
ஒல்கும் மீட்பருளும் உயர் ஊற்றெனும் பேரளியாம்.

4 நன்மையே புரியும் குருநாதன் மனுக்குலத்தின்
புன்மையே அறுக்க மனப்பூர்வமாய் எழுந்தார்
தொன்மை யூதர்களின் தொகை தோன்றாச் சடங்குகளின்
தன்மை தெள்ளியதாய் அறைந்தாதிபனார் உறைந்தார்.

5. தப்பா வாய்மையினால் மிகத் தண்ணிய சீர்மையினால்
எப்பாலும் வழுவே சொல ஏதிலை : நாட்கடரின்
இப்பார் ஈங்கிவன் பால் செலும் : ஏதம் விளையுமெனும்
கைப்பே மிஞ்சியதால் கொலக் காதகர் தாம் நினைந்தார்.

6. தம்பா ரம்பரி யங்களின் தப்புகள் ஒப்புக் கொள்ளார்
நம்பார் உம்பர் சொல்லும் திருநாளதின் நன்னயங்கள்
வம்பாமென்பர் இவர் பிதாவானவன் என்னுமுரை
தம்பாலே மருவும் மாயத் தன்மையும் கேட்டிகர்வார்.

7 சொற்போர் கொண்டிளைத்தார்; பினும் சூதுடனே தொடர்ந்தார்
கற்போர் போல் நடித்தார் ` ஐயன் கண்டித்து வாயடைத்தார்
நற்போதம் தவறிக் குரு நாதனுயிர் முடிக்க
கற்போர் தந்திடவே மனம் காய்ந்திடினும் அயர்வார்.

8. மெய்யன் தன்னுரையின் தனிமேன்மையின் பான்மையினால்
வெய்யோர் மையிருளின் மலி வேளையும் வாய்ந்ததினால்
பொய்யார் சான்று சொலச் சில புல்லரைத் தேர்ந்தனரே
நொய்தாம் சீடனுமே வழி நூவவும் சார்ந்தனனே.

9. பொல்லார் சொல் மயக்க ஒளிர் போதமில் மாந்த ரெல்லாம்
வல்லார் வாய்ப் பிறப்பே சொல்லி வானுற ஆர்த்தனரே
நல்லான் போல் நடித்தே யூதாஸ் நாதனைக் காட்டி விட்டான்
அல்லாரும் பொழுதே வளைந்தாதிபனைப் பிடித்தார்.

10. சர்வாதிக்கமெல்லாம் தமதாயதென்றே துணிந்தார்
துர்வாதஞ் சொலியே இன்னே தூக்கிடு மென்றிசைத்தார்
நிர்வாகஞ் சிதைந்தே துரைநீர் கொலுமென்றுரைத்தான்
சர்வேசன் மறிபோல் உரை சாற்றிடாதே சிறந்தார்

## (வேறு)

11 விண்ணோர் பதவி அண்ணல் விளை வெண்ணா நரர்க்காக
உண்ணோவுந்த ஒன்னார் கரம் உற்றார் அளியாமலே
மண்ணோர் பலம் மாய்க்க வென்றே மாவேந்தனும் தாழ்ந்தார்
கண்ணோர் கலுழ்ந் திப்பார் ரட்சைக் காகத் தமை நேர்ந்தார்

12 மாறாப் புண்ணீர் ஆறாயினும்மாறார் மனம் வெய்தாய்
ஊறாய் உடல் கூறாயினும் ஓதார் உளம் நொய்தாய்
தூறாய்பவர் பேறாய் உருதோன்றாச் சிதைவாயும்
சீறார் : நகை கூறார் : இவர் சீரார் உளரையா?

13. தீதே புரி யூதாஸ் பகைத் தேரான் நிகரானார்
வாதேபுரி வேதாரியர் மா தோஷிகளானார்
கோதே புரி தேவாலயக் கோமான்களும் மாறாய்ச்
சூதே புரிந்தே தாம் மிகச் சோ காப்பவரானார்.

14. கையார்த்தனர் : வெய்யோர் மொழி காதார்த்தது அம்மா!
மெய் சார்ந்தகம் போற்றார் செயல் காலார்த்தது அம்மா!
மெய் வேர்த்தறியேனானெனும் வீறாப்புரை எம்மான்
ஐயார் விழி பூட்டா நிலை ஆனா அருளம்மா!

15. எந்தன் ரபி என்றே தருமுத்தம் அழலாமே
சித்தர் ஒரு மித்தே அகல் தீயார் கனலாமே
தித்தன் கன்னமொத்தல் ஒளிர் தீயின் கொடி தாமே
பித்தர் செயலொத்தே பகை பேசல் எரியாமே

16. ஞானச் சமாதானத் திரு நாதற் கெதிராக
கோனுக்கிறை ஈதற் கெதிரிற் கூறித் திமிராக
தானெத்திய யோகத் தருஞ்சாலன் கலிலேயர்
தானத் திகலே வைத்தவன் தாமென்றிசைத்தாரே.

17 நன்றிங்குறும் ஏரோதிடம் நாடுமெனலானான்
சென்றங்குற நானிங்கிவன் சீர்மை விழிக் கொள்வேன்
என்றங்கவன் கேட்கச் சுதன் பதில் கூறார்
மன்றத்தும் ஓரிக் குணம் மன்னன் அறிவாரே.

18 ஒவ்வாமையின் செவ்வாடையும் ஊறும் தரலானான்
இவ்வாறவர் மீளவே பிலாத்தும் மனைத்தூதால்
எவ்வாறிகல் மாய்ப்பேன் என எண்ணாததும் வேர்த்தான்
துவ்வாமையின் சொற்றார் எனச் சூழ்வான் மயலாலே.

19 முள்ளின் முடிசூடி முளைக்கோலொன்று கை ஈவார்
விள்ளென்று கண்மூடி விளைவோரார் குட்டுவாரே
எள்ளி நகையாடி யூத ஏந்தல் வாழ்கென்பாரே
உள்ளன்பில்லா ஒன்னாரெல்லாம் காறி உமிழ்வாரே.

## (வேறு)

20. மூசு மறியென மோசமறிகிலா மூர்க்கர் எழுப்பிய குரலாலே
ஆசு எமக்கில்லை பேசு முமக்கென ஆளும் துரைகரம் துடைத்தானே
வீசு பழியெமையே சுமர்கவென வீணர் குலமழி விழைவாலே
மாசுபடர்பர பாசை விடுத்தவர் மாய்க்க யேசுவை விடுத்தானே.

21 தாரணியினலம் நாடி நரரவதாரமுறுமுயர் அவதாரி
பாரச் சிலுவையினோடு கரடுறு பாதை நனி கடந்தெரு சாலை
சாரலிசையுக பால தலமிசை காதலுறு புவர் பலியாக
சோரருடனுடல் சோர நடந்ததி சோகமுற நகர் கடந்தாரே.

22. தேவ திருச்சுதன் நாச உலகினைத் தேடிவரும் பவப் பரிகாரி
ஆவலுடன் தமதாடுகளுக்குயிர் ஆர்வமுறவருள் உபகாரி
ஜீவநதி நரராக முதயமதாகச் செய்பவரும் திருவாரி
ஜீவனுதவியே சேவை செயக் குருசேறக் கொலுவுற நடந்தாரே.

23. நேயமெனுஞ் சுனை ஊற சலமதின் நீர்மை சுவைத் ததினுணர்வாலே
தூயனுரைமது நாடி நுகரளிதோயும் சுகுண நன்னெறியாலே
மாயமற நகர் மாதர் விழிப்புனல் மாலை முடித்தவர் பிறகாலே
தாய கலத் தொடர் சேயின் துயர் மிகத் தாமலறியழு துதல்வாரே

24. சாலதுயர்க் கடலாழ்ந்து நலி எருசாலை நகரெழில் மகளீரே!
கோலமிது குறித் தாவி விடுவதேன் கோரதசை வரும் கனல் போல
ஞானமிசையதுபோல இடரொரு நாளும் மருவுவ திலையாலே
சீலமுறுமுயர் சேயருடனுமக்காக அழுமென அறைந்தாரே.

25. சூதுபொருவதிலே நிபுணரெனச் சூழ வருபவரொரு சாரார்
கோது புரிவதற்கீது இடமெனக் கூடி வருபவரொரு சாரார்
தீது விழிக்கொழு மாவல்தணிதரச் சேருங் கொடியர்களொரு சாரார்
ஊது குழலென ஓதுமுறை சொலி ஓலமிடுபவரொரு சாரார்.

26. நீச இயல்புறு வீரர் துடிநடை நேர்க எனப்புரி இடராலே
பேசரிய பல பாடுமலிதரப் பீடை பெருகிய நலிவாலே
ஊசலுறுவது ஓர்ந்தங்குறு சிமியோனைக் குருசது கொடுபோக
ஏசலுடனவர் ஈர்க்க இது நமதீசன் செயலென இசைந்தானே

27 நீடுமொரு தலை ஓடு நிகருறு மேடு மருவினர் கடிதாக
வீடு தரு முயர் வேதன் உலகினர்க் கீடு செயு முறை வெளியாக
நாடுபவர் பலி ஆடு நவையுறக் காடுபுக விடும் நலம் போல
பாடு எனுமருங்காடு படர்ந்தனர் பாவமழித்திடப் பரிவாலே

28. பாரக் குருசினில் சேரக் கூவியே பாதகரும் மிக வசையாக
சோரிடையவர் சார உயர்த்தினர் தோஷி எனுமுறை நிறைவாக
கோரமிது விழியாரப் பகலவன் கூசி மறைந்திட இருளார
ஆரணனுமிருளீர அருண் மொழி ஆகமுறநனி நவின்றாரே.

29. மேவிக் குருசினில் ஆவி உதவியே மேலை உரையது நிறைவேற
பாவி நிகர்தரத் தாவி உயிர்விடு பரம கருணையை உணராது
கூவி நவையது தூவிக் களி கொளும் கோர மனுதுறுங் கொடுயீரர்
தீவிரமுடனே ஆடை பகிர்தரச் சீட்டிட்டவர் மறை நிறைவாக.

30. வானபரன்சுதன் தானெ னவே இவன் மாண்டநரர்க் குயிர் அளித்தானே
தானமரனெனத் தான மறிதரத் தாள இறங்கிடல் அரிதாமோ
ஈனனிவண் நரர்க் கான பிணையெனில் ஈசனுவனுரைக் கிரங்காரோ
மோன நிலையை நிதான முடனெனார் மோடமிதுவென உரைத்தாரே.

## (வேறு)

31. சொற்றவாறுயிர் ஏகவும் மிகச் சோகமுற்றுடனம்புவி
துடித்ததிர்ந்தது : சூழ்ந்த கல்லறைகள் பிளந்தன. கல்லறை
உற்ற மாபரி சுத்தரிற் பலர் நற்றவர் விழிப்பட்டனர்
உனதரும்படி உற்றவாறென உள்ளங் கொண்டிட தக்கதாய்
அற்றமே யிருந்தாலயத்துறு மம்படாங் கிழிந் திற்றது
அருகு நின்றிடும் நூற்றுக் காதிபன் அந்நிகழ்ச்சிகள் யாவையும்
முற்ற ஓர்ந்து மெய்யாகவே இவர் தேவனின் சுதன் என்னவே
மொழிந்த சீரினை ஆய்ந்தவர் பதம் முத்தி செய்திடலாகுமே.

32 வைதிகப் படி ஓய்வு நாளினில் வன் மரத்துடல் வைப்பது
வழக்கமன்றதால் காலேலும் பொடித் தாவி மாய்த்திட வேண்டியே
கைதியர் தமின் கால் முறித்திறை கண்ணுற்றோரிகல் வீரனும்
கடிதிலே உயிர் நீங்கிற்றோவெனக் கண்டறிந்திட நாடியே
கைதிகழ் தருமீட்டியை விலா வோட்ட நீருடன் சோரியும்
கவிழக் கால் முறித்தில்லார் · ஆரணம் கூறுமாறு முற்றாயத
னைத் திடம்படக் கண்டான் சாட்சிய ஈசன் யேசெனல் திண்ணமாம்
தவறாதே மறை : தாங்கள் குத்தினோர் தம்மை நோக்கிட வேண்டுமே.

33. நன்றியாலரி மத்யா யோசபு நாதன் மானுடல் பெற்றுமே
நனி சிறப்புடனாங்கோர் கல்லறை வைத்தடக்கினான் ஆர்வமாய்
வென்றி என்றவன் சீடர் மாற்றியே விள்ளுவாருயிர்த் தாரென
விரைவாய் வீரரைக் காவல் செய்கென யூதர் மன்னனை வேண்டவே
சென்றிசைவன செய்மினென்ற வாறிட்டாராங்கவர் முத்திரை
திருமொழிப்படி மூன்றாம் நாளதி காலை ஈசனெழுந்தனர்
வன்றிறல்கெழு தூதன் கல்லினை மாற்றியாங்கமர்ந்தானதால்
மயங்கி வீரரும் வீழ்ந்தாராரெதிர் நிற்பார் கூறுமின் நேயரே

34. அன்பு ஏவிட வாரத்தின் முதனாளின் நல்லதிகாலையில்
அணுகும் நாரியர்கந்த வர்க்கமிடற்கு மூடிய கல்லினை
முன்புரட்டிட ஆளின்றேயென ஏங்கி அங்குறுங்காலையில்
முன்னடுங்கிட வெண்ணுடையுடை விண்ணோன் கல்லினை மாற்றிய
தன்புறத் திருந்தஞ்சீர் . அண்ணலிங்கிலை; முன்புரை செய்த நேர்
ததியே தாமுயிர்த்திட்டார் காணுமின் : சென்றே கூறுமின் சீடருக்
கின்பு மேவிடச் சொல்கவே கலிலேயா நாதரங் கேகிறார்
என்ன மாதர கன்றாரேங்கியே : ஏகிடாள் மரியாளுமே.

35 ஏங்கினாளயல் கண்ட மாந்தனைப் பூங்கா காவலன் என்றுள்ளி
எடுத்தீரோவென தாத்ம நேசரை : யாண்டு வைத்துளீர் என்னவே
ஆங்கவர் மரியாளே என்றிட ஆர்வமாய் ரபூனியென்றாள்
அமலன் · நீயணுகாதே யான் பிதாவண்டை சென்றிலன் · நீமகி
ழோங்க சீடருக்கையன் தம்பிதாவண்டை செல்கிறாரென்றுமே
உரைப்பாயென்றவா றேநவின்றனர் : உற்றவற்றினால் நெஞ்சம
தேங்கி மீண்டிடு மங்கயைர் களி ஏத்தக் காட்சியளித்தனர்
தெளியக் கல்லறை சென்றுபே துரு சீரெலாம் விழிக் கொண்டனன்.

36 அத்தன் பேதுருவோடெமா செலும் சித்தரோடு தொமாவிலா
தகம மர்ந்திடுஞ் சீடர்க்கும் பதினோர் வாக்குத் தமைக் காட்டினர்
ஒத்து மீன்பிடித் திட்ட போதிலும் உற்றமாமலை மிதிலும்
உறுயாக்கோபுடன் உரிய சீடரெலார்க்குங் காட்சியளித்தனர்
மித்துருக்களைஞ் நூற்றுவர் தமக்கும் பெத்தானியா சேர்ந்தவர்
வியந்து போற்றிட வாசீர்ந்துமே விண்ணிலேகினர் அண்ணலும்
உத்தமத்துடன் சீடர் நாதனின் சித்தம் செய்து மகிழ்ந்தனர்
உனதன் பாதமலர் பணிந்துயர் உலகமெய்திட வாருமே



# 28

# மேரி மக்தலேனா

**ஆசிரியர் : ச.து. சுப்பிரமணிய யோகி (1904 - 1963)**

**அறிமுகம் : கே.கே. சுந்தர சோபித ராஜ்**

*சுப்பிரமணிய யோகி (30.11.1904 - 24.7.1963) சேலம் மாவட்ட சங்ககிரியைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இக்கவிஞர் ஒன்பது வயது முதலே கவி பாடலானார். இவரது கவிதா குரு சிறிய தந்தை பாலபாரதி வெங்கடேச ஐயரே இவருக்கு ''பாலபாரதி'' என்ற பட்டம் சூட்டியவர். பள்ளியிறுதிப் படிப்பை முடித்த இவர் 1921 இல் நீலகிரி காவல் துறையில் பணியாற்றினார். காந்தியடிகளின் கட்டளைப்படி காங்கிரசில் சேர்ந்து வைக்கம் போராட்டத்தில் பங்கேற்றுச் சிறையில் இருந்தார். மாணவராய் இருக்கும் போதே ''தேசபக்த கீதம்'' என்ற சிறுகவிதைத் தொகுப்பினை வெளியிட்டார்.*

*பல்துறை வல்லுநரான இவர் தமிழ், வடமொழி, ஆங்கில அறிஞர். இவர் சோதிடம், எண்குறி, இசை, இரேகை, சாத்திரம், சாமுத்திரிகா லட்சணம், மந்திரம், தந்திரம், பரதம், கூத்து, இதழியல், திரைப்படம், அறிவியல், தத்துவம் ஆகிய அனைத்திலும் சிறந்தவர். தொட்ட துறை ஒவ்வொன்றிலும் தன் தனி முத்திரையைப் பதித்த மேதை.*

### கவிதைப் படைப்புகள்

*தமிழ்க்குமரி, அகல்யா, மேரி மக்தலேனா, காமினி, காதல் மலர்கள், முருக காவியம், கதையைக் கேளடா (நாட்டுப் பாடல்), புது வாழ்வு, பவானி (ஐந்தாண்டுத் திட்டம் பற்றிய குறவஞ்சி நாடகம்), நவபாரதக் குறவஞ்சி, கொங்கர் குறவஞ்சி முதலியன இவரது கவிதைப் படைப்புகள் ஆகும்.*

*இவர் கவிதை உட்பொருள் கொண்டது; அமைதி தவழ்வது; வேகம், வேதாந்தத் தெளிவு, வீரம் மிக்கது. பாரதி பரம்பரையில் வந்தவராயினும் கம்பரின் ஆதிக்கத்துக்கே ஆட்பட்டவர். இவரைக் கம்பர் வழிக் கவிஞர் என்று அறுதியிட்டுக் கூறலாம். எனவேதான் காவிய நடையில் கம்பீரக் கவி பாடுகிறார். ''தற்காலக் கவிஞர்களில் காவிய நடையின் சிறந்த பிரதிநிதி யோகியார் ஒருவரே'' என்பது ந. பிச்சமூர்த்தி அவர்களின் கூற்று.*

*திருமறையில் காணப்படும் மகதலேனா மரியாளின் வாழ்வு நிகழ்வுகளை ''மேரி மக்தலேனா'' என்னும் சிறுகாப்பியமாகப் படைத்தளித்துள்ளார். இரு படலங்களாலான இச் சிறு காப்பியம் காட்சிப் படலத்தில் 58 பாடல்களும் வருகைப் படலத்தில் 54 பாடல்களுமாக 112 பாடல்களைக் கொண்டது.*

உடலை விற்று உயிர்வாழும் மகதலேனா மரியாள் காண்பாரை மயக்கும் பேரழகி. காலம் அவள் பொன்மேனியில் கணந்தோறும் வேறுவகை எழில் காட்டும். அவள் இளம் முறுவலுக்கு விலை இல்லை. அவளோடு பழகிய பெண்கள் நெஞ்சமே அவள் அழகில் தவித்தால் ஆடவர் நிலைதான் என்ன? அவள் மென்பனி ஆடைக்குள் மின்னிய வடிவம், காணும் ஆடவரை ஏங்கச் செய்யும்.

அழியும் அழகு அமர அழகைக் கொண்டது. அன்பின் பாசாங்கு, அமைதியின் நிலைக் களத்தை எதிர்கொண்டது. இன்பத்தொடு வானம் பேரின்பப் பிழம்பை ஏறிட்டு நோக்கியது. பாவக் கடுநிழல் புண்ணியப் பொன்னொளியில் கலந்தது. புண்ணியத் தழலில் பாவம் கருகிற்று; கடவுட் காட்சியில் காமம் சாம்பியது. உயிர் மலர்ச்சியில் உடல் கூம்பியது. மேரி அவரைக் கண்டு அடைக்கலம் புகுந்தாள். அமரத்துவம் அடைந்தாள். இயேசு, பேரின்ப ஒளியைக் காணத் தவித்த மேரியைக் கண்டார். வாழ்வும் உயிரும் அளித்தார்.

இச்சிறு காப்பியத்தில் கம்பனை நினைவூட்டும் வருணனைகளைக் கையாளுகிறார் கவிஞர். 'பொய்யினால் செய்த இன்பப் புணர்ச்சி' (i:51) என்னும் அடி 'அமுதினால் செய்த நஞ்சு' என்னும் கம்பன் கூற்றையும்,

*'பெண்ணெலாம் ஆண்மை வேண்டும்*
*பேரெழில் அமுதப் பெண்மை'* (i. 53)

என்னும் அடி 'ஆண்மை விட்டுப் பெண்மை அவாவு தோளினான்' என்னும் கம்பன் கூற்றையும் நினைவுக்குக் கொண்டு வருகிறது. இறை மைந்தனின் தோற்றம் குறிக்கும் கவிஞர்,

*'வீதியில் திகழும் விளக்கொளி யெல்லாம்*
*மேலவன் மேனியில் மறையும்'* (ii : 2)

என்று கூறுவது ''வெய்யோன் ஒளி தன்மேனியின் விரிசோதியின் மறைய'' என்னும் கம்பன் கவிதையை நினைவுறுத்துகிறது.

கருணையே வடிவான இறைமைந்தன் நிழல் இருள் தவம் புரிந்து மலரடி வருடுவதை நிகர்க்கும். கோயிலில் தெய்வம் ஒன்றுளது. குருக்கள் மூலமாய் செல்வமும் பொருளும் தந்தால் புண்ணிய தருமம் என்ற மனிதரைச் சாட்டையால் புடைத்து ஓட்டி நலம் செய்த இறைமைந்தனும் வந்து சேர்ந்தான். சஞ்சல நெஞ்சினார்க்குச் சோர்விலாது அவர் பயிலப் போதனை செய்த இறைமைந்தன் அருள் உருவை வீதி முனையில் கண்டாள் மேரி.

இறைமைந்தனைக் கண்ட அளவில் காமமாம் உவரிநீர் வியர்வையாகிக் கழியப் புதுப் பிறவியாய் மேரி நின்றாள். மேரி 'பேதையேன் கண் குருடாய்க் காமக் கருக்கலிலே வாழ்ந்தேனே' என்று தன்பாவம் உணர்ந்தவளாய் 'பேணும் இந்தப் பெரும்பாவி பிழை தீர்க்க வல்லவளோ' என்றும் 'ஈனக் காமத்தால் எழில் குறைந்த உயிரை நலம் பெறச் செய்யும் வழி சற்றே காட்டீரோ' என்றெல்லாம் அழுங்கும் போது இயேசு மாதேவன் தான் நின்ற தெருவில் நெடுந்தூரம் போய்விட்டார். வெறும் வீதி கண்ட அவளோ உணர்வழிந்தாள்.

மேரி அழகின் எல்லையாய் அன்பின் பாசாங்காய் அனைவரையும் கவர்ந்தவள்; இன்பத்தை ஊருக்கு வழங்கியவள்.

அழகனாம் தெய்வ வடிவுடைய இறைமைந்தனது அழகோ ஆன்மீக அழகு. இன்பத்தின் முழுமை அவர்.

*இறைவனின் நலம்கூறும் கவிஞர் 'விண்ணைப் பாய்ச்சிய மெல் அமுதச் சுவைப் பண்ணை ஊற்றும் பசுந்தமிழ் நெஞ்சினான்' என்று கூறுவது வியப்பிற்குரியது.*

## (i) காட்சிப் படலம்

1. மதியினைச் சுண்ணம் செய்து
   வானவில் வர்ணம் தீட்டிக்
   கதிர்மணி விளக்கம் தூக்கிக்
   ககனமீன் சரத்திற் கோத்துப்
   புதியமின் சிகரம் வேய்ந்து
   பொன்சுடர் பளிங்கில் தூண்கள்
   அதிசயக் காமன் வைகும்
   அரண்மனை போன்ற மாதோ

2. மதுகரம் மொய்க்கும் சோலை,
   மதுச்சுனை யூறும் ஓடை,
   கதிபெறு குயிலின் கூட்டம்,
   தூயவெண் சலவைக் கூடம்,
   குதுகலத் தென்றல் வீச்சு,
   குளிர்மதுக் கனியின் கொத்து,
   விதவிதச் சிற்பக் காட்சி
   விண்ணெலாம் பணியும் சூழ்ச்சி

3. சந்திரன் தவழும் இன்பத்
   தவள சாகரம் போல் முற்றம்,
   சிந்துரக் கிரணக் கூர்மைத்
   தினகரன் தீட்டும் சாணை,
   இந்திரன் மனையை வெல்ல
   எழுந்து வான் கூடும் மாடம்,
   வந்துவந்து அணைத்துப் பெற்ற
   மையலால் வெறிகொள் வீடு.

4. ஓவியம் இமைகள் மூடாது
   உயர்மனை எழிலை நோக்கும்,
   காவியம் கண்கள் மூடிக்
   கனவுகண்டு அளந்து பார்க்கும்.
   ஆவியை ஊற்றினாற் போல்,
   அமுதத்தைப் பாய்ச்சினாற் போல்,
   மேவிய சுவர்கள் எல்லாம்
   மீனினம் நுழைந்தங் கார்க்கும்.

5. பவளத்துச் சட்டம் சூழ்ந்து
பரிதியைக் குடிக்கும் ஜோதித்
தரளத்தை வளர்த்துச் செய்த
சாளரந் தோறும் சத்தத்
தவளத்தில் மென்பூத் தைத்த
தளிரினும் மெலிய பட்டில்
குவளைக் கண் மாதர் கைப்பூக்
கும்பிட்டுக் குலுங்கும் சேலை.

6. மாணிக்கக் கதவ மெல்லாம்
மணிவிளக் கொளிகள் வீசும்,
வாணிக்கை மதுர வீணை
மந்த மாருதத்திற் பாயும்,
காணிக்கை யேந்தி நிற்கும்
கனிகளும் மலரின் கொத்தும்,
நாணிக்கண் சிமிட்டி மீன்கள்
நள்ளிருள் நடுவே பூக்கும்.

7. மண்ணுறு புண்ணியந்தான்
வானகம் ஏறிச் செல்லப்
பண்ணிய படிவமோ, இப்
பாரகத் தவத்தை மெச்சி
விண்ணருள் வியப்போ, காம
விஞ்சையோ, தழலிற் பாய்ச்சும்
பண்ணிசை ததும்பும் தெய்வப்
பதுமமோ, யாதைச் சொல்வாம்!

8. வாளரா விரியும் கூந்தல்
வாயிடை மதியம் போலச்
சாளரம் தோறும் தோன்றும்
தண்கதிர் முகங்கள் நோக்கி
வேளினைப் படைத்த திங்கள்
வெண்மகள் நாணி ஆங்கோர்
காளமா மேகப் பொந்தில்
கண்மறைந் திடுதல் காணாய்.

9. மின்னெனத் துவளும் மேனி,
வேயெனக் குழையுந் தோளில்
பொன்னெனக் கலசம் வீக்கிப்
பொய்யெனச் சரியும் காமன்
துன்னிய நிதம்பக் கோயில்
தோகை போல் சேடிமார்கள்
அன்ன மென் நடையராகி
ஆயிரம் பணி செய்வாரும்;

10 குடத்தினில் மதுப் பெய்வாரும்,
குடலையில் பூக்கொய்வாரும்,
தடத்தினை விளக்குவாரும்,
தளிரணை வகுக்கின்றாரும்,
மடத்தினைக் காமன் செங்கோல்
மாடத்தை அணி செய்வாராய்
விடத்தினில் அமுதம் கூட்டும்
விழியினார் உலவுகின்றார்.

11 தங்கத்துப் பாத்தி செய்து,
தரளத்தால் வரம்பு கட்டிப்
பொங்கொளிப் பங்கயம் போல்
புதுமணி பொறித்த தொட்டில்
எங்கணும் மலரின் கொத்தாய்
இலங்கிய சோலை நீங்கி,
மங்கல மனைபுக்கோ மேல்
மன்மதன் கோயில் புக்கோம்.

12 சந்தப்பூங் கலவைப் பன்னீர்ச்
சாகரம் குடையுவாரும்,
இந்துவைப் பிளந்த கிண்ணத்து
எழில் நறவு அருந்துவாரும்,
பந்துருள் கொங்கை மாதர்
பதுமக்கை வருடுந் தோறும்
மந்திரப் பாவை போல
மயக்கத்தில் திகைப்புற்றாரும்.

13. தூணெலாம், சுவர்க ளெல்லாம்,
தோய்மணித் தரைக ளெல்லாம்,
வாணிலாத் தழுவும் மாட
முகடெலாம், வயிரக் குன்றக்
கோணெலாம் கோடா கோடி
மகளிரைக் கொடுப்ப நோக்கி
ஆணெலாம் மயங்கி, "யாரே
ஆசை நோய் தீர்ப்பது!" என்பார்.

14. ஓவிய மெல்லாம் காம லீலையின்
உவகைத் துள்ளல்,
காவிய மெல்லாம் காதற்
கவிதைகள், மதனன் பாட்டு,
மேவிய சிற்பம் யாவும்
மீறிய கலவைக் காட்சி,
ஆவியைப் பற்று தந்தோ
யாவையும் மயக்கும் சூழ்ச்சி!

15. வீட்டினைச் சொன்னோம், அந்த
 வீட்டினுக்கு உயிராம் இன்பப்
 பாட்டினை, அமுதால் செய்த
 படிவத்தை, மதனன் நாணில்
 பூட்டிய புதிய மின்னை,
 புன்னகைப் பெண்பால் தோன்றி
 ஆட்டி இவ் வுலகை அள்ளும்
 அழகினைச் சொல்ல வில்லை.

16 தண் கதிர் நிலவால் முற்றம்
 பாற்கடல் சமைவதாகப்
 பெண் கனி அமுதத்தோடு
 பிறந்தவள் என்ன நின்றாள்,
 விண் மணி யாவும் சூழ்ந்து
 வியப்புற நோக்கித் தத்தம்
 கண் மயக்குற்று வானக்
 காவினில் அசையா நின்ற

17 வான்கோழிகள் இடையே ஒரு
 மயிலாடுதல் போலும்,
 மீன் பாடிய வானத்தொளி
 மேவும் மதி போலும்,
 தேன் பாடிய மலரின்னிடை
 செந்தாமரை போலும்,
 மான் பாடிய விழியாரிடை
 மரியாள் எனும் ஒரு மான்.

18 மேகம் தவழ் மதிபோலிருள்
 அளகந் தவழ் முகமும்,
 வேகம் தவழ் அலை மேவிய
 கடல் போல் உருள் விழியும்,
 பாகும் தெளி தேனும் தவழ்
 பவளக் கனி இதழும்,
 மோகம் தரு தரளக் களி
 இள மூரலின் முதிர்வும்;

19. தழல் பாய்ந்திடும் மின்னல் சுவை
 செம்பொன் தளிர் மேனி,
 கழல் பாய்ந்திடு காந்தள் சிறு
 விரலின கதிர் விரியும்,
 குழல் பாய்ந்தொளி உண்ணும், இரு
 கண்பாய்ந்திருள் கொல்லும்,
 நிழல் பாய்ந்தவள் நேர்காண ஓர்
 சுவரேறியே நிலவும்.

20 அன்னம் அவள் நடை கற்பன
அணி சோலையில் உலவும்,
சின்னஞ் சிறு குயில் அன்னவள்
இசை கற்பன திரியும்,
மன்னும் இள மான் அன்னவள்
விழி மாயையை மகிழும்,
இன்னும் சொலல் என்னென் என
மின் சேவை செய் மின்னாள்

21 வெய்யோன் ஒளி வெப்பம்தனை
விரிதேன் குளிர் நறவாய்
மையோவிய மதியக் கதிர்
மையல் தரு வெயிலாய்ச்
செய்யோவியம் அனையாள் இளஞ்
செங்காலன நடையாள்
சையோக மென் மதனாகம
சரசக் கலை வாணீ

22 வாடாக் கலை, குறையா திருள்
மறையாச் செழுந் திங்கள்,
மூடா இதழ், உதிராதளி,
மூசா இள முளரி,
ஓடா திருள் ஓயா தழல்
பாயா தொளிர் மின்னல்,
தேடாத் திரவியம் மான் விழி
தேனின் மொழி மயிலாள்.

23. காலில் சுவை, தலையில் சுவை,
கணுவில் சுவை காட்டிப்
பாலில் சுவை போல் எங்கணும்
பதியும் சுவைக் கன்னல்,
ஆலித் தெழும் அமுதக் கடல்
கடையத் திரள் வெண்ணெய்
போலொத்தது வெயிலில் பட
உருகாத் தளிர் மேனி.

24. காலம்அவள் பொன் மேனியில்
கணமோர் எழில் காட்டும்,
ஞாலம் அவள் பாதத்திடை
நவமா மணி சொரியும்,
வாலைப் பருவக் காளையர்
வசமற்றவர் உளரோ?
சோலைத் தரு சுனை யாவையும்
சொக்கும் திரு உருவம்

25 வான் எத்தனை, மண் எத்தனை,
மதி எத்தனை, விண் மீன்
தான் எத்தனை, பரிதிக் கதிர்
தழல் எத்தனை, உலவாக்
கோன் எத்தனை, குடி எத்தனை
குலவும் திரு எல்லாம்
மான் ஒத்தவள் முறுவற்கு ஒரு
விலை ஒத்தவை இவையோ!

## வேறு

26. எண்ணிலாக் கண்கள் கொண்டங்கு
இமைப்பிலாது ஊழிக்காலம்,
கண்ணினால், கருத்தால், மற்றைப்
புலன்களால் கண்டாரேனும்,
விண்ணெழில் யாவுமே ஓர்
மின்னலை மேவிற்று என்னப்
பெண்ணெழில் எல்லை காண்பார்
பேருலகு இல்லை இல்லை!

27. அந்தி மீன் மறையும் போதங்கு
ஆயிழை தன்னைச் சூழ்ந்து
சிந்துரப் பவளச் செவ்வாய்ச்
சேடியர் சிங்காரிப்பார்,
இந்துவைக் கழுவுவார் போல்
எழில் மதுக் கலவைச் சந்தச்
சந்தனப் பன்னீர் ஊற்றித்
தையலைக் கழுவுகின்றார்

28 முடிமிசை வீழ்ந்த பன்னீர்
மோக லாகிரியில் சிக்கிப்
படிமிசைப் பாதமட்டும் பாய்ந்திடும்;
பாய்ந்த பின்னர்,
கடிகமழ் தொட்டி ஒன்றில்
கவலையாய்த் தேங்கும், அன்னாள்
வடிவினை நிழல் கொண்டேனும்
வாஞ்சையாய்த் தழுவும் மாதோ.

29. பட்டினில் கருமை பூசிப்
பளபளச் செய்த கூந்தல்
சொட்டு பன்னீரின் துள்ளித்
துடைவரை தவழ்ந்து மேனி
தொட்டணைத்து இன்பம் கொண்ட
சுவையெல்லாம் நீங்கத் தன்னைக்
கட்டுவார் என்பதாலே
கண்கலுழ்ந்து அழுவ போன்ற

30. பழகிய மாதரார்க்கும் படிவத்தைப்
        பார்க்கப் பார்க்கக்
குழையுது நெஞ்சம் என்னின்,
        குமரர்தம் நெஞ்சம் என்னாம்?
விழைவினுக்கு எல்லை உண்டோ?
        கணம்தொறும் வியப்புக் காட்டும்
அழகினுக்கு அவதி யாதோ,
        அழகெலாம் ஒருங்கே கண்டால்?

31. ஆவியில் மென்பூத் தைத்த
        ஆடையால் மேனி ஒத்திப்
பூவியல் நறுநெய் நீவிப்
        புதுமணக் கதம்பத் தூளின்
ஆவியைச் சுருட்டி, ஆண்கள்
        ஆவியைச் சுருட்ட என்றே
சீவிஅக் குழலைப் பின்னித்
        தினகரன் வைரம் வைத்தார்.

32. கருமுகில் திரளின் கூந்தல்
        கதிர்விடு வகிட்டு மின்னல்
திருநுதல் நிலவின் கீற்றுச்
        செவ்வியில் விரியும் பட்டில்
கருநறும் சாந்தம் தீட்டிக்
        கனகச் செம் மணிப்பொட் டிட்டுப்
புரியிருள் மதன்வில் போலும்
        புருவத்தைப் புனைதல் செய்தார்.

33 செவ்வரி அமுதக் கீரல்
        செறி மதுக் கடலில் ஜோதி
கவ்விய வண்டு வீழ்ந்து
        களிப்புற நீந்துமாப் போல்,
வவ்வி ஓர் உவமை யின்றி
        வலக்கணுக்கு இடக்கண் கூறும்
நவ்வியல் விழியில் மையாம்
        நஞ்சினைத் தீட்டிவிட்டார்.

34. கன்னத்துச் சுழியில் காமக்
        கற்பகக் கொழுந்து தீட்டிப்
பொன்னொத்த பொடியில் சந்தப்
        பூஇளந் தாது பூசி
மின்னொத்த முறுவல் ஜோதி
        விளக்கிடும் பவளச் செவ்வாய்
அன்னத்தை, மதுவின் செந்தேன்
        அமுதத்தை அமுதம் செய்தார்.

35. வானுறு மதியம் வெல்லும்
  வையக மதியம் போலும்,
தேனுறும் அமுதச் செவ்வாய்த்
  திருமுகம் கலந்து கொஞ்ச,
மீனினம் இரண்டு வந்தங்கு
  இருபுறம் மேவிற் றென்னக்
கூனிடும் வள்ளைக் காதில்
  கூரொளித் தொங்கல் வைத்தார்.

36. மகரயாழ் வளையுந் தோளில்
  மன்மதன் நாளம் தூக்கிச்
சிகரமாய்ப் பதுமம் போலும்
  திங்கள் வாண் முகத்தைப் பூக்கும்
தகரநேர் சங்கம் பொங்கும்
  தந்தத்தால் கடைந்த கண்டம்
நிகரிலா மணிப் பூண் பூட்டி
  நிரப்பினார் மறைத்தார் அந்தோ!

## வேறு

37. மாம்பழம் ததும்பு செம்பொன்
  மலைதிரண்ட கொங்கையில்
தேம்பொதிந்த குங்குமச்
  செழுங் குழம்பு பூசினார்,
பாம்பிரண்டு நெளிவ போன்று
  பாயும் ரோம பந்தியில்
காம்பு கொண்டு கற்பகக்
  கொழுந்து மின்னல் காட்டினார்.

38. உந்தியம் தடத்தில் இன்பம்
  ஊறும் ரோம ரேகைகள்
சந்தினில் தவழ்ந்து பொங்கும்
  சாகரத்து மையலைக்
கந்தமும், கத்தூரியும்,
  கதம்பமும் கமழ்தரச்
சந்திரன் நிலாவை ஒத்த
  சல்லடத்து மாட்டினார்.

39. துப்பிதழ் மடந்தை காம
  சாகரம் துழாவவே
தெப்பமாம் இரண்டு செம்பொன்
  செழுங்குறங்கு சூழ ஓர்
அற்புதம் கனிந்த பட்டின்
  ஆடை கொண்டு மூடினார்,
எப்பதத்தும் யாவினுக்கும்
  இனிமை காட்டல் ஆகுமோ?

40. பஞ்சினும் குழைந்த கஞ்ச
மலரினில் படைத்தவாம்
நஞ்சினும் கனிந்த நாட்ட
நாயகி பதங்களில்
நெஞ்சினில் கலக்க மின்றி
நித்திலத்து அணிச் சுடர்
வஞ்சியில் சுருட்டுவார்கள்
வன்மை என்ன வன்மையே!

41. அணிகள் யாவும் அழகுபெற்ற
அமுத மேனி அணைவதால்,
திணியும் இருளில் ஒளிசெய் வடிவு
தினகரற்கும் வாய்க்குமோ?
தணிவு சேரும் தழலில் இளமை
தழுவு ஜோதி பார்த்திடில்
பிணிகள் யாவும் முன் பின் என்று
பேசிடாமல் ஓடுமே!

## வேறு

42. நிலவின ன நிலவுசெய் நித்தில முறுவல்,
கலவியில் அமுதுகும் கனியிதழ்ச் செவ்வாய்
உலையிடு மெழுகென உருகிய பார்வை,
குலவிய பந்துருள் கோமள விரல்கள்;

43. பொன்செய்த மணமலர் பொருவிய சுவையின்,
மென்பனி ஆடையுள் மின்னிய வடிவம்,
கன்னலில் இனியதோர் கவிதைசெய் பேச்சு
இன்நலம் யாவையும் ஏந்திய வல்லி;

44. மின்னென, மானென, மயிலென, மிளிரும்,
அன்னமென் நடைபயில் அணிதவழ் பதுமம்,
புன்னகை இளமதி பொழிகதிர் நிலவில்
கன்னல் வில்மதன் இனங் காலென உலவும்.

45. வண்ணவாய் மதுமலர் மலர்ந்துள சுவையில்
கிண்ணவாய் மணிமலர் கிறிசெய்த மதுவும்,
பண்அளாய் ரசமுறு பல கனி, இவைதாம்
உண்ண வாய் ஊட்டுவர் ஓதிமம் அனையார்.

46. மணிவட மலரணை ஊசலில் ஊசல்
தணிவொடு பழகிட, சாமரை வீச,
திணிஇருள் மயங்கிய திங்களில் தென்றல்
பணிசெய் வீணையின் பண்ணுடன் ஆடும்.

47. ஒளியலை தாங்கிய ஓதிம வடிவில்
களிபெறு பஞ்சணை கமலமெல் இதழில்
கிளியொடு குயில்களும் கின்னரம் பாட
மிளிர்அமுது அனையவள் மேவியங்கு அமர்ந்தாள்

48. என்றுமோர் இயல்பினில் வழிவழி யேகும்
நன்றியில் பொன்விலை நசைபடு வாழ்வின்
வென்றி நல் அமுதிடை விடம் இசைவது போல்
இன்றவள் நெஞ்சில் ஓர் துளி துயர் இலகும்

49. மூச்சொன்று அங்கு உள்ளூறும் மோகத்துக் கருமை
பாய்ச்சிய களரிடைப் படிந்தத னாலோ
வீச்சொன்றில் மார்பகம் வெடித்திடப் பாய்ந்து
தீச்சுடர் போல வெம் தீயொடு விசிறும்.

50. தேன் தெவிட்டிடச் செயும் தேன்மொழி வாயள்
தான் தெவிட்டில தரும் தழல்மதுக் கலவி
மீன் தெவிட்டிடச் செயும் மின்னெனத் தன்னைத்
தான் தெவிட்டிட மனம் தயங்கினள் மயங்கும்.

## வேறு

51. ஐயமுற்றனள் பெண் மேரி,
யாதெனத் தெரியாள், நெஞ்சம்
தொய்யலுற்று எதையோ எண்ணும்
துயரினாள் மயங்குகின்றாள்;
மெய்யெலாம் தளர்ச்சி காட்ட
வெறுத்தனள் காமம் என்னும்
பொய்யினால் செய்த இன்பப்
புணர்ச்சியை மறந்தாள் மாதோ.

52. புலர்ந்துமே புலராப் போழ்தாங்கு
அலர்ந்துமே அலராப் பூப்போல்
மலர்ந்துமே மலராச் செவ்வி
மனத்திடை அயிர்த்தாள், காமம்
கலந்துமே கலவாக் காலைக்
கனவினோர் கதிர் போல் ஏதோ
நலந் தரும் எதுவோ ஒன்று
நங்கையைக் கவ்வி உண்ணும்.

53. பெண்ணெலாம் ஆண்மை வேண்டும்
பேரெழில் அமுதப் பெண்மைப்
புண்ணுலாம் காமப் புன்மைப்
புகையினால் புகைந்த நன்மை
உண்ணுலாம் உயிரை யெல்லாம்
உருக்கும் ஓர் உணர்வில் தன்னைக்
கண்ணிலா நோக்குவாளாய்க்
கருத்திலாக் கருதுகின்றாள்.

54. ஆணெலாம் செல்வம் ஒன்றோ
யாவையுங் கொடுத்துப் புல்லும்
கோணிய வாழ்க்கை தந்தக்
குதுகலக் களரின் தீமை
பேணிலாள், ஆண்மை வென்ற
பெரியதோர் வீரம் குன்ற
நாணினாள் எனினும், நாணம்
நயந்திலாள் நயவா நின்றாள்.

55. வாசலில் குமரர் எல்லாம்
மாதராள் மயக்கத்தாலே
பூசலிட்டு ஒருவரோடங்கு
ஒருவரைப் பொருதும் காலை,
ஆசைவிட் டனளோ, அன்றி
ஆசையால் தியக்குற்றாளோ,
வீசுலை போல மூச்சு வெதும்பிட
வீணே சாய்ந்தாள்.

56 கிணற்றினில் ஆழ்த்து எங்கோ
கிளர்ந்தெழும் ஓசை போல், அங்கு
உணர்த்தி ஓர் செய்தி அன்னாள்
உயிரினுக்கு ஆழம் பூத்துத்
தணத்தணக் கொதிக்கக் காதுள்,
'காமத்தைத் தழுவேல்' என்று
குணத்தொனி செய்து மெல்லக்
குசுகுசுக் குலவிற் றம்மா.

57 உள்ளத்து மயக்கமோதான்!
உயிர்செயும் சாலமோதான்!
வெள்ளத்துப் பாயுங் காம
வியப்பினில் தெவிட்டலோதான்!
நள்ளிருள் நடுவே துள்ளும்
மின்னென நடுக்கும் செய்தி!
கள்இதழ் விளர்ப்பச் செவ்வாய்க்
கன்னியைக் கலக்கம் காட்டும்.

58. இன்னதென்று உரைக்கொணாது, இவ்
வின்பமோ துன்பமோதான்,
அன்னவள் உயிரை அள்ளி
அலக்கணுற் றிடச்செய் போதில்,
மின்னலின் திரளைப் போலும்
மேலவன் கருணை வீசி
முன்னி ஓர் வீதி எல்லை
முனையினில் வருதல் கண்டாள்.

## (ii) வருகைப் படலம்

1. வானகம் இன்பத் திங்களின் நிலவால்
வனைந்ததோர் வெண்குடை பிடிக்கும்,
மீனின மெல்லாம் தமைச் செய்த மேலோன்
மேனியை இமைப்பில நோக்கும்,
தேனக மலரின் கொத்தினால் தென்றல்
சாமரை இரட்டுவ திரியும்,
மோன மாதவரும் முத்தரும் புகழும்
முதுகழற்கு எவை பணி முயலா?

2. வீதியில் திகழும் விளக்கொளி யெல்லாம்
மேலவன் மேனியில் மறையும்,
காதலில் தேவன் கால்படக் கனிந்து
கனகமாய்த் தரையெலாம் காட்டும்,
யாதெனச் சொல்வேன்! மற்றவர் நிழல்கள்
அவர்செயும் பவத்திருள் போலாம்;
மாதவன் நிழலோ, இருள் தவம் புரிந்து
மலரடி வருடுவ தொக்கும்.

3. மலையெலாம் மந்த மாருதம் தூதாய்
மன்னவன் சேவடி பணியும்,
கலையெலாம் அவன்வாய் மலரினில் புகுந்த,
கருணையோ அவன்கணில் கனிந்த,
விலையிலாக் காதல் அன்பெலாம் அவன்தன்
விரிநிலா முறுவலில் மலர்ந்த,
அலையெலாம் அன்று நுரைமலர் சொரிந்தங்கு
அருட்பதம் தாங்கிய அண்ணல்.

4. கண்ணிலார்க்கு எல்லாம் கண்அவன், செய்ய
கருத்திலார் கருத்து அவன் கனிவே,
புண்ணுளார்க்கு எல்லாம் மருந்தவன் புண்கள்,
பொறியிலார்க்கு அவன் பொறி புகலாம்,
விண்ணிலார்க்கு எலாம் விண் அவன், துயரம்
வீழ்ந்தவர்க்கு அவன் விழல் உயர்வு,
மண்உளர் வாழ்க்கை அவன் சுடர் மரணம்,
மற்றவர் சுகம் அவன் மேனி.

5. இருளினைக் கீறி அருணன் வந்தெய்தும்
 இளவெயில் சுடர் அவன் வடிவம்,
மருளினில் சுருளும் புகையிலாத் தழலின்
 மலர் அவன் மதிதவழ் முறுவல்,
அருளினில் பரந்தங்கு அன்பலை விசிறும்
 ஆழியில் பூத்திடும் கண்கள்,
தெருளிலாத் தீமை யாவுமே அவன் முன்
 தீப்படு பஞ்செனத் தீயும்.

6. அழகெலாம் பெற்ற அழகினுக்கு அழகாய்,
 அமுதெலாம் அமுதுசெய் அமுதாய்,
விழைவெலாம் தீர்க்கும் விழைவதாய், அன்பின்
 விளக்கெலாம் விளக்கிய விளக்காய்,
பழகினால் புளிக்கும் சுவையலாது என்றும்
 பழகிடப் பழகிடப் புதிதாய்க்
குழைவெலாம் தோற்றிக் குறைவிலா நிறைவில்
 கோமளம் காட்டும் ஓர் குமரன்

7. தோளினில் தொங்கித் தாளினில் தவழும்
 தூயவெள் ஆடை ஒன்றுடையான்,
வேளினில் தெய்வ வியப்பெலாம் காட்டும்
 மேனியில் வேறணி அணியான்,
நாளொடும் பூத்த நறுமலர் வாயில்
 நல் அமுதனைய மென் சொல்லான்,
பாழிடம் தன்னில் பார்வையால் கருணை
 பாய்ந்திடச் செய்திடும் பரமன்.

8. தெய்வம் ஒன்றுளதாம் கோயிலில் எங்கோ,
 திருவெலாம் பொன்னெலாம் அதற்கே
பொய்வகைக் குருக்கள் மூலமாய்த் தந்தால்
 புண்ணியன் புண்ணியம் தருமாம்!
இவ்வகை மனிதர் தமை யெலாம் ஏய்த்தங்கு
 இருப்பவரைக் கசை கொண்டு
நையவே புடைத்துப் புறத்தினில் ஓட்டி
 நலஞ் செய்தான் நாதன் வந்தடைந்தான்.

## வேறு

9. மேகம் யாவும் ஓர் மின்னலில் கால் கொளும்
தாகம் தீர்க்கும் கருணையின் சாகரம்,
நாக நஞ்சினை நல்அமுதாக்கிடும்
வேகம் நீங்கிய மெல்லலை மெல்லுரு.

10. கஞ்ச முற்ற கனகக் கனல் ஒளி
விஞ்ச லூற்றவன் மேனி விளக்கினில்
பஞ்சை யுற்ற பவத்திரள் விட்டிலில்
தஞ்ச முற்றுத் தழலுறச் சாகுமால்.

11. கண்ணைக் கூசும் கவின்ஒளிக் காதலன்,
விண்ணைப் பாய்ச்சிய மெல்அமுதச் சுவைப்
பண்ணை ஊற்றும் பசுந்தமிழ் நெஞ்சினான்,
மண்ணில் ஞானத்து வாரி வழங்குவான்.

12. விண்ணும், மீனும், விரிகதிர் யாவையும்
பண்ணும் தேவன், பதுமப் பதங்களை
மண்ணில் ஊன்றி, ஓர் மாயத் துறவி போல்,
நண்ணல் உற்றனன் நல்லருள் பூப்பவே.

13. காரைக் கண்ட பயிரின் கதிர் என,
நேரைக் கண்டதும் நெஞ்சில் தலைவனின்
சீரைக் கண்டு சிவந்த தண்ணீர் என,
ஊரைக் கொண்டது உவகையின் வெள்ளமே.

14 சங்கம் ஊதினர், பேரிகை சாற்றினர்,
பொங்கும் பன்னீர் இறைத்தனர், பூமழை
எங்கும் கொட்டினர், இல்லம் விளக்கினர்,
மங்கலங்கள் வழங்கினர் மாதரே.

15. தயிரில் மத்துறு சஞ்சல நெஞ்சினார்
உயிரை மேவும் உடல்களில் சூழ்ந்தனர்,
அயர்விலாமை அவரவர்க்கு அன்னவர்
பயிலுமாறு அவன் போதனை பாய்ச்சினான்.

16. பூத்தது இன்னுரை, பூத்தது இளநகை,
பூத்தது அன்பினில் போதவிழ் பொன்மலர்
பூத்தது எங்கணும் புண்ணியம், மேலவன்
பூத்த ஞானப் புனிதம் வந்து எய்தவே

17 அன்னவன்தன் அருள் உருப் பூத்தழல்
முன்னும் வீதி முனையினில் பொங்கவே,
கன்னி மேரியும் கண்டனள், கண்டனள்!
பின் நிகழ்ந்த பெருமை என் சொல்லுவாம்!

## வேறு

18. கண்டனள் விழித்தாள் மேரி,
காட்சி மற்று எவையும் காணாள்,
உண்டதோர் மயக்கக் காமத்து
உவரிநீர் மேனி யெல்லாம்
விண்டது, வியர்வையாகிக் கழிந்தது,
வேறு ஜன்மம்
கொண்டவள் போல, வெண்பொன்
கோமளப் பாவை நின்றாள்.

19. தீச்சுடர் கலவிப் புன்மைப்
புகையினால் தீய்ந்த நெஞ்சம்
காய்ச்சிய வஞ்சமெல்லாம்
கவடெலாம், சூழ்ந்து பொங்கும்
நீச்சினுக்கு எட்டாக் காமச்
சூறை, ஓர் நீண்டு விம்மும்
மூச்சினில் வெளிப்பட்டு ஓட,
மூர்த்தியை மூர்த்தம் செய்தாள்.

20. கழித்திடும் காமம் கண்ட
காளையர் தம்மை வாட்டிப்
பழித்திறன் பாயும் பாவைப்
பார்வை, தன் சலனம் நீங்கி,
அழித்தலைக் கள்ளின் வாரி
அமுதமாய் நிரம்பினாற் போல்,
விழித்த கண் விழித்தவாறு
வேறுள நோக்கா நிற்கும்

21. கடவுளைக் கண்ட ஞானக்
களிப்பினைப் பெரியது என்கோ?
மடமையில் செய்த பாவ
வருத்தமே பெரியது என்கோ?
விடமுற வெதும்பும் காட்சி
வியப்பினில் மகிழும், பின்னும்
திடமிலா வெதும்பும், திக்கை
வெறித்திடும், திகைக்கும், சோரும்

22. சின்னதோர் கொடியில் தொங்கும்
வேர்ப்பலாச் செறியும் பாவப்
புன்மையோர் பொருப்பாய்த் தோன்றிப்
பூவையை அழுத்தச் சாம்பித்
தன்னையும் தாங்க லாகாத்
தளிரினில் குழையும் பாவை
அன்னம் ஓர் பதுமம் புக்கது
அனையளாய் அணையில் சாய்ந்தாள்.

23. தோழியர் தம்மைப் பாராள்,
 தோய்மதுக் கீதம் கேளாள்,
நாழிகைக்கு ஒன்றாய்த் தன்னைப்
 புனைந்திடல் நயவாள், பின்னும்
ஆழியின் திரையைப்போல் அங்கு
 அலைபவர் தம்மைப் பேணாள்,
பாழிடம் தன்னைச் சும்மா
 உற்றுற்றுப் பார்க்கின்றா ளால்

24. தன்னிலே தானாய்த் தன்னந்
 தனியளாய், தழலில் காய்ச்சும்
துன்னிய பாவ மூட்டை
 அல்லதோர் துணையற் றாளாய்,
என்னெனச் சொல்வது ஐயோ,
 ஏந்திழை துயரக் கோலம்!
மன்னும் இவ்வையம், வானம்,
 மற்றெல்லாம் உருகும் சேதி.

25. காமுகர் காமம் எல்லாம்
 கைவசம் கண்ட காமத்
தீமையே வடிவாய்க் கொண்ட
 திருவினைத் தாங்கித் தாங்கிப்
பூமலர் அமளி பெற்ற புன்மையால்
 பொருமிப் பொங்கித்
தாமரை முள்ளைப் பூத்த
 தன்மையில் தைத்த மாதோ.

### வேறு

26. தாக மிஞ்சிய சண்பகக் கொடி
 தழலில் இட்டதோர் தன்மையில்
வேக மிஞ்சிய பாவ நஞ்சின்
 வெறிகொள் நெஞ்சம் கருகவே,
மோக மிஞ்சிய லாகிரிச் சுவை
 மோகனச் சுடர் போன்றாளால்
தேகம் அஞ்சித் ''தழுவிடேன்'' எனச்
 சேலையும் கழன்று ஓடுமாம்.

27. பூணெலாம் அவள் மேனி எங்கணும்
 புண்ணுறச் செய் விலங்குகள்,
காணும் பார்வையும் காமம் காண்கிலாக்
 கண் சொருகிக் கலங்குவ,
பாணி அன்னவள் பாவம் சூழ்ந்த
 பழியில் சோர்ந்து படுத்தவாம்,
வாணிலா நகை இன்பத் தேன் இதழ்
 வாய் வெளுத்து வறண்டுபோம்.

28. புரியைப் போலப் புரண்டு விம்மிப்
புடைத்த நாடி நரம்புகள்
திருவைப் பின்னிப் பிணைத்து நல்உயிர்
சேரத் தீரச் சிதைப்பதாம்,
கருமைக் காரிருள் நீழலும் தனைக்
கருமை செய் பவம் அஞ்சியே
விரியு நாற்புரம் கோடி கோடி
விளக்கொளிக்கண் மறைந்துபோம்.

29 கிள்ளை காமம் கிளுகிளுத்துப் பெண்
கிள்ளையைக் கீச்சிக் காட்டுமாம்
உள்ளமோ 'வெடிப்பேன்' எனாத் தன்
உயிர்ப்படங்கிப் புழுங்குமாம்,
அள்ளு மேனி அழகு காட்டித் தம்
அன்பு காட்டுக் கண்ணாடிகள்
நள் இருண்ட முகத்தைக் காட்டிப் பின்
நங்கு காட்டுவ போன்றன.

30. சாளரத் திரைச் சேலை யாவுமே
சாலை போந்திடும் வாலிபக்
காளையர் தமை ''வாரும்'' என்று கை
காட்டிக் கூப்பிடல் போன்றன,
ஆள் அரம்பையர் யாவருக்கும்
அரம்பை பாவம் உணர்ந்தனள்,
''மீளும் போம்'' என மின்னி மின்னி
வெருட்டல் போலத் துளங்குவ.

31. வன்னம் தீட்டி மயக்கம் காட்டி
வனைந்த சிற்பச் சிலையெலாம்,
மின்னும் ஜோதிச் சுவரில் மேவிய
ஓவியத்தின் வியப்பெலாம்,
அன்னம் மெல்நடை மெல்லியாள் பவத்து
ஆழி கண்ட மயக்கினால்
இன்னலுற்றங்கு உயிர்ப்படங்கி
உன்மத்தமுற்றவை ஏய்ந்தன.

32. தேனைத் துள்ளி அங்கு அள்ளி வீசிய
தென்னல் இன்று சினத்தினால்
மீனில் துள்ளிய கண்ணினாள் பவ
மிகுதியைக் கண்டு மீறியே
வானில் துள்ளி இவ் வையம் துள்ளிய
கனலெலாம் வாரி வாரி அக்
கானில் துள்ளிக் களைத்து மேரி
கலங்குறத் துயர் காட்டுமே.

33. பூவெலாம் பவப் பூவை காணப்
    பொறுக்கிலாது இதழ் மூடுமாம்,
காவுலாவிய புள்ளெலாம் தங்கள்
    கண்மயங்கி உறங்குமாம்,
ஓவிலாது அவள் செய்த தீமை
    உலகம் எங்கும் இருள் எனா
மேவித் தம்மை விழுங்கும் என்ன
    விளக்கினங்கள் மினுக்குமாம்.

34. திங்கள் என்னும் விளக்கம் ஏந்தித்
    திணிந்த காரிருள் நீங்கவே
கங்குல் கன்னியும் வந்தடை ந்தனள்,
    தன்னைப் போல் ஒரு காரிகை
பொங்கும் தீமைப் புகை சுருட்டப்
    பொருமுவாள் துயர் காண்கிலா,
மங்கி நாணி மயங்கித் தன் கை
    மதி விளக்கை மறைக்குமாம்

35. மீனம் யாவையும் கண்சிமிட்டி
    மினுக்குக் காட்டிச் சிரிப்பன,
வானம் எங்கணும் மேகம் மூடின,
    வையம் காரிருள் மூழ்குவ,
ஞான நாயகன் ஏசு வந்திட
    நங்கை உண்ட பவத்திரள்
ஈனம் யாவும் வெளிப்படும் பொழுது
    யாவையே இருளாதவே!

## வேறு

36. தன்னுடைய பாவம்
    தரணியெலாம் சூழ்வதுவோ,
மின்னிடையாள் பாவத்தை
    மேதினிதான் வெறுப்பதுவோ,
என்னுடையாள் தீமைக்கண்
    ஈட்டு பவம் அல்லாமல்
மன்னுடைய மாதேவன்
    மலரடிக்கண் வார்த்திடவே.

37. விம்முகின்றாள், வியர்க்கின்றாள்,
    வெப்பத்தால் வெதும்புகின்றாள்,
பொம்முகின்றாள், பொருமுகின்றாள்,
    பொங்குகின்றாள், புகைகின்றாள்.
மம்மருறும் காமஞ்சார்
    மயக்கத்துச் சூழலிலே,
அம்மம்ம, அவள் துயரம்
    யார் உரைக்க வல்லாரே!

38. பெண்ணீர்மை எல்லாம்
பிழைபோகக் கண்டவளை,
புண்ணூரும் நெஞ்சத்துப்
பெரும் பாவம் பூண்டவளை,
கண்ணீரும், கம்பலையும்,
கவலைப் பெருமூச்சும்,
தண்ணீராய்க் காமத்
தழல் நீறாய்த் தாம் உருக்கும்.

39. விழுந்து விழுந்து எழுந்து எழுந்து
வெய்யிலிட்ட புழு என்னக்
கொழுந் தழலின் மெழுகு என்னக்
கொடி என்னக் குலைகின்றாள்;
தொழுந்தகைய சுடர்மேனி
துவண்டு துவண்டு அலை புரள
அழிந்தழிந்து மதி மருண்டு அங்கு
அலை கடலாய் அரற்றுகின்றாள்.

40. ஆண்களிலே, பெண்களிலே,
அலிகளிலே, யாவரிலே
பேணும் இன்பப் பேரழகு
பெற்றதனைக் காசுக்காய்க்
காணுமவர் யாவருக்கும்
கைவசமாய்ச் செய் புன்மைப்
பூணுடையார் என்னைப் போல்
புவியின்மிசை வேறுளரோ?

41. உண்பதுவும், உறங்குவதும்,
உடுப்பதுவும், காளையரைக்
கண்மயக்கால் வாட்டிக்
கலப்பதுவும் அல்லாமல்,
பெண் பயன்தான் வேறிலையோ?
பிழையன்றோ? பேதையினேன்
கண் குருடாய்க் காமக்
கருக்கலிலே வாழ்ந்தேனே!

42. முடுவல் ஒன்றங்கு, அதை வீதி
முனைவரையில் தொடர்ந்து செலும்
கடுகுரல் நாய்த் திரளதனைக்
கணக்கெடுப்பார் யாவருளர்?
படுகரிலே, காமப் பழியினிலே
பாழ்த்த எனைத்
தொடுவதற்கும் சூழ்வதற்கும்
தொல்லை செய்வார் எல்லையிலார்.

43. நாணில்லேன், நடுங்கில்லேன்,
நலமில்லேன், தீமையுறக்
கோணில்லேன், குழைகில்லேன்,
கொடுமையெலாம் கைவந்தேன்,
ஆணுள்ளார் யாவரையும்
பேடியராய் ஆக்கிவிட்டேன்,
பேணும் இந்தப் பெரும் பாவப்
பிழைதீர்க்க வல்லேனோ?

44. அறிவறிந்த நாள் முதலாய்
அன்று முதல் இன்று வரை
பிறிதறியேன்; காமப்
பெருஞ் சூதும், வஞ்சனையும்,
நெறிஅறியாக் காளையரை
நெருக்கிப் பொன் பறிப்பதுவும்,
குறிஅழியக் கலவியிலே
கோப்பதுவும் அல்லாமல்.

45. குலமகளாய்ப் பிறந்தும் எந்தன்
வறுமையுறும் கொடுமையினால்
நலம் இழந்தேன், காமம் எனும்
நஞ்சுண்டேன், நானிலத்தில்
விலைமகளாய், புலைமகளாய்,
வெறுமகளாய்க் கழிந்தேற்கும்
அலைமகள் சேவடி தாங்கும்
அண்ணல் அருள் வாய்த்திடுமோ?

46. வானகமே! மண்ணகமே!
மற்றகமே! மாவிதியே!
மோனகமா முனிவர்களே!
தேவர்களே! மும்முதலே!
ஈனமுறும் காமத்தால்
எழில் குறைந்த என் உயிரைத்
தீனமுறச் செய்யச்
சிறிது வழி காட்டீரோ?

47. தந்தையரே! தாயே!
தமியேனைப் பெற்றெடுத்த
முந்தையரே! பள்ளி
முதியவரே! நீவிரெல்லாம்
சந்தனத்தைச் சேற்றுச்
சதுகரிலே ஊற்றுவ போல்
எந்தனையே புன்மைக்கு
இரையாக்கி விட்டீரே!

48. சந்திரனே! சூரியனே!
கண்சிமிட்டும் தாரகையே!
அந்தரத்து வானத்து
அலைகின்ற மாமுகிலே!
இந்த உலகத்து இயற்கை
யாவையுமே காண்கின்றீர்!
எந்தனைப் போல் பாவி
எவரேனும் கண்டுளிரோ?

49. கூனிடுவாய், குறைந்திடுவாய்
கொடுங் கறுப்புக் களங்கமுளாய்,
மீனம் எல்லாம் நகைசெய்ய
விரி அரவின் வாய்ப் படுவாய்,
வானுறுவாய் என்றாலும்,
வான் மதியே! என்னைப் போல்
ஈனமுறும் தொழில் செய்தே
இவ்வண்ணம் ஆனாயோ?

50. ஓயாது உருண்டுருண்டே
உலைகின்ற மாமுகிலே!
தீயான மின் வாளால்
தினம் செகுக்கப் படுகின்றீர்!
பேயான பேராசைப்
பேரிடியால் குமைகின்றீர்!
ஆயாது எனைப் போல
யாதேனும் செய்தீரோ?

51. பொங்கிக் குமுறிப்
புடைபுடைத்துப் போராடி
எங்கெங்கும் பாய்ந்தே
இடிபோல் குரல் எழுப்பிச்
சங்கடத்தால் அலையும்
சாகரமே! என்னைப் போல்
பங்கமுறும் செயலால்
இவ்வண்ணம் பட்டாயோ?

52. வண்டு தரும் தூசி
மகரந்தப் பொற் காசைக்
கண்டு வந்து மலர் மகளின்
கள்விற்கும் கான் மரமே!
தொண்டை வாய்க் கள் விற்கும்
எனைப் போலச் சூழ்ந்ததனால்
திண்டு முண்டாய்ச் சூறைத்
திசைக் காற்றில் ஆடுதிரோ?

53. என்று அழுங்கும் வேளையிலே
    ஏசுவெனும் மாதேவன்
நின்ற நெடுந் தெருவே
    நெடுந்தூரம் போய்விட்டான்;
மின் தவழ் மெல் இடை நோவ
    வெறும் வீதிதனைக் கண்டு,
ஒன்றுரையாள், உணர்வழிந்தாள்
    உலகெல்லாம் மறந்தாளே.

54. துள்ளினாள், பாய்ந்தாள்,
    துடித்தாள், ஒரு கணத்தில்
வெள்ளிடையே வந்தாள்,
    வீதிவழிப் போகின்றாள்;
நள்ளிரவில் பூக்கும்
    நன்மதி போலே உயிரை
அள்ளும் ஒரு பேரமைதி
    அவனியெலாம் சூழ்ந்ததுவே.



# 29

# சுடர்மணி

**ஆசிரியர் : எஸ். ஆரோக்கியசாமி (1912 - 1985)**
**அறிமுகம் : யோ. ஞான சந்திர ஜாண்சன்**

இயேசு கிறிஸ்துவினுடைய வாழ்க்கை வரலாறு வீரமாமுனிவர் முதல் ஈழத்துப் பூராடனார் வரை பல்வேறு புலவர்களால் காப்பியங்களாகப் படைக்கப்பட்டுள்ளது. தேம்பாவணி, இரட்சணிய யாத்திரிகம், சுடர்மணி, இயேசு காவியம், இயேசு புராணம் எனும் காப்பியங்கள் மக்களிடையே பரவலாகப் பயன்படுத்தப்படும் நிலையிலிருக்க, கிறிஸ்தாயனம், திருவாக்குப் புராணம், சுவிசேட புராணம், திரு அவதாரம், கிறிஸ்து மான்மியம் ஆகியவை புழக்கத்தில் இல்லாமல் மறைந்தும் மறந்தும் போன காப்பியங்களாக உள்ளன. விவிலியத்தை ஆதாரமாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ள இக்காப்பியங்கள் கிறிஸ்தவ நெறியைச் சிறப்புடன் விளக்கும் வகையில் அமைந்துள்ளன. கிறிஸ்தவத் தமிழ்க் காப்பியங்களுள் தேம்பாவணி, இரட்சணிய யாத்திரிகம், சுடர்மணி ஆகியன 'முப்பெருங்காப்பியங்கள்' எனப் போற்றப்படுகின்றன.

## ஆசிரியர் அறிமுகம்

சுடர்மணி எனும் கிறிஸ்தவக் காப்பியத்தை எழுதியவர் எஸ். ஆரோக்கியசாமி அவர்கள். இவர் விழுப்புரத்திற்கு அருகிலுள்ள கோலியனூரில் சவரியப்பன் - குழந்தையம்மாள் தம்பதியினருக்கு 8-9-1912 இல் மூத்த மகனாகப் பிறந்தார். திண்டிவனத்திலுள்ள ஆர்.சி. ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் எட்டாம் வகுப்பு வரைப் படித்தார். 1929 முதல் 1931 வரை அதே பள்ளியில் ஆசிரியர் பயிற்சியும் பெற்றார். ஓவியம் வரைவதில் வல்லவராக விளங்கியமையால் அப்பள்ளியிலேயே ஓவிய ஆசிரியராக நியமனம் செய்யப்பட்டார்.

தமது தமிழாசிரியர் சுந்தரேச ஐயரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். குறிப்பாக வெண்பா, விருத்தம் ஆகியவற்றை இயற்றும் நுட்பங்களைக் கற்றுத் தெரிந்து கொண்டார். தென்னாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த நாட்டாண்மைக் கழகப் பள்ளிகளில் 37 ஆண்டுகள் பணிபுரிந்து தலைமை ஆசிரியராக ஓய்வுபெற்றார். ஏழை எளியவர்களுக்கு உதவி செய்பவராகவே வாழ்ந்து வந்தார். 1931 முதல் 1934 வரை தேனீர் என்ற ஊரில் பணியாற்றியபோது அருகிலுள்ள கிராமங்களிலிருந்து பள்ளிக்கூடத்திற்கு வரும் ஏழை மாணவர்களுக்கு மதிய உணவாகக் கேழ்வரகுக் கூழ் ஊற்றி அவர்களைத் தவறாது வந்து படிக்க ஆவன செய்தார்.

நாடகங்கள் வழி மக்களிடையே பல நல்ல கருத்துக்களைப் பரப்பினார். 1937 இல் ''பாலசுந்தரம்'' எனும் நாடகத்தை அரங்கேற்றி கொல்லாமை எனும் அறத்தை மக்களிடம்

பரப்பினார். மாணவர்களுக்குக் கணிதத்தை விளையாட்டாகவும் வேடிக்கையாகவும் கற்பிக்கும் முறைகளை இவருடைய ''கணித ஜாலம்'' (1951) எனும் நூல் விவரிக்கிறது. இம்முறையில் மாணவர்கள் தங்கள் கணக்குகளைத் தாங்களே உருவாக்கிச் செய்வார்கள். தமிழையும் கணிதத்தையும் ஒன்றாக இணைத்துக் கற்றுக் கொடுக்கும் முறை ஒன்றையும் உருவாக்கினார். இதன்மூலம் இரண்டு பாடங்களையும் ஒரே பாடமாகக் கற்பிக்க முடியும் என்பதை நிறுவினார். இவரது ''இளந்தமிழ் வாசகம்'' எனும் நூல் படங்கள் மூலம் மொழியைக் கற்பிக்கின்றது. இது முதல் வகுப்பு நூலாக இருந்தது. முதியவர்கள் அறுபது நாட்களில் தமிழை எழுதவும் படிக்கவும் தகுந்த புதிய முறையில் ''பைந்தமிழ் வாசகம்'' எனும் நூலை எழுதினார். ''ரகர றகர வேற்றுமை விளக்கம்'' எனும் நூல் அனைவரும் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் எழுதப்பட்டது. நான்கு பகுதிகளாக அமைந்துள்ள இந்நூல் ஒரு சிறு அகராதி போல் காணப்படுகின்றது.

ஆசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெற்றபின்னர் இயேசு நாதருடைய வரலாற்றைச் ''சுடர்மணி'' என்ற பெயரில் காப்பியமாக இயற்றினார். சிலுவைப் பாதை, ஜெபப்பாமாலை, அர்ச்.வேளாங்கண்ணி மாதா சரித்திரம் முதலிய சிறு நூற்களை வெளியிட்டுள்ளார். அச்சில் வராத நூற்கள் பல உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது புனிதர்களின் வரலாற்றைக் கூறும் ''மறைத்தொண்டர் புராணம்'' என்பதாகும்.

1956 இல் இவர் பணியாற்றி வந்த தூக்கணாம்பாக்கம் ஊர் மக்கள் இவரது ஆசிரியப் பணியின் வெள்ளி விழாவைக் கொண்டாடினர். 1962 இல் தமிழக அரசின் நல்லாசிரியர் விருதினைப் பெற்றார். சென்னை யுனெஸ்கோ மன்றம், கல்வித் துறையில் சிறப்பாகப் பணியாற்றிய இவருக்கு 1970 ஆம் ஆண்டில் "Roll of Honour" எனும் பட்டத்தை வழங்கியது.

இவருக்கு ஒன்பது ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் உள்ளனர். கணித ஜால ஆசிரியர் என்றும் ஆசுகவி என்றும் தமிழக மக்களுக்கு அறிமுகமாகியிருந்த எஸ். ஆரோக்கியசாமி அவர்கள் 1-4-1985 அன்று மாரடைப்பால் காலமானார்.

எஸ். ஆரோக்கியசாமி குறித்து டாக்டர் தி.தயானந்தன் பிரான்சிஸ் குறிப்பிடுவது வருமாறு:

> ''என்னால் மறக்க முடியாதவரும், என்னைப் பெரிதும் கவர்ந்தவரும் அருட்கவிஞர். எஸ். ஆரோக்கியசாமி ஆவார். அவர் அருட்கவிஞர் மட்டுமல்லர்; ஆசுகவியும் கூட. கவிபாடுவது அவருக்குத் தண்ணீர் பட்டபாடு என்று எளிதாக மரபுப்படி சொல்லி நிறுத்திவிட முடியாது. அவருடைய மூச்சே கவிதை மணம் கொண்டதாய் அவரை இலக்கிய சுவாசிப்பில் இயக்குவதை என்னால் காண முடிந்தது. பலகோணங்களிலிருந்து நோக்கும் ஆய்வுத் திறனும் பண்பார்ந்த வகையில் சொற்கள், தொடர்கள், கருத்துகள் இழையும்படி கவிதை செய்யும் ஆற்றலும் அவரிடம் இயல்பாகவே அமைந்திருந்தன.''

கிறிஸ்தவக் காப்பியம் படைக்க வேண்டும் எனும் எண்ணம் எஸ். ஆரோக்கிய சாமிக்கும், அவருடைய மகன் ஆ. பிரான்சிஸ் அந்தோணி இராசுக்கும் ஏற்பட்டதன் விளைவாக 'சுடர்மணி' எனும் காப்பியம் படைக்கப்பட்டது. இந்நூலை எழுதி முடித்த சூழலில், இந்நூலிலுள்ள இயேசு கிறிஸ்துவின் பிறப்பு, பாடுகள், சிலுவைப்பாதை, உயிர்த்தெழுதல் முதலிய பகுதிகளை இசைச் சொற்பொழிவுகளாகப் பல கத்தோலிக்கப் பேராயங்களிலும், பொதுக் கூட்டங்களிலும் வழங்கியுள்ளார். இந்நூல் 1976 ஆம் ஆண்டு முதற்பதிப்பாக வெளிவந்தது.

## சுடர்மணி

விவிலியத்தில் காணப்படும் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் எனும் நான்கு நற்செய்தி நூற்களின் அடிப்படையில் சுடர்மணி எழுதப்பட்டுள்ளது. இந்நூல் இனிய தமிழில் எளிய நடையில் அமைந்துள்ளது. வெண் முத்துக்களில் கதிரவனின் ஒளியைக் காண்பதுபோல் சுடர்மணியில் இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை ஒளியைக் காண முடிகின்றது. இந்நூல் விருத்த யாப்பில் கம்பராமாயண நடையில் பாலகாண்டம், உபதேச காண்டம், மீட்புக்காண்டம், உத்தான காண்டம் எனும் நான்கு காண்டங்களும் 1201 பாடல்களும் அடங்கிய நூலாக விளங்குகிறது. இருபதாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட கிறிஸ்தவக் காப்பியங்களுள் இதுவே முதன்மையானது. பாலகாண்டம் நான்கு படலங்களையும், உபதேச காண்டம் முப்பது படலங்களையும், மீட்புக் காண்டம் பத்து படலங்களையும், உத்தான காண்டம் மூன்று படலங்களையும் கொண்டுள்ளது.

இயேசு கிறிஸ்துவின் வாழ்வும் வரலாறும் மக்கள் வாழ்க்கைக்கு என்றும் குன்றாத சுடராக விளங்குகின்றன. 'நீங்கள் உலகத்திற்கு வெளிச்சமாயிருக்கிறீர்கள்' என்று தன்னுடைய ஒளியை மக்களுக்கு அளித்து அவர்களையும் ஒளியாக மாற்றிய இயேசுநாதர் வரலாற்றைக் கூறுவதால் சுடர்மணி எனப் பெயர் பெறுவதாயிற்று.

சுடர்மணி பல்வேறு சிறப்பம்சங்களால் சுடர் விட்டு பிரகாசிக்கின்றது. பிற காப்பியங்களைப் போன்று சுடர்மணியில் இயற்கை வருணனை சிறப்பாக அமைந்துள்ளது. இலக்கண நூலார் மலை, கடல், நாடு, நகர், அறுவகைப் பெரும்பொழுது, சிறுபொழுது, ஞாயிறு, திங்கள் தோற்றம் ஆகிய இவற்றின் வருணனைகளும் காப்பியத்தில் அமைதல் வேண்டும் என்பர். காப்பியத் தேவைக்கும் போக்கிற்கும் ஏற்ப, சுடர்மணியில் வருணனைகள் பல இடம் பெற்றுள்ளன. பால காண்டத்தில் ஏதேன் தோட்டத்தின் அமைப்பை,

*''தேனலர் மலர்கள் மல்கித்*
*தென்றலால் வாசம் ஊட்டும்*
*மீனினம் மகிழ்ந்து துள்ளி*
*மின்னியே ஓடும் நீரில்*
*மானினம் மயில்க ளோடு*
*மட்டிலா நடனம் ஆடும்*
*வானிடைப் புள்ளி னங்கள்*
*வணங்கிப்பல் வாழ்த்து கூறும்''* (சுடர்மணி, பா.5)

என வருணிக்கிறார். மேலும் காப்பியத்தில் ஞாயிறு, திங்கள் ஆகியவற்றின் தோற்றத்தை,

*''பகலவன் நாளும் வந்து*
*பணிந்துபின் மேற்கே செல்வன்*
*உகந்திடு மதியும் அல்லில்*
*உறவொடு தோன்றி மீள்வன்*
*மிகுந்திடும் வெயிலில் மேகம்*
*மேனின்று நிழலை ஈவன்*
*சுகமதை அருளக் காற்றும்*
*சுழன்றெங்கும் சூழ்ந்து நிற்பன்''* (சுடர்மணி, பா.6)

எனும் பாடல் மூலம் வருணித்துள்ளார். இவ்வருணனைகள் காப்பியச் சிறப்புக்குச் சான்றாக அமைகின்றன. காப்பியக் கவிஞன் தன் மன உணர்வுகளை வெளியிடும் பகுதியைக் கவிக்கூற்று என்பர். சுடர்மணிக் காப்பியத்தில் 52 பாடல்கள் கவிக்கூற்றாக அமைந்துள்ளன. கவிக்கூற்று எனும் உத்தியை அடிப்படையாகக் கொண்டு மக்களுக்கு அறிவுரையும் வழங்குகிறார். சான்றாக,

*"இறைவனின் செயல்தனை*
*எதிர்ப்பதில் கேடுள*
*இறைவனின் சொற்படி*
*இயங்குவ தோடுநாம்*
*இறைவனைத் தொழுதலே*
*இனிமையாம் என்பதை*
*முறைப்படி முனிவனின்*
*மூங்கைவி ளக்குமால்"* (சுடர்மணி, பா. 28)

எனும் பாடலைச் சுட்டலாம். மேலும் சிலுவைப் படலத்தில் மக்கள் அழுகையுடன் மேகமும் மழையாக அழுதது என்பதைத் தனது கூற்றால் பின்வருமாறு விவரிக்கிறார்:

*"கழுமரம் மீதில் தொங்கும்*
*கர்த்தரைக் கண்ட மேகம்*
*பழுதின்றி நிலைத்து நின்ற*
*பான்மையை விடுத்தே ஓடி*
*அழும்மக்க ளோடு சேர்ந்தே*
*அழுததை இன்றும் எண்ணி*
*அழுவதே மழையாம் என்றிங்(கு)*
*அறிந்தவர் உண்டோ அம்மா!"* (சுடர்மணி, பா. 1106)

கவிதையில் அமையும் அணிகள் அதற்கு அழகு சேர்க்கின்றன. காட்சிப் படலத்தில் ஏரோது என்னும் அரசனின் ஆணைப்படி இளங்குழந்தைகளைக் கொல்லப் புறப்பட்ட கொலைகாரர்களுக்கு மான் கூட்டத்தையும் நீர்த்தேக்கத்தையும் பின்வரும் பாடலில் உவமையாகக் காட்டுகிறார்:

*"அரையனின் ஆணை கேட்டே*
*அங்குள கொலைஞர் எல்லாம்*
*இரையதைத் தேடி யோடும்*
*இளமரிக் கூட்டம் போலும்*
*கரையதை உடைத்துப் பாயும்*
*கனத்தநீர்த் தேக்கம் போலும்*
*புரையிலார் உயிர்கு டிக்கப்*
*புகுந்தனர் ஊரில் என்னே!"* (சுடர்மணி, பா 103)

நம் உள்ளத்தைத் தீய எண்ணங்கள்பால் ஈர்க்கும் சாத்தானின் செயலை விவரிக்கும்போது பள்ளத்தில் பாயும் நீர்போல் பாவமாம் பாதாளத்தில் நம் உள்ளத்தைச் செலுத்தி நம்மைக் கயவனாகவும் காமுகனாகவும் ஆக்குவான் என உவமை நயம்பட விவரிக்கிறார். சிலுவைத் துன்பத்தைச் சந்திக்க முற்படும் இயேசு கிறிஸ்துவின் அவலநிலைக்கு உருகி ஆற்றாது கடல், மரம்,

குன்று, மண், பறவைகள் என இயற்கையெல்லாம் தவித்ததை உருவகமாகப் பல பாடல்களில் பாடுகிறார். தற்குறிப்பேற்ற அணி நயம்பட இப்பாடல்கள் அமைந்துள்ளன. சான்றாக, மீட்பரின் சிலுவைச் சுமையால் ஆழ்கடல் ஆட்டம் கொண்டு தன் அலைகளை எழுப்பி அழுது ஏங்கியதாகப் பின்வரும் பாடல் மூலம் விவரிக்கிறார்:

*"மீட்பர் சிலுவை யின்சுமையால்*
*மெலிந்தே வீழும் நிலைகண்டு*
*ஆட்டங் கொண்ட ஆழ்கடலும்*
*அலையை எழுப்பி அழுதேங்க*
*ஓட்டங் கொண்ட உயிரினங்கள்*
*உலகை விட்டே மடியாமல்*
*நாட்டார் தம்மைப் பழிதீர்க்க*
*நாடி யாங்காங் கோடினவே"* (சுடர்மணி, பா.1095)

இயற்கையின் வழக்கமான செயல்பாடுகளில் தன் குறிப்பை அவற்றின் மேல் ஏற்றி தற்குறிப்பேற்ற அணியாகப் பல பாடல்கள் சுடர்மணியில் உள்ளன.

*"இவர்க்கு நன் னிழலை ஈய*
*எண்ணிடு மரங்கள் எல்லாம்*
*இவரொடு செல்லும் பேறிங்(கு)*
*இல்லையே என்று சோரும்"* (சுடர்மணி, பா 60)

எனும் இப்பாடலில் மரியன்னைக்கு நிழல் கொடுக்க மரங்களிடையே போட்டி நிலவியதாகப் பாடும் திறம் பாராட்டத்தக்கது.

*"வலைதனை விட்டுச் சீமோன்*
*வரபில வேந்தி ரன்தன்*
*வலைதனை வீசி அண்ணன்*
*வழிவர மேலுஞ் சேசு*
*வலைதனைப் பழுது பார்க்கும்*
*வேறிரு வலைஞர் தம்மை*
*வலைதனை விட்டென் பின்னே*
*வாருங்கள் என்று அழைத்தார்"*

எனும் பாடல் சொல்லாட்சியுடன் சந்தச்சிறப்பு மிக்கதாய் ஆசிரியரால் பாடப்பட்டுள்ளது நயமிக்கது.

இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றைத் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையில் புதுமைப் பொலிவுடன் மக்களுக்கு அறிவித்தலே இவருடைய இலக்கியக் கொள்கையாக விளங்குகிறது. பழமைக் காப்பிய மரபுகளைப் போற்றியும், புதிய மரபுகளை வகுத்துக் கொண்டும் சுடர் மணியைச் சிறந்த காப்பியமாக இயற்றியுள்ளார். பல்வேறு சிறப்பம்சங்கள் கொண்ட சுடர்மணியால் தமிழ் கிறிஸ்தவ இலக்கிய வரிசை பொலிவு பெறுகின்றது.

## பால காண்டம்

### 1. தூதுப் படலம்

#### உலகப் படைப்பு

4. உலகினைப் படைத்த மாயன்
உளதெலாம் ஐந்தே நாளில்
நலமுடன் ஆக்கி ஆறாம்
நாளினில் தனது சாயல்
கலந்திட மனிதன் தன்னைக்
கன்னியோ டாக்கி நல்ல
நிலவளக் காவி லிட்டு
நிறைவரம் ஈந்தா னன்றே

#### பூங்காவின் அமைப்பு

5. தேனலர் மலர்கள் மல்கித்
தென்றலால் வாசம் ஊட்டும்
மீனினம் மகிழ்ந்து துள்ளி
மின்னியே ஓடும் நீரில்
மானினம் மயில்க ளோடு
மட்டிலா நடனம் ஆடும்
வானிடைப் புள்ளி னங்கள்
வணங்கிப்பல் வாழ்த்து கூறும்.

#### மிருகங்களின் அடக்கம்

6 கொடுந்தொழில் மிருகம் எல்லாம்
கொண்டவால் குழைத்து நிற்கும்
கடுவிடம் படைத்த தெல்லாம்
கவினொடு வந்து போகும்
நெடுமரங் கனிக ளீந்து
நிழல்கொடுத்து அசைந்தே ஆடும்
மடுதனில் தெளிந்த நீரும்
மட்டிலா தேங்கிச் சோரும்.

#### இயற்கையின் செயல்

7 பகலவன் நாளும் வந்து
பணிந்துபின் மேற்கே செல்வன்
உகந்திடு மதியும் அல்லில்
உறவொடு தோன்றி மீள்வன்
மிகுந்திடும் வெயிலில் மேகம்
மேனின்று நிழலை ஈவன்
சுகமதை அருளக் காற்றும்
சுழன்றெங்கும் சூழ்ந்து நிற்பன்.

### கடவுளின் வருகை

8. இத்தகு சூழல் தன்னில்
   இருந்தஅம் முதல்ம னுக்கள்
   நித்தமும் பரனை யெண்ணி
   நினைவுவே றின்றி வாழும்
   அத்தகு நிலையில் அன்னார்
   அறிவொடு அன்புங் காண
   வித்தகன் விரும்பி யாணை
   விதித்திடத் தோன்றிச் சொல்வான்.

### கடவுளின் கட்டளை

9. ''சாவுமை அணுகா(து) என்றும்
   சகலமும் உமதே என்றும்
   காவுதிர் கனிகள் உண்டு
   களித்தென்றும் இருங்கள் என்றும்
   காவினில் நடுவே நின்று
   கனிதரும் மரத்தை நண்ணின்
   சாவுறும்; சகல பேறும்
   சடுதியில் அழியும்'' என்றான்.

### முதல் மனுவின் பதிலும் பாவமும்

10. படைத்தவன் மொழியைக் கேட்டுப்
    பாவையும் பத்தா தானும்,
    ''தடையிலை தங்க ளாணை
    தட்டிடோம்'' என்றே சொன்னார்
    இடைபடு மரத்தில் ஏறி
    இருந்தவோர் பாம்பு சொல்ல
    இடைமரக் கனியை உண்டு
    இழந்தனர் எல்லாம் அந்தோ!

### சாத்தானின் வேலை

11 வானர(சு) இருந்து கெட்ட
   வஞ்சக சாத்தான் தன்பின்
   வானர(சு) அடையத் தோன்றி
   வரம்பெற்ற மனிதன் தன்னைத்
   தானர(சு) இருக்கும் அல்லில்
   தள்ளுதல் பொருட்டே பாம்பாய்க்
   கானதில் புகுந்த பின்னர்
   கடவுளுந் தோன்றிச் சொல்வார்.

### கடவுளின் சாபம்

12. ''மனிதனே! எனக்குச் செய்த
 மட்டிலா துரோகத் தாலுன்
தனிப்பெரும் வரங்கள் எல்லாம்
 தாழ்ந்தன; இனிநீ சென்று
நனியென உழைத்து உண்டு
 நங்கையைக் கூடிப் பெற்று
சனியென உலகை விட்டுச்
 சாதலே முறையென் றோர்வாய்''

### கடவுளின் வாக்குறுதி

13. முதல்மனு மனைவி மீது
 முறையிட, அவளும், ''பாம்பே
இதம்பல சொல்லிற்(று)'' என்றே
 இயம்பிப்பின் குறையி ரப்ப
அதஞ்செய மனமே இல்லா
 ஆண்டவன் மனுவை மீட்க
இதமொடு ''சுதனை இங்கே
 அனுப்புவன்'' என்றார் அன்று.

### மீட்பருக்காகக் காத்து இருத்தல்

14. அன்றுநாள் தொட்டே மக்கள்
 அவர்வர(வு) என்றோ என்று
நின்றனர் தவத்தில் நல்லோர்
 நேர்ந்தவர் வரவு நோக்கி;
வென்றிடும் அவரைப் பற்றி
 வேதியர் பலருந் தோன்றி
நன்றுமுன் னுரைகள் ஆற்றி
 நடத்தினர் இறையன்(பு) ஊட்டி.

### கவிக் கூற்று

15. இறைவனின் படைப்பே நாமும்
 இயற்கையின் கூற்றை நோக்கின்
முறைப்படி முதல்ம னுக்கள்
 மூலமே பிறந்தோம் என்றும்
குறையவர் செய்த தேனும்
 குவலயத் துள்ளோர் எல்லாங்
கறையொடு பிறந்தோம் என்றும்
 காண்டலும் எளிதே யன்றோ

# 16. சீவ அப்பப் படலம்

## அப்போஸ்தலர்கள் திரும்பி வந்ததும் ஐந்து அப்பங்கள் பெருகினதும்

### (வேறு சந்தம்)

490 மறையுரை யாற்றச் சென்ற
மாணவர் திரும்பி வந்து,
மறையவர் தாளில் வீழ்ந்து,
மறைபுகல் வேளை கண்ட
கறையிலாச் செய்தி தன்னைக்
கழறவுஞ் சேசு, "நாமோர்
மறைவிடம் ஏகி ஓய்ந்து
மனநிறை(வு) அடைவோம்" என்றார்.

491. அவருரைக்(கு) இசைந்த சீடர்
அங்கொரு படகில் ஏறித்
தவறின்றி பெத்சை தாவின்
தனித்தவோர் திடலுக்(கு) ஏக,
அவர்களங்(கு) ஏகுஞ் செய்தி
அறிந்தவர் கூட்டம் ஒன்றும்
தவறின்றி அங்கு வந்து
தங்கியது அறிந்து சேசு,

492. வந்தவர் குறையொ ழித்து
வன்திடல் அமர்த்தி மிக்க
சிந்தனைக்(கு) ஏற்ற(து) எல்லாஞ்
செப்பிட மேலும் மக்கள்
வந்தங்கு கேட்ட தாலே
வன்திடல் பொங்கிற்(று) என்ன
நிந்தையி லாத கூட்டம்
நிலைபட்டு நின்ற(து) ஆங்கே.

493. அந்திய வேளை வந்தே
அணுகுவ(து) அறிந்த சீடர்
நிந்தையி லாதான் தாளை
நெருங்கி "எம் குருவே! வேளை
அந்தியாய் இருத்த லாலே
அவர்களை விடுவீர் இங்கே
வந்தவர்க் குணவு கிட்டும்
வகையொன்றும் இல்லை" என்றார்.

494. ''நீங்களே இவர்கட்(கு) எல்லாம்
நிறையுணவு அளித்தல் தன்னை
ஈங்குநான் காண வேண்டும்''
என்றிறை சொலப்பி லிப்பு
''தங்கிய மக்கட்(கு) உண்டி
தரப்பணம் இருநூ(று) ஆமே
எங்கட்கிங்(கு) ஏது செல்வம்;
இறையவா'' என்ன, சேசு,

495. ''உங்களின் கரத்தி லுள்ள
உணவதன் அளவை நன்கு
பங்கமி லாமல் ஆய்ந்து
பகருவீர்'' என்ன, சீடர்
இங்கிரு மீனும் ஐந்தே
அப்பமும் எடுத்து வந்து
தங்கிய ஒருவன் உண்டு
தற்பரா என்று கூற,

496 அம்மொழி கேட்ட சேசு,
அவைகளைக் கொணரச் செய்து,
நிம்மதி யாக வேண்டி,
''நீங்களி வற்றைக் கொண்டே
எம்முன்னே இருப்போர்க்(கு) எல்லாம்
ஏற்றமாய்க் கொடுங்கள்'' என்ன,
அம்மொழிக்(கு) இசைந்த சீடர்
அனைவர்க்கும் அளித்தார் ஆங்கே

497 அனைவரும் அப்பம் பெற்றே
அளவின்றி உண்ட தோடு
அனைவரும் போது மென்றே
அறைந்தபின் மீதி யான
அனைத்தையுஞ் சேர்த்தெ டுக்க
அதுபத்தோ டிரண்டு கூடை
அனைத்திலும் நிறைந்த(து) என்றே
அறைந்தனர் சீடர் எல்லாம்.

498. பந்தியில் அமர்ந்தே அன்று
பரிந்துண்ட பெண்க ளோடு
பந்தியில் உண்ட பிள்ளைப்
பருவத்தோ ரன்றி ஆண்கள்,
பந்தியில் ஐயாயி ரம்பேர்
பசியற்றார் என்றால் அன்று
விந்தையாய் உலகம் போற்றும்
விருந்தொன்றே நடந்த(து) என்போம்

### சேசு கடல்மேல் நடந்தது

499. பின்னரங் கிருந்து சேசு
        பெத்சைதா நகருக்(கு) ஏக,
    தன்னுடன் இருந்த சீடர்
        தங்களைப் படகில் ஏற்றி
    முன்செலப் பணித்துத் தங்கி
        முடிவிலான் தாளை வேண்டிப்
    பின்னந்த கடலின் மீதே
        பெருநடை யாகச் சென்றார்.

500. படகினிற் சென்ற சீடர்
        படரலைப் புயலில் மோதி
    திடமற்றோர் ஆகி நெஞ்சந்
        திகைத்திடும் இரவு தன்னில்,
    கடலலை மீதில் ஓராள்
        கருத்தொடு தம்மை நோக்கி
    நடந்துடன் வருதல் கண்டு
        நடுங்கினர் பெரிதும் அஞ்சி

501 வருவது பூதம் என்றே
        வாடிய சிலபேர் அஞ்ச
    ''வருவது நான்தான்'' என்று
        வருமொலி கேட்ட சீடர்,
    வருபவர் மீட்பர் என்றே
        வணங்கிட, சீமோன், ''எந்தாய்!
    வரும்வரம் எனக்குந் தாரீர்!
        வந்துமைத் தொழவே'' என்றார்.

## 30. எரிக்கோ படலம்

### எரிக்கோ குருடன் குணம் பெற்றது

814. பின்னவர் எரிக்கோ தன்னின்
        பெரும்பாதை யோரஞ் செல்ல,
    ''என்கண்ணைத் திறப்பீ ரையா'',
        என்றொரு ஒலியைக் கேட்டே
    ''என்முன்னே அவனைக் கொண்டு
        வாருங்கள்'' என்று சொல்ல,
    நன்றென அவனை மக்கள
        நடத்தியங்(கு) அழைத்து வந்தார்

815. வந்தவன் தன்னைக் கண்டு,
"வகையிலாக் கண்ணை என்னால்
விந்தையாய்த் திறந்து பார்க்கும்
விழிதர லாமோ?" என்ன,
"தந்தையே! தாவீ தன்தன்
தனிமுதற் பொருளே! உம்மால்
இந்தப்பா ருலகில் ஆகா(து)
இருப்பதும் உண்டோ?" என்றான்.

816. அவன்கொண்ட உறுதி கண்டே
ஆண்டவர் அவனை மெச்சி,
"அவனியில் உன்பால் உள்ள
ஐயப்பா டற்ற தன்மை
எவனுக்கும் இருந்த தில்லை;
இனியுனது உறுதி யாலே
அவனியைக் காண்பாய்" என்றே
அறைந்துமேல் நடந்தார் அன்று;

### சக்கேயு வீட்டில் சேசு விருந்துண்டது

817. அந்தகன் பார்வை பெற்றே
அகன்றதன் பின்னே சேசு,
நிந்தையி லாத கூட்டம்
நெறிபடச் சென்ற காலை,
விந்தையாய்ச் சேசைக் காண
விரும்பியோர் குள்ளன் ஓடி
முந்திய மரத்தி லேற
முயல்வதைக் கண்டு நின்றார்.

818 குள்ளனாய் இருந்த தாலே
குறைவின்றிச் சேசைக் காண
மெள்ளஅக் கூட்டத் துள்ளே
மிகுமிடி பட்டுப் பார்த்தும்
கள்ளமி லானைக் கண்டு
களித்திட இயலா னாகித்
தள்ளிய கூட்டம் விட்டுத்
தனிமரம் ஏறி நின்றான்.

819. நின்றதும் சேசு அந்த
நிலையுளான் தனைவி ளித்தே,
"என்னிடம் இறங்கி வா உன்
இல்லத்தில் உணவு கொள்ள
உன்னினேன்; கவலை வேண்டாம்;
ஓடிவா" என்ற ழைக்க,
நன்றென அவனி றங்கி
நாதனதாள் பணிந்தான் ஆங்கே

820 அன்றவன் வீட்டில் தங்கி
அண்ணலும் உணவ ருந்தி,
''நன்றுஉன் பண்பும்'' என்ன,
''நாதனே! நின்பொ ருட்டாய்
என்னுடைச் சொத்திற் பாதி
ஏழைகட்(கு) அளிப்பேன் ஏய்த்த
பொன்பொருள் இருக்கு மாயின்
போற்றிடா(து) அளிப்பேன்'' என்றான்.

821. அவனுரை கேட்ட சேசு
''அதுநன்றே; அதனை இன்றே
உவந்துநீ செய்வா யாகில்
உன்னில்லம் வளரும்'' என்றார்.
அவரங்கே உண்ணக் கண்டோர்
''அநீதரோ(டு) இவரே உண்டார்;
இவரிந்த சக்கே யூவின்
இழிதொழில் அறியார்'' என்றார்.

### பத்துக் கன்னியர் உவமை

946. மேலவர் நாடு தங்கள்
மின்னொளி கையில் ஏந்திக்
கோலமாய்க் கூடி நின்று
கொழுநனை அழைக்கப் போகுஞ்
சீலராங் கன்னிப் பெண்கள்
செய்கையை ஒத்தது என்று
மூலவர் சீடர்க் கோதி
முடிவிலிக் கதையைச் சொல்வார்

947. கன்னியர் பதின்மர் ஓர்நாள்
கடிமண வாளன் தன்னை
முன்னின்றே அழைக்கத் தங்கள்
முறைப்படி விளக்கை ஏந்திச்
சென்றனர்; விவேக முள்ளோர்
சேர்த்துத்தம் விளக்கி னோடு
முன்னறி வாக எண்ணெய்
முகக்கவுந் தவற வில்லை.

948. எண்ணெயில் லாவி விளக்கும்
இடையிலே அணைந்து போக,
எண்ணெயைக் கொள்ளச் சென்றோர்
எளிதிலே மீளா நிற்க,
மணமகன் வந்த வேளை
மதியுள்ளோர் அவனைக் கண்டு
மணவறை யுள்நு ழைந்து
மணமக னோடு (இ)ருந்தார்.

949. மதியிலார் பின்னே வந்து
மணமகன் தனைஅ ழைத்துங்
கதவையே தட்டிக் கேட்டுக்
கதறியும் 'உங்க ளைநான்
முதலிலே கண்ட(து) இல்லை;
முறைப்படி கொண்ட(து) இல்லை;
மதியிலா நீங்கள் என்னை
மறவுங்கள்' என்றான் நொந்து.

950. "மணவறைக்(கு) ஒப்பாம் வீடு;
மணமகன் இறையே ஆவார்;
மணப்பெண்கள் உலகில் உள்ள
மக்களைக் குறிப்ப(து) ஆகும்;
மணமகள் கையில் கொண்ட
மட்டிலா ஒளியே ஞானம்;
எண்ணெயென் பதுவே தூய்மை;
இதையெல்லாம் அறிவீர்" என்றார்

## 3. ஆரோகணப் படலம்

### சேசு கலிலேயாவிலும், செருசலேமிலும் சீடர்களுக்குக் காட்சியளித்தது

(சந்தம் வேறு)

1190 இறந்து (உ)யிர்த்த சேசு நாதர்
இனிய சீட ருக்கெலாம்
மறைவி லாது காட்சி தந்து
மனத்தில் அச்சம் ஓட்டியே
குறைவி லாது மொழிகளாற்றிக்
குணந்தி ருத்தித் தமக்குப்பின்
மறையு ரைகள் ஆற்றத் திட்டம்
மனநி றைவாய்ச் செப்பினார்.

1191 விண்ண கத்தும் மண்ண கத்தும்
விளங்கும் எந்தன் ஆணையே;
மண்ண கத்தைச் சுற்றி நீங்கள்
மறையு ரைக ளாற்றியே
உண்மை யோடு நம்பு வோரின்
உறுதி கண்டு நீங்களே
விண்ணில் வாழும் மூவர் பேரை
விளம்பி நீரால் ஆட்டுவீர்!

1192. நீரி னாலே மூழ்க்குப் பெற்று
நீங்கள் ஊட்டும் முறைபபடி
பாரி ருந்து வாழ்ப வர்க்குப்
பரம கதியே கிட்டுமே;
நேரி தான உங்கள் ஆணை
நெறியில் நின்று வாழ்ந்திடார்
சீரி ழந்து வாழ்வு (இ)ழந்து
செந்ந ரகதில் வீழ்வரே!

1193. உங்கள் ஆணை நம்பி நல்ல
உள்ளொ ளிதனைப் பெற்றவர்
தங்கி நின்ற பேய்கள் எதையும்
தலைதெ றிக்க ஓட்டுவார்.
பொங்கி எழும்பும் நோய்கள் தம்மைப்
'போக' என்றே விரட்டுவார்,
எங்கும் இருள கற்றி ஞான
எரியு மாகி வாழுவார்

1194. கொடிய நாகப் பாம்பை எல்லாம்
குனிந்து கையால் தூக்குவார்.
படித்தி டாத மொழியில் எல்லாம்
பலவு ரைகள் ஆற்றுவார்
கொடிய நஞ்சு தன்னை உண்டு
குறைவி லாது வாழுவார்.
முடிவி லாத உலகில் ஏறி
மூன்று லகமும் காணுவார்.

1195. நீங்கள் உங்கள் மக்களுக்கு
நிறைத வத்தை ஓதியே
தங்கு கின்ற பாவம் என்னுந்
தளைத றித்தே ஓட்டியே
வீங்கு கின்ற உலக மக்கள்
விண்ண கத்திற் சேரவே
நீங்கள் ஆக்கும் பணிக ளோடே
நிலைத்(தி) ருப்பேன் என்றுமே.

1196. மேலும் இன்னும் ஞானம் ஏற்று
மேதி னிக்குள் மறைதனை
நாலு திக்கும் எடுத்தே ஓத
நல்வ ரங்க ளீந்திட
மேலும் அங்கே சேர்ந்தே உங்கள்
மீதில் தூய ஆவியை
ஏலு தலாய் விடுந்த னைக்கும்
எருச லத்தில் கூடுங்கள்.

1197. ''அச்சம் உங்க ளிடத்தி லண்டி
இனியி ருத்த லாகுமோ?
இச்ச கத்தில் உங்க ளோடே
என்றும் இருப்ப தென்கடன்.
எச்சம் இன்றி எந்தன் ஆட்சி
இனிவ ளர்ந்து நாட்டிலே
இச்ச கத்தின் முடிவு மட்டும்
இருந்து வாழும்'' என்றனர்.

### சேசு விண்ணேறியது

### (சந்தம் வேறு)

1198 பிரிந்திடும் வேளை சேசு
பெத்தனி யாவ டைந்து
பிரியதம் சீடர்க்(கு) எல்லாம்
பெருவரம் ஈந்து கைகள்
விரிந்திட மேலெ ழும்ப,
வியந் தண்ணார்ந்(து) இருந்த சீடர்
பெரியஓர் மேகம் சூழ்ந்த
பின்னதை விட்(ட) கன்றார்.

1199. விண்ணகம் சென்ற சேசு
வியத்தகு செயலை எல்லாம்
எண்ணிய சீடர் ஆங்கே
எம்பிரான் கூற்றுக்(கு) ஏற்ப
விண்ணின்றே பாவி தோன்றும்
வியப்பினை யேற்று நல்ல
விண்ணக வரத்தைத் தாங்க
விரும்பியோ ரிடத்தி ருந்தார்.

### கவிக் கூற்று

1200 இந்த நல்ல உரைகள் எல்லாம்
இனிய தாகச் சொல்லிட
இந்தப் பாரில் மீட்பர் தோன்றி
இந்தப் பாடு பட்டுமே
விந்தை யாக உயிர்த்து மக்கள்
வியப்பு கொள்ளச் செய்தபின்
நிந்தை இல்லா வானெ ழுந்த
நியதி உண்டிங் கேட்டிலே!



# 30

## இயேசுவின் திருப்புகழ், அருட்குறள்

**ஆசிரியர் : வீ.ப.கா. சுந்தரம் (1915 - 2003)**

**அறிமுகம் : ப.ச. ஏசுதாசன்**

தமிழ்க் கிறிஸ்தவ இலக்கிய உலகிலும், தமிழிசை ஆய்வு வரலாற்றிலும் சிறந்ததொரு இடத்தினை உருவாக்கிக் கொண்டவர் அறிஞர் வீ.ப.கா. சுந்தரம் அவர்கள். இவர் பசுமலை பெற்றெடுத்த பைந்தமிழ்க் கொண்டல். தாம் உணர்ந்த உண்மைகளை ஆணித்தரமாக, அழுத்தம் திருத்தமாகச் சொல்லுவதிலும், நிறுவுவதிலும் வல்லவர். இந்து சமயத்திலிருந்து கிறிஸ்துவின் அன்பினுக்கு ஆட்பட்டுக் கிறிஸ்தவராய் தம்மை ஆக்கிக் கொண்டவர். தமிழுலகும், தமிழிசை உலகும் இவரை அறிந்த அளவிற்குத் தமிழ்க் கிறிஸ்தவ உலகம் அறிந்துகொள்ளவோ, போற்றவோ, பாராட்டவோ இல்லை. விரிந்து பரந்த தமிழறிவும், ஆழ்ந்த தமிழிசைப் புலமையும் உடைய இவர் மதுரை அமெரிக்கன் கல்லூரியிலும், மதுரை அரசரடி இறையியற் கல்லூரியிலும், பணியாற்றியவர். ‘பழந்தமிழ் இலக்கியத்தில் இசையியல்’ என்ற பொருளில் ஆய்வினை மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்றவர். தமது எண்பத்தாறாம் அகவையிலும், பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் தமிழிசைக் களஞ்சியங்களை உருவாக்கி வெளியிட்டார்.

இயேசுவின் அன்பிற்கு ஆட்பட்ட இக்கவிஞர், தமிழிசை மரபில் கிறிஸ்தவப் பாடல்களைப் பாடியுள்ளார். கிறிஸ்தவத் திருமறை உண்மைகளைக் கவிதைகளாகக் கற்பார் மனம் உருக இயற்றிய பெருமை இவருக்குண்டு. இன்றைய தமிழ்க் கிறிஸ்தவர்கள், தமிழிசை மரபில், திருச்சபைகளில் பாடிப் பரமனைப் பரவுதல் இல்லையே என்ற ஆதங்கம் இவருக்குப் பெரிதும் உண்டு.

வீ.ப.கா. சுந்தரம் இசை, நாடகம், சிறுகதை, கவிதை, சிறுவர் பாடல்கள் முதலிய பல்வேறு வகை நூல்களை எழுதியுள்ளார். இவர் இயேசுவின் திருப்புகழ், கிறிஸ்து பிறப்பு மங்கலக் கீர்த்தனைகள், பைந்தமிழ் பயிற்றும் முறை, அருட்குறள் (1954), பசுமலை தெய்வீக அன்பு நாடகம், சிறுவர் இன்பம், அகத்திணைத் தெளிவு, தமிழும் இசையும், பன்னிரு திருமுறை இசைக் களஞ்சியம், இறையிசைப் பாமலர், தமிழிசை வளம், மத்தளவியல் விருத்தியுரை ஆகிய நூல்களை எழுதியுள்ளார்.

திருப்புகழின் சந்தநயம் மனதைக் கொள்ளை கொள்வதாகவுள்ளது. இயேசுவின் திருப்புகழில் கவிஞரது சொல்லாட்சித்திறமும், கவிதையுணர்வும், ஓசையின்பமும் நுகர்ந்து மகிழ்தற்குரியன.

சான்றாக, மரியன்னையைத் 'தேனாம் கனிமொழி மானாம்' என்கின்றார். கிறிஸ்துவை, 'அருளாலே வானோர் தொழுநிலை ஏனோதுறந்தனர்' என ஓங்குகின்றார். உலகில் மக்கள் பாவவெள்ளத்தில் சிக்கித்தவித்து உழலும் நிலையை, 'மத்தில்படும் கட்டித்தயிருக்கு' ஒப்புமை காட்டுகின்றார். மேலும் கிறிஸ்து பெருமானிடம் தமது வேண்டுதலாக, 'ஒட்டுக்கிளை என ஒட்டிக்கொள அருள்' என வேண்டுகின்றார்.

அருட்குறள், விவிலியக் கருத்துக்களைக் குறள் வடிவில் படைத்துத்தரும் நோக்குடன் எழுதப்பட்டது. இந்நூல் விவிலியக் கருத்துக்கள் மட்டுமல்லாமல், திருக்குறள், திருவாசகம், இரட்சணிய யாத்திரிகம் ஆகிய நூல்களிலிருந்தும் கருத்துக்களைக் கொண்டுள்ளது. இந்நூல் 120 அதிகாரங்களை உடையது. ஒவ்வொரு அதிகாரத்திலும் பத்துப் பாடல்கள் வீதம் மொத்தம் 1200 பாடல்கள் உள்ளன. திருக்குறள் உலகப் பொதுமறை நூலாகவும், எல்லா மக்களாலும் போற்றப்படக்கூடிய நூலாகவும் இருப்பதால் வீ.ப.கா. சுந்தரம் அவர்களும் குறள் வெண்பாவைப் பயன்படுத்தி அருட்குறளைப் படைத்துள்ளார் எனலாம்.

அருட்குறளில் வரும் வான் தந்தை வணக்கம், வான்தந்தை அருள், திருமறை ஓதுதல், திருமறை இனிமை எனும் நான்கு அதிகாரங்கள் இத்திரட்டில் இடம் பெற்றுள்ளன. குறட்பாக்கள் அனைத்தும் அருட்பாக்களாக அமைந்து 'அருட்குறள்' என்ற பெயருக்குப் பொருத்தமாகவுள்ளன. அருட்குறட்பாக்கள் அனைத்தும் கிறிஸ்தவத் திருமறைச் செய்தியின் விளக்கமாகவும், கவிதை வடிவமாகவும் அமைந்துள்ள திறம் அறிந்து மகிழ்தற்குரியது. கிறிஸ்தவத் திருமறையின் ஒப்பற்ற தன்மையைக் கவிஞர், உலகெலாம் ஓதியுணர்தற்குரிய ஒப்பற்ற ஒரு நூலாக அது அமைந்துள்ளது எனக் கூறுவது பேருண்மையின் விளக்கமாகவுள்ளது. இவரது பாடல்களின் அருமைகளை அறிந்து போற்றுதல் வேண்டும்.

இயேசு கிறிஸ்துவின் போதனைகளுள் குறிப்பிடத்தக்கது 'ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறு கன்னத்தைக் காட்டு' என்பதாகும். இக்கூற்றை,

> *"அறைந்தோற் இறையமறு கன்னமீந் தோனே*
> *நிறைந்தான் நெடுநெறி நின்று"* (325)

என வீ.ப.கா. பாடுகிறார். மேலும் இயேசு கிறிஸ்துவைத் துன்புறுத்தியதை,

> *"ஆணியும், முள்முடியும் அள்ளும் கசையடியும்*
> *காணின் ஓர் கல்லும் அழும்"* (611)

என உருக்கமுடன் பாடியுள்ளார். விவிலியக் கருத்துக்கள் சிறப்பான, எளிமையான முறையில் குறட்பாக்களாக அமைக்கப்பட்டுள்ளமை பாராட்டிற்குரியது.

சிலப்பதிகாரத்து இசையியல், நாட்டிய நன்னூல், யாழ் நூல், காரைக்கால் அம்மையார் எனப் பல நூல்களை உருவாக்கிக் கொண்டிருந்தபோது எதிர்பாராத வகையில் 2003 ஆம் ஆண்டு மார்ச் 9 ஆம் நாள் இயற்கை எய்தினார்.

## இயேசுவின் திருப்புகழ்
## ஆதித் திரு மொழி - வடிவானார்

சந்தம் - தான தன தன தனதானா
வண்ணம் - பாதி மதிநதி

1

ஆதி தனிமொழி ஆதி குருமொழி
தாதை தருமொழி - வடிவானார்
தாதை உடனுறை ஆதி இறைமொழி
ஓதும் மறைப்படி - உருவானார்

2

தேனாம் கனிமொழி மானாம் - மரியிடம்
ஆனார் ஒரு மக(வு) - அருளாலே
வானோர் தொழுநிலை ஏனோ துறந்தனர்
ஊனார் மனு வென - உருவானார்.

3

நானோ துகள் அவர் தாமே இறைஒளி;
நானோ உறவுஇலை - அவர் யாரோ!
நானோ கடைமகன் தாமோர் தனிஇறை
ஆனால் இரங்கினர் - அருளாலே.

4

மேவும் உலகுள யாவும் படைத்துநம்
மீதும் அருள்தர - உயிரீந்தார்
கூவும் இசைமலர்ப் பாவும் திருவடி
தூவி மனங் கொளும் - இறையோனை.

## கட்டிடும் கரம் அருள் - இறையோனே

சந்தம் - தத்தன தனதன தனதானா
வண்ணம் - கைத்தல நிறைகனி

1

சுற்றிலும் பகைவினை முற்றுகை இடுகையில்
முற்றிலும் உதவிடும் - முழுமூலா
நற்றிரு மலரடி பற்றிடும் உறுதியைப்
பெற்றிட நினதருள் - பொழிசீலா

2

பெற்றவர் தமதரும் சிற்றறி வுடைமகன்
சுற்றியும் அழிவுற - விடுவாரோ?
உற்றவர் உனைவிட மற்றவர் எவருளர்?
சற்றருள் பரிவுடன் - பதம்நாட

3

சுட்டிடும் சுடரினில் சொக்கிடும் சிறுபுழு
சுற்றிவந் தழிவுறல் - எனவேதான்
மட்டறு சிறுவழிப் பற்றினில் திரிதரும்
அற்பனுக்கருள்புரி - வழிசேர

4

வற்றிரை நடுவினில் சிக்கிய பட(கு) எனக்
கெட்டிடும் அடியவன் - கரையேற
நற்றுணை எனவரும் சொற்றுணை அருளியும்
கட்டிடும் கரம்அருள் - இறையோனே.

## ஒட்டுக் கிளை என ஒட்டிக் கொளஅருள்

வண்ணம் - முத்தைத் தரு பத்தித் திருநகை
சந்தம் - தத்தித் தன தத்தித் தனதன - தனதானா

1

| | | |
|---|---|---|
| மத்தில்படும் | கட்டித் | தயிரென |
| மக்கள் | பெறும் | குட்டிக் கிளிஎன |
| மக்கில்படும் | பச்சைப் | பசைஎன - உழல் கின்றேன். |

2

| | | |
|---|---|---|
| சித்தப்புயல் | சிக்கித் | திணரிடும் |
| சிட்டுக்கிரு | செட்டைத் | துணைஎனச் |
| செப்பற்கரும் | பக்கத் | துணைநலம் - அருளாயோ? |

3

| | | |
|---|---|---|
| ஒத்துக் கொளும் | ஒற்றைக் | குருவுடன் |
| ஒட்டுக் கிளை | ஒட்டுக் | கொளலென |
| ஒட்டிக் கனி | முற்றிப் | பெறஅருள் - முதலோனே |

4

| | | |
|---|---|---|
| கொத்துக்கொரு | பத்துப் | பலன்ஒரு |
| மித்துத் தரும் | வெற்றிக் | கிளைஎன |
| தித்தித் திட | முத்திக் | கனியருள் - இறையோனே |

## வருத்தும் கடலலையை அடக்கும் அருட்கடல்

சந்தம் - தனத்த தனதன - தனதானா

1

பெருத்துக் கடலலை இரைச்சல் சினமுடன்
மறித்துப் படகினை - மிக மோத,
பிடித்துப் படுபுயல் அடிக்கத் தொடர்பினர்
பிதற்றிக் கவலையில் - மிக மூழ்கி

2

உரத்துக் கடலலை உலுக்கிப் படகினை
உதைக்கத் தொழுவினர் - உளம் மாய்ந்து
உடைக்கப் புணையது அமிழ்க்கப் படுமென
நடுக்கக் குடரினர் - நலிந்தாரே

3

திருத்திப் புயலலை அடக்கற் கொருமலை
படுத்துப் படகினில் - துயில் போனான்
அடுத்துத் திருமலை நினைத்துத் துணைநிலை
தொடுத்துத் தொழுதனர் - துணைத்தாளே

4

வருத்தப் படுநரை அடக்கப் படுநரை
வதைக்கப் படுநரை - சிறை மீட்போன்
வணக்கிப் புயலலை நிறுத்திக் கடலலை
வளர்த்தன் அமைதியை - இறையோனே.

## நானில நல்லறத்தான் இறையோன்

சந்தம் - தனந்த தானந் தனதன தானன - தனதானா
வண்ணம் - இசைந்த ஏறும்

1 குறிஞ்சி மீதும் அறமழை பெய்தருள் - முகிலோனே
குறிஞ்சி மீது குருசினில் ஏறிய - குருவேந்தே

2. செறிந்த முல்லை வனமலர் காண்என - அறிவீந்தான்
அணிந்து முல்லை, மகள்நிறை பூண்என - அறமீந்தான்

3. சிறந்த நெய்தல் மனக்கடல் ஏகிய - அருட் பாதா
திகழ்ந்து நெய்த உடைநடம் ஆடிய - திரு மேனீ

4 நொறிந்த பாலை வெளிதனி நோன்றநற் பெரும்சீலா
பிரிந்தும் தந்தை இறையுடன் சென்றிடல் - அரும்பாலை

5 எறிந்த ஊடல் மருதநெல் பாதையில் - நடந்தாண்டோன்
இசைந்தி டாத வெறியரைக் காத்ததும் - மருதாண்மை

6. குறிஞ்சி முல்லை மருதமும் நெய்தலும் - தொழுதேத்தும்
குறித்து நல்கும் திருவருள் பாலையும் - இறையோனே.

## நினைவிலும் கனவிலும் மறவேனே

சந்தம் - தனன தனதன தனதன தனதன தனதான

1

பலரு மிக எனை இகழினும் உறழினும்
படரும் இடர்அலை சுழலினும் உழலினும்
பரவு திருஅடி உயிரிலும் உணர்விலும் - மறவேனே

2

நிலவு பதவிகள் ஒழியினும் அழியினும்
நிகரில் மனை மகர் இகலினும் அகலினும்
நினது திரு ஒளி நினைவிலும் கனவிலும் - தொழுவேனே

3

குலவு சுகநலம் குலையினும் உலையினும்
குறிகொள் மிகுபொருள் தவறினும் சிதறினும்
கொழுவு கிளைஎன முதலொடு முழுவதும் - உறுவேனே

4

உலகு முழுவதும் மருளினும் இருளினும்
உனத மலர் அடி நிழலிலும் அழகிலும்
உளமும் பெருகிட உருகிட அருளிடு - இறையோனே.

## நல்ல மேய்ப்பன்

சந்தம் - தனனா தனத்த - தனதானா
வண்ணம் - மருவே செறித்த

1

அருளே உடுக்கும் குழலே இசைக்கும்
அழகே படைக்கும் - இறை மேய்ப்பன்
அனைபோல் அணைத்துத் தனையே கொடுத்து
நினை வே நிறுத்தி எமை மேய்ப்பன்

2

மருதம் துளிர்க்கும் மகிழம் சுனைக்கும்
மகிழ் வே திளைக்க - எமைக் கூட்டும்
குறிஞ்சி மணக்கும் பெருஞ்சீர் - பழுக்கும்
கொழும் தேன் மனைக்குள் - கிடைபோடும்

3

மருளோம் புலிக்கும் வெருளோம் நரிக்கும்
அருளோம்பி நிற்கும் - அதனாலே
வரும்பே ரிடர்க்கும் உயிரும் கொடுத்து
வளமாய்ப் புரக்கும் - உயிரீகன்

4

பொருளே புகட்டிப் புயமேல் எடுத்துப்
புதுவாழ் வளித்துச் - சுமந் தேகும்
மழையே கொழித்துப் பிழையே பொறுத்து
வழியே நடத்தும் - இறையோனே

## உருகு மனம் கடலாக

சந்தம் - தன தனன தன தனன தானத் தானத் - தனதான
வண்ணம் - ஒரு பொழுது மிருசரணம் நேசத்தேவைத் - துணரேனே

அழகுமிகு மறை மலரின் ஆர்வத் தேனைப் - பருகேனே
அழிவு தரும் சிறுநெறியில் ஆடிக் கூடித் திரிந்தேனே

பழுதுபட எனதுநலம் பார்த்துப் பார்த்துக் - குலைந் தேனே
பரமசுக இனியநிலைப் பாதம் ஓதா - தலைந்தேனே

முழுதுமுனைச் சரணடையும் ஆசைத் தேனே - அகமூற;
முழுமறையின் அமுத ஒளி மூழ்கிப் பாடிக் களிகூர;

தொழுதுநினைந் துருகுமனம் தோன்றித்தோன்றிக் - கடலாகித்
தொடருமலர்ப் பதம்படியும் தூயம்வேண்டும் இறையோனே.

## செத்துக் கிடக்கும் உளம் - உயிர்பெற்று

சந்தம் - தத்தித் தனத்த தன - தனதான

1

செத்துப் புதைக்க உடல் பொத்துக் கொழுப்பு முடை
சிக்கிப் புழுத்ததது - பிணலாசர்
செப்பிக் கிருத்தின்அருள் பெற்றுத் திளைத்திலம் என்-(று)
உக்கிக் கொதித்தனர் அங்-(கு) - இருமாதர்

2

சித்தத்(து) இரக்கமுடன் உற்றுக் கிருத்திறைவன்
துக்கித்(து) உதிர்த்தன் இரு - மலர் நீரே
செத்துப் படுத்தன் உயிர் பெற்றுக் கிளைக்க என
செப்பக் களித்து விரைந்-(து) - எழுந்தானே

3

செத்துக் கிடக்கும் உளம் செத்துக் கிடக்கும் உயிர்
செத்துக் கிடக்கும் உடல் உனின் பாலே
தொத்திக் கிருத்துடன் பொ ருத்தித் திருத்திமனம்
பற்றிப் பதித்திடவும் - எழலாமே

4

முத்திக் கிருத்திறைவன் மிக்கக் கருத்துடன் உன்
பக்கத் திருக்க இனும் - அறியாயோ?
முற்றிச் சுகத்திலுற எட்டிப் பிடித்(து) உயிரும்
பெற்றுத் துளிர்த்(து) எழுக - இறையோனை.

# அருட்குறள்

## 1. வான் தந்தை வணக்கம்

1. **அம்மை அப்பனிலும் அன்பன் இறைவன்**

தந்தையினும் தாயினும் தண்ணருள் தந்தவான்
தந்தையின் தாள்நிழல் தங்கு (மத்தேயு 10 : 37)

2. **அன்பு வழிக்கே துணை**

மொழிக்கெல்லாம் 'அம்மா' முதன்மொழி; அன்பின்
வழிக்கெல்லாம் வானோன் முதல் (1 யோவான் 3 · 9)

3. **படைத்தவனைப் புதுப்பொருள் படைத்து வாழ்த்து**

பல்லுலகைப் பல்லுயிரைப் பண்பில் படைத்தோனைப்
பல்பொருள் நீ படைத்து வாழ்த்து. (ஆதியாகமம் 1 : 1 - 25)

4. **நடுநிலையில் நடத்துவோன் இறைவன்**

வெறுத்தல் உவத்தல் அகற்றி இறைமை
நிறுக்கும் நடுவாம் நிலை. (யாக்கோபு 4 : 12)

5. **அறத்தின் வடிவம்**

திருவாய்த் தெளிவாய் அறமாய் அருளாய்
உருவாம் இறைமையை ஓது. (யோபு 12 · 13)

6. **அனைவரும் கடவுள் மக்களாகிச் சேர்தல் தொழுகை**

அம்மையப்பன் ஆகிய நன்மைப் பரம்பொருளைச்
செம்மைநிகர் சேயனாய்ச் சேர்.

7. **தூயவனைத் தூயவழி நின்று தொழு**

தூய பரம்பொருளைத் தூய வழிவாழ்வைத்
தூய வழிநின்று வாழ்த்து. (1 கொரிந்தியர் . 16 : 29)

8. **தக்கவை செய்யத் துணை**

தக்கவை செய்யுங்கால் பக்கத் துணைநல்கும்
மிக்கபே ராற்றல் இறை. (யோபு 34 : 12)

9. **இழப்பிலும் நன்மையை உதவுவோன்**

தோல்வியில் நன்மை துளிர்க்க அருள்செயும்
சால்பே இறைமைச் சிறப்பு (அப்போஸ்தலர் 27 · 11)

10. **இறைவன் அருள்புரியும் அன்பன்**

இறைவன் அருளன்பன், அன்புசெய் யாதார்
அறியார் இறைவன் அடி. (1 யோவான் 4 : 8)

## 2. வான் தந்தை அருள்

11. **மகன் கிறிஸ்துவை உலகு உய்யத் தந்தவன்**

தன்ஒரே இன்மகவைத் தந்துலகை உய்வித்த
இன்னருளுக் கிங்குளதோ ஈடு.

12. **அன்பு பொழிந்து மீட்கும் இறை**

அன்பைப் பொழிந்துநம் ஆருயிரை மீட்டுவரும்
இன்பப் பொருளே இறை.

13. **வழி நடத்தும் இறை**

குறைபொறுத்து அன்புநெறி கூட்டியழைத் தேகும்
இறையருளை என்றென்றும் ஏத்து.

14. **நன்மை செயத் தூண்டுவது இறைமை**

என்றும் அருள்காட்டி இன்ப நெறிகூட்டி
நன்று செயத் தூண்டுமிறை நட்பு.

15. **துன்பத்தில் தூக்கி அணைப்பவன்**

துன்பப் பெருக்கில் துணைநின்று தூக்கியருள்
இன்பப் பெருக்கே இறை.

16. **வழிநடத்தும் இறைவன்**

வழிவாழ்வு வாய்மையாம் வான்மகவைத் தந்து
வழிநடத்தும் வள்ளலை வாழ்த்து.

17. **பற்று உறவில் யாவையும் படைத்தளித்தான்**

பற்றுறவாய் யாவும் படைத்தளித்த பண்பிறையைப்
பற்றுறவாம் நற்றொழிலால் போற்று.

18. **ஏழையர் பக்கம் இறை**

இழப்பிலும் ஊதியம், இன்மையிலும் வன்மை
வழங்கிடும் பேரருளை வாழ்த்து.

19. **எண் குணத்தானை எண்ணிக் குணம்பெறு**

எண்ணரிய விண்குணத்துத் தண்ணளியை எண்ணுந்தோ(று)
எண்ணமெலாம் ஏற்றமுறும் இன்பு.

20. **அன்புமயனை அன்பால் தொழு**

ஒப்பேது மில்லாத அன்புமய ஆண்டவனை
எப்போதும் அன்பினால் ஏத்து.

## 3. திருமறை ஓதுதல்

21. **கல்லெடுக்க முயன்றால் நாய் பறத்தல் போல்**

கல்லெடுக்க நாய்பறந் தற்றே திருமறைச்
சொல்லெடுக்கப் பேய்இறந்து போம்.

22. **மொழி அறிவில்லையேல் ஆழம் அறிதல் முடியாது**

கூர்மைமொழி இல்லாருக்(கு) இல்லை, திருமறையின்
சீர்மைவழி ஆழத் தறிவு.

23. **எழுத்து வழியாய் அறிதல்; இறையருள் வழியாய் அறிதல்**

பொருளினால் மட்டுமா பூக்கும் அறிவே?
அருளினா லும்வரும் ஆங்கு

24. **எழுத்தோ கொல்லும்; ஆவி உயிர்ஊட்டும்**

எழுத்தமைப்பு கொன்றாலும், ஊட்டும் உயிரே
பழுத்தறிவு பண்புணர்வுப் பட்டு.

25. **கற்றற்கு எளிது : உணர்ந்து வாழ்வில் கொள்ளல் அரிது**

ஓதற்(கு) எளிதாம்; உணர்தற்(கு) அரிதாம்நம்
காதலேசு காட்டும் கருத்து (2 பேதுரு 3 . 16)

26. **உலகத் திருமறை ; ஒப்பற்ற நூல்**

உலகெலாம் ஓதி உணரும் ஒருநூல்
இலகும் விவிலியம் இங்கு. (ஏசாயா 34 : 1)

27. **தெய்வீகம் மணக்கும் திருமறைப் பூ**

அருள்எழில் ஆக்கி அகத்தேனைத் தேக்கிப்
பொருள்மணக் கும்மறைப் பூ.

28. **இருபுறக் கூர்மை வாள்**

இருபுறமும் கூர்மைப் படுவாள் மறைநூல்
அருள்உறவால் ஆய்தற் குரித்து.

29. **அணுவுக்குள் அண்டம் போன்று**

அணுவைத் துளைத்துப்பே ராக்கம் புகுத்தி
நுணுக நுழைத்தவோர் நூல். (2 கொரிந்தியர் 10 20)

30. **காலை மாலை - திருமறை எனும் பால்**

காலையும் மாலையும் மெய்ம்மறைப் பாலைப்
பருகித் தொடங்கு பணி.

## 4. திருமறை இனிமை

31. **தேனினும் இனிது**

தேன்கூட்டில் வார்க்கும் தெளிதேனில் மிக்கினிதாம்
வான்கூட்டு மாமறை வார்ப்பு. (சங்கீதம் 19 · 10)

32. **தாய்ப்பாலினும் பயன் தரும்**

தாய்ப்பாலை வென்ற தனிப்பாலாம் மெய்ம்மறை
வாய்ப்பான தெய்வ மருந்து. (1 பேதுரு 2 : 2, 3)

33. **கற்கண்டு எதற்கு? சொற்கண்டு போதும்**

கற்கண்டும் தேனும் எதற்குத் திருமறைச்
சொற்கண்டே உட்கொண்டு சொக்கு. (எரேமியா 15 : 16)

34. **உள்ளத்தில் இன்ப ஊற்றுச் சுரக்கும்**

உண்ணுந்தோ(று) உண்ணுந்தோ(று) உள்ளமெல்லாம் ஊற்றோடும்
விண்ணின்பம் மெய்ந்நூல் விருந்து. (எசேக்கியல் 3 : 3)

35. **புடமிட்ட பொன்னிலும் மேலாம்**

புடமிட்ட தூயபைம் பொன்னிலும் மேலாம்
சுடரிட்ட நேயனருட் சொல். (சங்கீதம் 18 : 30)

36. **அற்புதச்சொல் மழை**

கற்கண்டும் தேனும் கனியும் கலந்துபெய்
சொற்கொண்டல் தூயனின் சொல்.

37. **இன் பொருள் ஒப்பல்ல**

இன்னல்எல் லாம்தீர்க்கும் மன்னரேசு மாமொழிக்குக்
கன்னல்தேன் கற்கண்டோ ஒப்பு. (சங்கீதம் 119 : 50)

38. **ஒருபடித் தேனும் ஒருபடிப்பாலும் கலந்துண்டதுபோல்**

படித்தேன் கலந்த படிப்பால்உண் டாற்போல்
படித்தேன் சுவைத்தேன் மறை (சங்கீதம் 119 : 103)

39. **வழிக்குக் கை விளக்கு**

செல்வழிக்கு நந்தாச் செறிவொளி நல்கிவரும்
நல்விளக்காம் மாமறையை நம்பு. (மாற்கு 4 : 21)

40. **கூகை கத்துதல் வெறு : கிளிமொழி கொள்**

முள்ளுடைக் காட்டில் முதுகூகைச் சொல்வெறுத்துத்
தெள்ளுமறைக் கிள்ளை மொழி கொள்.

## 20. திருவிருந்தாம் இயேசு

191. **விண்ணப்பம் செய்வோர்க்கு விண்ணின் அப்பம்**

விண்ணப்பம் செய்துருகி வேண்டுவோர் கண்டடையும்
விண்அப்பம் இயேசுதிரு வேந்து.

192. **குறையா (நந்தா) நன்மையின் மருந்து**

நந்தா நலமெல்லாம் நல்கும் திருவிருந்து
நொந்தாரின் நோய்க்கோர் மருந்து

193. **நட்பையும் உறவையும் உண்டாக்கும் உணவு**

நட்புறவை மாந்தர்க்கு நல்கி நலம்செய்யும்
ஒப்பெதுவும் இல்லா விருந்து

194. **உயிரில் உணர்வில் சேரும் விருந்து**

உடலினில் சாரும் உணவுகள்; கிறிஸ்தோ
உயிரினில் சாரும் விருந்து

195. **உணவானது உடற்கு; இயேசு உயிருக்கு**

உண்ணுணவு மெய்யுடன் சார்தல்போல் யேசுவாம்
அண்ணலுடன் சார்தல் விருந்து

196. **உயிர்க்கு உறுதிதரும் திருவிருந்து**

உடலுக் குறுதி உணவே; கிறிஸ்தூண்
உயிருக் குறுதி தரும்.

197. **விருந்தினால் பெறும் ஆற்றல்கள் எவை?**

ஒற்றுமை அன்புறவு நட்பினிமை யேசுவிடம்
பெற்றிடும் பேறாம் விருந்து.

198. **ஆணவ அழுக்கைப் பாதம் தொட்டுக் கழுவினார்**

ஆணவத்தை நீரினால் ஆண்டோர் கழுவினார்
பூண்அகத்தில் ஒற்றுமைத் தாழ்வு.

199. **அருளை ஊற்றி ஆணவ அழுக்கைக் கழுவினார்**

ஊற்றி அருளை ஒளிமலர்க்கை யால்கழுவி
மாற்றினார் மாயை மயக்கு

200. **தூய்மை எனும் துணியால் துடைத்தார்**

தடுத்திருந்த ஆணவத்தை அன்பால் கழுவித்
துடைத்தாரே தூய்மையி னால்.

## 86. இறையியல்

851. **இயேசுவின் வாக்கை இனிய தமிழில் சொல்**
தமிழ்கூறும் நல்லுலகில் தண்கிறிஸ்துவின் வாக்கை
அமிழ்தாம் அருந்தமிழில் ஆக்கு.

852 **திருச்சபை - தொட்டிச் செடி (குரோட்டென்சு)**
தொட்டித் திருச்செடியாம் தொல்சபையைத் தோண்டித்
தட்டித் தரையூன்றில் வாழ்வு.

853. **பைந்தமிழ்க் கலையில் இயேசு**
பைந்தமிழ் விண்கலையில் பண்பாட்டில் பண்இசையில்
செந்தண் கிறிஸ்தரசைச் செப்பு

854. **கணவனற்ற முண்டைபோன்று மோனையற்ற பாட்டு**
மோனை எதுகையிலா முண்டை இசைபாட்டை
ஈனமுற ஆக்கல் இழிவு

855. **பொருளற்ற சொல்**
விளக்கெண்ணை தாளித்த வெண்டைக்காய்ச் சொல்லில்
விளக்குதல் வீணாம் விலக்கு.

856. **செய்கை இறையியல் உய்கை தரும்**
வைகை எனவழங்கும் செய்கை இறையியல்
உய்கை அளிக்கும் உயிர்க்கு.

857. **இயேசு முத்தை, அழுக்குப் பாவத்துணியில் வைக்காதே**
அழுக்குத் துணியிட்(டு) அருண்முத்தைக் காட்டேல்
பழுக்கும் தமிழ்ப்பட்டில் காட்டு.

858 **தமிழ்மொழி திருமறைக்கு அழகுதரும்**
சொல்லாற்றல் மிக்கபெரும் தூய தமிழ்மொழி
நல்லாற்றல் நல்கும் மறைக்கு

859. **உன்மனச் சிந்தனைப் படியே வாழ்வு அமையும்**
எவ்வாறுன் எண்ணவியல் அவ்வாறுன் வாழ்வியல்;
செவ்வையுற எண்ணல் சிறப்பு.

860. **தன்னல இறையியல்**
தன்னலத்தைத் தாங்கவும் தன்னாய்வைக் காட்டவும்
பண்ணும் இறையியல் பாழ்.



# 31

# தெய்வத் திருமுல்லை

ஆசிரியர் : மு. பவுல் இராமகிருட்டிணன் (1915 - ——)

அறிமுகம் : ஜாண் ஆசீர்வாதம்

கிறிஸ்தவர்கள் மிகுதியும் பயன்படுத்துகிற 'சிலுவை' என்ற சொல்லுக்கு நல்ல தமிழ்ச் சொல்லாகக் 'குறுக்கை' என்ற சொல்லை வழங்கிய அருட்கவிஞர் இவர்தான். புலவர் பேராசிரியர் மு. பவுல் இராமகிருட்டிணர் அவர்கள் 1915ஆம் ஆண்டில் அவதரித்து ஒரு இராமகிருட்டிணராகவே வாழ்ந்து 1972-இல் தமது 56ஆவது அகவையில் 'பவுல்' ஆக மாறினார். அக்காலம் தொட்டு இவர் பவுல் இராமகிருட்டிணராக அறியப்பட்டு அரும்பெரும் இலக்கியப் பணியைக் கிறிஸ்துவுக்கென்று நிகழ்த்தலானார். இறைவன் அருள் பெற்றுப் பாடுவதாக உறுதியாக நம்பி அதனை அறிக்கையும் செய்த ஒரு கவிஞர் இவர். அவரே தமது ஒரு செய்யுளில் இதனை அறிக்கை செய்துள்ளார். அச்செய்யுள் பின்வருமாறு:

*''தேனார் கமழ் தொங்கல் தெள்ளு தமிழ்ப்பூவால்*
*யானோ புனைகின்றேன்? என்றனக்கே - நாளாகும்*
*கானாவூர் மன்றயின் கண் காணப் பிழிவீந்தார்*
*தானாப்புனை கின்றார் தார்''*

இறைவனின் மனுக்குல மீட்புத் திட்டத்தை இவர் 'மீட்பதிகாரம்' என்ற பெயரில் (சிலப்பதிகாரம் என்பது போல) பெருங்காப்பியமாக எழுதியுள்ளார். எனினும் இவருடைய சிற்றிலக்கியப் படைப்புகளே இது வரையில் இவரை ஒரு சிறந்த கிறிஸ்தவக் கவிஞர் என்று அடையாளங் காட்டியுள்ளன. திருவடிமாலை, ஆதிக்கலம்பகம் என்பன இவர் யாத்துள்ள சிற்றிலக்கியங்களுள் மிகுதியும் அறிமுகமானவை.

'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்பது திருவாசகத்தின் பெருமையை உணர்ந்த அறிஞர் குறிப்பது. திருவாசகத்திற்கு உருகியவர்களுள் மிகவும் உருகியவராகத் தோன்றுகிறார் கவிஞர் பவுல் இராமகிருட்டிணர். இவரது திருவடி மாலையிலும் தெய்வத் திருமுல்லையிலும் திருவாசகத்தின் சாயல் உள்ளது!

## தெய்வத் திருமுல்லை என்னும் சாலமோனின் திருக்கோவை

புலவர் பேராசிரியர் மு. பவுல் இராமகிருட்டிணர் யாத்தளித்துள்ள தெய்வத் திருமுல்லை என்னும் சாலமோனின் திருக்கோவை தலை சிறந்ததோர் சிற்றிலக்கியமாகும்.

## நூலின் அமைப்பு

தெய்வத் திருமுல்லை ஐந்து பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது. முல்லை என்னும் பெயருக்குப் பொருந்த ஒவ்வொரு பகுதியும் (1) அரும்பு (2) முகை (3) மொக்கு (4) போது (5) மலர் என முல்லை ஒன்றின் வளர்ச்சிப் படிகளைக் குறித்தவாறு பெயரிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பகுதியும் 'வடம்' என்ற உட்பிரிவுகளைக் கொண்டு விளங்குகிறது. அரும்பு 4 வடப்பிரிவுகளைக் கொண்டது. முகை 2 வடப்பிரிவுகளைக் கொண்டது. அடுத்த மொக்கு, போது ஆகிய பகுதிகள் தலா இரண்டிரண்டு வடப்பிரிவுகளைக் கொண்டவை. மலர் ஒரே வடம் கொண்டது. ஒவ்வொரு வடப்பிரிவும் ஒவ்வொரு அழகிய பெயரைத் தலைப்பாகக் கொள்ளுகிறது. காட்டாக முதற்பகுதியாம் அரும்பின் வடப்பிரிவுகள் முறையே (1) சூலமித்திய மங்கை (2) திகைப்புற்ற திருநுதல் (3) இருவயின் ஒத்தல் (4) ஆறுதல் பெற்ற அணங்கு என்று அமைகின்றன. 1977 வரையில் கையெழுத்துப் பிரதியாகவே இருந்தது இந்நூல். 1982 இல் இதனை முனைவர் வீ. ஞானசிகாமணி அவர்கள் தமது உரையுடன் நூலாக வெளியிட்டார்.

## நூலின் நுவல் பொருள்

விவிலியத்தின் மிகச்சிறந்த கதைப் பகுதியாக இசைநயஞ் சிறந்து விளங்குவது உன்னதப்பாட்டு ஆகும். இதன் ஆக்கியோன் உலக ஞானி என்று இன்றும் கருதப்படும் சாலமோன் மன்னர் ஆவார். இதுவே இந்நூலின் பாடுபொருள் ஆகும்.

சாலமோன் தமது இளமைக் காலத்தில் ஒருமுறை 'சூநேம்' என்னும் ஊருக்கு விஜயம் செய்திருந்தார். அங்கே எழிலே உருவான ஆயர்குலப் பெண்ணான சூலமித்தியைக் கண்டு காதல் வயப்பட்டார். அவளோ ஆயர்குல இளைஞன் ஒருவனிடம் தன் இதயத்தை இதற்கு முன்பே ஒப்படைத்திருந்தாள். இதனை அறிந்த சாலமோன் காதலன் அவனையே அவள் மணந்து கொள்ள வகை செய்கிறார். இறுதியில் தான் தெரிய வருகிறது அந்த ஆயர்குல இளைஞன் மன்னர் சாலமோனே என்பது. பாலியல் மிக்கப் பாடம் என்று ஒரு காலத்தில் யூதமக்கள் முப்பது வயதிற்குக் குறைவான இளைஞர்களுக்கு இந்நூலினைத் தடை செய்திருந்தனராம். கவிஞர் பவுல் அவர்கள் இவ்விருத்தாந்தத்தை அடிப்படையாக்கி ஒரு பேரின்பப்பாட்டையே இதன் வழி உருவகமாகப் பாடியுள்ளார் எனலாம்.

மூலபாடத்தில் காதல் தலைவனாய் வரும் சாலமோன் சிற்றின்பக் காதலின் ஒரு தலைவன் அல்ல. திருச்சபையாம் மணவாட்டிக்குகந்த மணவாளனாக உருவகப்படுத்தப்பட்டுள்ளார் சாலமோன். மூலப்பாடத்தின் சூலமித்தியே திருச்சபையைக் குறிக்கிறாள்.

கிறிஸ்துவுக்குள் வந்த நாள் முதலாய் புலவர் அவர்கள் பேரின்பப் பாடல்களையே பாடி வருவதைத் தமது நூல் வரலாற்றில் குறித்துள்ளார்.

> *"ஆவியில் நிறைந்த வந்த நாள் முதலாய்*
> *தேவியல் தழுவத் தீந்தமிழ்ப் பாக்களாம்*
> *மலர்களைத் தொடுத்தே மாலையாய் இயேசுவின்*
> *அவர்தரு பொன்னடிக் கணியலுற்றேன்"*

இவ்வாறு ஆசிரியரே குறித்துள்ளமையை வைத்து இவரது படைப்பான திருமுல்லையைப் பேரின்பக் கண்ணோட்டம் கொண்டே காண வேண்டியவர்களாகிறோம். எடுத்துக்காட்டாக,

ஆயர்குல இளைஞனாம் தன் தலைவனை அணைய அவாவிய சூலமித்தி அவள் தனது மறித்திரளை எங்கே மடக்குகிறாள் என்று கேட்கும் வேளை, என் மறித்திரளின் காலடியைப் பற்றிவா என்கிறாள்.

*"காலடியைப் பின் தொடர்ந்தே காவலர் கூடாரத்தின்*
*அயலகத்துள் ஆடுகளை அரிவையே நீ மேய்த்திடுவாய்"* (வடம் 2 : 1-8)

இது விவிலியத்தில்,

*"மேய்ப்பனைப் போலத் தமது மந்தையை மேய்ப்பார்"* (ஏசாயா 40:11)
*"நானே நல்லமேய்ப்பன், நல்ல மேய்ப்பன்*
*ஆடுகளுக்காகத் தன் ஜீவனைக் கொடுக்கிறான்"* (யோவான் 10:11)
*"கர்த்தர் என் மேய்ப்பராய் இருக்கிறார்"* (சங்கீதம் 23:1)

என்று இறைவன் மேய்ப்பராக உருவகப்படுத்திக் காட்டப்படும் பகுதிகளையே நமக்கு நினைவுபடுத்துகின்றது.

இவ்வாறு அகத்திணை வடிவில் சொல்லப்பட்ட பேரின்பப் பாடலே தெய்வத் திருமுல்லை. இந்நூல் மாணிக்கவாசகரின் திருக்கோவையாரைப் போன்றே நாயக நாயகி பாவத்தின் பக்திச்சுவையை வழங்கியுள்ளது. திருக்கோவையார் என்பது போலவே சாலமோனின் திருக்கோவை என்றும் இது பெயரிடப்பட்டது இக்கருத்தை அரண் செய்துள்ளது. சாலமோனின் கதையில் வைத்தெழுந்த திருக்கோவையாகிய பேரின்பப் பாடல் இது ஆதலின் சாலமோனின் திருக்கோவையுமாயிற்று.

## நூல்நயம்

இந்நூல் சாலமோனின் திருக்கோவை என்ற பெயரோடு தெய்வத் திருமுல்லை என்னும் பெயர் பெற்றது, இந்நூல் நயத்தை நமக்கு முன்நின்று எடுத்துக்காட்டுவதாகவே உள்ளது. முல்லை என்பது ஐந்திணைகளுள் ஒன்று என்பது கொண்டு 'முல்லை' என்ற பெயரை இந்நூல் கொண்டிருப்பதால் காதல் இலக்கியம் என்று கூறிவிடலாம். இனி முல்லை மலர் என்று கொண்டு அரும்பு, முகை, மொக்கு, போது, மலர் என்று நூற்பகுதிகள் பெயர் கொண்டுள்ளது.

*"காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி*
*மாலை மலரும் இந்நோய்" (குறள் 1227)*

எனும் காமத்துப்பாலின் பகுதியை நினைவில் வைத்து எழுந்ததே இப்பாடல் என்று உறுதிப்படக் கூறலாம். இதனால் இவ்வுருவகப் பாடலுக்குத் தமிழ்க் காதலே அடிப்படை என்று இதற்கமைந்த பெயரைக் கொண்டு உணர முடிகிறது.

இவ்வாறு காதல் பாடல் என்பதற்குத் 'தெய்வத் திருமுல்லை' என்ற பெயரையும், பேரின்ப உருவகம் என்பதற்கு 'சாலமோனின் திருக்கோவை' என்பதையும் நூலின் இரு பெயர்களாகச் சூட்டியுள்ளது நினைந்து மகிழத்தக்கது.

நூலின் பெரும்பகுதி நாடகக் கூற்றுகள் போல் உரையாடலாக அமைந்துள்ளது நூலின் மற்றொரு சிறப்புத் தன்மை. அவ்வகையில் இந்நூல் குறவஞ்சி இலக்கியத்தை நினைவூட்டுகிறது.

சூலமித்தியின் காதல் முதற்பகுதியில்(அரும்பு) அறிமுகப்படுத்தப்படுகிறது. அரும்பு தனது பசுமை மாறி வெண்மை மிக்க முகையாகிறது. அதாவது மீட்கப்பட்ட ஆன்மா இறைவனின் நல்லுறவால் தூயதாகி வளர்கிறது. இதுவே இரண்டாவது (முகை) பகுதியில் பாடப்படுகிறது. மூன்றாவது பாடலில் முகை சற்று பருத்துப் புறத்தார் கண்ணுக்குப் புலப்படும்படியாக மொக்கு ஆகிறது. தலைமகளின் ஊர்வலமும் காட்சியும் வரவேற்பும் திருமண விருந்தும் இதில் கூறப்படுகின்றன. ஆன்மாவுக்கு இறைவனோடுள்ள அன்பு புறத்தார்க்குப் புலப்படுவதின் உருவகம் இது. மொக்குகளாக இருந்தது போதாகிச் சற்று பிணியவிழ்கிறது. இது நான்காம் பகுதி. இப்பகுதியில் தலைவன், தலைவியின் தாயின் இல்லத்திற்குள் கொண்டு வரப்படுகிறான். தளையவிழ்ந்து போதாகியபின் முருகவிழும் மலராவது இறுதி நிலை. காதலின் வலிமையையும் காதலரின் விளியையும் இது தெற்றென ஒலிக்கிறது. இறைவனிடம் நீங்கி இன்னல் அனுபவித்த ஆன்மா ஆவியானவரின் திருவருளால் தலைவனை அறிந்து அவரோடு கலந்து இடையறாது இன்புறும் நிலை இங்கே உருவகமாக அமைந்துள்ளது.

இவ்வாறு இவ்விலக்கியம் புற நிலையில் காதலையும் அக நிலையில் பேரின்பச் சுவையையும் கொண்டு விளங்குகிறது. சிற்றிலக்கியமே ஆயினும் இது பெருங்காப்பியம் ஒன்றின் சுவை முழுவதையும் நல்கவல்லதாக விளங்குவதே இதன் அருமை!

## I அரும்பு (1:2-2:7)

### வடம் 1 (1:2-6) சூலமித்திய மங்கை

சூலமித்தி: 1:2

அவன் வாயின் முத்தங்கள் அளித்திடுக என்றனுக்கே

எருசலேம் மகளிர்: 1:2,3

முந்திரியின் பிழிவதனில் முதிர்சுவைத்தே நின்காதல்
இனிமை மிகக் கமழுவதால் ஏந்தலுன்றன் நறுநெய்யே
கலத்தினின்றும் கவிழ்த்தநறு நெய்கமழும் நிற்பெயரே
எனவேதான் நங்கையர்தாம் இசைந்துனயே நாடுகின்றார்.

சூலமித்தி: 1:4

ஈர்த்தெனையே தழுவிடுவாய்

எருசலேம் மகளிர்:

ஈதோயாம் விரைந்திடுவோம்

சூலமித்தி:

அரசன்றன் பள்ளியினுள் அழைத்தனன்காண் என்றனையே

எருசலேம் மகளிர்:

நினக்குள்ளே யாம்களித்து மிககமகிழசசி கொள்வோம்
பிழிவதனில் பெரிதாகப் பேணிடுவோம் நின்காதல்
நேர்மையுள்ளோர் நின்பாலே நேயம்மிகக் கொள்ளுகின்றார்

சூலமித்தி: 1:5,6

எருசலத்தின் ஏந்திழையீர் என்னிறந்தான் கரியதம்ம!
எனினும் யான் கேதாரின் இனியகூ டாரம் போல்
இசைமிகுந்த சாலமனின் எழில்வேதத் திரையே போல்
கண்ணுக்கு விருந்தான காரிகையான் என்பேனே
கரியவள்தான் என்றெனையே கருதாமற் காணீரே
பகலவன்றான் பட்டதனால் பாவையான் காருற்றேன்
என்தாயின் மக்களெல்லாம் என்றன்மேல் சினங்கதுவ
முந்திரிகைப் பொழில்களுக்கு முன்பாகக் காவல் வைத்தார்
எனக்குரிய பொழில்தனையோ யான்விடுத்தேன் காவாமல்.

## வடம் 2 (1:7-8) திகைப்புற்ற திருநுதல்

சூலமித்தி: 1:7

என்னுயிர்க்குக் காதலனே எங்குன்றன் மறிநிரையை
மேய்த்துச்சி வேளையிலே மீட்டுநீ மடக்குகின்றாய்
பகராயோ நீ யெனக்குப் பாவையுன்றன் தோழரது
மறிநிரைகள் தம்மருகே மயங்கிநின் றவைவதென்னோ!

சாலமோன் வேந்தன்: 1:8

மங்கையர்கள் தமக்குள்ளே மாசற்ற பெண்ணழகி
நீயதனை யறியாயேல் நேர்ந்தேயென் மறித்திரளின்
காலடியைப் பின்தொடர்ந்தே காவலர் கூடாரத்தின்
அயலகத்துன் ஆடுகளை அரிவையேநீ மேய்த்திடுவாய்.

## வடம் 3 (1:9-17) இருவயின் ஒத்தல்

சாலமோன் வேந்தன்: 1:9-11

பார்வோனின் தேர்பூண்ட பரிமாவோ அன்பே நீ
பொன்னாரம் பூண்ட உன்றன் பொற்புடைய கழுத்துடனே
மின்னாரும் மணிபூண்ட மென்கதுப்பின் வனப்பென்னே
வெண்பொன்னால் குமிழமுத்திச் செம்பொன்னால் அணிபுனைவோம்.

சூலமித்தி: 1:12-14

வேந்தன்றன் உணவருந்த வீற்றிருக்கும் வேளையெல்லாம்
ஏந்திடுமென் நறுங்கலநெய் எழில்மணந்தான் பரப்பிடுமே
கங்குலின் பொழுதனைத்தென் காதலனென் நகலிடையே
தங்குகின்ற வெண்போளச் செண்டெனயான் பகர்வேனோ
எங்கேதி ஊரருகே முந்திரிகைக் காநடுவே
பங்கேற்கும் மருதோன்றிப் பூங்கொத்தென் காதலனே.

சாலமோன் வேந்தன்: 1:15

எத்துணையே நின்னழகு! எத்துணையே நின்னழகு!
என்னேஎன் காதலியே! என்னேநின் மைவிழியே!
வண்ணத்துப் புறாக்களுடை தண்ணருள்சேர் நல்விழியோ!

**சூலமித்தி:** 1:16, 17

எழிலோய் என்காதலனே இனியோய் இனியோய் நீ
பாராய் நம் பள்ளிதனைப் பனிப்பச்சை மரகதமே
நமக்குற்ற மனைக்குவிட்டம் நல்லதொரு கேதுருநம்
மாடமோநல் தேவ தரு.

## II முகை (2:8-3:5)

### வடம் 5 (2:8-17) மனமகிழ் வரவு

**சூலமித்தி:** 2:8-9

இதுவேயென் காதலரின் இனியகுரல் கேளீரோ
பொதுவரிதோ குன்றின்மிசைக் குதித்தோடி மேடுகளில்
துள்ளிமரை யொருத்தலுநல் வெளிமானும் போல்வருவார்
பள்ளிமதிற் புறத்திருந்து பலகணியின் எஃகிடையே
மலர்முகத்தைக் காட்டுகின்றார் மங்கையிடம் பேசுகின்றார்.

**சூலமித்தி:** (காதலனின் சொற்களை எடுத்து மொழிகிறாள்) (2:10-15)

நலமிகுந்த அன்பேயென் நறுமலரே வாராயோ
கார்காலம் சென்றதுகாண் கனமழையும் நின்றதுகாண்
பார்மீது பூமலரும் பறவையினம் இசைபாடும்
காட்டில்வளர் புறவொலிநம் நாட்டினிலே கேட்டிடுமே
தேட்டத்தி பழுத்திருக்கும் திரட்சிமலர் மணங்கமழும்
அன்புநிறை ஆரணங்கே அருகெழுந்து வாராயோ
கன்மலையின் பிளவுகளில் கடுந்தூக்கின் மறைவுகளில்
தங்குமென்றன் மணிப்புறவே தண்முகத்தைக் காட்டிடுவாய்
பொங்குமுன்றன் இன்குரலைப் புகுதருவாய் என்செவியில்
நின்குரல்தான் இன்னமுதே நின்முகந்தான் பொன்னழகே
முந்திரிகைத் தோட்டத்தினில் பூப்பூத்துப் பிஞ்சலர்ந்து
காய்க்குமிந்தப் பருவத்திலே குழிநரியும் சிறுநரியும்
ஒய்க்குமத னாலவற்றை ஒழித்திடவே பிடித்திடுவீர்.

**சூலமித்தி:** 2:16, 17

என்னருமைக் காதலர்தாம் என்றனுக்கே உரியவராம்
என்னுரிமைக் காதலர்க்கே யானென்றும் உரியவளாம்
அல்லிமலர் காநடுவே ஆடுகளை மேய்க்கின்றார்
எல்விவர இருள்போமுன் இசைவான வைகறையில்
இன்றென்பால் திரும்பிடுக இனியவரே நறுமணஞ்சேர்
குன்றுவிடர்க் கன்மலையில் குதித்துவரும் கலைமானும்
மரைமானும் மான இரும்

## இயல் மூன்று

### (அறுசீர் ஆசிரிய விருத்தம்)

### வடம் 6 (3:1-5) கனா நிலையுரைத்தல்

சூலமித்தி: 3:1-4

கங்குல் தன்னில் என்னுயிர்க்குக்
காத லன்பர் பள்ளியினுள்
தங்கி யிருக்கக் காணாதேன்
கரைந்து தேடிக் காணலுற்றேன்
பொங்கி யெழுந்து நகரத்தினுள்
புகுந்து சாலை தெருக்களிலே
எங்கும் தேடிப் பிடித்திடுவேன்
என்று சொல்லிப் புறம்போந்தேன்.

ஊரில் சுற்றும் காவலர்தாம்
உற்று நோக்கிக் காணலுற்றார்
சீரின் மிக்க காவலரீர்
செம்மல் என்றன் காதலரை
நீரின் றெங்கும் கண்டதுண்டோ
நினைத்துக் கூறும் எனக்கேட்டேன்
ஏரின் மிக்கார் தமைக்காண
இன்னதும் சற்று வழிநடந்தேன்
இன்னது யிர்க்குக் காதலரை
இடையிற் கண்டு பிடித்ததும்யான்
மன்னது மன்பின் தாயுடைய
மனையில் என்னை ஈன்றதொரு
சின்ன அறைக்குள் உடனழைத்துச்
செல்லும் வரையில் சிக்கெனவே
துன்னு மன்பின் தூயரையான்
தொடுத்துப் பிடித்தேன் விடுத்திலனே.

சாலமோன் வேந்தன்: 3:5

தூய எருசலை மாநகரின்
தோழி மாரே எனதுயிர்க்கு
நேய மகள்தான் கண்ணடையும்
நேர மெல்லாம் காத்திருங்கள்
பாயு மான்கள் வெளிமரைகள்
பேரில் அன்பால் ஆணையிட்டேன்
சேய மலர்க்கண் விழிக்கும்வரை
செற்றி யெழுப்ப வேண்டாவே

## III மொக்குள் (3:6-5:1)

### வடம் 7 (3:6-11) மணமகள் அழைப்பு

சூலமித்தி: 3:6

வெள்ளைப் போளம் அகிற்கலவை
வணிகர் விற்கும் நறுஞ்சுண்ணம்
அள்ளி வழங்கும் மணம்பரப்பி
அடுத்திக் கானில் புகைத்தூண்போல்
துள்ளி வருவான் யாவனவன்
துலையில் அறிஞன் சாலமனின்
பள்ளி தன்னைச் சூழ்ந்துநிற்பார்
படைஞர் இசுர வேலர்குழாம்.

வேந்தனின் மெய்க்காவலன்: 3:7-10

போரிற் பயின்ற படைமறவர்
ஆறு பத்துப் பேரிருப்பார்
காரின் மிக்க நள்ளிரவில்
காவல் செய்வார் அஞ்சினராய்
வாரின் அரையில் தூங்கவிட்ட
வாளும் அசையும் லிபனானின்
பேரின் மிக்க நன்மரத்தால்
பிறங்கு தேரொன் றியற்றுவித்தான்
செம்பொன் தகட்டால் தட்டமைத்து
வெண்பொன் வார்த்துத் தூணெடுத்துப்
பைம்பொன் நீலம் ஊடொளிரப்
பாயல் விரித்தார் மாணிக்கத்தால்
இம்பர் ஏத்தும் எருசலத்தின்
எழிலார் மகளிர் தமக்காக
நம்பன் தேரின் உட்புறத்தே
நயப்பின் சால்வை போர்த்தனரே.

எருசலேம் மகளிர் பாடுதல்: 3:11

சீயோன் மகளிர் சென்றிடுவீர்
செங்கோல் வேந்தன் சாலமனும்
சேயோன் மகிழும் மணநாளில்
சிறப்பின் மிக்க விழாக்கோளில்
தாயார் சூடும் முடியுடனே
தககார் சூழ வீற்றிருக்கும்
தூயோர் போற்றும் காட்சிதனைத்
துருவிக் கண்டு வருவீரே.

## இயல் நான்கு

### (நிலைமண்டில ஆசிரியப்பா)

### வடம் 8 (4:1-7) மணவாளனின் காதற்செய்தி

சாலமோன் வேந்தன்: 4:1-7

அழகேயென் அன்பே ஆருயிர் அணங்கே
குழல்மறை துகிலிடைக் குலவுமுன் கண்கள்
வண்ணப் புறவின் கண்களை வருத்தும்
உண்ணத் தழைதரு கீலேயாத் தடுக்கத்தின்
வெள்ளாட்டு மந்தையை எள்ளுமுன் கூந்தல்
மயிர்குறைப் புற்று மணிப்புன லாடிச்
செயரறக் கரைசேர்ந் திணைமறி யீனும்
திரளினைப் போலுமுன் தீவிய பற்கள்
குரவுகமழ் செவ்விதழ் குருவிந்தச் செந்நூல்
மகிழ்தரு செவ்வாய் மழலை கிளக்கும்
நெகிழ்தலைத் துகிலிடை நிலவிடுங் கதுப்பு
வெடிப்புடை மாதுளங் கனியென விளங்கும்
கடிப்புடை மறவர்தம் கையகத் தேந்தும்
பத்துநூறு கிடுகுத்தோல் பாங்குறத் தூங்கும்
படைக்கலக் கொட்டிலெனப் பாவேந்தன் தாவீது
எடுத்தநன் மாடத்தைக் கடுக்குமுன் கழுத்தகம்
அல்லிமலர்க் காவிடைத் துள்ளிமேய்ந் துலவும்
நல்லியல் புடைய நயத்தகு வெளிமான்
இணைமறி யொக்குமுன் எழில்நிறை நகில்கள்
கணவிருள் புலரும் வைகறை வரையான்
திரளுறு தூஉநிறப் போளை வெற்பினும்
நறும்புகைத் தூள்நிறை பறம்பினும் வைகுவன்
பழுதற்ற அழகெலாம் முழுதுற்ற வணங்கே

### வடம் 9 (4:8-5:1) வரைவுடம் படுத்தல்

சாலமோன் வேந்தன்: 4:8-16

வருகவென் னுடனே லிபனானி லிருந்து
வருகவென் னுளமகிழ் மணமகள் வருக
அமனாவின் கொடுமுடி சேனீர்எர் மோனின்
சீயமும் சிவிங்கியும் செறிதரு வரையினின்(று)
அவலே காண்பாய் ஆருயிர் அன்பே
உள்ளத்தைக் கவர்ந்தவென் னொருவயிற் றோயே
கள்ளமொன் றில்லாக் காதற் கிழத்தி
கண்விழிக் காட்சியில் கழுத்தணி மாட்சியில்
கவர்ந்துகொண் டாயென் கவலுறு நெஞ்சினை

எத்துணை யின்பமுன் இணையறு காதல்
ஒத்துடன் பிறப்பே உயிர்மண மகளே
முந்திரிச் சாற்றினும் முதிர்ந்ததுன் உழுவல்
நறுமணச் சுண்ணம் யாவினும் நினது
வெறிகமழ் நறுநெய் பரப்பிடும் இனிமை
என்மண வாட்டியுன் எழில்நிறை யிதழ்கள்
இன்மணத் தேன்துளித் தொழுகுவ தென்னே
பாலொடு தெளிதேன் பயிலுமுன் நாவினில்
நின்துகில் கமழும் லிபனானின் நறுமணம்
என்னுடன் பிறப்பே என்மணப் பிணையே
சுற்றிலும் வேலி முற்றிய பொழிலே
முற்றிலும் மறைப்புள தன்புனல் ஊற்றே
மண்ணீ டிட்ட நன்னடைத் துரவே
நின்னறும் பொழிலிடை மாதுளஞ் செடிகளும்
அருங்கனி மரங்களும் மருதோன்றிச் செடிகளும்
நளதம் குங்குமம் நறுமண வசம்பும்
இலவங்கம் மற்றும் எழில்நின்ற நறுங்கொடி
வெள்ளிய போளமும் சாந்தமும் அகிலும்
தெள்ளிய நறுந்துகள் திசைதொறும் தூற்றும்
இளமரக் காவும் எழுநீர் ஊற்றும்
உயிர்ப்புனல் துரவும் லிபானனில் இருந்திவண்
ஓடிடும் நீர்க்கால் ஒழுகிடும் வனப்புடன்
வாடையே எழுக தென்றலே வருக
நறுமணப் பிசினசும்ப நன்றுநீ வீசுக.

சூலமித்தி: 4:16

என்னரும் எலுவரென் தன்னறுங் காவினில்
நல்வர வருள்கவே நறுங்கனி யுண்கவே

## வடம் 11 (6:4 - 7:10) நலம்புனைந்துரைத்தல்

சாலமோன் வேந்தன்:

மெல்லியாளுனை மிஞ்சுமோதிர்சா
சொல்லலாகுமோ சொக்குமின்பமே
நல்லியல்பெலாம் நவிலலாகுமோ
வல்லியுன்றனை அள்ளியேகுவேன்

கொடிபறந்திடும் கொல்படையினும்
கொடி நுசுப்பினாய் கொல்லுமாற்றலாய்
வடிவெருசலேம் வளநகர்புரை
நெடியகண்களென் நெஞ்சைவெல்லுமே

அம்பின்மைவிழிக் கஞ்சினேனினித்
துன்பம் நீங்கவே தொலைவில் நோக்குவாய்
பைந்தழையுணும் கீலியான்மலை
மந்தையீந்தவெள் ளாட்டின் கூந்தலாய்

கார் குழல் தனைக் காக்குமென்றுகில்
நீர்படிந்துபின் நீள்கரையினிற்
சேர்மறியிணை ஈனுமந்தையாம்
ஏர்பொருந்துமுன் இனியபற்களே.

வெண்டுகில்நடு விஞ்சைசெய்திடும்
விண்டமாதுளம் விஞ்சு கன்னமே
பெண்டிராறுறழ் பதின்மராயுளர்
கொண்டபின்மனை எண்பதின்மராம்

கன்னியர்தொகை எண்ணமில்லதே
நின்னையொப்பவர் யாருமில்லரே
முன்னையென்புறா நின்னையீன்றவட்(கு)
உன்னையின்றியோர் பின்னையில்லையே

பெற்றவட்குநீ பேறுமாயினை
உற்றமக்களும் உன்னைவாழ்த்தினர்
பற்றின்பெண்டிரும் பிற்றை நாள்வரும்
மற்றமாதரும் மாழ்ந்துபோற்-றினர்.

**சாலமோன் வேந்தன்: 6:10**

(அரசவை மகளிர்கூற்றை எடுத்து மொழிதல்)

திங்கள்போல்வனப் புற்றசாயலாள்
எங்கும்செங்கதிர் வீசுமேனியாள்
வன்கைவெல்கொடி யேந்துநாற்படை
பொங்குமாறிள ஞாயிறாரிவள்.

**சூலமித்தி: 6:11,12**

பழுத்ததோகனி பாய்வரையிலே
முழுத்தமாதுளை மொட்டலர்ந்ததோ
விழுத்தமுந்திரி விண்டதோதளிர்
கொழுத்தவாதுமைக் கோட்டமெய்தினன்.

நினையுமுன்னரென் நெஞ்சுளாவியே
இனையுமம்மின தாபின்தேர் நினைந்(து)

**எருசலேம் மகளிர்:**

அணையுமாறுவா சூலமித்தியே
கனிமொழியினாய் காணுமாறுவா.

கோலமார்திரு சூலமித்தியே
சாலமன்எரு சேலமீண்டுவா

**சூலமித்தி:**

சூலமித்தியில் காணுமாறெனோ

**எருசலேம் மகளிர்:**

சூலமாறிரு சூர்ப்படையலோ.



# 32

# சீயோன் மலைப் படிப்பாட்டு

**ஆசிரியர்: பொன்னு. ஆ. சத்திய சாட்சி (1923-2006)**

**அறிமுகம்: ம.வி. சுதாகர்**

பொ.ஆ.ச. என்று நண்பர்களால் செல்லமாக அழைக்கப்பட்ட பேராசிரியர் பொன்னு. ஆ.சத்தியசாட்சி அவர்கள் உலகப் பொருளுக்கு முக்கியத்துவம் தராத இறையருள் நிரம்பிய இறையன்பர். இவருடைய பெயரில் பொன் எங்கிருந்து வந்தது? வேலூர் ஊரீசு கல்லூரியில் தமிழ்த் துறையில் என்னுடன் சில ஆண்டுகள் பணிபுரிந்த போது வாய்விட்டே கேட்டு விட்டேன்! 'அன்னையார் பெயர் பொன்னம்மாள், தந்தையார் பெயர் பொன்னுசாமி, இப்படி அமைவது அரிதல்லவா? அரிதாகக் கிடைத்த இந்தப் பொன்னைப் பொன் போல் போற்றி என் பெயருடன் இணைத்துக் கொண்டேன்' என்றார் பேராசிரியர். இயல்பான நகைச்சுவையுணர்வு மிக்கவர். இவரும் இவர்தம் துணைவியாரும் இணைந்து இயேசு பெருமான் பற்றிய 'கதாகாலட்சேபம்' செய்து இறைப்பணி ஆற்றிய காட்சி இன்றும் என் கண்ணில் நின்று நிலவுகின்றது. மென்மையான குரல்வளம் மிக்கவர். மேன்மையான இயேசுவின் கருணை வழக்கத்தினைப் பட்டித்தொட்டி யெல்லாம் பரப்பியவர். பற்களைக் கடித்தபடி முழுமூச்சுடன் வேகமாகப் பாடுவதும் பேசுவதும் கேட்பவரை மேலும் இயேசு பெருமானைக் குறித்து அறிந்து சுவைக்க தாகம் கொள்ளச் செய்யும். இவர் வலிமையான பேச்சாளர், இனிமையான இசையாளர், எழுத்தாளர், கவிஞர்.

**எழுதிய நூல்கள்**

**1. இரட்சண்ய யாத்திரிக உரை**

இரட்சண்ய யாத்திரிகத்தின் பத்து உட்பிரிவுகளுக்கு உரை விளக்கம் எழுதி வெளியிட்டிருக்கிறார்.

*வெளியீடு : கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை-3, 1958.*

**2. அன்பைப் பார்க்க வாருங்கள்**

விவிலியத்திலும், ஏனைய இறை நூல்களிலும் பிரதிபலிக்கும் இறைவனின் பேரன்பைப் பல வகையிலும் விளக்கி எழுதப்பட்டுள்ள 95 பக்கக் கட்டுரை நூல்.

*வெளியீடு: தமிழ்நாடு கிறிஸ்தவ இலக்கியக் குழு, 1964.*

### 3. புது மலர்ச்சி

*கிறிஸ்தவச் சமுதாய அமைப்பினை புதிய கோணத்தில் விளக்கும் 140 பக்கக் கட்டுரை நூல். மதுரை தமிழ்நாடு இறையியல் கல்லூரியில் பாட நூலாக இது பயன்பட்டு வருவது குறிப்பிடத் தக்கது.*

*வெளியீடு: கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை-3, 1970.*

### 4. தஞ்சை வேதநாயகர் தமிழ் விருந்து

*தஞ்சை வேதநாயகரின் தமிழ்ப் பணிகளை ஆய்வு நோக்கில் பாராட்டும் அரிய நூல்; 150 பக்க அளவுடையது. சென்னை கிறிஸ்தவக் கல்லூரியில் பி.ஏ. பொதுத் தமிழுக்கு ஒரு முறையும் பி.ஏ. சிறப்புத் தமிழ் மாணவர்க்கு மற்றொரு முறையும் பாட நூலாக வைக்கப் பெற்ற சிறப்பினையுடைய நூல்.*

*வெளியீடு: வேதநாயக சாஸ்திரி 200 ஆவது ஆண்டு விழாக் குழு, 1974.*

### 5. இரட்சண்ய யாத்திரிகச் சுருக்கம் — அடிக்குறிப்புகளுடன்

*இரட்சண்ய யாத்திரிகத்தின் முழு நூலிலும் இருந்து தெரிந்தெடுக்கப்பட்ட 900 பாடல்களின் தொகுப்பு. ஒவ்வொரு பாடலுக்கும் தரமான விளக்க அடிக்குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன.*

*வெளியீடு : கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை - 3 , 1977.*

### 6. முக்திவழிப் பாமாலை

*கிருஷ்ணபிள்ளை அவர்களின் இறைநெறிப் பாடல்களில் சிலவற்றின் தொகுப்பு. ஒவ்வொரு பாடலுக்கும் பொருத்தமான முன்னுரையும் அழுத்தமான அடிக்குறிப்புகளும் பேராசிரியரின் கொடைகளாகும்.*

*வெளியீடு: கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை-3, 1977.*

### 7. நெஞ்சில் சுரந்த நீரோடைகள்

*பொன்னை அணைப்பதிகம், சீயோன் மலைப் படிப்பாட்டு ஆகிய சிற்றிலக்கியத் தொகுப்புகள் இணைந்த ஆசிரியரின் கவிதைத் தொகுப்பு இந்த நூல். ஊற்று — ஓடை — கலுழி என்னும் மூன்று பகுதிகளை உடையது. பல கால நிலையில் பல்வகைச் சூழலில் பல்வகைப் பொருளில் பாடப்பெற்ற மரபுக் கவிதைகளும், புதுக்கவிதைகளும் இணைந்துள்ள நூல். இயேசு பெருமானைப் பாடிப் புகழ்வதும் உலகின் பொருட்டு அவரை இறைஞ்சுவதும் அதன் சாரம் எனலாம்.*

*வெளியீடு: கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை-3, 1986.*

### 8. தாமஸ் மலைக் குறவஞ்சி

*கற்கவும், படிக்கவும் நடிக்கவும் எனப் பல்திறப் பயனோடு பெத்லகேம் குறவஞ்சியைத் தொடர்ந்து கிறிஸ்து நெறிச் செய்தியை உள்ளடக்கி வெளிவரும் புதுமையும், இனிமையும், பொலியும் ஓர் இனிய நூல் இது. சென்னை மாநகரினையும், அதன் சுற்றுப்புற எல்லைகளையும் பின்னணியாக வைத்து இந்நூல் எழுதப்பட்டுள்ளது. சமய ஒருமைப்பாட்டைப் பல இடங்களில் கூறி, மனித சமுதாய ஒருமைப் பாட்டுக்கு வழிவகுக்கிறார். கிறிஸ்தவ இறையியல் வளம்*

இந்நூலுக்கு அணி செய்கிறது. இது இருபதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் எழுந்தநூல் என்பதை வருங்காலத்தினரும் அறிந்து இன்புறும் வகையில் நூற்களம் அமைக்கப்பெற்றுள்ளது.

வெளியீடு : புனித தாமஸ் இலக்கியர் நட்புறவு இயக்கம், தாம்பரம், 1999.

இவற்றோடு ஏராளமான கவியரங்கம், கருத்தரங்கங்களில் பங்கேற்று தாராளமாகக் கவிதைகளும், ஆய்வுக் கட்டுரைகளும் படைத்துள்ளார் — படித்துள்ளார். அவை அளவில் அடங்காதவை.

### இதழாசிரியர்

1963-1984 வரையிலான ஆண்டுகளில் எட்டு முறை உலகின் பல நாடுகளுக்குக் கல்விப் பயணம் மேற்கொண்டிருக்கிறார். அமெரிக்கா, ரோம், இலங்கை, இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகளைச் சுற்றி வந்து அவர் கற்ற செய்திகள், கீழ்க்கண்ட கிறிஸ்தவ ஏடுகளின் ஆசிரியராக அவரைப் பல காலம் பணிபுரியத் துணை புரிந்துள்ளன:

1. கிறிஸ்தவ வாலிபன்
2. மனைமலர் (தொடக்கக் காலம்)
3. பூக்கூடை
4. செங்கை ஆசான்
5. தரு

### சீயோன் மலைப் படிப்பாட்டு

வட ஆற்காடு மாவட்டம் வேலூர் அருகே சித்தூர் — ஆற்காடு சாலையில் நங்கமங்கலம் கிராமத்தின் அருகே அமைந்துள்ள அமைதியான மலைக்குன்றுதான் சீயோன் மலை. இந்துக்கள் பாணியில் வரிசையாகப் பாறைப்படிகள் அமைத்து குன்றின் மேலே இயேசு பெருமான் சிற்றாலயம் கட்டியிருக்கிறார்கள். இங்கே ஆண்டுதோறும் சித்திரைத் திங்கள் முழு நிலா நாளின் முன்னும் பின்னுமாக மொத்தம் மூன்று நாட்கள் சீயோன் திருமலைத் திருவிழா நடைபெறும். வேலூர், சித்தூர், ஆரணி, அரக்கோணம் உள்ளிட்ட கிராம கிறிஸ்தவச் சபையோர் அனைவரும் ஒருங்கு கூடி ஆடிப்பாடி விழா எடுப்பது வழக்கம். இறைப்பொழிவு, பாடல் போட்டி, பட்டிமண்டபம், நாடகம் என மூன்று நாட்களும் அந்த இடம் கலகலப்பாகக் காணப்படும்.

சீயோன் மலையின் சிற்றாலயக் கட்டிடம் தமிழ் மரபு வழியில் கட்டப்பட்டிருக்கிறது. அச்சிற்றாலயத்தில் இருக்கை இராது; சிலுவைமட்டுமே உண்டு. காலணிகளுடன் தொழுகைக்கு யாரும் நுழைவதில்லை.

இத்தகைய பண்பாடு மிக்க சீயோன் மலைப் படிப்பாட்டினையே ஆசிரியர் பொ.ஆ.ச. இங்கே ஒரு சிற்றிலக்கியமாகப் பாடியிருக்கிறார். 35 சரணங்களால் அமைந்த இந்நூல் மலையடிவாரம், படியேற்றம், துதி, ஆவியைப் பாடியது, குறையிரத்தல், மலையிடை மேவும் மணவாளன், மலையுச்சி, நமோ நமோ என்னும் பகுதிகளையுடையது. மலைப் படிப்பாட்டு இலக்கணத்திற்கு ஏற்ப இவ்விலக்கியம் என்றும் வாழும் சிற்றிலக்கியமாகத் திகழும் என்பதில் ஐயமில்லை. பள்ளி ஆசிரியராகத் தம் வாழ்வினைத் தொடங்கிய நண்பர் பொ.ஆ.ச. சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்து ஓய்வு பெற்றவர்.

## மலையடிவாரம்

### அல்லேலூயா! நமோநம!

1. ஆக மங்கள்க டந்தாய் அல்லேலூயா!
   ஆவின் முன்றில்கி டந்தாய் அல்லேலூயா!
   அன்பர் நெஞ்சில்ந டந்தாய் அல்லேலூயா! — அருளாளா!

   சாக வந்துபி ழைத்தாய் அல்லேலூயா!
   சாவி னின்றெமைக் காத்தாய் அல்லேலூயா!
   சார வந்தருள் செய்தாய் அல்லேலூயா! — சாலாதோ!

   ஊக மெல்லாமி றந்தாய் அல்லேலூயா!
   உயிரை ஈந்தெமைக் கொண்டாய்! அல்லேலூயா!
   உயிர்த்தெ ழுந்துசி றந்தாய் அல்லேலூயா! — உரைபோமோ!

   போக வென்றேப ணித்தாய் அல்லேலூயா!
   புனித ஆவியைத் தந்தாய் அல்லேலூயா!
   போற்றி! போற்றியுன் பாதம் அல்லேலூயா! — புகழ்என்னே!

2. மைந்த னைத்தந்த மாட்சி அல்லேலூயா!
   மாபெ ருந்திருக் காட்சி அல்லேலூயா!
   மானி டர்க்கிது சாட்சி அல்லேலூயா! — மகிழ்வோமே!

   ஐந்து காயம டைந்தாய் அல்லேலூயா!
   அன்பு பாய்கிற தங்கே அல்லேலூயா!
   அடைக்க லம்மதில் நாங்கள் அல்லேலூயா! — அருள்என்னே!

   நைந்த வர்க்கருள் செய்ய அல்லேலூயா!
   ஞான ஆவியை நல்கி அல்லேலூயா!
   நாங்கள் உயர்ந்திடச் செய்தாய் அல்லேலூயா! — நலம்ஆக!

   பைந்த மிழ்ப்பழ மொன்று அல்லேலூயா!
   பழுத்தி ருக்குது நன்றே அல்லேலூயா!
   பந்தி வைத்திட வந்தோம் அல்லேலூயா! — பரிவாயோ?

## படியேற்றம்

### 1. தாடலை (இந்தளம்)

1. முதலாவது படிமேல்திரு வடியைத்தலை மீது
   பதமாய்ப்பதித் திடுவேமுனை பாடித்துதி செய்வோம்
   முதலேமுழு முதலேஎமை முழுதும்பரிந் தருளி
   சிதறாமனம் தருவாய்த்திருச் சீயோன்மலை நாதா!

## 2. துதி

### தந்தையைப் பாடியது

2. விண்ணேயுறை வோனேயுனின் வீழாப்புகழ் வாழ்க
மண்மீதினில் போரோய்ந்திட மக்கள்மனம் மகிழ்க
கண்ணோடிய அன்போடருள் கழகங்களிற் சூழ்க
பண்ணேபுரி சீயோன்மலை பக்தர்பணி நீள்க

### 3. மைந்தனைப் பாடியது

3 நேராயெம திடமாய்க்கரம் நீட்டிப்புரப் பதற்கே
பாரோரவை நடுவேயொரு பழிசேர்மரம் தூக்கி
ஆறாகவே செந்நீர்தனை அலைமோதிட ஊற்றி
சீராய்த்திருப் பலியாயினை சீயோன்மலை நாதா!

### 4. ஆவியைப் பாடியது

4. திருமேனியின் காயங்களின் வழியேயுன தாவி
அருள்மாரியை அடியார்க்கருள் செய்தே எமைத்தூக்கி
அரியாசனத் திருப்போருடன் சரியாசனம் வைத்த
சருவேசுர குமாரதிருச் சீயோன்மலை நாதா!

5. வளமேதரு புயலே அருள் வரமேதரும் தண்மைக்
குளமேவளை கடலேவிரி வானேகொடு வெயிலில்
உளமேமகிழ் இளநீரென உள்ளேவரும் உயிரே
அளவேயறச் சீயோன்மலை யதன்மேற்பொழி மழையே!

## 3. வாரீரெனல்

### அடாணா: திரிபுடை

1 இறைவனை நின்றுமன் றாடி
இரண்டாவதுபடி ஏறி
இயேசுகிறிஸ்துவைப் பாடி
ஏத்திவணங்கிட வாரீர்!

மறைபலபோற்றிடு நாதன்
மானிடமாகிய போதன்
மலர்மிசையேகிய பாதன்
மாணடி போற்றுவம் வாரீர்!

புரையணுகாதகு மாரன்
புதுவழிகாட்டிய தீரன்
புதியஎருசலை யூரன்
போற்றிவணங்குவம் வாரீர்!

சிறைபடுமாந்தரை மீட்டு
சீயோன்மலைவழி கேட்டுச்
செந்தமிழ்சேர்நடை போட்டுச்
செல்பவனைப் பாட வாரீர்!

2 சீயோன்மலைமரு மகனை
சீர்மிகுதேவகு மரனை
செந்தமிழைவிழை பவனை
சிந்தைமகிழ்தரும் சுதனை,

மாயாபுரிச்சிறை கிடந்த
மங்கைதனைச்சிறை மீட்டே
மாலையிடவரு வோனை
மன்னுதிருமுகத் தானை.

சாயாத அன்பினில் நின்று
சிலுவைமரம்வரை சென்று
செம்மலர்மாலைபு னைந்து
திருமணஞ்செயவரு வோனை

தோயாத அன்பினில் தோய்ந்து
தோத்திரப்பாட்டுகள் பாடி,
துய்யனேமெய்யனே என்று
தொழுதுவணங்குவம் வாரீர்!

## 4. குறையிரத்தல்

**(தென்னிந்தியத் திருச்சபைப் பொதுவான பாவ அறிக்கையைத் தழுவியது)**

**நாதநாமக்கிரியை: ஆதிதாளம்**

1. சர்வவல் லமையும் சரிநிகர் பரிவும்
சங்கம மாகிய எந்தாய்
அர்ப்பராய் வாழ்ந்தோம் அருணெறி தவறி
அலைகிற ஆடுபோல் ஆனோம்
சர்வமே கொண்டு கற்பனை களையே
கைதவறிக் குற்றம் புரிந்தோம்
கர்த்தனே சீயோன் கிரியுறை அரசே
கடைகணித் தருளவே வேண்டும்.

2. செயத்தக செய்யத் தவறினோம் ஐயோ
செயத்தக வலபல செய்தோம்
உயத்தகு நெறியே உன்மக னன்றி
ஒருநெறி யில்லையே, எங்கும்
இயங்கிடும் கிறிஸ்து இயேசுவின் மூலம்
எங்களைப் பொறுத்தருள் செய்தே
மயக்கறு சீயோன் மலையுறை அரசே,
மன்னியும் மன்னியும் சிரசே!

3. குற்றமே புரிந்து குறைபடும் எமையே
குறைகளைக் களைந்துசீர் செய்தே
இற்றைநாள் எந்தாய் எப்படி யாயினும்
எங்களுக் கிரங்கிட வேண்டும்
பற்றிய உனது பரிசுத்த பெயர்க்கே
உற்றவா றொழுகிட அருள்வாய்
வெற்றிசேர் சீயோன் வரையுறை அரசே
வேண்டிவ ணங்கினோம், ஆமேன்!

## 5. மலையிடை மேவும் மணவாளன்

**(திருப்புகழ்ச் சந்த நடை: எந்தப் பண்ணிலும் பாடலாம்)**

1. சுருதிபி டித்த உறுதிப டிக்குத் தவறாமல்
பரிதிநி கர்த்த மிகுபரி சுத்தத் திருவார்த்தை
குருதிவ டித்துக் குருசினில் பட்டுப் பலியாகக்
கருதிய திட்டப் படியொரு கன்னிக் கருசேர்ந்து.

2 பகுதிவி டுத்த விகுதியி னன்ன மனுவாதித்
தொகுதிக ளுக்குத் திருவினை செய்ய உளமாகித்
தகுதிவி டுத்துப் புழுதிபி டித்த உடலானான்
மிகுபடு சீயோன் மலையிடை மேவும் மணவாளன்!

3. கடலைய டக்கிக் கடியைவி ரட்டிக் கைபோன
உடலைநி றுத்திட் டூமையர் கட்கும் உரைதந்து
சுடலைகி டந்த சடலமெ ழுப்பிச் சரிபார்த்து
முடலைம ணக்கும் முழுதொழு நோயைக் குணமாக்கி

4. வழியினி லுற்ற விழியிலி கட்குத் துணையாகி
பழியினி லுற்ற பாவையர் கட்குப் பழிநீக்கி
இழிநிலை யுற்ற ஏழையர் நட்பிற் குறவானான்
கழிமகிழ் சீயோன் கிரியிடை மேவும் மணவாளன்!

5 கலைஞரை நாடிக் கழகந டத்தக் கருதாமல்
கலையறி வில்லா வலைஞரைக் கண்டு நயமாக
மலையடி சென்று மறைமொழி சொல்லித் திறமாக
உலகுக லக்கி ஒருபுது உலகம் உருவாக.

6. துறவுந டத்தித் துணையிலி கட்குத் துணையாகி
வறியவர் கட்பால் உறவுந டத்தி வெய்யோனைப்
பறிமுதல் செய்து படியிது காத்தான் பரிவாக
மறமிகு சீயோன்மலையிடை மேவும் மணவாளன்!

## 6. நீரே என்பது

### (மெட்டு : மந்திரமாவது நீறு)

1 மண்ணைப் படைத்தவர் நீரே, மண்ணினைப் பிடித்தவர் நீரே,
விண்ணைப் படைத்தவர் நீரே, விண்ணொளி வைத்தவர் நீரே,
நண்ணி சீயோன்மலை வந்து நல்லதென் றிருந்தவர் நீரே,
அண்ணல் கிறிஸ்தென வந்த ஆயனும் நேயனும் நீரே!

2. முந்தியி ருந்தவர் நீரே, மூவரும் நடுவரும் நீரே,
பிந்தியி ருப்பவர் நீரே, பேரருள் தருபவர் நீரே,
சொந்தசீ யோன்மலை வந்து சூழவி ருப்பவர் நீரே,
அந்தரி யாமியு மாகி ஆட்கொள வருபவர் நீரே!

3. இன்றுமி ருப்பவர் நீரே, என்றுமி ருப்பவர் நீரே,
அன்றுமி ருந்தவர் நீரே, ஆதமைப் படைத்தவர் நீரே,
நன்றுசீ யோன்மலை நாடி நம்மைய ழைப்பவர் நீரே,
இன்றெமை மீட்டிட வந்த இயேசுக்கி றிஸ்துவும் நீரே!

4 முள்ளிலெ ரிந்தவர் நீரே, மோசேயைய ழைத்தவர் நீரே,
நள்ளிர வில்இச ரேற்கு நல்வினை செய்தவர் நீரே,
அள்ளிய மேகமும் நீரே, அக்கினித் தம்பமும் நீரே,
உள்ளியெ மைப்பொரு ளாக ஊருக்கு வந்தவர் நீரே!

5 கன்மலை யாயவர் நீரே, கற்பனை தந்தவர் நீரே,
வெந்நிலை போக்கிட வைத்த வெண்கல சர்ப்பமும் நீரே,
உன்னிசீ யோன்மலை வந்தே உதவிகள் தருபவர் நீரே,
கன்னியின் கருவினில் வந்த கர்த்தரும் ஏசுவும் நீரே!

6. அற்புதம் செய்தவர் நீரே, அன்புமொ ழிந்தவர் நீரே,
வெற்றிய டைந்தவர் நீரே, வேதமு ரைத்தவர் நீரே,
உற்றசீ யோன்மலை ஏகி உள்ளது ரைப்பவர் நீரே,
சுற்றுடன் ஒருமலை மீதே சொன்மழை பொழிந்தவர் நீரே!

7. முள்ளடை ஏற்றவர் நீரே, முழுவதும் நைந்தவர் நீரே,
வள்ளலும் அண்ணலும் நீரே, வாறடி பட்டவர் நீரே,
எள்ளல டைந்தவர் நீரே, எச்சில டைந்தவர் நீரே,
கள்ளரு டன்ஒரு சேரக் கல்வரி சென்றவர் நீரே!

8. ஆணியை ஏற்றவர் நீரே, ஆவியில் நொந்தவர் நீரே,
சேணொரு சிலுவையின் மீதே சீவனைக் கொடுத்தவர் நீரே,
காணுஞ்சீ யோன்மலை நாடி கருணைசெய் தாள்பவர் நீரே,
தோணிபுவிக் கினிநீரே, தோன்றிய கிறிஸ்துவும் நீரே!

9. உயிருடன் எழுந்தவர் நீரே, உயிர்களுக் குறுதுணை நீரே,
அயிரற ஆண்டவர் நீரே, ஆவியைத் தருபவர் நீரே,
குயிலுஞ்சீ யோன்மலை வந்து குற்றங்கள் தீர்ப்பவர் நீரே,
உயிருடன் உடலுடன் நின்றே உறைகிற ஏசுவும் நீரே!

10. மீளவும் வருபவர் நீரே, மேகமேல் வருபவர் நீரே,
ஆளவும் வருபவர் நீரே, ஆட்சியும் தருபவர் நீரே,
நீளவும் நித்திய பேறு நேசருக் களிப்பவர் நீரே,
நாளெணிக் காத்திருப் போமே, நாயக னேவரு வீரே!

## மலையுச்சி
## 7. மறப்போமோ என்பது

### (பழம் பஞ்சுரம்)

1. முத்தார்முடி வேண்டேனென முள்ளார்முடி ஏற்றாய்,
சித்தார்பெரு மானேமிகு சீயோன்மலைத் தேனே!
கொத்தாயெமை ஈர்த்தேயடி கொண்டாயரு ளாளா,
அத்தாவுன தன்பையினி அடியார்மறப் போமோ?

2. பேயாடிய சாவாடிய பேதையரெம் உள்ளம்
நீயாடிய சாவோடிட நேர்ந்தாயருள் செய்தாய்
சீயோன்மலை நாதாயினி நீயேஎங்கள் செல்வம்
ஆயாவுன தன்பையினி அடியார்மறப் போமோ?

3. நானாயுனைத் தொட்டேனிலை நீயாயெனைத் தொட்டாய்,
தேனாயெனக் கானாயினி சீயோன்மலைத் தேவா,
ஊனாய்த்திரி வேனோயிதை ஊரார்க்குரை யேனோ,
ஆனாவுன தன்பையினி அடியேன்மறப் பேனோ?

4. பொருளாடிய பொன்மாமறை போற்றும்பெரி யோனே,
இருளாடிய பூமிக்கொளி ஏற்றும்பெரு மானே,
மருளாடிய நெஞ்சில்மகிழ் மாற்றும்திற லோனே,
அருளாடிய அன்பையினி ஆகாமறப் போமோ!

## 8. நமோநமோ

1 ஆக மங்கள்க டந்தாய் நமோநமோ!
ஆவின் முன்றில்கி டந்தாய் நமோநமோ!
அன்பர் நெஞ்சில்ந டந்தாய் நமோநமோ! — அருளாளா!

சாக வந்துபி ழைத்தாய் நமோநமோ!
சாவி னின்றெமைக் காத்தாய் நமோநமோ!
சார வந்தருள் செய்தாய் நமோநமோ! — சாலாதோ!

ஊகமெல்லாமி றந்தாய் நமோநமோ!
உயிரை ஈந்தெமைக் கொண்டாய் நமோநமோ!
உயிர்த்தெ ழுந்துசி றந்தாய் நமோநமோ! — உரைபோமோ!

போக வென்றேப ணித்தாய் நமோநமோ!
புனித ஆவியைத் தந்தாய் நமோநமோ!
போற்றி! போற்றியுன் பாதம் நமோநமோ! — புகழ் என்னே!

2 மைந்த னைத்தந்த மாட்சி நமோநமோ!
மாபெ ருந்திருக் காட்சி நமோநமோ!
மானி டாக்கிது சாட்சி நமோநமோ! — மகிழ்வோமே!

ஐந்து காயம டைந்தாய் நமோநமோ!
அன்பு பாய்கிற தங்கே நமோநமோ!
அடைக்க லம்மதில் நாங்கள் நமோநமோ! — அருள் என்னே!

நைந்த வர்க்கருள் செய்ய நமோநமோ!
ஞான ஆவியை நல்கி நமோநமோ!
நாங்கள் உயர்ந்திடச் செய்தாய் நமோநமோ! — நலம் ஆக!

பைந்த மிழ்ப்பழ மொன்று நமோநமோ!
பழுத்தி ருக்குது நன்றே நமோநமோ!
பந்தி வைத்திட வந்தோம் நமோநமோ! — பரிவாயோ?



# 33

# இயேசு காவியம்

ஆசிரியர் : கண்ணதாசன் (1927 - 1981)

அறிமுகம் : தி. தயானந்தன் பிரான்சிஸ்

இருபதாம் நூற்றாண்டில் இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றினைப் பாவடிவில் தர முயன்று வெற்றி கண்ட கிறிஸ்தவக் கவிஞர்களுள் 'திரு அவதாரம்' எழுதிய மாணிக்கவாசகம் ஆசீர்வாதம், 'சற்குரு சதகம்' யாத்த ஜி.எஸ். வேதநாயகர், 'சுடர்மணி' படைத்த ஆரோக்கியசாமி ஆகியோர் குறிப்பிடத் தகுந்தோர் ஆவர்.கிறிஸ்தவரல்லாத கவிஞர்கள் சிலர் கிறிஸ்துவுக்குத் தங்கள் புகழாரங்களைச் சூட்டும் வகையில் பாக்களைப் புனைந்துள்ளனர். அன்னோருள் சுத்தானந்த பாரதி, ச.து.சி. யோகி மற்றும் திரு.வி.க. ஆகியோரின் படைப்புகள் இலக்கியத் தரம் வாய்ந்தவை எனலாம்.

இயேசுவின் வாழ்க்கை வரலாற்றினை முழுமையாகப் பாவடிவில் வழங்க முற்பட்டுப் பல்வகை யாப்பு வகைகளைக் கையாண்டு சந்தப் பாடல், சிந்துப் பாடல் வகைகளையும் சேர்த்து எளிய தமிழில் ஒரு காவியத்தை உருவாக்கியவர் கவிஞர் கண்ணதாசன் ஆவார். 'மாங்கனி' முதலிய காவியங்கள் சிலவற்றை உருவாக்கியதோடு, மேலும் பல காவியங்களைப் படைக்க எண்ணியிருந்த கண்ணதாசன் தம் வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தில் இக்காவியத்தை எழுதி முடித்தது இறையருளேயாகும்.

இயேசு காவியத்தை எழுதி முடித்த நிலையில், ''பல சமயங்களில் பலர் என்னை இறவாக் காவியம் ஒன்று எழுதுங்கள் என்று வற்புறுத்தியதுண்டு. அந்த இறவாக்காவியம் இயேசு காவியம் தான்'' என்று நான் உறுதியாகக் கூற முடியும்'' என்று அந்நூலின் முன்னுரையில் அவர் தெரிவித்திருப்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். ஆயிரக்கணக்கில் திரையிசைப் பாடல்களை எழுதியுள்ள இக்கவிஞர், ஆண்டவரைப் பற்றி எழுத முன் வந்தது அவருடைய ஆன்ம விழைவினைக் காட்டுகிறது. தமிழ்ப் பண்பாட்டிற்கும் வழக்குகளுக்கும் ஏற்ப நற்செய்தி நூல்களில் காணக்கிடக்கும் நிகழ்வுகளைக் கண்ணதாசன் எடுத்துரைத்திருப்பது அவருடைய தமிழ் நெஞ்சத்தைக் காட்டுகிறது.

இயேசு கடற்கரையில் வலை வீசி மீன் பிடித்துக் கொண்டிருந்தவர்களைத் தம்மைப் பின்பற்றும் சீடர்களாகும்படி அழைத்தபோது ''என் பின்னே வாருங்கள்; நான் உங்களை மனிதர்களைப் பிடிப்போராக்குவேன்'' என்று கூறினார்.

தமிழில் 'மனிதர்களைப் பிடித்தல்' என்பது இயேசு கூறிய பொருளைத் தரமுடியாது. இதனை உணர்ந்த கண்ணதாசன்,

*''நீருக்குள் வலையை வீசும்*
*நீங்களே மனிதர் வாழும்*
*ஊருக்குள் வலையை வீசி*
*உள்ளத்தைப் பிடிப்பீர்'' என்றார்*

என்று பாடுகிறார்.

''உள்ளத்தைப் பிடித்தல்'' என்பது ஆட்களை முழுமையாக ஈர்த்தல் என்னும் பொருள் தருவது கருத்திற்குரியதாகும். தொடர்ந்து வரும் அடிகளில்,

*''தந்தையை, வலையை விட்டுத்*
*தலைவனைப் பின் தொடர்ந்து*
*சிந்தையை அவர்பால் வைத்துச்*
*செயல்பட ஒருங்கே வந்தார்*
*மந்தையின் மேய்ப்பன் செல்ல*
*மற்றவை பின்னே செல்லும்*
*விந்தையைப் போல ஆங்கே*
*வியத்தகும் செய்தி யானார்!''*

எனப் பாடுகின்றார். தலைவரைச் சீடர்கள் பின்தொடர்கின்ற காட்சி, அவர்களை 'வியத்தகும் செய்தி' யாக்கி விடுகிறது. நற்செய்திக்கு ஆட்பட்டு நற்செய்தியாளர்களாகிவிட்ட சீடர்கள் வியத்தகு நற்செய்தியாகவே சித்திரிக்கப்படுவதில் இனிய நயம் வெளிப்படுகின்றது.

மலைப் பொழிவைத் திரு. வி.க. உள்ளது உள்ளவாறே தம்முடைய 'கிறிஸ்து மொழிக்குறள்' நூலில் வழங்குகின்றார்.

*''ஆவி எளிமை அடைந்தவர் வாழிவரம்*
*மேவரசன் னாருடைமை மேல்''*

என்பது அவர் பாடல். கண்ணதாசன் ஒவ்வொரு பாக்கிய வசனத்துக்கும் விளக்கம் தருகின்றார்.

*''எளிய மனத்தோர் பேறுபெற் றோரென*
*எடுத்ததும் அவர் சொன்னார் - இதில்*
*எளிமை என்பது பற்றில் லாமை*
*இறைவனை நம்புவதே''*

என்பது அவர் பாடல்.

''உறவினர் யார்?'' என்ற தலைப்பில் உருக்கமான சொற்களால் தொடுக்கப்பட்ட ஓர் அழகிய பாடல்,

*''ஊனுருக உயிருருக உள்ளமெல்லாம் நெக்குருக*
*வானுருகும் சொற்பொழிவை வள்ளலவர் செய்தாரே*
*வானுருகும் சொற்பொழிவை வள்ளலவர் செய்கையிலே''*

என்று ஆரம்பமாகி,

*"என் தாயார் என்தம்பி யாரெனநீர் அறியீரோ?*
*என்னுடனே இங்கேயே இருக்கின்றார் அவர்களெல்லாம்!*
*மேலுலகத் திருக்கின்ற மேலாம்என் தந்தைபணி*
*நாள்தோறும் செய்பவரே நம்தம்பி அன்னை என்றார்"*

என்று நிறைவுறுகின்றது. பேதுரு, யாக்கோபு முதலிய சீடர்கள் வயதில் இயேசுவுக்கு மூத்தோராயிருந்திருக்கலாம். ஆயின் குரு - சீடர் உறவு வழக்கை ஒட்டி அவர்களைக் கவிஞர் தம்பியராகக் காட்டுகின்றார்.

## 51. ஐந்து அப்பங்கள் ஐயாயிரம் ஆகின்றன

கானக வழியினிலே - இயேசு
கால்நடை போகையிலே
தானொரு சேவைசெய்தார் - படைத்த
தந்தையின் வேலைசெய்தார்!

அண்ணலின் வார்த்தைகளைக்-கேட்க
ஆயிரம் ஆயிரமாய்
நண்ணிவந் தார்மாந்தர் - அவர்க்கு
நல்லன சொல்லிவைத்தார்!

நேரம் அதிகரித்து - இரவு
நெருங்கிய நிலையினிலே
ஊருக்கு அனுப்பிவைக்க - சீடர்
உத்தமன் மொழிகேட்டார்!

"பட்டிகள் தொட்டிகளில் - இருந்து
பார்த்திட வந்தமக்கள்
பட்டினி கிடப்பார்கள் - அவர்கள்
பசியினைத் தீர்ப்பதெங்கே?"

சீடர்கள் இதுசொன்னார் - இயேசு
சிரித்தார் பதில்சொன்னார்,
"தேடுங்கள் உணவினையே - பசியைத்
தீருங்கள்" என்றுரைத்தார்!

"கையினில் பணமெடுத்துச் - சென்று
கடையினில் வாங்கிவந்து
ஐயனின் திருமுன்பு - சீடர்
அவருக்குத் தருவ"மென்றார்!

"உம்மிடம் உள்ளதென்ன? - அதனை
உடனே தேடும்" எனச்
சொன்னார் இயேசுபிரான் - சீடர்
சோதனை செய்தார்கள்!

''ஐந்தே அப்பம்உண்டு - மீன்கள்
அளவினில் இரண்டுஉண்டு''
என்றார் அவரிடத்தே - இயேசு
''இருப்பதைக் கொடுங்கள்'' என்றார்!

தன்முனம் நின்றவரைப் - பசும்புல்
தரையினில் அமரவைத்தார்
விண்ணகம் தனைநோக்கி - அதனை
விருந்தினி லேபடைத்தார்!

ஐயாயி ரம்பேர்க்கு - அப்பம்
அளவினில் பெருகியதே!
ஐயன் திருமகிமை - மக்கள்
அரங்கத்தில் உருகியதே!

''இன்னும் அவையிருந்தால் - கூடையில்
எடுத்தே வையும்'' என்றார்
பன்னிரண் டாகஉள்ள - கூடையில்
பாக்கியைத் தூக்கி வைத்தார்!

நாயகன் மனதுவைத்தால் - எதுவும்
நாளுக்கு நாள்வளரும்
தூயவன் மகிமைஎல்லாம் - உலகில்
தோளுக்குத் தோள்மலரும்!

ஞாலத்தில் வருவரென - சொன்ன
ஞானியும் இவரெனவே
சாலத்தம் பசிதீர்ந்த - மக்கள்
தமக்குள்ளே பேசிக்கொண்டார்!

அறிந்தனர் இயேசுபிரான் - தம்மை
அரசனாய் ஆக்குதற்கு
விரைந்தவர் முயலுவதை - கண்டு
விருப்ப மில்லாதவராய்

மோனத்தில் இருப்பதற்கே - மலையின்
முகட்டினில் சென்றுவிட்டார்
ஞானத்துத் தேவமைந்தன் - தந்தை
நல்லருள் வேண்டிநின்றார்!

## 76. ஊதாரிப் பிள்ளை

ஒரு தந்தை இருமக்கள் ஊர்முழுதும்
சொத்து
ஒருபிள்ளை அவர்களிலே மணியான
முத்து!
சிறுபையன் ஊதாரி தேறாத
நெத்து
தீராத மழையினிலே கரையேறும்
வித்து!

தன்பாகம் வேண்டுமெனத் தந்தையிடம்
கேட்டான்
தந்தைஅவன் மொழிகேட்டுச் சரிபாதி
தந்தான்!
தந்தானே யல்லாது தாளாது
துடித்தான்
தன்பிள்ளை வாழட்டும் என்றேதான்
கொடுத்தான்!

குருட்டுமகன் தன்சொத்தைக் குறைந்தவிலை
விற்றுக்
கொண்டோடி வெளிநாட்டில் கும்மாள
மிட்டான்!
பொருட்பெண்டிர் மதுவென்று போனவழி
சென்று
பொருள்தேய்ந்து புகழ்தேய்ந்து தெருவினிலே
நின்றான்!

அந்நாட்டில் பெரும்பஞ்சம் அவ்வேளை
சூழ
அறியாத இளமைந்தன் அலைந்தானே
வாழ!
தன்னாட்டு மனிதனிடம் ஒருவேலை
தேட
தந்தானே ஒருவேலை பன்றிகளோ
டாட!

பன்றிக்குத் தருகின்ற உணவேதான்
உணவு
பாவிக்கு நாளெல்லாம் தந்தையவன்
கனவு!
அந்நேரம் தெளிந்ததுகாண் அவனுடைய
அறிவு
அப்பாவின் கால்களிலே விழுகின்ற
நினைவு!

'என்தந்தாய் வானுக்கும் உமக்குமெதி
ரானேன்
எத்தனையோ ஊழியர்கள் இங்கிருக்கப்
போனேன்!
உன்வீட்டுக் கூலிகளில் ஒருவனென
ஏற்பாய்
உன்பிள்ளை என்றுசொலத் தகுதியில்லை
காப்பாய்!'

இப்படிப்போய் விழவேண்டும் என்றெண்ணிச்
சென்றான்
எதிர்பார்த்துக் காத்திருந்த தந்தையின்முன்
நின்றான்!
''அப்பாஎன் மகனே'' என் றணைத்தானே
தந்தை
அன்பான தந்தையின்முன் அழுததவன்
சிந்தை!

எப்போது வருவாயென் றெண்ணியிருந்
தேனே!
இளைத்தாயே என்மகனே! கண்மணியே
தேனே!
தப்பான பிள்ளையல்ல எதுவும்சொல்
லாதே!
சந்தர்ப்பம் செய்தசதி வருவாய்இப்
போதே!

''யாரங்கே பணியாள்வா, பட்டாடை
நகைகள்
அத்தனையும் அணியுங்கள் அலங்கார
வகைகள்!
பேர்சொல்லும் மகனுக்குப் பெருங்கன்றின்
கறிகள்
பிழையாமல் செய்யுங்கள் விரைவில்'' எனச்
சொன்னான்!

மாலையிலே மூத்தமகன் மனைக்குவரும்
போது
மனையினிலே சங்கீதம் நடனவகை
நூறு!
சாலையிலே நின்றபடி ''ஏன் சத்தம்?''
என்றான்
''தம்பிஇன்று வந்துள்ளார்'' என்றொருவன்
சொன்னான்!

ஆத்திரத்தில் வெளிப்புறமே மூத்தமகன்
நின்றான்
அப்போது தந்தையவன் அந்தஇடம்
வந்தான்!
சாத்திரத்தை மறந்தவனைத் தடபுடலாய்
ஏற்றீர்
சாப்பாடு நடனமென ஏற்றுகிறீர்
போற்றி!

''உங்களுடன் இருந்தவரை நானென்ன
கண்டேன்
ஒருநாளும் எனக்கென்று விருந்துவகை
உண்டா?''
கண்கலங்கி மூத்தமகன் இவ்வாறு
சொல்ல
கனிவோடு தந்தையவன் மறுவார்த்தை
சொன்னான்;

''என்னோடு என்றும்நீ இருப்பவனே
யன்றோ
என்செல்வம் எந்நாளும் உன்னுடைய
தன்றோ!
உன்தம்பி இறந்ததன்பின் உயிர்பெற்று
வந்தான்
உண்மையிலே மறுபிறவி அதற்காகச்
செய்தேன்!''



# 34

# இயேசு புராணம்

ஆசிரியர்: ஈழத்துப் பூராடனார் (1928 - )

அறிமுகம்: யோ. ஞான சந்திர ஜாண்சன்

*ஈழமக்களின் கிறிஸ்தவ இலக்கியப்பணி புராணம், சிற்றிலக்கியம், கீர்த்தனை, மொழிபெயர்ப்பு, நாவல் எனும் பன்முகப் பரிமாணங்களை உடையது. புராணம் எனும் வடிவில் ஈழத்தில் இதுவரை இரண்டு நூல்களே வெளிவந்துள்ளன. கனகசபைப் புலவரால் இயற்றப்பட்ட ''திருவாக்குப்புராணம்'' (1866) விவிலியத்திலுள்ள ஆதியாகமம் தொடங்கிப் பழைய ஏற்பாட்டு நூலிலுள்ள செய்திகளைத் தருகின்றது. ஈழத்துப் பூராடனாரின் ''இயேசு புராணம்'' (1986) விவிலியத்திலுள்ள ஆதியாகமம் தொடங்கி பழைய, புதிய ஏற்பாட்டுச் செய்திகளைச் சுருக்கமாகத் தருகின்றது. கணினி மூலம் முதன் முதலாக நூல் வடிவம் பெற்றது ஈழத்துப் பூராடனாரின் ''இயேசு புராணம்'' எனும் நூலாகும்.*

## ஆசிரியர் வரலாறு

இயேசு புராணம் எனும் நூலை இயற்றியவர் தாவீது செல்வராசகோபால் ஆவார். இவருடைய புனைப்பெயர் ஈழத்துப் பூராடனார் என்பதாகும். இவர் நாகமுத்து கதிர்காமத் தம்பி - சீனித் தம்பி வள்ளியம்மை தம்பதியருக்கு 1928 டிசம்பர் 13 ஆம் நாள் இலங்கையிலுள்ள செட்டிபாளையம் எனுமிடத்தில் பிறந்தார்.

## படைப்புகள்

உரைநடை, செய்யுள், நாடகம், மொழிபெயர்ப்பு, வரலாற்று நூல்கள் என சுமார் 70 க்கும் மேற்பட்ட நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். விபுலானந்தர் பற்றி ஏழு நூல்களும், மட்டக் களப்பு தமிழறிஞர்கள் வரலாறு குறித்து பதினொரு நூல்களும், மட்டக்களப்பு கூத்துக்கலை பற்றி ஒன்பது நூல்களும் எழுதியுள்ளார். இயேசு புராணம், பெத்லகேம் கலம்பகம், இயேசு இரட்சகர் இரட்டை மணிமாலை, இயேசு கீதை, கிறிஸ்தவ முக்கனிகள் எனும் செய்யுள் நூல்களையும் இயற்றியுள்ளார். இவருடைய உரைநடை நூல்களுள் தஞ்சை வேதநாயக சாஸ்திரியாரின் பிரபந்தங்கள், கிறிஸ்தவ நாற்படை, வேதாகமத்தில் உலோகங்கள், வேதாகமத்தில் பிராணிகள், வேதாகமத்தில் பறவைகள் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. வேதநாயக சாஸ்திரியாரின் பெத்லகேம் குறவஞ்சிக்கு உரையும், கிருஷ்ணபிள்ளையின் இரட்சணிய மனோகரத்தை உரைநடையிலும், முப்பது வெள்ளிக்காசுகள் எனும் நாடக நூலையும் எழுதியுள்ளார். ஆதிகிரேக்க 48 நாடகங்களைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

### நூலின் அமைப்பு

இயேசு புராணம் 1602 பாடல்களைக் கொண்டது. இந்நூல் பரமபிதாப் பருவம், பரமசுதன் பருவம், பரிசுத்தாவிப் பருவம் எனும் மூன்று பருவங்களை உடையது. பிதா, குமாரன், பரிசுத்த ஆவி எனும் திரியேகரின் பெயர்களைக் கொண்டு நூலின் முக்கிய பிரிவுகளுக்குப் பெயர் அமைத்துள்ளார். ஒவ்வொரு பருவமும் மூன்று சுருக்கங்களையும், ஒவ்வொரு சுருக்கமும் ஐந்து படலங்களையும், ஒவ்வொரு படலமும் ஐந்து அடங்கன்களையும் கொண்டதாக அமைந்துள்ளது.

### நூல் எழுதப்பட்டதன் நோக்கம்

இயேசு புராணம் எழுதப்பட்டதற்கான நோக்கத்தைத் தொகுப்பாசிரியர் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

> *கிறிஸ்தவர்கள் எத்தகைய வாழ்க்கையை அமைப்பதால் கிறிஸ்தவர்களாகலாம் என்பதற்கும், கிறிஸ்தவர்கள் அல்லாத தமிழ் அறிந்தவர்கள் கிறிஸ்தவன் என்பவன் யார்? அவனது சமய நோக்கு எது? அவனது வாழ்க்கை நெறி எத்தகைய அமைப்பு டையது என்பதை அறிந்து கொள்ளவும், அச்சமயத்தின் பின்னணிகளை விளங்கிக் கொள்ளவும் தக்கதாக இயேசு புராணம் இயற்றப்பட்டது.*

### வேதாகமத்தின் பாகு

''கிறிஸ்தவக் காப்பியங்களுள் தேம்பாவணி, இரட்சணிய யாத்திரிகம் எனும் இரண்டும் தழுவல் இலக்கியங்கள். ஈழத்துப் பூராடனாரின் இயேசு புராணம் விவிலியத்தின் ஆரம்பம் முதல் முடிவு வரையிலான செய்திகளைச் சுருக்கமாகப் பிழிந்து தந்துள்ளது. இது கிறிஸ்தவ இலக்கியத்தில் குறிப்பிடத்தக்க ஒரு நூலாகும். இயேசு புராணம் பரிசுத்த வேதாகமத்தின் பாகு எனலாம் எனவும், எல்லோருக்கும் பயன்படத்தக்க வகையில் ஆக்கப்பட்ட இது ஒரு 'சின்ன வேதாகமம்' எனல் பொருந்தும் எனவும் தொகுப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.''

பரமபிதா பருவம் எனும் முதல் பருவம் முழுதும் (582 செய்யுள்) பழைய ஏற்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. அதுபோன்று மூன்றாம் பருவத்திலுள்ள கிறிஸ்தவ நம்பிக்கைச் சுருக்கம் எனும் பகுதியிலுள்ள தூதுப் பணி ஆரம்பப் படலம், இரத்த சாட்சிப் படலம், சவுலைப் பவுலாக்கியப் படலம், திருமுறைப் படலம், கிறிஸ்தவப் பண்புப் படலம் எனும் ஐந்து படலங்களும் இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்தபின் உள்ள செய்திகளை அடிப்படையாகக் கொண்டவை. மேல் குறிப்பிட்ட இத்தகைய பகுதிகளைக் கொண்டு முழுமையான நிலையில் எழுதப்பட்ட கிறிஸ்தவக் காப்பியம் இது ஒன்றேயாகும் எனலாம்.

### கிறிஸ்தவர்களின் பண்புகள்

பிற கிறிஸ்தவ இலக்கியங்களில் இல்லாத தனித்தன்மை நிறைந்த பகுதியாக கிறிஸ்தவப் பண்புப் படலம் அமைந்துள்ளது. கிறிஸ்தவர்கள் பெற்றிருக்க வேண்டிய பண்புகளை இப்படலத்தில் ஆசிரியர் எளிமையாக விவரிக்கின்றார். கிறிஸ்தவன் பெற்றிருக்க வேண்டிய இலட்சணைகளை (பண்புகளை) ஐந்து பாடல்களில் பாடுகின்றார். சான்றாக,

*''மற்றோரில் மனமிரங்கி மாற்றா ரென்ற*
*மனதற்று தம்மிலொரு மனுவாய்க் கொள்வார்*
*பற்றுந்துணை பரனல்லாற் பாரில்வேறு*
*பராமரிப்புப் பரிவுள்ள பாதை தேரார்*
*முற்றும் முறைவழியே முனைந்து செல்வார்*
*முழுமனதா யிறைவன்மேல் விசுவா சிப்பார்*
*உற்றதுன்ப வேளையிலும் உண்மைக் காக*
*உயிரீந்து விசுவாசம் உலகிற் காப்பார்'' (கிறிஸ்தவப் பண்புப் படலம், பா. 375)*

எனும் பாடலில் விவிலியத்தை அடிப்படையாகக் கொண்டே தங்கள் வாழ்வைக் கிறிஸ்தவர்கள் அமைத்துக் கொள்வர்; இறைவன் மேல் விசுவாசம் உடையவர்களாக இருப்பர்; துன்ப வேளையிலும் உண்மைக்காக உயிர் விட்டு விசுவாசத்தை உலகில் காப்பார்கள் என்றெல்லாம் கிறிஸ்தவர்களின் பண்புகளைப் பட்டியலிடுகிறார். ஓய்வுநாளில் ஆலயத்திற்குச் சென்று வழிபடுவதன் சிறப்பினை,

*''புனிதமாய் ஓய்வு நாளைப் போற்ற வந்தாள்*
*புரந்திடவே ஆறுதலாய்ப் புனிதன் கோயில்*
*இனிதாகப் பாட்டிசைத்து இரங்கு மாறு*
*இறையருளை வேண்டியவர் ஈந்த வார்த்தைக்*
*கனிதன்னைக் கசிந்துருகிக் கருத்திற் கொண்டு*
*கால்மடித்து முழந்தாழில் கரங்கள் கூப்பித்*
*தனியாக வல்லசபைத் தகையாய் கூடி*
*தந்ததரும் தருகின்ற தயவைப் போற்றே'' (கிறிஸ்தவப் பண்புப் படலம், பா.399)*

எனும் பாடல் மூலம் குறிப்பிடுகின்றார். இத்தகைய தனித்தன்மைகள் நிறைந்த பல பகுதிகளைக் கொண்டதாக இயேசு புராணம் அமைந்துள்ளது.

### வருணனை

புராணத்தில் வருணனை இடம் பெற்றிருப்பது கதையோட்டத்திற்குப் பெரிதும் துணை புரிவதுடன் ஆசிரியரின் கற்பனைப் புலமையையும் வெளிப்படுத்துகின்றது. அவதாரப் படலத்தின் பெத்தல்சேர் அடங்கன் பகுதியிலுள்ள 16 பாடல்களுள் 15 பாடல்கள் மார்கழி மாதக் குளிரை வருணிக்கும் வகையில் அமைந்துள்ளன. சான்றாக,

*''காரெனுங் காலமங்கை களிநடம் புரிந்து வந்தாள்*
*மார்கழி என்னும் மால மயக்கிடு குளிரைத் தந்தாள்*
*நீர்கழி கொள்ள நெஞ்சில் நிறைவுறு ஈரமீந்தாள்*
*பார்களி கொள்ளப் பசுந்தாட் பாயலை விரித்துச் சென்றாள்''(அவதாரப் படலம், பா.167)*

எனும் பாடலைச் சுட்டலாம்.

### விவிலியச் செய்திகளைக் கவிதைப் பொருளாக்கும் திறம்

விவிலிய வசனங்களைப் பாடலாக எளிதில் புரியும் வகையில் மாற்றியுள்ளது இவரது படைப்பின் தனித்தன்மைக்கு ஒரு சான்று எனலாம். உள்ளவனெவனோ அவனுக்குக் கொடுக்கப்

படும், பரிபூரணமும் அடைவான். இல்லாதவனிடத்திலிருந்து உள்ளதும் எடுத்துக் கொள்ளப்படும் (மத்தேயு 25:29) என்பதை,

*"உள்ளவன் தனக்கே மேலும் உயர்வுற ஈய லாகும்*
*எள்ளள விருப்போன் மேலும் ஏற்பவை ஏற்கா னானால்*
*உள்ளதும் பறிக்கப்பட்டு உழன்றிடும் நிறையே காண்பான்*
*தெள்ளிய தேவ வார்த்தை தேறலு மிதுபோ லென்றார்"* (தாலந்து அடங்கன், பா. 56)

எனப் பாடலாக மாற்றியுள்ளார்.

**நடை**

எளிமையும் இனிமையும் கலந்த நடையில் இவரது படைப்பு அமைந்துள்ளது. ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா, கலி விருத்தம் எனும் பல்முறையான யாப்பு வகைகளில் இந்நூலிலுள்ள பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன. அனைத்துப் பாடல்களும் எதுகை மோனையுடன் கற்பார் நெஞ்சைக் கவருகின்றன.

புராணம் எனும் பெயர் பூண்டு முழு விவிலியத்தின் செய்திகளையும் பைந்தமிழ்ப் பாக்களில் பாகு போல் பிழிந்து தரும் பெருமையாலும், ஈழத்தில் தோன்றிய இனிய கிறிஸ்தவ இலக்கியம் எனும் சிறப்பாலும், கணினி வழி அச்சிட்டு வெளியிடப்பட்ட முதல் கிறிஸ்தவ நூல் எனும் தனித் தன்மையாலும், பல்வேறு கிறிஸ்தவ நன்னூல்கள் படைத்ததொரு நல்லாசிரியரின் மணிமுடிப் படைப்பு எனும் மாண்பாலும் தமிழ்க் கிறிஸ்தவ இலக்கியப் பேழையில் தரமுயர்ந்து தலை நிமிர்ந்து நிற்கிறது இயேசு புராணம் எனும் இந்த இன்றமிழ்க் காப்பியம்.

## பரமபிதா இலக்கண அடங்கன்

1

ஆதியை முடிவை யாரும் அறிந்தில ரனேகவூழிச்
சேதியைச் செப்பும் வேதச் செறிகருத் துந்தவூழின்
போதியைக் கொண்டு மந்தப் பொறிவல்லான் பந்தமாகும்
சோதியைச் சுடரை விண்மண் சொரியுயிர் விந்தையாலே.

2

அழிந்தழிந் தாகு மிந்த அனைத்துயிர் ஆதிக்கத்துள்
இழிந்திடா துலகம் மீண்டும் மியங்கிட ஏவுசக்தி
கழிந்தபல் காலந் தொட்டுக் கரையிலா நிலவுசக்தி
சுழிந்திடு வட்டம் போலத் தொடர்செயுஞ் சுருதியேதோ

3

மழிந்திட முடியா வண்ணம் வயங்குமிப் பூமியின்கண்
அழிந்திடாக் கல்மண் காற்றாய் ஐம்பெரும் பஞ்சபூதம்
தொழின்றிட விந்த வூழி தொடர்புறச் சுழலுகின்ற
வழின்றிடு முறைகள் தேரின் வளர்முத லறியலாமே

4

கண்டிடாக் கருவாய் மேலுங் காரிய மாற்றுகின்ற
விண்டிட முடியாப் பேறாம் விரிவுறு சக்திதன்னை
தொண்டுதொட் டெங்கள் முன்னோர்தொழுதனர் இறைவனாக
பண்டுகாண் தெய்வ வாழ்வின் பாங்கிது பகருவாரே.

5

ஆக்கிய தெல்லாம் வையத் தழிந்திட அழிவிலாது
தேக்கிடு கருணை வெள்ளத் தேவனுந் திருவதாக
ஊக்கிடு முணர்வால் மாந்தர் உய்வழி தேவசித்தப்
பாக்கிய மாகக் கொள்ளும் பாங்கது வேதமாமே.

6

குருகிடும் முட்டை தன்னாற் குஞ்சது பொரிப்பதன்முன்
உருக்கொள முட்டை யீயும் உன்னத அன்னைத்தானங்
கருக்கொள வைத்த தாரிக் காரியக் கருத்தனாரோ
அருவுரு வான வந்த அற்புதச் சக்திதேவே.

7

தோற்றமு மாகித் தோன்றுந் தொகைமிகு முயிர்களுக்குத்
தேற்றர வாகித் தேவாய்த் திகழ்பரஞ் சோதியாகி
போற்றுவார் போற்றமற்று புறந்திரிந் தார்க்குவெல்லாம்
ஆற்றுவா னாக அன்பு ஆண்டவன் அருளினானே.

8

எல்லாப் படைப்பும் படைத்திடும் ஏகனின் இயல்புகண்டு
சொல்லினா லன்றி மற்றுச் செயலினாற் சுயங்கொடுப்பார்
கல்லார் கற்றார் என்ற காரணப் பேதமற்று
வல்லா னிறையென் றேத்தி வணங்குதல் வழக்கமாமே.

9

உண்டென் றுரைப்பார் காணா வுன்னத முடையசோதி
விண்டிட முடியா மேன்மை விரிவடை வித்தகன்தன்
பண்டுதொட் டுலவுங் காதை பலவெனப் பகுத்தெடுத்துக்
கொண்டுமெய் தேர்ந்தே உண்மை கூறுநூல் வேதமாமே

## உலக உற்பத்தி அடங்கன்

29

ஆதியிற் தேவ னிந்த ஆழமாம் நீரிடத்தே
ஓதிய வார்த்தை யாக ஒன்றிடா தசைந்தசைந்து
மூதிது வெனவே யான்றோர் மொழிபுலத் துறைந்தஞான்று
கூதிரு மிருளும் மண்டிக் குவிந்ததா மறிகமாதே.

30

நள்ளிருள் வேளை யிந்த நானிலந் தோன்றுவபோல்
கொள்ளிருட் பேய்கள் சூழ்ந்த கொடுங்கறுப் பிருளதாகப்
பள்ளமுங் குளியுஞ் சேர்ந்த பரப்பதா யொழுங்கிலாது
வெள்ளமாய் வெறுமை யான வெளியதா மிருந்தபோது.

31

ஞானமு மில்லை அந்த காரமாய் நாற்பொருளின்
மோனமு மில்லை என்ற மொய்த்திடு இருளதாக
வானமும் விரிவு மில்லா மண்டலத் துருவதாக
ஏனமாய்க் கிடந்த கோலம் இறைவனார் கண்டபோதே.

32

ஆங்குறு இருளைப் போக்க ஆண்டவர் கொண்ட சித்தம்
ஓங்கிற்று ஒளியை யாக்கி உறளிருள் பிரித்துவைத்தார்
பாங்குறு முதலாம் நாளிற் பையிருள் பாதியாகி
தேங்கிற்று ஒளிதான் தேரிற் தெரிநிழ லென்னலாமே.

## நோவாவைத் தேர்ந்தெடுத்த அடங்கன்

179

யாதுமூர் யாவருமே கேளீர் என்று
யவ்வனத்தின் செழிப்பாற்தன் தேவன் தன்னை
சூதுசெய் தறியாது வாழும் நோவா
சுற்றத்தைக் காப்பதால் புத்துலகஞ் செய்யப்
பாதுகா ரெண்ணமுடன் பரமன் எண்ணிப்
பக்தனின் பாங்கேகிப் பாரிற் பாவம்
போதுமெனப் பரவிற்றுப் பொல்லா ராட்சி
பொங்கியதாற் பொறுமைதான் இழந்தே னென்றார்.

180

தம்முளஞ் சென்றவழி சாத்தான் கையிற்
தவறுமேற் தவறாகச் செய்து சாவின்
வெம்பழி கொண்டன ருலகில் நீயோ
வேதனை வழிகளை நாடா யுந்தன்
செம்முளந் தனிலெனைச் சீராய் வைத்துச்
செகத்திலோர் தேவன் செய்குலமும் ஒன்றே
நம்புவது எனையலால் நடிக்கும் மாய்கை
நமனை அல்ல நாளுமே என்னில் வாழ்ந்தாய்.

181

இவ்வுலகை இனிமேலுந் தாங்கல் வீணே
இருந்தவிடந் தெரியாது அழிக்கச் சித்தம்
ஒவ்விடவே உறுதிகொண்டேன் உலுத்தர் சாவார்
ஒன்றுமே இலாதாக்கல் உலகுக் கொவ்வா
வெவ்விடவே சாத்தானை விலக்கி என்னை
விசுவாசஞ் செய்வாரை விடுப்பே னென்றும்
அவ்விதமே அனைவரிடஞ் அறைக அதை
ஆதரிப்போ ரனைவரையும் அனைத்துச் சேர்த்து.

182

என்னாணைப் படியோடம் இயற்றிச் செய்து
எல்லாரு மதனுள்ளே இருக்க எந்தன்
முன்னாணைப் படியாக உலகம் மூழ்கும்
முற்றுமே நீர்நிலத்தை மூடி யுண்ணும்
இன்னாசெய் சாத்தானை ஏற்று உந்தன்
இதவுரையை இறையுரையாய் ஏற்கா மாந்தர்
சின்னாகும் பின்னமாய்ச் சிதைந்து சாவார்
சீவனுள்ள தேவனுரை சிந்தை கொள்ளே

183

உலகமெல்லா மிதனைநீ உரத்துச் சொல்க
உண்மையிதை உளங்கொண்டார் பிழைப்பர் மற்று
அலகையின் வாய்ப்பட்டார் அனைத்தும் பொய்யா
வாணையென அவமதிப்பா ரஞ்சி டாதே
கலகமதுஞ் செய்துன்னை கசட்டுப் பித்தன்
கலம்புகுந்து கடலூழி கடக்கும் பேயன்
உலகமது அழியமுனர் அழியுங் கோழை
உன்மத்த னென்றெல்லா முளறு வார்கள்.

## தேவ குமாரன் அடங்கன்

182

காரிருள் வானிற் கண்சிமிட் டொளியிற் கன்னிமரி
போரிடும் பிரசவப் புலம்பலைப் பொய்யாய்ப் புவியடக்கிக்
கூரிடுங் குளிரில் குந்திய வண்ணங் குடிசைமுன்னாற்
சீரியன் சிந்தை சிதைந்திடச் சிலையாய்ச் செறிந்திருந்தான்.

183

மாடுறை தொழுவமாம் மாசிலாத் தொட்டிலில் மரியைவிட்டுப்
பாடுறும் பக்குவம் பார்த்திட முடியாப் பனிக்குளிரில்
நாடுற நடந்து நண்ணிய கழைப்பால் நற்தூக்கம்
ஈடுறக் கொண்ட இரவினில் யோசேப் பிமைமூடி

184

வைக்கோ லாகியே வரண்டிடு வையகம் வளங்கொள்ளக்
கைக்கோல் தாங்கிக் கடும்பவந் துடைக்கக் கர்த்தரருள்
எக்கா லுமுள்ளது என்று மிருப்பது இன்றுமுள்ள
திக்கலொம் பரந்த திருவருள் மகனெனக் கனவுகண்டான்.

185

வரண்டிடு புல்லிடை வளர்த்திய மலரென மண்ணகத்தைப்
புரந்திடும் பாலன் பூந்தளிர் மேனிப் பொலிவூட்டி
முரண்டிடு வன்மன மூர்க்கரை முனியும் முகங்காட்டித்
திரண்டிடுங் கைகளைத் திக்கலொ மசைக்குந் திறங்கண்டான்

186

என்மக னிலனிவன் இறைவனின் எழில்மக னென்வினைகள்
துன்புறா வண்ணந் தொலைத்திட வந்த தூயனிவன்
அன்பதா லகில மாட்கொள ஆண்டவ ரீந்த வவதாரன்
என்பனே யன்றி ஏதுநா னுரைப்பேன் என்றார்த்தான்.

187

தானறி வுற்றிடாத் தையலின் மடியிற் தவழ்கின்ற
வானதி வழங்கிடும் வைகை என்னும் மதியொளியை
யானறி வுற்றிட யாதவர் குடிலினில் யாகஞ் செய்யேன்
ஆனதிம் மேரி அன்புளத் தியாக மெனநினைந்தான்.

188

சிசுவுருக் கொண்டு செவ்விதழ் மேரித் திருக்கரத்துள்
பசுவரு கெய்திடப் பாலுண்டு பயிலும் பரன்சுதனார்
விசும்பினிற் கிடந்த மெய்யுருக் கண்ட மேன்மகனாம்
தசும்புறன் யோசேப் தழுவியே இயேசின் தாள்பணிந்தான்.

189

விண்மீன் விழியன் விரிமதி வதனன் வினைதந்த
பெண்மான் மடியிற் பெருந்தகை துயிலும் பேரின்பம்
கண்வான் படரக் கண்டுவந் தன்னாள் கற்பறியா
மண்ணன் நானே மன்னித் தருளென மண்டியிட்டான்

190

தேவனார் புவியி லெந்தன் திருமக னாகவந்தார்
ஆவதா மப்பா வென்ன அருகதை யற்றபோதும்
சாவதை வெல்லும் மன்னன் சார்புறு சத்தியத்து
நாவதின் தந்தை யானேன் நண்ணிய நலனதாமே.

191

மார்கழிக் குளிரில் மைகொள் வானத் திருளினூடே
ஆர்கலி தீர்க்கும் பாலன் அவதரித் தளித்தவின்பம்
பார்தனில் பயந்த யோசேப் பரிவுள மேரியோடு
சேர்ந்திறை தரவே பெற்ற செல்வமாய்ச் செகத்திலுற்றார்.

192

தச்சனாய் மரத்தை வெட்டுந் தன்னையித் தனையனுக்கு
இச்சகத் தந்தை யாக்கு மிளமதி இயல்பினானை
அச்சமே கொண்டு அள்ளி அரவணைத் தடிதொழுது
முச்சகம் போற்றும் மேரி முறுவலால் முனிவுதீர்ந்தான்.

## சீடரைத் தெரிவு செய்த அடங்கன்

327

பேதுரு வென்னுஞ் சீமோன் பின்னவ னந்தி ரேயா
போதரு கடலில் மீனைப் புரைவலை யெறிந்து கோல
வாதரு முலக மென்னும் வளைகடல் தன்னில் மாந்தர்
போதக ராக்கி யன்னார் புறம்பிடித் திழுக்க வென்றார்.

328

காந்தமா யிரும்பைக் கௌவுங் கவர்ச்சியாய்க் கருதி யன்னார்
சாந்தனின் பின்னாற் போனார் சற்றப்பால் வலைஞ ரான
பாந்தனார் யாக்கோ யோவான் பரிவுசேர் அண்ணன் தம்பி
சேந்தனர் நால்வர் சீடர் சிறுவலைத் தொழிலை விட்டே

329

ஐவரும் நடந்து வேத னருள்மொழித் தூது சொல்லித்
தைவரச் செல்லும் போது தடைசெயுந் துறையைத் தாண்ட
மைவரு மாயங் கொண்டு வழியிடைச் செல்வஞ் சேர்க்கும்
பைவள லேவி யென்னும் பாவியி னிடத்தே சேர்ந்தார்.

330

ஆயமே வாங்கி மற்றோர்க் கநீதியே செய்யும் லேவி
மாயமாய் மனது மாற மகனே நீயென் பின்னாற்
சாயலாய்த் தொடர்க வென்னச் சார்ந்தவன் தொடர லானான்
நாயனும் மலைமீதேறி நல்லுரை புகல லானார்.

331

ஆங்கிருந் தருளின் தூதை அன்புடன் பகரக் கேட்டோர்
தேங்கிடப் பிலிப்பு மத்தே ததேயுவுந் தோமா அல்பே
பாங்கிடு புதல்வன் யாக்கோ பற்தொலா மேயு பின்னால்
ஓங்கியே குத்தும் யூதா ஒன்றிடச் சீட ரானார்.

332

தெரிந்தவர் தேச மெங்குந் திரள்சனத் தெவர்க்குந் தேவன்
புரிந்திடு நன்மை கூறிப் பொய்யெனும் மாய வாழ்வைச்
சரிந்திடச் செய்யும் பாவச் சங்கார முறைக ளோதப்
பரிந்திடச் செயல்கள் செப்பும் பங்கின ராக்கி னாரே

## இறைவனருள் பற்றிய உவமை அடங்கன்

507

காரிருள் நிசியின் வேளை கடும்வழி நடந்திழைத்த
சீரிய நண்பன் வந்து சிற்றிலிற் புகுந்தபோது
பேரிரு ளாக வுற்ற பெரும்பசி தணிக்கலாற்றான்
நேரிய நண்பன் தன்னை நெடிதெழக் கதவைத் தட்டி

508

கைவச மெது மில்லைக் கடனதாய் மூன்று அப்பங்
தைவர வீந்தா லெந்தன் தவிபசி தணிக்க லாகும்
பைவச மீவா யென்னப் படுத்திடு மென்னை நீயும்
நைவது நலமோ கொண்ட நறுந்துயில் தவிர்க்க மாட்டேன்.

509

கதவுகள் பூட்டி மக்கள் கடுந்துயில் கொள்ளு கின்றார்
உதவிட முடியா திப்போ உதயத்தே பார்க்க லாகும்
விதமுறப் பேச மீண்டும் விண்ணப் பித்தல் கேட்டு
இதமுறு மனத்த னாகி இரந்தவர்க் கீந்தா னன்றோ.

510

கேளுமின் கேட்ட தெல்லாங் கேடற ஈய வல்லார்
ஆளுமன் அன்பின் கதவம் அடைபடா தட்டு வீரேல்
நாளுமென் திறக்க லாகும் நலிபசி தீர்க்க வப்பம்
கேளுமெப் பிதாவுங் கல்லைக் கேட்டவர்க் கீவ துண்டோ.

511

மீனினைக் கேட்டாற் பாம்பை மிடுக்குடன் கொடுப்ப துண்டோ
தேனிறை உணவு கேட்டாற் தேழினைத் தருவ துண்டோ
தானிதை எந்தத் தந்தை தவறியுஞ் செய்ய மாட்டான்
வானிறை தேவ னாவி வழக்குவ கேட்ட தாமே

512

வன்கணார் நீரே யுந்தன் வளர்பயிர் விளையும் போது
அன்புட னீச னுந்தன் அழைப்பினைக் கேட்டி டாரோ
தென்புடன் கேளு மதனைத் திரளதாய் பெற்றுக் கொள்வாய்
மன்பதைக் கருளுந் தந்தை மறைக் கத வடைத்த தில்லை.

513

விளைத்திடு வயல்தான் மேலாய் விதைப்பிலும் விரிந்த போது
திளைத்திடப் பலகால் காணுந் திரவியந் திரட்டி விட்டேன்
இளைத்திட மாட்டே னிங்கு இனுமொரு களஞ்சி யத்திற்
கிளைத்திதைச் சேர்ப்பே னென்ற கெடுமதிக் கதையைக் கேண்மின்

514

ஆண்டவ ரன்றே யந்த அறிவிலி யாசை கண்டு
தாண்டவன் தன்னைத் தன்பாற் தடையிலா தழைத்துக் கொண்டார்
வேண்டிய விளைந்த வீட்டில் வீணான இயமன் வந்து
காண்டிடுங் காக மேதுங் களஞ்சிய மமைப்ப தில்லை.

515

கவல்வதா லுந்தன் தேகங் கால்முழங் கூட்டு வாயோ
அவலமேன் அற்ப மான தாயினும் மாற்று மாற்றல்
குவலயத் தில்லீர் தேவன் குவித்திடு செல்வ மென்றும்
அவலமே ஆவ தில்லை அவரிடஞ் சேரு மென்றான்.

## சிலுவைப்பலி கண்டார் அடங்கன்

126

அடித்தபின் னிறுக்கி யொடுக்கி அரும்பொறிச் சிலுவை யேற்றிக்
குடித்திடக் காடி யீந்து குமைந்திறை சாகும் வேளைத்
துடித்திடுங் காட்சி பார்க்கத் தொடர்திட வந்த நூற்றுப்
படிக்கதி பதியா ரிந்தப் பாங்கினைக் கண்ணாற் கண்டார்.

127

மெய்யிவன் தேவ குமாரன் மேதினி காக்க வந்தோன்
பொய்யினா லிவரைக் கொன்று போட்டதாற் தீய ரானோம்
அய்யனே இதற்கு நானும் அறிவுகெட் டுடந்தை யானேன்
உய்வில்லை எனக்கே என்று உடலது நடுங்க லானான்.

128

அன்பினா லுந்தப் பட்டா ரனைவருந் தொடர்ந்து வந்தார்
துன்பமே யுருவ மான துட்டராம் போரின் வீரர்
மன்பதை யணுகா வண்ணம் மடக்கியே மறிக்க வன்னார்
என்செய லாகு மென்று ஏக்கமே கொண்டிரங் கினாரே.

129

கலிலியோ விருந்து இயேசின் காலிடு பணிக ளாற்ற
வலியுறு வுள்ளத் தோடு வந்திடு வனிதை மார்கள்
கிலிதரு மிந்தக் காட்சி கிட்டிடாத் தூர நின்று
மலிவுறு கண்ணீர் மார்பின் மலைவிழ மயங்கிக் கண்டார்.

130

இத்துயர் கண்ட பெண்க ளிணையிலா ரெண்ணிற் கோடி
அத்தகை மாதருள்ளே அருள்மரி மகத லேனா
நித்திலம் யாக்கோப் யோசேப் நீள்தவத் தாயார் மேரி
புத்திரன் செபத்தே யானின் புனிதத் தாய் என்பா ராமே

131

அன்புளங் கரைந்து கண்ணி லாறெனப் பெருகி யோடித்
துன்புடல் நனைக்கத் தூயர் துடிப்பதைக் கண்டார் விம்மி
யென்பெலா மிடிய மேலும் இதய மிளக்க முற்று
இன்புறு உருவ தான தியல்பதா மானார் என்போம்

132

பெருகிய விரத்த வெள்ளப் பெய்மழை யாற்றில் வெய்யோன்
உருகிய கதிர்கள் பாய்ந்து உருவது அந்தி வானம்
பருகிய சிவந்த பானம் படிந்தது பாரிற் பாவங்
கருகிய தென்ன விரவு கவிழ்ந்திருள் கடுகிற் றாமே.

## உயிர்த்தெழுந்த வசந்த அடங்கன்

198

கல்லறையிற் கர்த்தருடற் காணாதார் வான்தூதன்
நல்லவுரை கேட்டுவந்து நண்ணியங்கு பார்த்தபோ
தில்லையவ ரிறந்தவுடல் இருந்தவிடம் தெரியாது
சொல்லாமற் பறையாமற் சோரமிட்ட தாரென்றார்.

199

யாருக்காய்த் தேடுகின்றீர் யாகமாஞ் சிலுவையிலே
நீருற்றாய்க் குருதிசிந்தி நின்றவருக் கோவென்றான்
பாருற்று விறந்தபரன் பாவமற வுயிர்த்திட்டார்
சீருற்ற விச்சேதி செப்புகவே யெங்குமென்றான்.

200

சொன்னபடி மூன்றாம்நாள் சொர்க்கமக னுயிர்த்திட்டார்
என்னவவர் சீடருக்கு எடுத்துரைக்கத் தாமதியீர்
அன்னையெனும் யேசுபரன் அடைந்திட்டார் கலிலேயா
பின்தொடர்க நீரங்கு பெம்மானைக் கண்டிடுவீர்.

201

பயத்தோடும் பணிவோடும் பார்த்தவற்றைப் பிறர்க்குரைத்தார்
செயத்தோடு உயிர்த்தெழுந்த செய்தியைச் சீடர்கட்கு
நயத்தோடு நவின்றிட்டார் நாடிவந்த பேதுருவும்
வியப்போடு கல்லறையில் வெறுந்துணியைக் கண்ணுற்றான்.

202

நம்புதற்கு அரியசெய்தி நாடறியச் சொன்னபோது
செம்புதங்க மாக்கிடுமாச் சித்துவித்தை என்றார்சிலர்
நம்பிடலாம் நாதனுரை நடந்தேற வுயிர்த்திட்டார்
கும்பிடலாங் குருவானார் குவலயத்தி லென்றார்சிலர்.

203

குளிரடர்ந்த பனிநிலத்திற் குறுகிநின்ற லில்லி
குமுறியெழுந் துடற்பெருக்கிக் குவலயத்திற் துள்ளித்
தளிரெழமுன் தண்டெழுந்து தாங்கிவந்து முகையை
தரைபிழந்து தாவிமணற் தாழ்சிதற வோங்கி
அளிமுரல மலர்ந்துமிசை ஆடுதென்றற் காற்றில்
அசைவாடி மணம்பரப்பி அழகதனைப் பெருக்கி
களிததும்புங் கள்ளேந்திக் கருவண்டை அழைக்குங்
கரந்திருந்த தெங்கேயெனக் காண்போர்கள் வியப்பர்.

204

கார்காலக் குளிர்வாட்டக் காய்ந்துலர்ந்த இலைகள்
கருமண்ணுள் மண்ணாகக் கலந்துரமாய் மாற
வேர்கொண்ட மரம்நிலத்தில் வேறாகித் தலைகீழ்
விரிந்துமண்ணுட் புதைத்திட்ட விகற்பமாய்த் தோன்ற
நீர்காணாச் செடியாக நிர்வாணங் கொண்டு
நீடுபனி நெருப்பாலே நிழலெரிக்க வுதிர்ந்த
நார்மரங்கள் எல்லாமே நறுமலரைச் சொரிந்து
நறவேற்றித் தளிரூட்டி நல்மானம் மறைத்த

205

அறிவென்னும் முதிர்ச்சியது அணைகடந்து பெருக
அதையாக்கும் முயற்சியனல் அவர்முடியை யருக்க
செறிகின்ற வழுக்கையெனச் செழுமரங்க ளெல்லாஞ்
செங்கனியை ஈந்தளித்துச் செயலொடுங்கி வாட
நெறித்ததளிர் கிளையேறி நிலமெங்கும் போர்க்க
நிலமெழுந்த புல்லெல்லாம் நிரைவகுத்து ஆட
முறியாது மரமெங்கும் முன்பல்லாய் முகைகள்
முளைத்ததுபோல் முகங்காட்டி முறுவல்தனை விளைத்த

206

வசந்தமெனும் மாதவளும் வண்ணமல ரேந்தி
வதனமதில் மகரந்த வட்டப்பொட் டிட்டு
நிசமாக நிலமுயிர்க்க நிழலாக்கத் தருக்கள்
நிமிர்ந்தெழும்ப நிறம்மாற்றி நீண்டகதிர்க் கற்றை
வசமாக்கி வளங்கொடுத்து வண்ணவண்ண வாடை
வளமான இளமுடலில் வனைந்துடுத்தி யெங்கும்
கொசகமாய்ச் சிறுபற்றைக் கொழுந்துயர்த்திக் குழைகள்
கொண்டுவீசி அனல்தணித்துக் கொத்துப்பூச் சூடி
விசமான ஆலமோட்டி விளைந்தமணற் பரப்பில்
விண்நீல மெனப்புற்பாய் விரித்ததிலே வீற்று

207

அழிந்ததிவ் வகிலமென அனைவருமே நினைத்த
அவலத்தைப் போக்குதற்கு ஆணையிட்டுத் தந்தாள்
கழிந்தகடுங் குளிர்க்கசப்பை காய்வெயிலா லினித்துக்
கவிபாடுங் குயிலிசையின் கானமதற் கேற்ப
மொழிபாடும் கிள்ளையினம் மூட்டுமிளம் பச்சை
முகைகூட்டி இளவேனில் முன்நடத்தி வந்தாள்
விழிகொள்ளா வியன்காட்சி விதைவிதைத்து நின்றாள்
விண்யேசு உயிர்த்ததுபோல் விடிவுபல வீந்தாள்.

208

குருவாக வழிகாட்டிக் கொடூரப் பாவக்
கொடுமைத்தளை கொண்டோர்மீள் பாதை தேர
திருவான பரமபிதா தேக முற்றுத்
திசைகெட்ட மாந்தர்கள் திகைக்கா தேக
அருவான அமைப்பொழித்து அருளின் சுதனாய்
அவனியிலே கன்னிமரி அன்னை யாளின்
கருவாகி அவதாரங் கழிக்கச் சிலுவைக்
கதியுற்று உயிர்விட்டு கனிந்தா ராமே.

209

கல்லறையின் கர்ப்பமதிற் கருவாய் மீண்டுங்
கர்த்தருடற் கொண்டாரே கடிய சாவை
வெல்லநல்ல வழியுளதை வெளியே காட்ட
விண்ணோக முதற்புவியோர் வியந்து நிற்க
வல்லபரன் முன்னாலே வந்து காட்சி
வரந்தந்து வானேக வந்தா ரென்ற
சொல்லதுவே செயலாக சொர்க்க நாதன்
சுயங்காட்டுஞ் சுதனானார் சோகத்துள்ளே.

210

மீண்டுமொரு அவதாரம் மீளச் செய்தார்
மேதினியில் இதுபுதுமை மேலும் மற்ற
ஆண்டவரின் அடியார்கள் அடையாப் பேறு
ஆதலினால் யேசுவெறும் அடியா னல்ல
மாண்டெழுந்த மனிதனல்ல மனித வாழ்வு
மானிலத்தி லுற்றதனை மறையின் வாழ்வாய்
ஈண்டெடுத்துக் காட்டிடவே இறையோன் ரெண்டாம்
இறந்துமவ தாரஞ்செய் தியற்கை வென்றார்.

## இரத்தச் சாட்சி அடங்கன்

290

குருநாதன் குருசேறிக் குருதி சிந்திக்
குவலயத்தின் குற்றமெல்லாங் குறைத்த பின்னர்
திருலோக மெய்திடவே தேர்ந்த சீடர்
திரிந்தலைந்து தேசமெல்லாந் தேவ னாட்சி
அருளோத அதுபரவி அனைத்தோ ரேற்க
அச்சமுற்ற அரசனவை அவரைக் கொல்லப்
பொருளில்லாப் பொய்க்குற்றம் புனைந்து தீர்த்துப்
பொற்சிலுவைப் பலியிடவே புனித ரானார்.

291

அந்திரேயா எனுமடியான் அருளைச் சொல்ல
அதுகுற்ற மெனவார்த்து ஆவி போக
செத்தூக்குச் சிலுவையிலே செறித்து ஆணி
சித்திரத்து வதைசெய்து சீவன் கொண்டார்
இந்தப்பலி டொமின்சிலோயோ இராயன் செய்தான்
இணைபீற்றர் பவுலானோர் இராசன் நீரோ
தந்தபெருந் தண்டத்தால் தலைகீழ்த் தொங்கித்
தளர்ந்தபின்னர் சிலுவையிலே தானே மாண்டார்.

292

ஜேம்சென்னும் யேசடியான் யேசின் செய்தி
யேற்றுரைக்க சிரசிழந்து ஏங்கி மாண்டான்
ஆம்இரத்தச் சாட்சியென ஆனான் அன்பை
அனைவருக்கும் அறைந்ததினா லாவி போக
வேம்பெண்ணெய் வெந்தழலில் விட்டுப் பொரித்து
விறல்காட்டி வேகவைத்தும் விடாது தூதை
தாம்விடுத்த தகையாலே தலையைக் கொய்தார்
தைரியமாய் சாட்சிசொல்லித் தலைவ னானான்.

293

திரஜானாம் மன்னவனின் தீமை யாலே
திருச்சீடன் பிலிப்போடு திகழ்பரத் தலோமு
பரத்துலகின் பகுத்தறிவைப் பகன்ற வேதால்
பாதகரென் றெண்ணப்படப் பதைக்கத் தோலை
உரவகிர்ந்து உடல்துடிக்க உயிரைப் போக்கும்
உணர்விழந்த நிலையினிலும் உண்மை சொன்னார்
மரச்சிலுவை போல்மண்ணில் மத்தி யாசை
மரிக்குமட்டும் இறுத்திறுக்கித் தீயாற் சுட்டார்.

294

இரத்தச்சான் றெனவுயர்ந்து இறைவன் தூதை
இகத்தோர்க்கு இயம்பியதால் இறவோ னானான்
பரத்தூதைப் பகர்ந்திட்ட பழுதைக் காட்டிப்
பருங்கல்லாற் சீமொனுடன் பக்தன் யூதாஸ்
கரம்நெருக்கு சாவினாலே கடிது மாண்டார்
கடவுளுரை கைவேம்பாய்க் கைத்த வன்பாற்
சிரத்தையுள்ள பிரிசியாவென் சிறிய நாட்டிற்
சிலையெடுக்கச் சவுனியா சீவன் விட்டார்.

295

நம்பாதோன் தோமாவோ நம்புந் தூதை
நாடெங்கும் நவின்றிடவே நடந்து சென்றான்
செம்பாதஞ் சிவந்தார்க்கச் சிவந்தோன் தேயம்
செஞ்சிலுவைப் பாடதனாற் பாவம் போக்கும்
தெம்பாகும் மீட்பென்னுந் தேவ னன்பைத்
தெளிவுற்று ஞானத்திற் திகழச் செய்து
கொம்பான பலதெய்வக் கொள்கை சாடக்
கொதித்தெழுந்தார் பகைத்திடவே கொலையிற் பட்டான்.

296

பெருமானைச் சிலுவைப்பலி பெறவே செய்தார்
பேராசை காட்டவெள்ளி பெற்று நேசக்
குருவான இயேசுதனைக் குறித்துச் சுட்டிக்
குருடான யூதாசுக் காரி யோத்து
வெருவமன வுந்துதலாற் வெந்து பாவ
வினைநினைத்து வெகுதாப விளைவால் மீட்பின்
திருவாக்கை யுரையாமற் தேவ பாலன்
திருப்பாதம் வேண்டியுயிர் தூங்கிச் செத்தான்

## பவுல் அடங்கன்

334

கிறித்துவின் பின்னா லைம்பான் கிளர்ந்திடு வருட மாகக்
கிறித்துவத் தூதன் பவுலுங் கீதமாய் நிருபந் தந்தான்
மறித்திவன் வேத நூலிற் மறைந்திடு நுட்பங் கண்டு
குறித்தறி வுற்ற தாலே குறைகளை அறுத்தா னென்க.

335

தூதினைச் சொல்லும்போது தூயரிவ் வுலக மாக்கி
மாதினை வஞ்சித் திட்ட மாபவம் போக்க மீட்பர்
வாதனைச் சிலுவைப் பாட்டால் வாழ்வினைத் தந்தா ரென்றும்
மேதினி யிதனை ஏற்பீர் மெய்யதைத் தேர்மி னென்றான்.

### 336

இயேசுவென் தேவ குமாரன் ஈடேற்றந் தரவே பாரில்
இயேசுவென் மனுவாய் வந்தார் என்றுமே சொல்ல லானான்
இயேசுவாந் தேவ பாலன் எம்மிலே வைத்த அன்பை
இயேசுவை வெறுத்த பவுலே இகமெலா மியம்ப லானான்

### 337

அவரது அன்பிற் பாவி அடியேனு மிறைவ னாட்சி
கவரவே பட்டு ஒன்றாய்க் கட்டுண் டிவ்வா றானேன்
சுவரதாய் யென்னை யீந்தேன் சுருதியாய் அவரைக் கீறி
எவருமே பற்றும் வண்ணம் எந்தனை ஈந்தே னென்றான்

### 338

சட்டமென் றொன்று அதுவே சார்ந்திடு மன்ப தாகும்
இட்டவர் இயேசே அதனை ஏற்றவர் மனித ராவார்
திட்டமாய் அவரின் பாதை தேர்ந்தவர் தேவ னாட்சி
கட்டாய முறுவ ரென்று கர்த்தரின் தூதைச் சொன்னான்

### 339

என்றெலாம் பவுலும் யேசின் இணையிலாப் புகழைச் சொல்ல
மன்றது கலங்க லான மன்னவன் வெகுள லானான்
குன்றிடா திவனும் யூதர் குறித்திடு மேசை யாவே
நன்றது புகலும் நாதன் நசரேத்த னென்றுஞ் சொன்னான்

### 340

மாமிச வுலகை யாளும் மன்னனே யல்ல வான்மா
ஆமிதா முலகை யாளு மன்னவா மறிக வென்றான்
நேமியி னாட்சி செல்ல நேசமா மன்பு வேண்டும்
சாமிதா னியேசு சத்திய சபைதனின் தலைவ ரென்றான்

### 341

உலகெலாம் பாகக யேசின் உடலதாஞ் சபை யடைய பாகத்
நிலவிடு மன்பின் நெறியி நிறைவர் தூது சொல்ல
கலைகமுற் றிருந்த சபையா லைக்கேய போக்கர் காக
மலர்ந்திடு எபேசியர் தமக்கீட் டமைத்து நூதவ தாமே



# 35

## கன்னிப்பாவை

ஆசிரியர் : இறையரசன் (1928 - )

அறிமுகம் : தி. தயானந்தன் பிரான்சிஸ்

இறைவனை இதயம் கவர்ந்த கள்வனாய் - காதலனாய்க் காணும் அடியார்களின் அன்பு அகத்துறைப் பாடல்களாய் வெளிப்படும். இந்த நாயக - நாயகி பாவத்தைச் சமய இலக்கியங்கள் பலவற்றில் காண்கிறோம். தூய தெரேசா, ஜான் ஆப் தி கிராஸ் (John of the Cross), ஆண்டாள் போன்றவர்களின் பாடல்கள் இந்த வகையைச் சேர்ந்தவை. தமிழ்க் கிறிஸ்தவக் கவிஞர்கள் இந்த முறையைத் தழுவித் தங்கள் இறையுறவை வெளிப்படுத்தத் தவறவில்லை.

இறையரசன் 1928 ஆம் ஆண்டு தூத்துக்குடியில் பிறந்தார். மதுரையிலுள்ள பிரிட்டோ உயர்நிலைப் பள்ளியிலும், அமெரிக்கன் கல்லூரியிலும் தமிழ் பயிற்றுவித்தார். கிறிஸ்தவ சமுதாயப் பணிகளில் ஈடுபட்ட பெருமையும் இவருக்கு உண்டு. இவருடைய இயற்பெயர் சே. சேசுராசா என்பதாகும்.

இறையரசனால் எழுதப்பட்ட கன்னிப்பாவை என்னும் கவிதை நூல் முழுக்க முழுக்க அகத்துறை சார்ந்த உணர்வுகளால் கிறிஸ்துறவை எடுத்துக்காட்டுகின்றது. ஆண்டாளின் திருப்பாவை, பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் அகத்திணைத் துறைகள் ஆகியவற்றைத் தழுவி இச்சிறு நூலை எழுதியிருக்கும் கவிஞர் இறையரசன், ஆன்மா என்னும் கன்னிப்பெண் தான் கண்ட கனவைத் தன் தோழியர்க்கு எடுத்துரைக்கும் இனிய பாடல்கள் சிலவற்றை நூலின் ஆரம்பத்திலேயே தருகிறார்.

கிறிஸ்துவின் மனையாளாகும்படி ஆன்மா என்னும் அப்பெண்ணைப் பெண்பார்க்க வருகிறார்களாம் ஆண்டவரின் தாயும் தந்தையும்! அவர்களும் அவர்களோடு வந்தவர்களும் மணம் பேசி முடித்ததும் அவளுக்குப் பூ முடித்துச் செல்கிறார்களாம். பொன்னான கனவு அல்லவா?

*கன்னித் திருத்தாயும்*
*காவலனாம் மாமுனியும்*
*இன்னும் பல்லோரும்*
*எம்அகமே எழுந்தருளி*
*என்னை மணம் பேசி*
*இனியமலர் சூட்டுவித்துப்*
*பொன்னை உருக்கிவிடக்*
*கனாக்கண்டேன் தோழி! நான்.*

ஒரு பெண்ணின் வாழ்க்கையில் புத்தம் புதிய அனுபவத்தை ஏற்படுத்தும் இந்த நிகழ்ச்சி அவள் தன்னையே மறந்து தன்னை மணக்கப் போகிறவனைப் பற்றிய சிந்தனைகளில் மூழ்கித் தன்னை அவனோடு இணைத்துப் பார்க்க வைக்கும் அல்லவா? அவள் என்ன கூறுகின்றாள் தெரியுமா?

*கன்னித் தமிழேபோல்*
*கனிவு நிறைந்தவளாய்*
*முன்னைப் பழம்பெருமை*
*முழுதும் மறந்தவளாய்*
*மன்னன் மனமறிந்தே*
*உய்யும் திருமகளாய்*
*என்னை யானறியக்*
*கனாக்கண்டேன் தோழி! நான்.*

பிறந்த வீட்டின் பெருமைகளை மறந்து தன் மணாளன் மனமறிந்து வாழும் நிலையில் தன்னுடைய பெண்மைச் சிறப்பை அறியத் துடிக்கிறாளாம்! ஆண்டவர்க்கு ஆட்படும் நிலையில் நம்முடைய சொந்த நீதிகள் யாவும் கந்தைதான்; அவர் சித்தம் அறிவதே வாழ்வின் பயன் என்பதை எவ்வளவு அழகாக எடுத்துக்காட்டுகிறார் இந்தக் கவிஞர்!

இந்தப் பெண்ணைத் தேடி வந்தவர் சிலுவை அண்ணல்! அவர் இவளோடேயே இருந்துவிட முடியுமா? இவளைப் பிரிந்து அவர் சிலுவை ஏறிட வேண்டும் அல்லவா? அவர் பிரிவைத் தாங்க முடியாமல் தன் தோழியரிடம்,

*ஈனவுடல் எடுத்துவந்தான்*
*பாங்கிமாரே - அவன்*
*ஈசன்மகன் யானறிவேன்*
*பாங்கிமாரே!*

என்றும்,

*ஏந்தலவன் சிலுவைமிசை*
*பாங்கிமாரே - ஓர்*
*ஏழையெனத் தொங்கிநின்றான்*
*பாங்கிமாரே!*

என்றும் புலம்புகிறாள். அத்துடன் நிற்கிறாளா? சிலுவையில் உயிர் துறந்தவரை எப்படியேனும் தேடிக் கண்டுபிடிக்கத் தெருவெல்லாம் ஓடுகின்றாள். உன்னதப்பாட்டில் வரும் நாட்டுபுற நங்கையைப் போல் பார்ப்போரிடமெல்லாம் அவரை நீங்கள் கண்டீர்களா என்று கேட்கிறாள்:

*கடந்தானை உள்ளமெலாம்*
*நடந்தானை நாயகனை*
*தடந்தோளை மையலுடை*
*மடந்தையரே கண்டீரோ?*

*உருவானான் உருவமிலான்*
*கருவானான் கடவுள் மகன்*
*குருவானான் அன்னவனை*
*அரிவையரே கண்டீரோ?*

*புரியாத பரம்பொருளின்*
*சரியான தத்துவத்தைத்*
*தெரிவிக்க வந்தவனைத்*
*தெரிவையரே கண்டீரோ?*

இந்த ஆன்மப் பெண்ணின் குரலில் மகதலாள் குரலும் சேர்ந்தொலிப்பதைக் கண்டு கொண்டிருப்பீர்கள்.

இவளைப் பிரிந்துசென்ற சிலுவைச் செம்மல் போர்க்களத்தில் பாவத்தையும் மரணத்தையும் முறியடித்து மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தவராய் வாகை சூடி வருகிறார். அவரை எதிர்கொண்டழைக்க அவளுக்கு ஆசைதான். தன்னைத் தனியே விட்டுச் சென்றவர் என்பதால் அவரோடு ஊடல் கொள்ள விரும்பித் தன் அறைக்குள் சென்று கதவைத் தாழிட்டுக் கொள்கிறாள்! வெற்றி வேந்தர் அவளைத் தேடி வந்திருக்கும் செய்தியைத் தோழியர் அவளுக்கு அறிவிக்கிறார்கள்:

*விழுப்புண் ஏந்திக் களிப்பில் தலைவன்*
*விரைந்து மகிழ்ந்து வருகின்றான்*
*களைப்பைப் போக்கிக் களிப்பில் ஆழ்த்தக்*
*கருணைக் கதவைத் திறமினோ!*
*உலகை வென்றே உவகை ஏந்தி*
*ஒருவன் இங்கே வருகின்றான்*
*அழகை யெல்லாம் அள்ளிப் பருக*
*அடைத்த கதவைத் திறமினோ!*

எத்தனை அழகான பாடல்கள்! போரில் பட்ட வீரக் காயங்கள் விழுப்புண்கள் எனப்படும். சிலுவையில் அண்ணல் தாம் அடைந்த ஐந்து காயங்களின் தழும்புகளோடே ஆன்மப் பெண்ணை அணுகி வருகின்றாராம்! உலகை வென்ற உவகையோடு அவர் எழுந்தருள்வதாகவும் கூறுகிறார் கவிஞர்.

உயிர்த்தெழுந்த வெற்றி வேந்தர்க்கு அவள் கதவைத் திறக்கிறாள். ஆனால் நெடுங்காலம் அவளோடிராமல் அவர் மீண்டும் அவளைப் பிரிந்து விண்ணகம் செல்கிறார். சொல்லொணாத் துயரில் மூழ்கும் அவ்விளம்பெண் தன் தோழியிடம் முறையிடுகின்றாள்:

*நானே இறைமகனாம்*
*நாளும் உனைப் பிரியேன்*
*மானே!' எனத்தழுவி*
*மறைந்து சென்றனனே!*

அந்தத் தோழி தன் தலைவியின் நிலையறிந்தவளாய், அவளை விட்டுப் பிரிந்துள்ள தலைவரைப் பார்த்துக் கூறும் பாடல் ஒன்றோடு நூல் முற்றுப் பெறுகிறது. அந்தப் பாடல்,

*எட்டுத் திக்கும்புகழ்*
*ஏந்தும் இளவரசே*
*பட்டுத் தெறிக்கின்ற*
*பாவை விழியாளைக்*
*கட்டி வைக்கின்றோம்*
*கற்பில் வாழ்ந்து தினம்*
*ஒட்டி உறவாட*
*உவந்தே வந்திடுவீர்!*

என்று இனிய சொற்களால் அமைந்துள்ளது.

ஆன்மப் பெண் ஆண்டவரைத் தாய்மை நிலையில் நின்று மரியாளோடு சேர்ந்து தாலாட்டும் பாடல்களும் சிலுவைமுன் புலம்பும் பாடல்களும் கூட இந்நூலில் இடம் பெறச் செய்துள்ளார் இறையரசன். ஆண்டாளின் திருப்பாவையைத் தழுவி கன்னிப்பாவை என்னும் தலைப்பில் அவர் வழங்கும் பத்துப் பாடல்கள் இந்நூலுக்கு அழகிய மகுடம் அமைத்துத் தருகின்றன. நாம் அடிக்கடி ஆலய வழிபாட்டில் பாடுகின்ற,

*சீயோனின் மாதே இனி க்ஷணம் தரியாதே!*
*மாயமென்ன? உனக்குச் சொல்லவோ?*
*வந்தவர் மணவாளன் அல்லவோ...*

*தூரம் திரிந்த சீயோனே - உனைத்*
*தூக்கியெடுத்துக் கரத்திலேந்தி ...*
*ஆரங்கள் பூட்டி அலங்கரித்து நினை*
*அத்தன் மணவாட்டி யாக்கினது என்னை!...*

எனும் பாடல் அடிகளின் ஆழ்நிலைப் பொருளை நாம் அறிய முற்படும் போது சீயோன் மாதினைத் 'திருச்சபை பெண்'ணாக மட்டுமல்லாமல் 'ஆன்மப் பெண்'ணாகவும் கண்டிட வேண்டும் என்று நுட்பமாக எடுத்துக்காட்டுவது போல் அமைந்துள்ளன இறையரசனின் இனிய அகத்துறைப் பாடல்கள்.

28

இன்னும் உறங்குதியோ?
ஏந்திழையே! ஏசுபிரான்
மன்னும் புகழ் கூறும்
மாக்கீதம் நீ கேட்டுப்
பின்னும் உறங்குதியோ
பேதையேநீ? இப்புவியில்!
உன்னை மணங்கொள்ள
ஒரு பெரிய இளவரசன்
தன்னைக் கீழ்ப்படுத்தித்
தனித்ததொரு கற்குகையில்
மின்னும் மேனியுடன்
மென்காந்த முறுவலுடன்
பொன்னார் இதயமலர்
கொண்டுவந்துன் எழிலழகை
எண்ணிப் படுத்திருக்கப்
பாரேலோ ரெம்பாவாய்.

29

பட்டாசு வெடி வெடிக்கப்
பார்முழுவதும் ஆர்ப்பரிக்க,
பட்டாடை உடுத்தி பலர்
பாங்குடனே பவனிவர
கொட்டாவி விட்டின்னும்
குலமாது தூங்குதியோ!

நட்டமிது வீட்டுக்கு
 நாட்டுக்கும் நட்டமடி
கட்டான உடம்பிருந்தும்
 காதலுளம தானிருந்தும்
மட்டான உன் போக்கால்
 மனுமகனைப் புண்படுத்தி
வட்டாட நினைத்தாயோ?
 வன்னுளமோ நின்னுளம் தான்!
சட்டென்று நீ எழுந்து
 சாடேலோ ரெம்பாவாய்.

30

அகிலேந்து கூந்தலுடன்
 ஆயிழையாய்! அசைந்தொருகால்
துகிலேந்தி நீ நடக்க
 துணைச் சிலம்பு தானார்ப்ப
முகிலேந்து வானவர்கள்
 முத்தமிடத் தேவமகன்
பகலேந்தும் ஒளிமயமாய்ப்
 பார்மீது பவனிவர
நகிலேந்தும் பூங்கொடியே
 நாணமுடன் கண்டு நின்றாய்
இகலேந்தி வெற்றிகண்டே
 இப்புவியை ஆட்கொள்ள
அகமேந்தி வந்தவனை
 ஆரணங்கே தள்ளுவையோ?
புகழேந்தப் புறப்படு நீ
 புரிந்தேலோ ரெம்பாவாய்.

31

தேவன் பிறந்திருக்கும்
 மார்கழித் திங்களிது.
தேகம் நலம்பெறற்கு
 நீராடப் போதுமினோ
ஏவைக் கனிதந்த
 இன்னல் அகற்றி நல்ல
ஏழைகளை ஆதரிக்கும்
 ஏந்தல் திருக்குமரன்
பாவக் கறையகற்றும்
 பச்சிளஞ் சேயாயிப்
பாரில் பிறந்து பல
 புதுமைகள் ஆற்றிபவச்

சாவைப் புறங்காண
வந்தான் அவன் முகத்தைச்
சந்திக்க வாராய் நீ
இன்றேலோ ரெம்பாவாய்.

32

துய்த்தாய் சுவையெல்லாம்
துஞ்சிகளைப் பாறினாய் நீ
பைத்திய மாகநிதம்
பரம்பொருளைத் தேடியலைந்
தயிர்த்தாய் உணர்ச்சிமிக
ஆலயத்துள் நீ நுழைந்து
வைத்தகண் வாங்காமல்
வான்பரனைத் தேடி நின்றாய்
பொய்த்துத் தொழுதாய் நீ
பூபதியோ உன்னிதயக்
கைத்தலம் இருப்பதை நீ
கண்டுகொள்ள வில்லையடி!
உய்த்தல் நடத்துகின்றாய்!
உயர்கலன்கள் மாட்டுகின்றாய்
வைத்தியம் பெறுவதற்கு
வாரேலோ ரெம்பாவாய்.

33

புல்லும் உற்றது பார்
புகழ் சங்கும் உண்ணுது பார்!
வெல்லும் கறையானும்
விரைநுகர்ந்து செல்லுது பார்!
வல்ல இசைகண்டு
வண்டினங்கள் பாடுதுபார்!
கொல்லும் மாவினமும்
குரல்கேட்டே ஓடுதுபார்!
அல்லும் இருளின்றி
அழகாக இருப்பதைப் பார்
எல்லும் அஞ்சுகின்ற
இறைமகனின் வருகையினைச்
சொல்லும் இசையமுதம்
செஞ்செவியில் விழுந்தபின்னும்
செல்லும் மனமிலையோ?
சொல்லேலோ ரெம்பாவாய்.

34

அறிவருள் ஆசையச்சம்
அன்பிரக்கம் வெகுளிநாணம்
நிறையழுக் காறெளிமை
நினைவுதுணி வின்பதுன்பம்
பொறைமதம் கடைப்பிடிகள்
பொச்சாப்பு மானமறம்
வெறுப்புவப் பூக்கமையல்
வென்றியிகல் இளமைமூப்பு
மறவியோர்ப் பின்னபிற
மன்னுமுயிர்க் குணங்களெல்லாம்
குறைவறப் பெற்றவள் நீ
குலமாதே பெண்ணரசி!
இறைமகன் வந்திருக்க
இன்னும் நீ உறங்குதியோ
புறப்படு புன்னகைநீ
பூத்தேலோ ரெம்பாவாய்.

35

தேங்கிய காதலினால்
தேவி நீ மையலுற்றே
ஓங்கிய மஞ்சத்திலே
உருண்டனை உறக்கமின்றி
வீங்கிய கண்களோடு
விழுமிய பாவையென
ஏங்கியே நின்றதெல்லாம்
எமக்கொரு புதுமையல்ல.
தாங்கிய அன்பிலுன்னைத்
தழுவிட இப்புவியில்
வாங்கிய பிறவிநன்கு
வளம்பெற சிலுவைவீரன்
பாங்கியர் இல்லைஎனப்
பாங்குடன் வந்துநிற்க
தூங்கிய புதுமைகண்டோம்
துணிந்தேலோ ரெம்பாவாய்.

36

வீடில்லை வாசலில்லை
விரும்புமொழி ஏதுமில்லை
நாடில்லை சொத்துமில்லை
நடிக்குமொரு பழக்கமில்லை
காடில்லை கழனியில்லை
காசுதேடும் தொழிலுமில்லை

மாடுமில்லை கூடுமில்லை
மஞ்சமில்லை பஞ்சையவன்!
வீடுடையாள் நாடுடையாள்
விரும்புதமிழ் மொழியுடையாள்
மாடுடையாள் காடுடையாள்
மரகதப்பொன் நகையுடையாள்
தேடிவரும் காளையரைத்
தெருட்டுவிழி தானுடையாள்
கூடுவளோ குமரேசை
கூறேலோ ரெம்பாவாய்.

37

பாசம் மிகுந்ததனால்
பரம்பொருளும் கீழிறங்கிப்
பேசும் மகவாகப்
பிறந்துள்ளான் பெத்தலையில்
நேசம் வைத்தனையே
நேரிழையாய்! இவ்வுலகு
நாசம் அடைவதனை
நீக்குதற்கு நேர்வழியை
ஏசு காட்டவந்தார்
ஏற்றபின்னும் தூங்குதியோ?
சீ.சீ. இத்தூக்கம்
சீரழிக்கும் அறப்பயனை
ஆசை நாயகனாம்
அன்னைமரி பாலகனின்
கூசு மலருடலைக்
கூடேலோ ரெம்பாவாய்.

## அன்பில் புலம்பல்

62

இவ்வழியே போகின்றீர்
இங்கு வாரீர்
இதுநீதி யாமோநீர்
சொல்லிச் செல்வீர்

இவ்வுடலைப் பாரீர்நீர்
பார்த்துச் சொல்வீர்
என்னகுறை செய்திட்டான்
இந்தப் பிள்ளை?

இவ்வுலகை நல்லுலகாய்
ஆக்கி னானே
இறந்தவர்க் குயிர்ப்பிச்சை
அளித்திட் டானே!

தெவ்வர்க்கும் அன்புசெய்து
காட்டி னானே!
தெரியாதோ? தெரிந்தேதான்
கொன்றிட் டீரோ!

63

உலகினுயிர் நான் என்று
சொன்னான். அந்த
உலகத்தோ டொன்றிக்க
சென்றிட் டானோ!

அலகையெலாம் அடக்கினவன்
எங்கே? எங்கே?
ஆருயிரைக் காப்பதற்குச்
சென்றான் சொல்வீர்!

அலைகடலை யடக்கியவன்
அடங்கி விட்டான்!
அமைதிதர வந்தவனே
அமைதி யானான்!

பலவுலகும் படைத்தழித்துக்
காக்க வல்லான்
படுத்திங்குத் தூங்குவது
களைப்பால் தானோ!

64

பால் ஊட்டித் தாலாட்டி
வளர்த்தேன், ஐயன்
பாதத்தை யான் நினைத்து
வாழ்ந்தேன்; வாழ்ந்தேன்.

கால்நீட்டி கையாட்டி
நடந்த காட்சி
கண்குளிரக் கருத்தினிக்கக்
கண்டேன்; கண்டேன்.

நாள்காட்டி போலவனும்
வளர்ந்து பாரில்
நல்லவனாய்த் திகழ்வதையும்
பார்த்தேன்; பார்த்தேன்.

ஆள்காட்டி விரல்போல்
முத்தி காட்டும்
அம்மரத்தில் தொங்குவது
யாரோ? யாரோ?

65

அச்சச்சோ ஈதென்ன
கோலம்! கோலம்!
ஆரடித்தார் என்னரசை?
அடித்துக் கொன்றார்?

அச்சச்சோ ஈதென்ன
குருதி வெள்ளம்
ஐயாஅயென் ஐயாஅயென்
ஐயா அ! ஐயா அ!

நச்சிருப்புக் கருவிகளே
நீங்கள் ஏனோ
நல்லவனின் கைகாலைத்
துளைத்துச் சென்றீர்?

உச்சியிலே முண்முடியை
வைத்தே என்றன்
உள்ளத்தைப் புண்படுத்தி
விட்டார் அய்யோ!

66

நீயிருக்க நானன்றோ
போதல் வேண்டும்!
நிம்மதியாய் உன் கரத்தில்
சாதல் வேண்டும்!

பூவிருக்கக் கனிசாதல்
முறையோ அய்யா!
புண்ணியனே! பூபதியே!
புவியின் மீட்பே!

தாயிருக்க சேய் சென்ற
செய்தி இந்தத்
தாரணியில் பழிச்சொல்லாய்ப்
போமே அய்யா!

பாவியருக் காதரவு
தேவை என்றால்
பரம்பொருளே நீதானே
வாழ வேண்டும்.

67

முன்னொருகா லென்மகனைக்
கண்டேன் குகையில்
மூவரசர் வந்தவனை
வணங்கக் கண்டேன்.

பின்னொருகா லென்மகனைக்
காணேன் கோயில்
புறமெல்லாம் தேடியபின்
அகத்தில் கண்டேன்.

கன்னல் நிகர் மொழியானைக்
கானா வூரில்
கண்டேனென் சொற்கேட்டுப்
புதுமை செய்தான்.

இன்னல்தரும் இவ்வேளை
இங்கே யாரும்
இலையே யான் என் செய்வேன்
மகனே! மகனே!

68

மகனிழந்த தாயொருத்தி
கேட்கும் முன்னே
மகனே நீ அவள் மகனை
உயிர்ப்பித் தாயே!

பகலவனே! உனையிழந்த
இருளே யாகிப்
பரகதியை யிழந்தவராய்
வாழும் மக்கள்

அகமகிழ மகனே உன்
அமுத வாயை
அழகாகத் திறந்தொரு சொல்
சொல்லா யோநீ.

அகவாழ்வே! புறவாழ்வே!
அருளின் ஊற்றே!
ஆருயிரே! உன் வலிமை
அடங்கிற் றாமோ?

69

பன்னிரண்டு வயதுனக்கு!
கோயில் சென்றோம்.
பரம்பொருளைத் தொழுதில்லம்
மீளும்போது

கண்மணியை இழந்ததுபோல்
உன்னைக் காணா
தென்ன பாடு பட்டோம் யாம்?
மூன்றாம் நாளில்

கண்ட பின்பே உயிர் பெற்ற
இன்பம் பெற்றோம்
கண்ணே! என் கனியே! நீ
மூன்றாம் நாளில்

என் முன்பு வருவாயோ
ஆகா! யானும்
எப்படியு மதுவரையில்
வாழ்வேன்; வாழ்வேன்.

70

பாவங்கள் ஒன்றாகத்
திரண்டு வந்து
பழிமிக்க சிலுவை எனக்
காட்டிற் றாமோ!

கோபங்கள் ஆணிகளாய்
வந்துன் நல்ல
கொடைக் கரத்தை அருட்காலைத்
துளைத்த தாமோ.

சாபங்கள் முள்ளாக
வந்துன் தலையில்
சரியாகப் புகுந்ததுவோ!
சொல்லா யோநீ?

பாவத்தை வேரறுக்க
வந்த தேவே!
பலியானாய்க் கல்வாரி
மலையின் மீதே.

71

என்செய்வே னினிமேல்யான்
எப்போ காண்பேன்?
என்னரசை! இதயத்தை!
உயிரை! அன்பை!

என்தாயே இவனுன்றன்
மகனே என்று
யோவானை இதற்குத்தான்
காண்பித்தாயோ?

என்றென்று மும்மோடே
இருப்பேன் என்ற
இன்சொல்லை மெய்யாக்கத்
துணிந்தாய் போலும்

கன்றிழந்த புனிற்றாபோல்
கதறும் என்றன்
கனிமொழிக்குப் பதிலேதும்
சொல்லா யோநீ.



# 36

## அன்பழைப்பு, இதயாஞ்சலி

**ஆசிரியர் : தி. தயானந்தன் பிரான்சிஸ் (1932 - 2007)**
**அறிமுகம் : ஸ்வீட்லின் பிரபாகரன்**

*அரை நூற்றாண்டுக்கும் மேலாகக் கிறிஸ்தவ இலக்கியப் பங்களிப்புகளை கவிதை, கட்டுரை, கதை, நாடகம், ஆய்வு முதலியவை மூலம் வழங்கிவரும் அருள்திரு. டாக்டர். தி. தயானந்தன் பிரான்சிஸ் 1953 ஆம் ஆண்டில் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவினால் தடுத்தாட்கொள்ளப்பட்டதைத் தொடர்ந்து 1954ஆம் ஆண்டில் தம் 21 ஆம் வயதில் 'மலைமா நதியோ மிகு ஆழ் கடலோ' எனத் தொடங்கும் அனுபவப் பாடலை எழுதினார். அப்பாடலே அவருடைய கிறிஸ்தவ இலக்கியப் பணிக்கு அடிகோலுவதாயிற்று. பல்வேறு கிறிஸ்தவ நிறுவனங்களில் பயின்றபோதும் பணியாற்றிய ஆண்டுகளிலும் அவர் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக எழுதியுள்ள நூல்கள் ஏறத்தாழ எண்பதாகும். அவற்றுள் சில அவர் பதிப்பித்தவையும் மற்றும் சில அவர் மொழிபெயர்த்தவையும் ஆகும். அவை இலக்கியம், இறையியல், சமயவியல், மொழியியல் ஆகிய பகுப்புக்களில் அடங்கக் கூடியவை.*

*கிறிஸ்தவத் தமிழ் இலக்கியத்தைப் பொறுத்தவரையில் கவிதை மற்றும் இசைப்பாடல் தொகுப்புகளாக அவர் வழங்கியுள்ள நூல்களுள் யோவான், மாற்கு நற்செய்தி நூல்களின் கவிதையாக்கங்களான வாழ்வளிக்கும் வள்ளல், இறைவனின் திருமைந்தன் ஆகியவையும், உன்னதப்பாட்டின் கவிதைப் பதிப்பாகிய உயர்தனிப் பாடல் மற்றும் கிறிஸ்து நெறிக் கவிதைகள் என்ற நூலும் குறிப்பிடத்தகுந்தன. நானுமக்குச் சொந்தமானவன், நீர் எனக்குத் தஞ்சமானவர் ஆகிய இரண்டும் அவருடைய இசைப்பாடல் தொகுப்புகளாகும். இவற்றுள் இருநூற்றுக்கும் மேற்பட்ட பாடல்கள் அடங்கும். ஒலிப்பேழைகளிலும் குறுந்தகடுகளிலும் அப்பாடல்களுள் சில பதிவாகியுள்ளன.*

*'கிறிஸ்தவ கீர்த்தனைகளும் புத்தெழுச்சிப் பாடல்களும்' என்ற நூலில் கவிஞர் தயாவின் 22 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் 'ஆயிரம் ஆயிரம் பாடல்களை', 'மலைமாநதியோ', 'நானுமக்குச் சொந்தமானவன்', 'ஒன்றே எனக்குப் பெருமை', 'புது வாழ்வு நமக்குப் புதுவாழ்வு' ஆகியவை தமிழ்த் திருச்சபைகளில் பரவலாகப் பயன்படுத்தப் படுகின்றன. டாக்டர் தயா தம்முடைய பாடல்கள் சிலவற்றை அவற்றின் தமிழ் ராகங்களிலேயே ஆங்கிலத்தில் பாடலாக்கம் செய்துள்ளார்.* (My Great Redeemer's Praise, 2006). *அவ்வாறே 32 கீர்த்தனைப் பாடல்களையும் 18 புத்தெழுச்சிப் பாடல்களையும் தமிழ் ராகங்கள் பிறழாமல் ஆங்கிலத்தில் வழங்கியுள்ளார்.* (Hold

Fast the Shield of Faith, Tychicus Publications, 2007). இது ஒரு புதுமுயற்சியே ஆகும். ஆங்கிலத்தில் அவை பாடப்படுவதோடு பிற மொழியாக்கங்களுக்கும் அவை துணை செய்ய வல்லவை என்று அவர் நம்புகிறார்.

இவ்வாண்டில் வெளிவரவிருக்கும் அருளிசையமுது (நூற்றைம்பது சங்கீதங்களின் தேர்வு வசனங்களின் பாடலாக்கமாகத் திகழும் 150 இசைப்பாடல்கள்), அப்போஸ்தலர் மொழிக் குறள் (பேதுரு, பவுல், யாக்கோபு, யோவான் ஆகியோர் நூல்களின் தேர்வு வசனங்களை வழங்கும் 400 குறட்பாக்கள்) ஆகிய நூல்கள் இந்நூற்றாண்டின் கிறிஸ்தவத் தமிழ் இலக்கியத்திற்குப் பெருமை சேர்க்கும் தரத்தவை ஆகும்.

கிறிஸ்தவத் தமிழ் இலக்கியம் பற்றியும் பல பாவலர்களைப் பற்றியும் இவர் எழுதியுள்ள நூல்களுள் குறிப்பிடத் தகுந்தவை கிறிஸ்தவ அருட்கவிஞர்கள், கிறிஸ்து நெறிப்பாவலர்கள், கிறிஸ்தவத் தமிழ் இலக்கியம், Vedanayagam Sasthiriar and H.A. Krishna Pillai ஆகியவை எனலாம்.

வேதாகமச் சங்கத்தின் தமிழ்த்திருமறை மொழிபெயர்ப்புக் குழுக்களில் பல ஆண்டுகள் பணியாற்றியுள்ள டாக்டர் தயா 1995 இல் வெளிவந்த பொது மொழிபெயர்ப்புப் பதிப்பை உருவாக்குவதில் பங்கேற்றவர். அங்ஙனமே 'கிறிஸ்தவக் கீர்த்தனைகளும் புத்தெழுச்சிப் பாடல்களும்' நூலின் திருத்தக் குழுவின் கூட்டுநராக இருந்து திருத்திய விரிவாக்கப் பதிப்பைக் கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தின் மூலம் வெளிக்கொணர்ந்த பெருமை இவருக்கு உண்டு. தமிழ் இறையியல் நூலோர் குழுவின் தலைவராகப் பதினைந்து ஆண்டுகள் பணியாற்றி இறையியல் பயிற்சித் திட்டத்தின் கீழ் பல நூல்கள் வெளிவரத் துணை நின்றதோடு அவ்வரிசையில் சில நூல்களை எழுதியும் பதிப்பித்தும் உள்ளார்.

கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தின் பொதுச் செயலாளராக 23 ஆண்டுகள் பணிபுரிந்து (1979 - 2002) ஓய்வு பெற்ற டாக்டர் தயா 1932 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பதினான்காம் நாளன்று அருள்திரு. எபனேசர் டிக்கிகஸ், ராஜம்மாள் டிக்கிகஸ் ஆகிய பெற்றோரின் தலைமகனாக இராணிப்பேட்டையில் பிறந்தவர். தென்னிந்தியத் திருச்சபை மதுரைப் பேராயத்தில் 1972 ஆம் ஆண்டில் அருட்பொழிவு பெற்றவர். நம் நாட்டிலும் இங்கிலாந்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய நாடுகளிலும் இறையியல் கல்லூரிகளில் பணியாற்றியுள்ளதோடு இறையியல் நூல்கள் பலவற்றை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். M.A., B.D., Ph.D. ஆகிய பட்டங்களோடு D.Litt., D.D. ஆகிய கௌரவப் பட்டங்களைப் பெற்றுள்ள இவருக்குப் பல அமைப்புகளும் நிறுவனங்களும் 'கிறிஸ்தவத் தமிழ்க் காவலர்', 'இலக்கியச் செல்வர்' முதலிய விருதுகளை வழங்கியுள்ளன.

'கிறிஸ்தவத் தமிழ் இலக்கியம் என் உயிர் மூச்சு; நாவசையும் வரை அருளுரை ஆற்றத் தவறேன்' எனக் கூறி வந்த டாக்டர். தி. தயானந்தன் பிரான்சிஸ் தனது எழுபத்தைந்தாம் வயதில் வேலூரில் 9.6.2007 அன்று காலமானார்.

அன்பழைப்பு என்னும் குறுங்காவியத் தலைவன் நல்லன் என்னும் தமிழ் வணிகன். ஆண்டவர் பாலஸ்தீனத்தில் வாழ்ந்த கி.பி. முதலாம் நூற்றாண்டில் அவன் வாணிபத்தின் பொருட்டு அந்நாடு சென்றிடும்போது தன் நண்பன் நப்தலி மூலம் இயேசுவைச் சந்திக்கின்றான். அவர் உரைகளைக் கேட்டு அவர் செய்யும் அற்புதங்களைக் கண்டு மகிழ்கிறான். அவர் கல்வாரிக்குச் சிலுவை சுமந்து செல்லும் காட்சியைக் காண நேர்ந்தபோது நெஞ்சம் குமுறியழுகின்றான். அவனைத் தொடர்ந்து உயிர்த்தெழுந்த ஆண்டவரின் வெறுமையானக் கல்லறையையும் கண்டதோடு ஆண்டவரின்

*சீடர்களைச் சந்தித்துத் தோமா என்னும் சீடர்க்குத் தமிழகம் வரும்படி அன்பழைப்பு விடுக்கின்றான். இக்கருவினைக் கொண்ட கதையை இசை நாடகமாக வழங்குகிறார் ஆசிரியர். கவிக்கூற்று அகவற்பாவிலும், பிற நிகழ்வுகளும் உரையாடல்களும் பலவகையான யாப்பு, சந்தப் பண்களிலும் வழங்கப் பெறுகின்றன. இவ் இசை நாடகம் ஒலி - ஒளிக் காட்சியாக மதுரையிலும், சென்னையிலும் அரங்கேற்றப்பட்டதோடு, நூலாகவும் சில பதிப்புகளைக் கண்டுள்ளது.*

*'கிறிஸ்து நெறிக் கவிதைகள்' என்னும் நூலில் கவிஞர் தயாவின் முப்பத்திரண்டு கவிதைகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் இதயாஞ்சலி (அருள்நாதர் அந்தாதி) அவருடைய கவித்திறனுக்கும் பக்திநெறிக்கும் சான்று பகர்கின்றது.*

## அன்பழைப்பு

### (கி.பி. முதல் நூற்றாண்டின் முற்பகுதி)

1

**நல்லன் பயணம்**

செந்தமிழ் நாட்டைச் சேர்ந்தோனான
நல்லன் என்னும் செல்வன் ஒருவன்
வணிகர் குழுவில் துணிவுடன் சேர்ந்தே
யவனர் நாட்டில் கவனம் செலுத்தினன்
பாலஸ்தீனப் பழநாடு அடைந்தே
கலிலேய் ஊர்கள் பலபல கண்டு
எரிகோ வழியே எருசலை அடைந்தான்.

**எருசலை நகரில் நல்லன்**

பொன்னிப் புகழ்ச்சோழர் பூம்புகார் மற்றும்
தென்னவர் திருக்கோயில் தேன்மதுரை யோடு
சேரர் வளநாட்டுச் சீர்வஞ்சி நகரையுமே
ஓரணியில் காணும் உணர்வலைகள் பொங்க,
இருமலைக் குன்றுகள் ஏந்திட நின்ற
எருசலேம் நகர்தன் எழிலெலாம் கண்டான்.
அதுதான்,
பாரிப் பெருவள்ளல் பறம்பின் காட்சியை
வாரி வழங்கியதால் 'வாழ்க' என்றான்!
சீயோன் என்றிட்ட சிறியதாம் குன்றில்
துயோனின் கோவில் தோன்றிட்ட போழ்தில்
'அறுபடை யுடையவன் ஆலயம் போன்றே
எருசலைக் கோவிலும் அழகுடைத்து' என்றான்!
பன்னூறு பக்தர்களைப் பார்த்திட்ட போதில்
'எந்நாட்டு மாந்தர்க்கும் இறைவனே நீ வாழ்க'
எனவே புகழ்ந்து மனமகிழ்ந்திட்டான்.
அணிநகர் மற்றும் ஆலயங் காணவும்
வணிகராகவும் வந்தவர்க் கெல்லாம்

ஆங்கிருந்த யூதர் அன்புரை கூறப்
பூங்குன்றப் புலவன் பொன்மொழி நினைந்தான்.
'யாதுமே ஊராம் எவருமே கேளிர்' என்று
யூதர் மற்றும் யாவரையும் புகழ்ந்தான்.

அத்துடன்,
ஓங்கி வளர்ந்த நல் ஒலிவம் - எழில்
தாங்கி நின்றிடும் காட்டத்தி
பாங்குடைய திராட்சைச் செடிகள் - பல
ஆங்கிருத்தல் கண்டும் மகிழ்ந்தான்.

மலைவாயிற் கோதுமை மணிக்கதிர் வயல்கள்
பலவாகத் தோன்றும் பைம்பொழில் பொய்கை

மற்றும்,
பன்மலர் வண்ணப் பறவைகள் கூட்டம்
இன்னொலி நிறைக்கும் இளமரச் சோலை - இவை
எல்லாமும் பார்த்தே இன்பத் தமிழகத்தின்
முல்லை குறிஞ்சியுடன் மருதமும் நினைந்தான்.

நல்லனின் நண்பனாம் நப்தலி என்போன்
பல்லாயிரம் மாந்தர் பாதை வரும் காட்சி!
காட்டிய வேளையில் கன்னித் தமிழ்மகன்
கூட்டமாய் வந்தோரைக் குறிப்புடன் பார்த்தான்.

**பண்டிகைப் பயணிகள் கூட்டம்**

பஸ்கா வென்றிடும்
பண்டிகை நெருங்கிடப்
பெருந்திரளாய் வந்தார்!
இஸ்ர வேலரென்னும்
யூதர் திரண்டே
எருசலை நகரணைந்தார்!

பலபல காதங்கள்
பயணம் செய்தவர்
பாடியாடி வந்தார்!
நலம்பல வழங்கிடும்
நாயகன் கோவிலை
நாடியோடி வந்தார்!

அடிமை வாழ்வெலாம்
அடங்கிய துணர்ந்தே
ஆன்றோர் முறைமையதன்

படியே புளிப்பிலாப்
பண்டிகை விழவைப்
பணிவுடனே எடுத்தார்!

திருநூல் படித்துத்
திருப்பாப் பாடித்
தெருவெல்லாம் திரண்டே
பெரியோர் சிறியோர்
பெண்கள் தாமும்
பேரணியாக வந்தார்!

## இயேசுவைப் பற்றிப் பேசிக்கொண்டார்

பயணிகள் திரளில் பலப்பலர் கூடி
உயர்ந்த நெறிகள் ஓதிடும் ஒருவர்
எருசலை ஆலயம் தன்னை நெருங்கி
வருவதாக உரைத்துக் கொண்டார்.
'நாசரேத் தென்னும் நகரினைச் சேர்ந்த
இயேசு என்னும் இறையுரையாளர்
வாறார் பாரீர் வாறார் பாரீர்'
என்றே பல்லோர் இயேசுவைக் காணும்
நாட்டம் மிகுந்தே நடந்திடலானார்
நண்பனாம் நப்தலியை நல்லன் நோக்கி,
'நாமும் அங்கே போகலாம்' என்றான்
இருவரும் சேர்ந்து இயேசுவைக் காணத்
திரளாய் இருந்தோர் தம்மோடு சேர்ந்தார்.

## கிறிஸ்தரசர் திருவலம் வந்தார்

திரண்டாங்கே வந்தவர்கள் தெருவெல்லாம்
குருத்தான ஓலைகளைக் கரத்தேந்தி உயர்த்தி
ஓசன்னா வென்றே ஒருகுரலாய்க் கடலின்
ஓசையே யன்ன ஒலியினைப் பெருக்கி,
'இறைவன்தம் பெயரதால் எழுந்திடுவோர் வாழ்க!
இசரேலின் மன்னராக வருகின்றோர் வாழ்க!'
என்றே முழக்கம் எழுப்பிடலானார்.

அவர்களின் முன்பு,
இறையன்பால் ஆகியதோர் அருள்வடிவத் தண்ணல்
இன்முகத்தைக் காட்டியோராய் எதிர்ப்படலானார்.
'அருமகளே, சீயோனே, அஞ்ச வேண்டாம்! - உன்
அருகணைவோர் உன்னரசர் ஆவார் அறிக!

கோவேறு கழுதைக் கன்றின் மீதே - உன்
கோவேறி வருகின்றார் காண்க' என்றே
திருமறை கூறுகின்ற பொருளுரைகள் விளங்க - உலகத்து
இருள்மறைக்கும் கிறிஸ்தரசர் இனிதாக வந்தார்.

## நல்லனின் நாட்டமும் கிரேக்கரின் விருப்பமும்

திருவிழா காணுதற்காய்த் திரண்டிருந்த மக்களுள்ளே
கிரேக்கர்திரு நாட்டுக் காரரும் இருந்தார்
அவர்களை நப்தலி அறிந்தோன் ஆதலின்
தவத்திரு நாடாம் தமிழகம் விடுத்தே
ஆங்குவந்த தன்னுடை அன்பனாம் நல்லனைப்
பாங்குடன் அறிமுகப் படுத்தி வைத்தனன்.
அன்னவர் தம்முடன் அன்புரையாடி
கன்னித் தமிழ்மகன் கனிமொழி யாலே,
'ஈண்டு எழுந்துள இயேசு வென்கின்ற
மாண்புடை அண்ணலைக் காண்பதற் கென்னை
அன்பன் நப்தலி அழைத்தே செல்கிறான்'
என்றே கூறினன். அந்தக் கிரேக்கர்,
'யாங்களும் அவரைக் காணவே வந்துளோம்'
என்றுரை பகர, யாவரும் விரைந்தார்.

## 'யாவரையும் நான் இழுத்துக் கொள்வேன்!'

விண்ணொளியை உமிழ்கின்ற
மேனியர் இயேசு
வேற்றுநாட்டு மானிடரும்
விரும்பித் தம்மைக்
கண்டிடவே வந்துளதைக்
கருதி நெஞ்சில்
களிப்பெய்தி இவ்வுரைகள்
கழற லுற்றார்:

மண்மீதில் மனுமகன்நான்
மாண்பு காணும்
மாபெரிய வேளையின்று
வந்த தறிக!
உண்மையாக உறுதியாக
ஒன்றைச் சொல்வேன்!
உரையதனின் உட்பொருளை
உணர்ந்து கொள்க!

விதையெதுவும் தனித்திருந்தால்
விளைச்சல் இல்லை!
மேனிகெட் டழிந்து செத்தால்
வெகுவாய் விளையும்!

அதுபோலத் தன்னுயிரை
 அரிதாய்க் காப்போன்
அவ்வுயிரை ஒருநாளில்
 அந்தோ இழப்பான்!

இவ்வுலகில் தன்னுயிரை
 இழிவாய் மதிப்போன்
இறப்பில்லா வாழ்வதனை
 என்றும் பெறுவான்!
செவ்வையுள ஊழியனாய்த்
 திகழ விழைவோன்
சீராக எனையேபின்
 செல்லவேண்டும்!

'யானுலகில் ஒருநாளில்
 உயர்த்தப் படுவேன்!
யாவரையும் அதுபோழ்தில்
 ஈர்த்துக் கொள்வேன்!
வானொளியாய் யானிங்கே
 வாழும் போழ்தே
வந்தென்னைப் பற்றிடுவோர்
 வாழ்வைப் பெறுவார்!'

## 'இவரைப்போல் எவரையும் கண்டறியேன்'

இவ்வுரைகள் இயேசு நல்லோர் இயம்பக்கேட்டு
யாவருமே ஒருசேர வியப்பில் ஆழ்ந்தார்.
ஒருநாளில் யானுலகில் உயர்த்தப் படுவேன்
என்றிட்ட உரையாலே எதனைக் குறித்தார்?
எனக்கேதும் விளங்கவில்லை! எனவே நண்பா,
இவர்கூற்றை நீயெனக்கு விளக்கவேண்டும்
எனவே நல்லன் நப்தலியை வினவ,
இயேசுவென்னும் அண்ணல் இவரே
எங்கெங்கும் அலைந்தலைந்தே எல்லார்க்கும் நன்மைகளைச்
செய்திடுகின்ற சிறந்த வள்ளல்
என யான் அறிந்துளேன். இன்னும்கேட்க·

'குருடர்தம் கண்களைத் திறந்துளார் என்றும்
நோய்களைப் போக்கிப் பேய்களை விரட்டி
ஏழை எளியோரின் தோழராய் விளங்கும் - ஓர்
இறையுரையாளர் எனவும்நான் அறிந்துளேன்'
என்றே நப்தலி இயம்பிடும் வேளையில்
ஆங்கு நின்றிருந்த ஆளொருவன் வந்தே,

ஐயா நான் இவ் அண்ணல் ஆற்றியதோர் அருஞ்செயலைப்
பார்த்திடும் பேறு வாய்த்திடப் பெற்றேன்.

பெத்தனி என்னும் பெயரிய ஊரில்
இலாசரு என்னுமோர் இளைஞனை மரணம்
அணைந்த போழ்தில் அவனுடை உடலைக்
கல்லறை ஒன்றினுள் நல்லடக்கம் செய்து
நாட்கள் நான்கு ஆனபின்பு
அண்ணல் இயேசு ஆங்கு வந்தார்.
அருமைமிகு நண்பன் இறந்துள்ளதை அறிந்து
விழிநீரை வடித்தே அழுதிட்ட பின்னர்,
கல்லைப் புரட்டிடச் சொல்லி விட்டு
'வாராய் இலாசரு நீ வெளியே வாராய்'
என்றொரு குரலினை எழுப்பிய போதில்
இறந்தோன் உயிர்பெற்று எழுந்தே வந்தான்.

அவ்இலாசரு,

இன்றும் எங்கணும் உலவிடுகின்றான்.
அன்று அவனை எழுப்பிடும் போதில்,
'உயிருற்றெழல் மற்றும் உயர்வாழ்வு அதுவும்
அருள்வோன் யானென அறிந்திடுவீரே!
என்னைப் பற்றிடும் எவனும் வாழ்வான்,
இறந்து படினும் என்றும் வாழ்வான்,
என்றும் இயேசு இயம்பிடக் கேட்டேன்'
என்றே அவர்கட்(கு) எடுத்துச் சொன்னான்.
இவைகளைச் செவிவழி ஏற்றிட்ட நல்லன்,
'இவரைப்போல் எவரையுமே இவ்வுலகில் கண்டறியேன்,
இவருரைபோல் எவருரையும் இருந்ததில்லை,
இறைவாழ்வை அளித்தெவர்க்கும் ஏற்றம் நல்கும்
இயேசுநல்லோர் என்னையுமே ஆட்கொண்ட அண்ணலாவார்'
என்றாங்கே நண்பனிடம் அறிக்கை யிட்டான்.
ஆண்டவரின் அன்புநோக்கால் அருளுரையால் நல்லன்
கவர்ந்திழுக்கப் பெற்றோனாய்க் களிப்புமிகக் கொண்டே
அவரருகில் அணைந்துசென்றே வணங்கி நின்றான்.
அண்ணலுமே அவன்முகத்தை அன்புடன் பார்த்தார்.

2

## 'நீதி உலகில் மாய்ந்ததோ?'

சில நாட்கள் சென்றபின்னே - நல்லன்
சீயோனைக் காணச் சென்றான்.
பொலிவுடைய எருசலை நகரை - மீண்டும்
போய்ப் பார்க்க ஓடி நடந்தான்.

பலபேர்கள் பாதை எங்கும் - கூடிப்
பயங்கரமாய்க் கூச்சலிட்டார்.
'சிலுவையிதைத் தூக்கிச் செல்க' - என்றே
செவிகிழியச் சத்தமிட்டார்.
வெறியர்தம் குரலைக் கேட்டே - நல்லன்
வேகமாக ஓடியாங்கே
வருகின்றோர் யாவர் என்றே அந்த
வழிநெடுக பார்த்த போதில்,
குருமார்கள் ஆசியோடே - மக்கள்
கொடிதான சிலுவை யொன்றைத்
திருவடிவத் தண்ணல் மீதில் - சுமத்தித்
தெருவெல்லாம் விரட்டல் கண்டான்!

வெறியர்தம் செயல்கண்டே வெகுண்டான் நல்லன்.
நெறியில்லை ஈதெல்லாம் நெறியில்லை என்று கூவி
இருகண்ணும் நீர்வடிக்க இதயம் நோக,

'பாதகர்காள் நீவிரெல்லாம்
பண்பில்லா விலங்குகளோ?
பதடிகளோ?'
என்று கேட்டு,

ஏதுதான்நீர் செய்கின்றீர்
என்றறிய மாட்டீரோ?
இரக்கமிலா ஈனர்காள்!
என்றே கதறி,

'நீதி உலகில் மாய்ந்ததோ?
நேர்மை யறமும் ஓய்ந்ததோ?
தீதும் நீதி ஆனதோ?
தேவ பலமும் சாய்ந்ததோ?'
என்றே வியந்து,

சிறுமை தீர்க்கும் செம்மலைச்
சிலுவை சுமக்கச் செய்கிறீர்!
அருமை மிகுந்த அண்ணலை
அடித்து நடத்திச் செல்கிறீர்!
எனவும் புலம்பி,

'வீரம் இதுவோ? வெட்கம் இலையோ!
வெறியால் உள்ளம் இழந்தே விட்டீர்!
கோரச் சிலுவை கொண்டே அன்பைக்
கொல்லத் துணிந்தீர் கோழை மாந்தரே!'
என்றும் கடிந்து,

வன்சிலுவை சுமந்தோராய் வந்தவரைப் பார்த்தான்

### ஈனச் சிலுவை சுமந்து வந்தார் அண்ணல்

தோளை யழுத்திடும் பாரச் சிலுவையைத்
தூக்கிச் சுமந்து வந்தார் - இயேசு
ஆளை நசுக்கிடும் கோரக் குருசெனும்
ஆலையதில் நலிந்தார் - கடுஞ்
சாலைவழி நடந்தார்

கூனிக் குறுகிய தேகம் முழுவதும்
கோலம் இழந்ததுவே - அவர்
மேனி தனில்பெரு வாதை மிகுந்தெழ
மேலும் நடந்திட லானார் - இரு
காலும் நொடிந்தே போனார்.

சோர்ந்து தரையினில் வீழ்ந்து கிடக்கிற
சோக நிலையினைக் கண்டும் - யூதர்
சேர்ந்து சவுக்கினால் ஓங்கி யடிப்பது
செய்யத் தகு செயலோ? - இது
செம்மை நெறி இயலோ?

செந்நீர் வழித்திடும் அன்புடலை மேலும்
சிலுவை அழுத்தியதே - இயேசு
இன்னும் நடந்தடி முன்வைக்கப் பார்க்கையில்
இடறி விழுந்தனரே -சென்ற
தடமும் பிறழ்ந்தனரே

கரேலென் றிருந்த சிரேனே சீமோனைக்
காவலர்கள் அழைத்தே - அச்சம்
உறாது சிலுவையை ஒருமுறை தூக்கிநீ
உதவி புரிவாய் எனவே - அவனும்
ஓடிச் சுமந்தனனே.

### அண்ணலைச் சிலுவையில் அறைந்தார்

கொலையே புரி களமாம் ஒரு கொடுமாமலை அருகே
குறையேதுமில் குருவேசுவைக் கொணர்ந்தார் மிகு கொடியோர்!
உலையேறிடும் மெழுகாய் அவர் உடல் வாதைகள் படவே
உடனே கடும் சிலுவைதனில் அறைவோம் என எழுந்தார்!
குலையா அருள் கரங்கால்களில் இரும்பாணிகள் நுழையக்
குணமே இலா வெறி மானிடர் கொடும்பாதகம் புரிந்தார்!

மலைமீதினில் சிலுவைமரம் நிமிர்ந்தோங்கிய பொழுதில்
வசைமாரிகள் அவர் மீதினில் மிகவாகவே பொழிந்தார்!
பலமாதர்கள் வழிசோர்ந்திட அழுதே உடல் தளர்ந்தார்
பரிசேயரும் சதுசேயரும் பிறபேயரும் மகிழ்ந்தார்!

கல்வாரி மேட்டினிலே
கடும்வெய்யில் வேளையிலே
எல்லாரும் கண்டிடவே
இழிசிலுவை மீதினிலே

நல்லேசு தொங்குகிறார் - உடல்
நலிந்தவராய் வாடுகிறார்!

முள்முடியைச் சிரத்தணிந்து
மூன்றாணிக் காயத்தோடு
கள்வர்கள் இருவரோடே
கதியேதும் இலார்போலே

வள்ளலேசு தொங்குகிறார் - உயிர்
வதைந்துமிக ஏங்குகிறார்!

அன்னைமரி அழுதுநிற்க
அடியவர்கள் உளம்பதற
கல்மனத்தோர் களிப்பெய்த
காவலர்கள் சூழ்ந்துகொள்ள

மன்னரேசு தொங்குகிறார் - துயர்
வடிவினராய்த் தோன்றுகிறார்!

'இறைமைந்தன் நீயென்றால்
இப்போதே இறங்கிவா' என
வெறிமாந்தர் உளறிநிற்க
ஒரு சொல்லும் உரையாதே

துரையேசு தொங்குகிறார் - உளம்
துடித்துமிகத் துவளுகின்றார்!

அங்கமெலாம் சிதைகின்ற வேளையிலே - இயேசு
'அப்பா இவர்க்குமன்னிப் பருளு' மென்றே
தங்கமொழி வேண்டுதலைச் செயல்கண்டு - நல்லன்
'தரணிதனில் அருளாளர் இவரே' என்றான்

அருகிருந்த ஒருகள்ளன் உளம்மாறி - 'என்னை
ஐயாநீர் உமதரசில் நினையு'மென்றே
உரைத்திட்ட வேளைதனில் உளங்கனிந்தே - 'அன்ப
உண்மையாக என்னுடன் நீ இருப்பாய்' என்றார்.

'எப்பாவம் புரிந்தோரும் இயேசுவை - அண்டில்
இனிதாக மன்னிப்பை அருளுகின்றார்! எனவே
இப்பாரில் இவரைப்போல் வாழ்வளிப்போர் - எவரும்
இருப்பதை யான் கண்டதில்லை' என்றான் நல்லன்.

வேதனையைத் தாங்கொணாத வேளைதனில் - இயேசு
வேதமொழி நினைந்தவராய் மிக்கொலி யாலே
'ஏனென்னைக் கைநெகிழ்ந்தீர் என் இறைவா?' - என்றே
எல்லாரும் கேட்டிடவே மொழிந்திடலானார்.

'தாகத்தால் தவிப்படைந்து வாடுகின்றேன்' என்று
தம்சிலுவை மீதிருந்தே இயேசு கூற
வேகமாய் ஓடிவந்தே தமிழ் நல்லன் - அவரின்
விடாய் தீர நீர்தரவோ, தடுத்தார் கயவர்.

'யாவும் முடிந்த'தென்று கூறி - அண்ணல்
யாக்கை சோர்ந்துமே இளைத்தோராக
'ஆவியை ஒப்படைத்தேன் எந்தாய்!' என்றே
அருகணைந்த மரணத்தை ஏற்றுக்கொண்டார்.

அருளண்ணல் ஆவிநீங்கும் வேளையதில் - எங்கும்
இருள்கவிந்து இடிமுழக்கம் எழுந்ததுவே!
பெரும்புயலும் கடுங்காற்றும் வீசிடவே - மக்கள்
பீதிமிக அடைந்தோராய்ப் பேதலித்தார்.

## சிலுவையின் நிழலில்

கூடியிருந்தோர் பலரும் - உள்ளம்
குழைந்து மிகவே அழுதார்!
நூற்றுவர்தம் படையின் தலைவன் - அவரை
நீதிமிகு அண்ணல் என்றான்.
நல்லன் அதனைக் கேட்ட போழ்தில்,
'நூற்றுவர்தம் படைத்தலைவா - உன் கூற்று
நூற்றுக்கு நூறு உண்மை' என்றான்.

சிலுவையிலே தொங்கிநின்ற செம்மலைப் பார்த்து
உளம் உருகி இவ்வண்ணம் உரைக்கலானான்:

என்னெஞ்சம் சோர்கின்ற வேளையிலே - ஏசையா
உம் சிலுவைப் பாடுகளை எண்ணிடுவேன் - இனி
உம் சிலுவைப் பாடுகளை எண்ணிடுவேன்!

அங்கமெலாம் சிதைகின்ற வேளையிலும்
ஆணிகளால் அழிந்திடாத உம்மன்பில்
அணுவேனும் நீரெனக்கு அருளுமய்யா - சிறு
அணுவேனும் நீரெனக்கு அருளுமய்யா!

வன்செயல்கள் வசைமொழிகள் வந்தபோதும்
வாடுதலே அடையாத உம்மனதை
ஒருசிறிதே நீரெனக்கு வழங்குமய்யா - அதை
ஒருசிறிதே நீரெனக்கு வழங்குமய்யா!

கொடும்பாவப் பழிகளும்மைச் சூழ்ந்தபோதில்
குமுறாமல் இருந்திட்ட உயர்பண்பில்
கொஞ்சமேனும் நீரெனக்குத் தாருமய்யா - அதில்
கொஞ்சமேனும் நீரெனக்குத் தாருமய்யா.

உலகத்தை உய்விக்க வந்த அண்ணல்
சிலுவையதன் அருகினிலே சென்று நல்லன்
நிலத்தினிலே நெடிதாக வீழ்ந்தவனாகப்
பலமுறையும் இங்ஙனமே பாடலுற்றான் :

## எடுப்பு

தகுதியோ எனக்கு ஏதுமில்லை!
தரமுடையேனோ இல்லை இல்லை!
மிகுதியாய்ப் பாவம் புரிந்த இப்பாவி
மீட்பினைப் பெற்றிட முடியுமோ சுவாமி?

## தொடுப்பு

இருக்கின்ற நிலையோடே வருகின்றேன் ஐயா - உம்
திருச்சிலுவை அருள்நாடி அணைகின்றேன் ஐயா!

1

உலகத்தின் பவமெல்லாம் சுமக்கநீர் வந்ததால்
ஒருபாவம் அறியாத பலியாடும் ஆனதால் - இருக்கின்ற

2

ஆயிரம் எண்ணத்தால் அலைப்புண்டே அமிழும்நான்
ஐயத்தால் அச்சத்தால் அஞ்சியே சாகும்நான் - இருக்கின்ற

3

வறியனாய் வாட்டங்கள் உடையனாய் வருகின்றேன்
வாவென்று எனையும் நீர் அழைக்கின்றீர் ஆகையால் - இருக்கின்ற

## கல்லறையில் நல்லடக்கம்

அந்த வெள்ளி யன்று மாலை
அரிமத்யா ஊரினன் அன்பன் யோசேப்பு
அரசினர் தம்மிடம் அனுமதி பெற்றே
இறந்திட்ட இயேசுவின் உடலினை வாங்கி
கல்வாரிக் கருகிருந்த கல்லறை யொன்றினுள்
நல்லடக்கம் செய்திடவே நாட்டம் கொண்டான்.

நண்பர்கள் சிலபேரும் நிக்கோதே மென்பானும்
நறுமணம் வீசிய நற்போள மிட்டே
ஒருசீலைத் துணியால் அவர் உடலைச்சுற்றி
அதுவரை எவருடலும் இருந்திராக் கல்லறையில்
வைத்தே முகப்பில் மிகவும்
கனமான கல்லொன்றைக் கவிழ்த்தும் விட்டார்
நப்தலியும் நல்லனும் நல்லடக்க நிகழ்வுகளை
அருகிருந்து கண்டபின் ஆங்கிருந்து அகன்றார்.

3

## அண்ணல் உயிருற்றெழுந்தார்

வாரத்தின் முதல்நாளாம் ஞாயிறு காலை
நல்லனும் நப்தலியும் நகரினுள் வந்தார்.
ஒரு சில நண்பராங்கே விரைந்தே வந்து
'உயிர்த்தே எழுந்தார் இயேசு அண்ணல்
கல்லறையில் அவருடலைக் காணவில்லை!
இருதூதர் ஆங்கெழுந்தே அவருயிர்த்தார் என்றிட்டார்
மகதலேனா மற்றும்பிற மரியரும்
இதனைக் கண்ணுற்றே எங்கட்குக் கூறக்கேட்டோம்'
என்றதொரு செய்தியினை எடுத்துச் சொன்னார்.
சோர்வெல்லாம் நீங்கிச்
சலிப்பெல்லாம் தொலைந்து
புத்துயிரும் புதுபலமும்
பெற்றிட்ட பேர்களாக
நப்தலியும் நல்லனும் நண்பர் தம்மோடே
காலியான கல்லறையைக் காணச் சென்றார்.
ஆங்கவர் சென்றிட்ட அந்தப் போழ்தில்
யோவான் மற்றும் சீமோன் பேதுரு
இன்னும் பலப்பல அடியவர் தாமும்
மாதர் பலரும் கூடியிருந்தார்

இயேசு உயிர்த்தார் என்ற செய்தியை
யாவரும் அறிந்தே இறைவனைப் புகழ்ந்தார்
செந்தமிழ் நாட்டின் சிறந்த நல்லன்
உயிர்த்தெழுந்த ஆண்டவரை உளமதில் ஏற்றுப்
பேருவகை பொங்கிடவே பாடலுற்றான்.

## எடுப்பு

புதுவாழ்வு நமக்கு புதுவாழ்வு - இது
பெருவாழ்வு கிறிஸ்து தரும்வாழ்வு

1 பிறந்தவர் இறப்பது பொதுமரபு - இங்கு
இறந்தவர் எழுவதோ புதுச்சிறப்பு!
இறைவனின் திருமகன் உயிர்த்தெழுந்தார் - கொடும்
மரணத்தின் பிடியினைத் தகர்த்தெறிந்தார்! - புது

2. கல்லறை உலகினில் பல உண்டு - அவை
சொல்லிடும் கதைகளில் கனிவுண்டு
வல்லவர் இயேசுவின் கல்லறையோ - அவர்
இல்லையே என்னிடம் என்றிடுதே! - புது

3 இயேசுவின் உயிர்த்தெழல் பெருநிகழ்ச்சி - அவர்
நேசரின் வாழ்விலும் வரும் நிகழ்ச்சி!
நாசமோ மோசமோ நமக்கில்லை - விசு
வாசிகள் தமக்கு இறப்பில்லை! - புது

### தோமையர் சந்திப்பு

சிலபல நாட்கள் சென்றபின்னர்
எருசலை நகரினில் ஒருநாள் மாலை
நப்தலி தன்னுடன் நல்லன் தானும்
ஆலய வாயிலை அண்டிய போதில்
தோமையர் என்றிடும் தூய தொண்டர்
பல்லோரை நோக்கிப் பகர்ந்த மொழியைக்
கேட்கும் வாய்ப்புக் கிடைக்கப் பெற்றான்.
இயேசுவின் அடியாரம் அந்தத் தோமையர்,

'அன்புடையோரே, இதனைக் கேட்பீர்!
இயேசு உயிர்த்தார் என்றென் நண்பர்
கூறிய மொழியைக் கொள்ள மறுத்தேன்.
நேரில் அவரைப் பார்த்தா லன்றிக்
காயத் தழும்பைக் கண்டா லன்றி
நானொரு போதும் நம்பேன்' என்றேன்.
கடந்த கிழமை நடந்த தொன்றை
உமக்குநான் இப்போ துரைப்பேன் கேளீர்!
அடியர் யாங்கள் இருந்த அறைக்குள்
அண்ணல் இயேசு வந்திட லானார்!
கண்டேன் அவரைக் கண்டேன்!
காட்சி இன்பம் கொண்டேன்!

அண்டித் தொட்டும் பார்த்தேன்!
ஆரத் தழுவி மகிழ்ந்தேன்.
விலாவில் கையை வைத்தே பார்த்தேன்.
தழும்புகள் தம்மைத் தடவியும் கண்டேன்
என்னைப் போன்று கண்ணால் கண்டு
நம்பிடு வோர்கள் தம்மை விடவும்
பார்க்கா தவரிடம் பற்றுக் கொள்வோர்
பேறு பெற்றோர்! பேறு பெற்றோர்!
என்றே உரைகள் ஆற்றக் கேட்டான்.
அதுபோழ்தில் நப்தலி,
தோமையர்தமக்குத் தன் தோழனாம் நல்லனைச்
சிறப்பு மிகுந்த செந்தமிழ் நாட்டினன்
என்றே இனிதாய் அறிமுகப் படுத்தினன்

## நற்செய்தியாளர்க்கு நல்லனின் அழைப்பு

அதனைக் கேட்ட அருள்மிகு தோமையர்
'உலகிற் கொளியாய் விளங்கும் அண்ணல்
அளிக்கும் மீட்பை அனைவர்க்குஞ் சொல்லக்
கீழ்த்திசைப் பயணம் மேற்கொள வுள்ளேன்
அந்தப் பயணம் அமைந்திடும் போது
உங்கள் நாட்டைக் கண்டிட வருவேன்
செல்வம் கொழித்திடும் சிறந்த நாடாம்
தமிழகம் காணத் தவற மாட்டேன்.
தமிழர் தமக்குத் தகுந்தொண்டாற்றி
இயேசுவின் செய்தியை எடுத்துக் கூறும்
வாய்ப்பைப் பெரிதும் நோக்கியுள்ளேன்
என்றே கூற,
இனிய நல்லன்,
'என்னருமைத் தோமையரே
இயேசுவின் தொண்டரே!
அருளின் செய்தியைக்
கனிவுடன் கூறத்
தமிழகம் வருக!
அன்புடன் உம்மை
அழைத்திடுகின்றேன்!
அண்ணல் இயேசுவின்
அன்பு நெறியை
ஆங்குள மன்னர்
அறிஞர் கலைஞர்
சங்கப் புலவர்
சமயத் தொண்டர்
பலதொழில் புரியும்

பைந்தமிழ் மாந்தர்
அனைத்துப் பேர்க்கும்
அன்புடன் கூற
வருக வருக
வருக என்றே
அன்புடன் உம்மை
அழைத்திடுகின்றேன்!

'மேலைக்கரையில் காயல் துறையில்
பாய்மரக் கப்பலில் மாபெரும் பணிக்காய்
நீர் வந்திறங்கும் அந்நாள் நேரில்
அன்புடன் உம்மை எதிர்கொண்டழைப்பேன்.
சேரவேந்தன் பேரவைக்குள்ளே
அழைத்துச் சென்று அறிமுகப் படுத்துவன்
பின்னர்,
பாண்டியன் சோழன் பெரும்புகழ் வள்ளுவன்
அத்துணைப் பேர்க்கும் அறிமுகப்படுத்துவன்.

அன்பு நண்பரே,
அண்ணலின் தொண்டரே!
வான்தமிழ் விருந்தை
வள்ளுவன் குறளைப்
பாணரின் கலையை
வீரர்தம் நெறியைக்
கண்டு கேட்டு
சுவைத்தே மகிழ
வருக வருக
வருக என்றே
அன்புடன் உம்மை
அழைத்திடுகின்றேன்!'
என்றே அவர்க்குநல் அழைப்பினை விடுத்தான்.

தோமையர் தாமும்,
'நற்றமிழ் நாட்டு நல்லனே நண்பனே,
வருவேன் வருவேன் உறுதியாய் வருவேன்
மேலைக் கரையில் காயல் துறையில்
சேரர் நாட்டில் சந்தித்திடுவோம்,
இறைவன் உம்மோ டிருப்பாராக!'
என்றே உரைக்க,
அவரிடம் நல்லன் விடைபெறலானான்.

## நப்தலிக்கு அழைப்பு

இரண்டு நாட்கள் கடந்த பின்னர்
தாயகம் திரும்பிடப் பாய்மரக் கலத்தில்
நல்லன் ஏறிய வேளையில் நப்தலி
தானும் விரைவில் தமிழகம் வருவதாய்
விழிநீர் ததும்ப விடைகொடுத் திட்டான்
'தவறாமல் வருக! தமிழகம் வருக!
நல்லுறவை வளர்க்க நண்பனே வருக!
அன்புடன் உன்னையும் அழைத்திடுகின்றேன்!'
என்றே கூறி இனிய நல்லன்
அலைக்கரம் தாங்கிய அருங்கலம் ஏறித்
தமிழகத் தாயகம் திரும்பிடலானான்
பலநாள் பயணம் தொடர்ந்த போதில்
பாலஸ்தீன நடப்பெலாம் நினைந்து
பண்ணத்தி இயற்றிப் பாடி மகிழ்ந்தே
ஆண்டவர் இயேசுவுக்கு அஞ்சலி செலுத்தினன்

### எடுப்பு

வள்ளல் இயேசு வதனம் கண்டேன் - அவர்
வாயின் மொழியாம் தேனை உண்டேன்!

### தொடுப்பு

உள்ளம் கவரும் உரைகள் கேட்டே
ஊனில் உயிரில் உருகலானேன்!

1. அண்ணல் இயேசு அருகில் சென்றே - அருள்
ஆசி நலன்கள் அடையலானேன்!
கண்கள் பொழியும் கருணை ஒளியின்
கனிவில் இனிமை காணலானேன்! - வள்ளல்

2. மன்னர் இயேசு வடிவம் கொண்டே - இறை
வாழ்வின் மாண்பைக் காணலானேன்!
அன்பின் தாள்கள் முன்பில் அமர்ந்தே
அடியன் சிரசால் வணங்கலானேன்! - வள்ளல்

3. குன்றின் மீதில் அவரைக் கண்டேன் - கொடும்
கோரச் சிலுவை மீதில் கண்டேன்!
அன்பின் காயம் ஐந்தும் கண்டே
அடிகள் மீதே அழுந்தலானேன் - வள்ளல்

4 சாவை வென்றோர் தம்மைக் கண்டேன் - அவர்
காயத் தழும்பும் காணலானேன்!
தேவ மைந்தர் உயிரோ டெழுந்தார்
சாவே இல்லா வாழ்வும் ஈந்தார்! - வள்ளல்

# இதயாஞ்சலி

## (அருள்நாதர் அந்தாதி)

### கலிவிருத்தம்

1

இயேசுவே உன்புகழ் எங்கணும் ஓதவும்
இயேசுவே உன்பெயர் இனிமையில் ஊறவும்
இயேசுவே உன்அடி இணைநிழல் சாரவும்
இயேசுவே உன்அருள் ஈகுவாய் என்றுமே!

2

என்றும்உன் அடியமர்ந்து அடங்கிநான் இருந்திட
என்றும்உன் அடியவர் திரளுடன் இணைந்திட
என்றும்உன் அடியனாய் எளியனும் இயங்கிட
என்றும்உன் அருளொலி எனிலுற வேண்டுமே!

3

வேண்டும் பேர்க்கு வேண்டுவ தருகிறாய்
வேண்டு வோர்தம் விழைவெலாம் அறிகிறாய்
வேண்டும் யார்க்கும் வினைகளைந்து எறிகிறாய்
வேண்டும் எனையும் மீட்டுளாய் அண்ணலே!

4

அண்ணலே உன்னடி அணுகவும் தரமிலேன்
அண்ணலே உன்மனை வாயிலை அணைகிறேன்
அண்ணலே உன்பெயர் அகந்தனில் நினைகிறேன்
அண்ணலே அருளுக எனஅழைத் திடுகிறேன்

5

அழைத்துநீ அன்பரை ஆட்கொள அணுகினாய்
அழைத்துநீ அவர்க்கெலாம் அருள்மொழி இயம்பினாய்
அழைத்துநீ அவரைஉன் ஆணையால் அனுப்பினாய்
அழைத்துநீ அடியவர் ஆக்குவாய் எவரையும்!

6

எவரையும் பார்க்கிலும் இனியவன் ஆகவும்
எவரையும் அணைவதில் இணையிலன் ஆகவும்
எவரையும் ஏற்றிடும் இறைமகன் ஆகவும்
எவரையும் கூறுவன் இயேசுஉனை அன்றியே!

7

உன்னை அன்றிஎவ் உலகமும் இல்லையே
உன்னை அன்றிஇங்கு உயிர்களும் இல்லையே
உன்னை அன்றிஓர் உய்விலை ஆதலின்
உன்னை அன்றிஎன் ஊன்உயிர் இல்லையே!

8

| | | | |
|---|---|---|---|
| இல்லை | எனக்கென | இல்லம்என்று | ஏதுமே |
| இல்லை | நிலைப்பது | என்றிட | ஒன்றுமே |
| இல்லை | அறுபடா | உறவுகள் | எங்குமே |
| இல்லை | ஆகிடாது | இருப்பதுஉன் | மொழியதே! |

9

| | | | |
|---|---|---|---|
| மொழிபல | பயின்றும் | அன்பு, அறி | யாதவன் |
| மொழிபல | நிறைந்தும் | அன்பு, உண | ராதவன் |
| மொழிபல | பகர்ந்தும் | அன்பிலேன்! | வீணுரை |
| மொழிந்திடாது | அமைவன் | முடங்கிஉன் | அடியிலே! |

10

| | | | |
|---|---|---|---|
| அடிபணிந்து | உன்புகழ் | அறியவே | விழைகிறேன் |
| அடிபணிந்து | உன்நெறி | அடங்கவே | அணைகிறேன் |
| அடிபணிந்து | உன்பணி | ஆற்றவே | வருகிறேன் |
| அடிபணிந்து | உருகஎன் | அடிமனம் | திருத்துக! |

11

| | | | |
|---|---|---|---|
| திருத்துவாய் | எனில்என் | திருவெலாம் | பெருகுமே |
| திருத்துவாய் | எனில்என் | தீங்கெலாம் | மறையுமே |
| திருத்துவாய் | எனில்என் | சிந்தையும் | தெளியுமே |
| திருத்துவாய் | யானுன் | திருவடி | அடையவே! |

12

| | | | |
|---|---|---|---|
| அடைபவர் | கேட்டிடும் | அதிசய | உரைகளும் |
| அடைபவர் | கண்டிடும் | அடைக்கலத் | தலம்அதும் |
| அடைபவர் | பெறுவதாம் | அரியபேர் | இன்பமும் |
| அடைந்திட | வைப்பதுஉன் | ஐந்தருட் | காயமே! |

13

| | | | |
|---|---|---|---|
| ஐந்து | காயத் | தழும்புகள் | காண்டலும் |
| ஐந்து | காயத் | தழும்புகள் | தீண்டலும் |
| ஐந்து | காய்த்து | அன்புநினைந்து | ஏங்கலும் |
| ஐந்து | காயம் | அகத்தழும்பு | ஆகவே! |

14

| | | | |
|---|---|---|---|
| ஆகவே | நீஎன் | அகந்தனில் | உறைகிறாய் |
| ஆகவே | நான்உன் | உடன், உற | வாடுவோன் |
| ஆகவே | நாளும் | நாமிணைந்து | ஆழ்கிறோம்! |
| ஆக, ஏ | கம், யாம்! | ஆயினும் | இருவரே! |

15

| | | | |
|---|---|---|---|
| இருவர் | மூவரே | உன்பெயர் | கூறிடும் |
| இருவர் | மூவராய் | எங்குஅவர் | கூடினும் |
| இருவர் | மூவரின் | இடையினில் | இருந்துமே |
| இருவர் | மூவருக்கு | ஒருமையே | காட்டுவாய்! |

16

| | | | |
|---|---|---|---|
| காட்டுவோன் | மற்றும் | காண்பொருள் | இரண்டுமே |
| காட்டுவோ | னாம்நீ | கண்ணொளி | ஊட்டுவாய் |
| காட்டுவோன் | உன்கை | பிடித்துநான் | காண்குவன்! |
| காட்டுவோன் | ஆகிக் | காக்கிறாய் | இறைவனே! |

17

| | | | |
|---|---|---|---|
| இறைவனே | உனைவிடுத்து | எங்குமே | சென்றிடேன் |
| இறைவனே | உன்பெயர் | என்றுமே | மறந்திடேன் |
| இறைவனே | உன்பெயர் | இயம்பநான் | தவறிடேன் |
| இறைவனே | இதனைஓர் | உறுதியாய் | ஏற்கிறேன்! |

18

| | | | |
|---|---|---|---|
| உறுதி | ஏற்றுஉன் | உயர்பணி | புரியவே |
| இறுதி | வரைக்கும் | இன்னருள் | நாடிநான் |
| அறுதி | யிட்டுஉன் | அருள்உரை | சார்குவன்! |
| பெறுதி | என்றுமே | பெருவரம் | நல்குவாய்! |

19

| | | | |
|---|---|---|---|
| நல்கிடும் | நன்மைகட்கு | ஏது, கைம் | மாறுதான்? |
| நல்கும்உன் | நன்மனதுக்கு | இணையும் | ஏதுதான்? |
| நல்கிடும் | உன்கரம் | நாளுமே | ஏதுதான்? |
| நல்கினும், | ஏற்றிட | நாணமும் | ஏதுதான்? |

20

| | | | |
|---|---|---|---|
| தான்எனத் | தாழும் | தன்னயச் | சிந்தனை |
| தான்எனை | நாளும் | தாக்கியே | வருத்துவ |
| தானதோர் | நிலையினைத் | தாண்டியே | உயர்வுடைத் |
| தானதாம் | தானத்து | இருத்து, சந் | தானனே! |

21

| | | | |
|---|---|---|---|
| சந்தான | மரபு | தானறி | யாதுநான் |
| சந்தாய | வழியில் | தனியனாய் | அலைந்தனன் |
| எந்தாய் | அன்றுநீ | எதிர்கொளும் | அன்புடன் |
| வந்தாய் | எனக்குமே | வாழ்வொளி | வழங்கவே! |

22

| | | | |
|---|---|---|---|
| வழங்கும் | மரபுஎலாம் | மறையுமே | விரைவில் |
| வழங்கும் | சொல்லெலாம் | வழக்கொழிந்து | அழியும் |
| வழங்கும் | உன்கர | வலிமையோ | உன்பேர் |
| வழங்கும் | இடம்எலாம் | மாய்ந்திடாது | இருக்கும்! |

23

இருக்க ஓர்இடம் இலைஎனக்கு எனினும்<br>
இருக்க வேண்டுவன் என்னுடன்! என்றும்நீ<br>
இருக்க வேறொரு இடமும்ஏன் இயேசுநீ<br>
இருக்க எனக்குஇனி இல்லமும் பொருளுமேன்?

24

பொருளுடை உன்னுரை கேட்பினும் பூதலப்<br>
பொருளையே பொருள்என நாடிநான் உயர்பரம்<br>
பொருள்உனைப் போற்றிடாது அலைகிறேன் ஆயினும்<br>
பொருள்என எனையும்நீ மதிப்பதுஓர் விந்தையே!

25

விந்தை உன்பிறப்பு இறப்பொடு உயிர்த்தெழல்<br>
விந்தை உனதுவிண் ஏற்றமும்! ஆட்சியும்<br>
விந்தை உம்பரொடு உலகுஉனைப் பரவலோ<br>
விந்தை அன்றுகாண் எந்தெந்தப் பேர்க்குமே!

26

பேரும் புகழும் வேண்டேன் பெருமஉன்<br>
பேரும் சீரும் பேணி யாவரின்<br>
பேரினும் மேலதாம் உன்பெயர் வழிப்புதுப்<br>
பேரினைப் பெற்றுயான் வாழ்வதுஎன் வேட்கைகாண்!

27

காணும் உலகொடு கலைகள் மற்றும்<br>
காணும் வாழ்வு யாவும் ஊன்றிக்<br>
காணும் போதில் கைப்பே! உன்முகம்<br>
காண விழையும் கருத்தே நாடுவன்!

28

நாடியே வந்துனை நண்ணிடும் பேர்களை<br>
ஓடியே அணைந்துநீ ஏற்கிறாய் என்பதால்<br>
தேடியே வருகிறேன் திணறியே தளர்ந்துதள்<br>
ளாடியே வீழ்கிறேன் அணைந்துஎனைத் தாங்கிடு!

29

தாங்கிட தோம்ததி தாங்கிட எனும்நற்<br>
பாங்குடை வகையவாம் பரதமும் பயில்வன்<br>
ஈங்குள பண்பாட்டு இசையினைக் கற்றுமே<br>
யாங்கனும் உன்பேர் இயம்புவன் பக்தியால்!

30

ஆல்போல் தழைப்பர் அருள்நிறை அண்ணல்உன்<br>
பால்வந்து அடையும் பாவியர்! மறைமொழி<br>
யால்இது கண்டுஉனை அணையும்இவ் எளியனைக்<br>
கோல்கிளைப் பெருமரக் குறுவிழுது ஆக்கிடு!

31

இடுக்கணே வரினும் இன்னல் படரினும்
அடுக்கடுக் காக அவலம் அணுகினும்
ஒடுக்கப் பட்டுளம் உடையினும் உன்பெயர்
எடுக்கப் பெறாதுஎன் இதயத்து அடைத்தனன்.

32

அடைத்துஅணை கட்டினும் ஆங்குப் பொங்கியே
உடைத்துஅலை பாய்ந்திடும் வெள்ள ஓட்டம்போல்
படைத்தஅந் நாள்முதல் பாய்ச்சும் அன்பினால்
கிடைத்துள பேறுகள் கேடில் ஈவுகள்!

33

ஈகிற உன்கரத்து இருந்தடங் குவோனாய்
வேகிற தழலினை மிதித்துமே வருவேன்
ஆகிற கடும்புயல் ஆயினும் கடப்பேன்
சாகிற போழ்திலும் சாய்ந்திடாது இருப்பேன்!

34

இருப்பு நெஞ்சம் இறுகிநான் பாவ
விருப்புக் கொண்டு வீண்வழி நடந்தே
கருப்புடை இருட்டில் கலந்தனன் கருணை
நெருப்பினைக் கொண்டுஎன் நெஞ்சினை உருக்கினாய்.

35

உருக்கொளும் உள்ள நினைவுகள் யாவுமே
கருக்கொளும் முன்பே காண்கிறாய் ஆதலின்
செருக்குள எண்ணம் சிதைக்கவே முயல்கிறேன்
திருக்கொளும் தூயத் தெளிவுளம் ஈந்திடு!

36

திடுக்கிட வைக்கும் செயலதாய் எளியனை
தடுத்துநீ ஆண்டு தனிப்பெரும் சீரெலாம்
கொடுத்தனை அடியன் ஆக்கினை குருஉனை
விடுத்தினி விரைந்தே ஓடிடேன் உறுதியாய்!

37

ஆய்ந்திடும் கலைகள் ஆகம நூல்கள்
பாய்ந்தெழும் புதுமைப் பாங்குகள் யாவும்
மாய்ந்தழிந்து ஒழியும் வகையின ஆகுமே!
தேய்ந்திடாது என்றும் திகழ்வதுஉன் பெயர்அதே!

38

உன்பெயர் ஒன்றையே ஓதிட அறிவேன்
உன்பெயர் ஒன்றினால் உலகினை வெல்வேன்
உன்பெயர் ஒன்றினுள் ஒடுங்கியே அமைவேன்
உன்பெயர் ஒன்றியே உயிருடன் வாழ்வேன்!

39

வாழ்ந்திடும் நாள்கள் மருட்டி நின்றாலும்
தாழ்ந்திடும் நேரம் சரிந்து வீழ்ந்தாலும்
வீழ்ந்திடாது எனைநீ அணைவதால் வெந்துயர்
ஆழ்ந்திடேன்! அருளே அணைந்துஎனைச் சேர்ந்திடும்!

40

சேர்த்திடும் செல்வம் தேய்ந்தே மறைவதைப்
பார்த்தனன் எனினும் பாவியேன் மனதில்உன்
வார்த்தையைப் பதிய வைத்திலன் எளியனை
ஈர்த்திடற் காய், நீ என்றும்பின் தொடர்ந்தனை!

41

தனையே எனக்கெனத் தந்திடும் உனையே
அனையோர் எவரையும் எங்கணும் காணேன்
எனைநான் உன்றனுக்கு ஈகிறேன் இன்றே
வனைந்துன் உளப்படி வடிவமை என்றே!

42

என்றுநான் உன்னைஎன் கண்ணால் காண்பேன்
என்றுநான் ஏங்கினன் இதயத்து எழுந்தே
இன்றும் உன்கண் எதிருளேன் என்றாய்
நன்றே கண்ணை நான்திறந் துளனே!

43

திறந்த மனதுடன் தெளிந்த சிந்தையும்
சிறந்த பொறைதரும் செழுமைப் பணிவுமே
நிறைந்த வாழ்வினை நெஞ்சில் வேட்டுஇனி
குறைந்த மதியினன் குழைந்து வேண்டுவன்

44

வேண்டிடும் போதெலாம் விரைந்தே வந்திடும்
ஆண்டவா உன்னுடை அருளின் அடிகளை
யாண்டுமே கண்டிட விழைவன் என்பதால்
மூண்டெழும் அன்புஅனல் மொழியால் அழைக்கிறேன்!

45

அழைத்தநீர் உண்மையின் ஆண்டவர் ஆதலால்
பிழைக்கிறேன் உம்உரைப் பிணைப்பினால்! உலகில்
உழைப்பதும் உறைவதும் உம்முடை உறவால்!
தழைத்திடச் செய்கிறீர் தண்ணருள் பொழிந்தே!

46

பொழியும் சொற்களால் புதுமை உரைகளால்
வழியும் தேன்தரும் மதுர நயமுள
மொழித்திறம் காட்டிடும் முனைவன் யானலன்
வழுத்திடும் என்மொழி மழலை உளறலே!

47

உளர்கொல் உலகினில் உனையறி யாதவர்?
உளர்கொல் உனையறிந்து உளம்திற வாதவர்?
உளர்கொல் உளம்திறந்து உருகிய ழாதவர்?
உளர்கொல் அழுதுமே உனையடை யாதவர்?

48

"யாதுஅவர் கூறினும் யான்அதைச் செய்திடும்
போதுஅவர் அருள்வழிப் புதுபலம் ஈதலால்
மாதவர் போன்றுஎனை மதித்தனர்!" என்கிறேன்!
ஏதுஅவர் அன்பினுக்கு ஈங்குஇணை ஒப்புமே!

49

ஒப்படைக் கிறேன்நான் உவப்புடன் வாழ்வை
ஒப்பினுக்கு அல்ல உண்மையாய் ஈந்தேன்
ஒப்பனை இன்றி எனையளிக் கின்றேன்
ஒப்பமும் இட்டுஉன் உடைமைநான் என்றே!

50

என்றோ யான்அழிந்து இருக்க வேண்டும்!
ஒன்றும் எண்ணிடா உளத்தோடு அந்நாள்
சென்றதாம் வழியிலோர் திருப்பம் தந்தாய்!
வென்றுஎனை வீழ்த்தியே நன்றெலாம் ஈந்தாய்!

51

நன்றெலாம் ஈந்த நாயகன் உன்துணை
ஒன்றினால் இன்றும் உலகினில் வாழ்கிறேன்
குன்றிய மனத்தர் குறைமதிக் கொடியர்
என்றிடும் பெற்றியர் இழிசெயல் சிதைத்தாய்!

52

தாயுடன் தந்தையும் மனைவி மைந்தர்
ஆயினோர் பொழிந்திடும் அன்பில் உனது
நேயமே காண்குவன் நெஞ்சினோடு உடலும்
நோயுறின் உன்னருள் நொடிதொறும் உணர்வன்!

53

உணர்ந்தே அறியும் படிநான் உன்னைக்
கொணர்ந்தே உளத்தில் அமர்த்திக் கொண்டேன்
இணைந்தே வாழ்தல் எண்ணி உன்னுடன்
பிணைந்தே ஆழும் பேறும் நாடுவன்

54

நாடு மொழிஇனம் நற்கலை யாவும்உன்
நீடு புகழ்உணர்ந்து நெகிழ்வதற்கு என்பதால்
ஏடுஎடுத்து யானுமே எழுதிடு கின்றேன்
ஓடுஅளவும் தரமிலா ஒருவனே ஆயினும்!

55

ஆயின அகவையும் ஐம்பதைத் தாண்டிப்
போயின ஆண்டுகள் என்றுயான் புலம்பேன்
நீஎனைத் தாங்கும் நிலையுணர்ந் தோனாய்
நாயினேன் தொடர்வன் நடையினை உனக்காய்!

56

காய்தல் உவத்தல் கருத்தினில் களங்கம்
தோய்தல் இன்றித் துணிவுடன் உன்றன்
சேய்கள் என்றே எவரையும் சேரும்
தூய்மை மனதில் தோன்றிட விலையே!

57

விலையே கணித்தல் இயலா மதிப்பின்
சிலுவை உதிரம் சிந்தி அளித்த
தலைவா, என்றன் தனிப்பேர் அரசே
பொலிவாம் மொழிகள் புகலும் குமரா!

58

குமர, உன் குருசின் குன்றம் ஏறி
அமரநல் தீபம் அகத்தில் காண்பபோர்
அமர்வர் உன்றன் அடிகள் நிழலில்
குமரா, அமரா, குருநீ என்றே!

59

என்றன் உரையும் எழுத்தும் வாழ்வும்
நன்றாய் உன்னைப் பரவும் நாட்டம்
ஒன்றைக் கொண்டுள உறுதியில் நிற்பவை
அன்றி மற்றவை அணுவுமே கொண்டிரா.

60

இராப்பகல் வருதலை எளிதில்அவை மறைதலைப்
பார்த்தலால் இற்றையப் பகலிரவு எனக்கென
வாய்த்துள ஒற்றைநாள் என்றுயான் மகிழ்வுடன்
போற்றுவன் வாழ்த்துவன் பொழுதெலாம் அரற்றுவன்.

61

வன்சொலால் அமையும் வழுவுடைப் பாடலே
நன்றெனக் கொண்ட நாயினேன் உன்றன்
அன்புஒளிர் பாடல் அழகெலாம் உணர்ந்தே
உன்புகழ் கூறுபண் உவந்திடச் செய்தனை!

62

தனையாய்ந் திடும், முறை தன்னை உணர்த்தி
எனையுன் ஆணையை ஏற்றே சிலுவை
தினமும் சுமந்திடும் சீருமே காட்டி
உனைப்பின் தொடரவும் உரைத்தனை அன்றோ!

63

அன்றோ இன்றோ என்றும் மாறிடாது
என்றன் வாழ்வில் இயங்கும் இறையருள்
ஒன்றே போதும் என்பது உணர்ந்து அதை
குன்றில் ஒளிரும் குருசில் காண்குவன்!

64

காணரும் பொருளெனக் கண்டவை தாமும்
பூணரும் நோன்பெனப் பூண்டவை யாவும்
பேணரும் மரபெனப் பெற்றவை யோடே
வீண்நிழல் ஆகுமே விண்ணக ஒளியில்!

65

ஒளிந்துடல் மறைத்துமே உயிர்க்குறும் இன்னலைக்
களைந்துமே வாழ்ந்திடக் கருத்துடன் வேண்டும்
உளமுள தவீதின் உணர்வினை மதியேன்,
விளைவதைச் சிறிதும் விள்ளிடாது அலைந்தேன்!

66

அலைந்தனை நீயும் திரிந்தனை அன்று
நலம்புரிந்து எவர்க்கும் நல்லரசு அணுகும்
நிலையினைக் கூறி நடந்தனை! யானோ
உலகினில் வெற்று வலங்களே வருவன்!

67

வலம்வரும் வேந்துனைக் கண்டிலேன் உன்றன்
வலப்புறக் கள்வனாய் வாய்த்திலேன் அருட்பா
வலருடன் வாழ்த்தவும் அறிந்திலேன் தந்தையின்
வலப்புறத்து இருந்துஎன் நிலையினை நோக்குக!

68

நோக்குதல் பார்த்தல் நுட்பமே காணில்
போக்குகள் வழியாய்ப் பார்த்தலைப் போக்கி
வாழ்க்கையின் இலக்காய் வலிந்துனைக் காணும்
ஆக்கநல் நோக்கில் ஆழ்ந்திட விழைவன்!

69

விழைவு வேட்கை இரண்டுமே உனதுஇரு
அழகுத் தாள்கள் அடிதனில் உளம்எலாம்
குழைய அமர்ந்தே கொள்ளுதல் என்பதால்
ஒழிவில் லாமல் உன்னடி வேண்டுவன்!

70

வேண்டிடும் பேர்உளத்து இருந்திடும் விருப்பம்
யாவும்நீ அறிகுவை என்பதால் ஏதும்
வேண்டிடேன் உன்பெயர் விரும்பியே ஓதுவன்
மீண்டுமாய் மீண்டுமாய் விரைந்துமே புகழுவன்

71

புகழ்ந்திடும் பேரும் போற்றுகின் றோரும்
முகத்துதி கூறு வோர்களும் மறைவர்
மிகமிக விரைவில்! யானுனை என்றும்
அகநெகிழ் வோடே புகழ்ந்திட வரம்தா!

72

தாவியே தாயைப் பற்றிடும் குழவி
யாய்உனை இறுகப் பற்றிடு கின்றேன்
தாயுனது அணைப்போ இலைஎனில் உன்னைச்
சேயன்நான் சேர்த்துப் பிடித்தலும் இலையே!

73

இலைமறை காய்போல இருந்திடு கின்றோர்
அலைகடல் ஆழத்து உறைந்திடும் மணியின்
நிலையினர் போன்றே வாழயான் நினைந்தும்
தலையினைத் தாழ்த்தும் பணிவிலாது அழிந்தேன்!

74

அழியாப் பெருவாழ்வு அருளு கின்ற
வழிநீ வாய்மை அதுநீ எனயான்
விழிநீர் பெருக விரைந்துனை அடைந்தேன்
பிழைநீ பொறுத்துப் பேறுகள் அருள்க!

75

அருளில் பெரியதும் அகன்றதும் இல்லை
அருளில் புதியது ஆனதும் இல்லை
அருளுக்கு இறுதி அமைவதும் இல்லை
அருளை நினைவோர் அழிதலும் இலையே!

76

ஏ! என என்னை இகழ்ந்திடு வோரும்
பேயராய் மருட்டும் பித்துடை யோரும்
நோயுற்று உள்ளம் நொந்திடச் செயினும்
வாய்விட்டு உனையான் வாழ்த்திடல் மறவேன்!

77

ஏன்என வினவுதல் இலாதுன் சித்தம்
தான்நலம் என்றறிந்து சார்ந்தே வாழும்
ஞானமோ எனக்கிலை! நன்மறை அழிதலோ
வான்நிலம் வீழினும் இலையென அறிந்துமே!

78

உம்பணி செய்திடும் உண்மையாம் தகுதி
இம்மியும் இலன்எனைத் தேர்ந்துமே அழைத்துச்
செம்மையன் எனவுமே சேர்த்துள அன்பை
எம்முறைப் பாடலால் இயம்பவும் ஆகும்?

79

ஆகுபேர் அன்மொழித் தொகையமை நயமும்
பாகுபோல் இனித்திடும் அணிகளின் பாங்கும்
ஊகமாம் உள்ளுறை உவமமும் கொண்டே
ஆகுபாப் பாடுதல் அறிந்திடாப் பாவிநான்!

80

நானாய் ஏதும் நவிலல் அறியேன்
ஆனால் எனைநீ அருளால் இயக்கு
வோனாய் இருத்தலை உணரும் போழ்தில்
தேனாம் உன்னருள் திளைத்தே மகிழ்வன்!

81

மகிழ்வுடன் பாடியே வழிபடும் போதுஉன்
புகழெலாம் பாடுவன், புறம்பினில் உன்னை
இகழ்ந்திடு வோரிடை எதிருரை ஓதற்கு
உகந்ததாம் ஒருநிலை உற்றிலன் இன்னும்!

82

இன்னும் உனக்குள தேவைதான் யாதென
என்னை வினவுவை ஆயின்யான் உன்னிடம்
இன்னும் இன்னுமாய் இன்னருள் வேண்டும்
என்றே என்றுமே வேண்டுவன் என்பேன்!

83

என்பே உலர்ந்துடல் இளைத்துத் தளர்ந்திடின்
உன்பேர் மறந்துமே உரையாது இருப்பனோ
என்றே எண்ணி இதயம் நொந்துமே
உன்பேர் ஓதி ஓதி அழுதனன்

84

அழுதும் விழுந்தும் அறிக்கை செய்தும்
பழுதாம் கொடிய பாவம் யாவும்
முழுதுமாய்த் தொலைய முறையிடு கின்றேன்
வழங்குக எனக்குஉன் மன்னிப்பு என்றே!

85

மன்னிப்பு என்பதாம் மாபெரும் பரிசை
என்னைப் போன்றவர் யாங்ஙனம் பெறுவர்
என்பதாம் வினாவினை எழுப்பிய போழ்தில்
இன்னுமே வினவியே இளகலால் என்றாய்!

86

ஆய்வுரை யோடே அருளுரை பலவும்
ஓய்விலாது ஆற்றி உலகெலாம் அலைந்தும்
சேயென உன்றன் சீரடி அடங்கும்
தூய்நெறி ஒழுக்கத் துணைகொளாது உள்ளேன்.

87

உள்ளேன் யானும் உலகினில் எனினுமே
கொள்ளேன் அதனைக் குடியிருப் பாய்! எனது
உள்ளம் விண்ணில் உளதுஎனும் பவுலுரை
கொள்ளத் தயங்கும் குறைமதி யாளன்நான்!

88

நானலன் எனக்குள் நயந்துறை பாவம்
தான்எனை இயக்கிச் சாய்க்கும்! எனினும்
யானலன் இயேசுவே எனில்உறை வோர்என
ஏனின்னும் பவுல்வழி இறையுணர்வு அடைகிலேன்?

89

இறையுணர்வு அடைபவர் எவரெவர் எனினும்
கறையிலோம் யாமெனக் கருதுவர் ஆயின்
குறையுளோர் பொய்யராம் என்பதாய்க் கூறும்
மறைமொழி மறந்துமே வாழ்ந்திடத் துணியேன்!

90

துணிஏன்? உணவு சுகத்துடன் செல்வத்
துணைஏன்? இன்னல் துன்பமும் இங்குளத்
துணையும் வந்து சூழினும் துயர்ஏன்?
துணிவேன் உன்றன் துணையுடன் வாழவே!

91

வாழவே வேண்டும்நான்! உன்பேர் வாழ்த்துவோர்
வாழவே எளியனேன் வாழ வேண்டுமே!
தாழவே வேண்டும்நான்! தாழ்ந்தோர் உயர்ந்திடத்
தாழவே வேண்டுவன், தாழ்ந்தே வாழுவன்!

92

வன்முறை பெருகி வருதலைக் கண்டே
என்மனம் கலங்கி இதயமும் நடுங்கி
உன்னுரை நினைந்துயான் ஓலமிட்டு இறைவா
அன்புமே அழிந்ததோ என்றையம் உறுவன்!

93

ஐயமுற்று உன்னை அன்று தோமையன்
கையினால் தொட்டுக் காண விழைந்தனன்
ஐயமிலன் ஆயினும் அன்புடன் உன்னைக்
கையினால் தொட்டுமே களித்திட விழைந்தேன்!

94

தேன்தரும் சுவையறிந் தேன்! திரு மறையெனும்
தேன்மழை யதில், நனைந் தேன்! அதைப் பயின்றறிந்
தேன்! மலைத் தேன்! மறைத் தேனினை நன்குசுவைத்
தேன்! சிறப் படைந்தேன்! செழித்தேன்! மகிழ்ந்தேன்!

95

மகிழ்ந்தே இருப்பினும் வருந்தியே வாழினும்
புகழ்வன் உன்னையான் புதுப்புது பாடலால்!
பகர்வுரை வழங்குவன் பலர்க்குமே! என்றன்
அகத்துறை அண்ணலுன் அன்பையே நினைந்து!

96

நினைந்து நினைந்து நெஞ்சம் உருகிப்
புனைந்தோர் பாடல் போன்றுஎன் பாடல்
தனையும் ஏற்கும்உன் தகைமையே எண்ணி
உனையே அன்றிமற்று ஒருவரைப் பாடேன்!

97

ஏன்எனை விட்டகன் றீர்ஐய என்றீர்
வான்தந்தை விடையெதும் வழங்கிலர் எனினும்
யானிறந்து ஒழிந்திடாது இருந்திடற் காகத்
தானங்ஙன் செய்துளத் தகைமைதான் என்னே!

98

'என்னேர் அனைய பாவியர் எவருளர்?
கொன்னே கழித்தேன் காலம்யான்!' என்றிட
'இன்னே கேட்டிடு! ஈனராம் பாவியர்
என்போர் தாம்தூயர் ஆயினர்!' என்றாய்!

99

என்தாய் எந்தை இளமையில் என்னை
நன்றாய் உன்றன் நாமமே ஓத
அன்பால் பயிற்றிடச் செய்தனை ஆதலின்
உன்பால் உறவுகொள் ஒருவனே ஆயினன்!

100

நன்றெலாம் ஈந்தெனை நாள்தொறும் காத்திடும்
உன்றனைச் சார்ந்துயான் உலகினில் வாழ்ந்திட
என்றும்என் கரம்பிடித்து இறுதிநாள் வரையினில்
இன்றுபோல் நடத்துமே என்னுடை இயேசுவே!



# கட்டுரையாளர்கள்

### 1. அருட்தந்தை டாக்டர் வி.மி. ஞானப்பிரகாசம்

*மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் நெடுங்காலமாக கிறிஸ்தவத் தமிழ்த்துறையின் தலைவராக இருந்து வருகின்றார். திருமறை மொழியாக்கக் குழுவிலும் பணியாற்றியுள்ளார். பல நூல்கள், பலகட்டுரைகளின் ஆசிரியர்.*

### 2. டாக்டர் திருமதி கிரேஸ் செல்வராஜ்

*சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். சங்க இலக்கியத்தில் ஆய்வு செய்து எம்.லிட். பட்டமும், வடுவூர் துரைசாமி ஐயங்கார் நாவல்களில் ஆய்வு செய்து டாக்டர் பட்டமும் பெற்ற பெற்றியுடையவர். அறுபதுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளையும் 'வளரும் கிறிஸ்தவத்தில் மலரும் தமிழ்', 'முல்லை சிரித்தது' எனும் நூல்களையும் எழுதியுள்ளார். தமிழும், தமிழ் போன்று ஆங்கிலமும் கைவந்த இவருக்கு இசைக்கலையிலும் ஈடுபாடு உண்டு. இவருடைய தமிழ்ப்பணியைப் பாராட்டி உலகக் கிறிஸ்தவத் தமிழ்ப் பேரவை தமிழ்மாமணி எனும் பட்டத்தினைக் கொடுத்துச் சிறப்பித்துள்ளது.*

### 3. திருமதி அஞ்சலா ரிச்சர்டு

*சென்னையிலுள்ள பெண்கள் கிறிஸ்தவக் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர். வேதநாயக சாஸ்திரியாரின் வழித் தோன்றலான இவர் 'வேதநாயக சாஸ்திரியாரின் கீர்த்தனைக் களஞ்சியம்' எனும் நூலை வெளியிட்டுள்ளார்.*

### 4. டாக்டர் தே. செல்லையா

*வேலூரிலுள்ள ஊரிசு கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். கிருஷ்ணபிள்ளையின் படைப்புகளில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். வேலூர் பேராயத்தில் கிறிஸ்தவத் தமிழ் இலக்கியப் பணிகளில் ஈடுபட்டு வருகிறார்.*

### 5. டாக்டர் ஜோசபின் டோரதி

*அரசு கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். தேம்பாவணியையும் இரட்சணிய யாத்திரிகத்தையும் ஒப்பீட்டு முறையில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றவர்.*

### 6. திரு. ஆர்.எஸ். ஜேக்கப்

பாளையங்கோட்டையைச் சார்ந்த ஓய்வு பெற்ற ஆசிரியர். நடப்பியல் தன்மையில் இவர் எழுதிய சிறுகதைகள் பல தொகுதிகளாக வெளிவந்துள்ளன. வாத்தியார் எனும் நாவல் இவரது அனுபவ வெற்றிப் படைப்பு.

### 7. பேராசிரியர் எம். இராஜதாஸ்

கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள நேசமணி நினைவுக் கிறிஸ்தவக் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றி வரும் இவர், மேனாட்டு அருட்பணியாளர்கள் குறித்து பல கட்டுரைகள் எழுதியுள்ளார். ''இலக்கிய நோக்கில் திட்டூர் தேசிகரின் மெய்ஞ்ஞானமாலை'' எனும் ஆய்விற்காக எம்.ஃபில் பட்டம் பெற்றுள்ளார். கல்விப் பணியுடன் இறைப் பணியும் செய்து வருகின்றார்.

### 8. டாக்டர் அருள்திரு. லாரன்ஸ்

தமிழ் சுவிசேஷ லுத்தரன் சபையில் நெடுங்காலம் திருப்பணி ஆற்றியதோடு, தமிழ்நாடு இறையியல் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் திகழ்ந்த இவர் பல நூல்களை எழுதியுள்ளார். 'நற்செய்திச் செல்வர்', 'மொழியியல் அறிவர்' எனும் சிறப்புப் பட்டங்களைப் பெற்றவர். சிறந்த அருளுரைஞராகவும், எழுத்தாளராகவும் விளங்கியவர். இவரின் 'இந்தியாவின் விடிவெள்ளி சீகன்பால்கு', 'சிலுவையின் பரிமாணங்கள்', 'தரங்கை ஞா. சாமுவேல் ஐயரின் இசைப்பாடல்கள்' முதலிய நூல்களை கிறிஸ்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது.

### 9. டாக்டர் த. இயேசுதாஸ்

நாகர்கோவிலிலுள்ள ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். பல கிறிஸ்தவத் தமிழ் இலக்கியங்களைத் தேடிக் கண்டுபிடித்து பதிப்பித்தவர்; பதிப்பிக்கச் செய்தவர். 'அறிமுகமாகாத கிறிஸ்தவத் தமிழ் இலக்கியங்கள்' எனும் நூல் இவரது அண்மைக்கால வெளியீடுகளில் குறிப்பிடத்தகுந்ததாகும்.

### 10. டாக்டர் மோசசு மைக்கேல் பாரடே

சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியின் தமிழ்த் துறைத் தலைவராகப் பணியாற்றி வருகிறார். சித்தர் இலக்கியம், கிறிஸ்தவ இலக்கியம் ஆகியவற்றில் ஆழ்ந்த புலமை உடையவர். ஐம்பதிற்கும் மேற்பட்ட கட்டுரைகளையும், பத்திற்கும் மேற்பட்ட நூல்களையும் எழுதியுள்ள இவர், தமிழிலும் ஆங்கிலத்திலும் அருளுரையாற்றுவதில் வல்லவர். தமிழ்மாமணி எனும் பட்டத்தினைப் பெற்ற இவர், உலகக் கிறிஸ்தவத் தமிழ்ப் பேரவையின் பொதுச் செயலாளராகச் செயல்பட்டு வருகிறார்.

## 11. டாக்டர் செ. ஜேசுதாசன்

திருவனந்தபுரத்திலுள்ள பல்கலைக்கழகக் கல்லூரியின் தமிழ்த்துறையில் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். 'A History of Tamil Literature' எனும் ஆங்கில நூலின் ஆசிரியர்; சிறந்த திறனாய்வாளர், புகழ்மிக்க நாவலாசிரியர் திருமதி ஹெப்சிபா ஜேசுதாசன் அவர்களின் கணவர்.

## 12. டாக்டர் பா. வளன் அரசு

பாளையங்கோட்டையிலுள்ள தூய யோவான் கல்லூரியின் தமிழ்த்துறையில் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். தேம்பாவணி குறித்து ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்ற இவர் தற்போது கிறிஸ்தவ இலக்கியப் பணி செய்து வருகின்றார்.

## 13. டாக்டர் சாமுவேல் தாசன்

கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள நேசமணி நினைவு கிறிஸ்தவக் கல்லூரியில் (மார்த்தாண்டம்) தமிழ்த் துறைத் தலைவராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். 'பாரதியும் வள்ளத்தோளும்' எனும் ஆய்விற்காக டாக்டர் பட்டம் பெற்றவர். நூற்றிற்கும் மேற்பட்ட திறனாய்வுக் கட்டுரைகளையும் பல்வேறு நூல்களையும் எழுதியுள்ளார். கனல் மணக்கும் பூக்கள் எனும் அமைப்பின் மூலம் தமிழ்ப் பணியும் பிற அமைப்புக்கள் மூலம் சமூகப் பணியும் செய்து வருகின்றார்.

## 14. டாக்டர் கே.கே. சுந்தர சோபிதராஜ்

சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியின் தமிழ்த்துறைப் பேராசிரியராகப் பணியாற்றிய இவர், பக்தி காலத் தாவரங்கள் எனும் பொருளில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றவர். இலக்கியத்தில் கூறப்பட்டிருக்கும் தாவரங்களைப் பற்றி இருபதுக்கும் மேற்பட்ட கட்டுரைகளையும் சோபிதம் பதிப்பகத்தின் மூலம் இருபத்தைந்திற்கும் மேற்பட்ட நூல்களையும் வெளியிட்டு தமிழ்ப்பணியாற்றியுள்ளார்.

## 15. டாக்டர் ப.ச. ஏசுதாசன்

திருச்சியிலுள்ள பிஷப் ஹீபர் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராகவும், துணை முதல்வராகவும் பணியாற்றி ஓய்வு பெற்றவர். 'தமிழ்க் கிறிஸ்தவ இலக்கியத்தில் சைவ வைணவ இலக்கியத் தாக்கம்' எனும் ஆய்வுக்காக டாக்டர் பட்டம் பெற்றவர். தமிழ்மாமணி, திருக்குறள் ஞாயிறு, இரட்சணியயாத்திரிகச் செல்வர், செந்தமிழ்ப் பேரொளி முதலிய விருதுகளைப் பெற்றுள்ளார். பதிமூன்று நூல்களை வெளியிட்டும் ஏழு நூல்களைப் பதிப்பித்தும் கிறிஸ்தவத் தமிழ்ப் பணியாற்றிவரும் இவர், தற்போது உலகக் கிறிஸ்தவத் தமிழ்ப் பேரவையின் செயல் தலைவராகச் செயல்பட்டு வருகிறார்.

### 16. டாக்டர் ஜாண் ஆசீர்வாதம்

சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். 'தமிழர் கூத்துக்கள்' எனும் தலைப்பில் ஆய்வு செய்து டாக்டர் பட்டமும் இந்திமொழியில் 'சாகித்ய ரத்ன' எனும் உயர் தகுதிப்பட்டமும், உலகக் கிறிஸ்தவத் தமிழ்ப் பேரவையின் மூலம் தமிழ்மாமணி பட்டமும் பெற்றவர். அறிவியல், மனையியல் தொடர்பான கட்டுரைகளை எழுதியும் பல நூல்களை மொழிபெயர்த்தும் உள்ளார். 'சென்னைக் கிறித்தவக் கல்லூரி நூற்றைம்பதந்தாதி' எனும் நூல் இவரது படைப்புத் திறனுக்கு ஒரு சான்றாகும்.

### 17. டாக்டர் ம.வி. சுதாகர்

வேலூரிலுள்ள ஊரிசு கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர். பன்னிரண்டு நூல்களின் ஆசிரியரான இவர் உலகக் கிறிஸ்தவத் தமிழ்ப் பேரவையினால் 'தமிழ் மாமணி' எனும் பட்டத்தைப் பெற்றவர்.

### 18. திருமதி. ஸ்வீட்லின் பிரபாகரன்

கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தில் தமிழ்ப்பதிப்பாசிரியராகப் பணியாற்றி வரும் இவர் பூங்கோதை எனும் பெயரிலும், தன் சொந்தப் பெயரிலுமாக கட்டுரைகள், கதைகள் எழுதி வருகிறார். இவர் உள்ளத்தின் துடிப்புகள், கிறிஸ்மஸ் களஞ்சியம், சிறுவர் களஞ்சியம் ஆகிய நூல்களின் தொகுப்பாசிரியர். திருநாட்டைக் கண்டேன் எனும் நூல் இவரது பயண அனுபவப் படைப்பாகும்.



**அருள்திரு டாக்டர் தி. தயானந்தன் பிரான்சிஸ்,** M.A., B.D., Ph.D., D.Litt., DD.,



கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தின் பொதுச் செயலாளராக இருபத்து மூன்று ஆண்டுகள் பணியாற்றியுள்ளதோடு இவர் நம் நாட்டிலும் இங்கிலாந்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளிலுள்ள சில இறையியல் கல்லூரிகளில் சமயவியல் கற்பித்துள்ளார். தமிழிலும் ஆங்கிலத்திலுமாக இவர் எழுதியுள்ள நூல்கள் எழுபதுக்கும் மேற்பட்டவை ஆகும். கிறிஸ்தவத் தமிழ் இலக்கியம் படைப்பதிலும் ஆய்வுகள் நடத்துவதிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருப்பதன் விளைவாகக் கிறிஸ்தவ அருட்கவிஞர்கள், கிறிஸ்துநெறிப் பார்வைகள், கிறிஸ்தவத் தமிழ் இலக்கியம் : சில செய்திகள் போன்ற ஆய்வு நூல்களையும் கிறிஸ்து நெறிக் கவிதைகள், வாழ்வளிக்கும் வள்ளல், இறைவனின் திருமைந்தர், அன்பழைப்பு போன்ற படைப்புகளையும் 'நான் உமக்குச் சொந்தமானவன்' 'நீர் எனக்குத் தஞ்சமானவர்' ஆகிய இசைப் பாடல் நூல்களையும் வழங்கியுள்ள இவ் ஆசிரியர் தமிழ்ச் சைவம், தயாவின் இலக்கியப் பார்வைகள், நாடகங்கள், சிறுகதைகள் போன்ற நூல்களையும் வெளியிட்டுள்ளார்.

ஆங்கிலத்தில் இவர் எழுதியுள்ள Tamil Saivism and the Transcending Message of Ramalinga Swamy என்ற நூலை ஆசியவியல் நிறுவனம் வெளியிட்டுள்ளது. The Christian Witness of Sadhu Sundarsingh (CLS), Asian Expressions of Christian Commitment (CLS) ஆகிய நூல்களின் பதிப்பாசிரியராகிய இவர் அண்மையில் வெளியிட்டுள்ள நூல் Reflections on Inter - Faith Themes (ISPCK) என்பதாகும். இவருடைய படைப்புகள் பற்றிய ஆய்வுகள் இளநிலை ஆய்வு (M.Phil.) அளவில் செய்யப்பட்டுள்ளன.

'கிறிஸ்தவத் தமிழ்க் காவலர்', 'இலக்கியச் செல்வர்', 'இறையியல் வித்தகர்' போன்ற விருதுகளைப் பெற்றுள்ள டாக்டர் தயா பல ஆண்டுகளாக உலகக் கிறிஸ்தவத் தமிழ்ப் பேரவை, கிறிஸ்தவ இறையியல் நூலோர் குழு போன்ற அமைப்புகளின் தலைவராகவும் சர்வதேசஇந்தியக் கிறிஸ்தவ ஆய்வு மையத்தின் (International Centre for the Study of Christianity in India) செயலாளராகவும் பணியாற்றியுள்ளார்.

**டாக்டர் யோ. ஞான சந்திர ஜாண்சன்**



சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியின் தமிழ்த்துறையில் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வரும் இவர், கன்னியாகுமரிப் பேராயத்திலுள்ள மயிலாடி திருச்சபையைச் சார்ந்தவர். ''நீல. பத்மநாபன் நாவல்களில் பாத்திரப்படைப்பு'' எனும் பொருளில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றவர். இவர் 8 ஆய்வாளர்களை டாக்டர் பட்டத்திற்கும் 20 ஆய்வாளர்களை எம்.ஃபில் பட்டத்திற்கும் இதுவரை தகுதிப் படுத்தியுள்ளார். தமிழ்க் கிறிஸ்தவ இலக்கியங்களில் தணியாத தாகமும் குறிப்பாகக் கிறிஸ்தவக் கீர்த்தனைகளில் மாளாத ஈடுபாடும் கொண்டவர். அரிய பல தகவல்கள் நிறைந்த ''கிறிஸ்தவக் கீர்த்தனைக் கவிஞர்கள்'' (2003) எனும் நூலை கீர்த்தனா பதிப்பகத்தின் மூலம் வெளியிட்டுள்ளார். சாகித்திய அகாடமி 2008ஆம் ஆண்டு ''எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை'' எனும் இவரது நூலை வெளியிட்டது. இவரது கிறிஸ்தவத் தமிழ்ப் பணியைப் பாராட்டி உலகக் கிறிஸ்தவத் தமிழ்ப் பேரவை இவருக்கு தமிழ் மாமணி விருது சூட்டி மகிழ்ந்துள்ளது. தமிழ் கிறிஸ்தவ இலக்கிய ஆய்வுகளில் தொடர்ந்து முனைப்போடு ஈடுபட்டு வருகின்றார்.